# பக்தி இலக்கியத்தில் சமுதாயப் பார்வை

முனைவர் தா. ஈசுவரபிள்ளை



தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் - 613 005.

# பக்தி இலக்கியத்தில் சமுதாயப்பார்வை

முனைவர் தா. ஈசுவரபிள்ளை



தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்

ISBN : 81-7090-279-7

தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு : 219

திருவள்ளுவராண்டு 2031 மார்கழி - திசம்பர் 2000

நூல் : பக்தி இலக்கியத்தில் சமுதாயப்பார்வை

ஆசிரியர் : தா. ஈசுவரபிள்ளை

பதிப்பு : முதற்பதிப்பு

விலை : உரூ. 200/-

பக்கம் : 332

படிகள் : 500

அச்சுப் பதிவம் : மாணிக்கம் அச்சகம்
தஞ்சாவூர்

அச்சு : தமிழ்ப் பல்கலைக்கழக மறுதோன்றி
அச்சகம், தஞ்சாவூர்.




# தமிழ்ப் பல்கலைக்கழகம்

தஞ்சாவூர் - 613 005 - இந்தியா

முனைவர் கதிர். மகாதேவன்
துணைவேந்தர்


## அணிந்துரை

இறையன்பு நெறியில் தோய்ந்தோர், ஓடும் செம்பொன்னும் ஒக்க நோக்கும் உள்ளச் சால்பு பெற்றோராவர். ஈசன் திருவடி நீழலின்றி வேறெதனினும் அவர்தம் சிந்தையும் மொழியும் செல்லா. தாம் வழிபடும் இறைவனை எண்ணி எண்ணி உள்ளங் கசிவர்; ஊனுருகப் பாடுவர்; அழுதும் தொழுதும் ஆடியும் பாடியும் தம்மை மறப்பர். இவ்வாறு இறையன்பர் பற்பலர் தீந்தமிழில் புனைந்த தேனனைய பதிகங்களும் பாசுரங்களும் தமிழ்ப் பத்திமை நெறியின் தகைசால் சிறப்பை உலகுக்கு அறிவுறுத்தின. உயிராவணம் உற்று நோக்கி உள்ளக்கிழியில் உருவெழுதிக் கொண்ட பத்திமை நெறியினர் மன்னா மனிதரைப் பாடாமல் இறைவனின் பொன்னார் திருவடியே போற்றிப் புனைந்த திறத்தால் தமிழ் வளம் பெற்றது. இந்திய நாட்டின் பக்தி இலக்கியப் போக்கிற்கே மூலமும் முதலுமாய் நின்றது தமிழகப் பக்தி நெறி ஆகும். தென்னாடுடைய சிவன் எந்நாட்டவர்க்கும் இறைவனாகத் திகழ்ந்தான்; திருவேங்கடமுடையான் பார்தொழுதேத்தும் பரந்தாமனாயினன்; பன்னிரு திருமுறைகளும், நாலாயிரத் திவ்விய பிரபந்தமும் தமிழகப் பக்தி நெறியின் சான்றாய் உள்ளன. பக்தி இலக்கியங்களில் பன்முக ஆய்வு பெருகியது; பற்பல ஆய்வுகள் அறிஞர்களால் படைக்கப்பெற்றன. அத்தகைய ஆய்வுகளில் 'பக்தி இலக்கியத்தில் சமுதாயப்பார்வை' என்னும் இந்நூல், சிறந்ததாகத் திகழ்கிறது.

'பக்தி இலக்கியத்தில் சமுதாயப் பார்வை' என்னும் இந் நூலின் ஆசிரியர் தமிழ்ப் பல்கலைக்கழக இலக்கியத்துறையின் இணைப்பேராசிரியர் முனைவர் தா. ஈசுவரபிள்ளையாவார். இவர் தமிழும் சமூகவியலும் கற்று இருதுறைசார் ஆய்வுகளில் உளம்போக்கித் தமிழுக்கு வளம் சேர்ப்பவர். இவரது ஆய்வுத்திறனை இந்நூலின் பகுதிகள் பலவும் விளக்குகின்றன. சமயம் சமூகம் என்ற 'இரு வேறு துறைகள் ஊடாடும் உயர்வினை இவ் ஆசிரியர் தெள்ளத் தெளிவாக விளக்கியுள்ளார் என்பதற்கு,

"பொருளாதார ஏற்றத்தாழ்வுகளின் காரணங்களாகத் தமிழகத்தின் சமனற்ற நிலப்பரப்பு, அதன் விளைவுகளாகிய சமனற்ற வளர்ச்சி வாய்ப்பு, சமனற்ற பகிர்வு, புராதனச் சமுதாய அமைப்பின் சிதைவு, நாகரிகச் சமுதாய அமைப்பின் தோற்றம், போர்கள், இயற்கைச் சீற்றத்தின் விளைவுகளாகிய பஞ்சம் வறுமை, வெள்ளப் பெருக்கு, அரசு விதிக்கும் வரிச்சுமை முதலான புவியியல் சமுதாய, அரசியல், பொருளாதாரச் சூழல்கள் அமைகின்றமையை அறிகின்றோம். ஆனால் சமயநோக்கில் முற்பிறப்பில் செய்த வினைகளின் பயன் அல்லது ஊழ்வினைப்பயன் அல்லது விதி என்ற நம்பிக்கையே பொருளாதார ஏற்றத்தாழ்வுகளின் காரணமாகக் கற்பிக்கப் பெறுகின்றது. சங்ககாலம் முதலாகவே இந்நம்பிக்கை சமுதாயத்தில் காணப்பெற்றது என்பதற்குரிய இலக்கியச் சான்றுகள் கிடைக்கின்றன. பக்தி இலக்கியத்திலும் இக்குறிப்பு உள்ளது. திருமூலர் முற்பிறப்பில் ஒருவன் செய்த நல்வினைகளுக்கும் தீயவினைகளுக்கும் ஏற்ப இறைவன் இன்ப துன்பங்களைக் கொடுக்கின்றான் என்ற சிந்தனையை வெளிப்படுத்துகின்றார். ஆனால் சமூகவியல் பொருளியல் நோக்கு மிகுந்துவரும் இக்காலத்தில் பொருளாதார ஏற்றத்தாழ்வுகளின் காரணமாக வினைப்பயன் கூறப்பெறினும், இவற்றுக்குரிய உண்மைக் காரணங்களை நாடி, அவற்றை நீக்குதற்குரிய மாற்று வழிகளைக் காணவேண்டும் என்ற 'தருமகர்த்தாக் கொள்கை' தலைதூக்கியுள்ளது." (பக். 87 – 88)

என்ற பகுதியைச் சான்றாகச் சுட்டலாம். சமூகத்தின் ஒவ்வொரு பகுதியையும் நிகழ்வையும், நம்பிக்கைகளையும், நம்பிக்கை சார் சடங்குகளையும், பண்பாட்டுக் கூறுகளையும் ஆசிரியர் ஆய்ந்து அவை பக்தி இலக்கியத்தில் எவ்வாறு பதிவு பெற்றுள்ளன என்பதைத் தெளிவுறப் புலப்படுத்தியுள்ளார். தமிழகத்தின் பத்திமை இலக்கியங்களில் சமுதாய நோக்கும் போக்கும் புதிய கருத்துக்களுக்கு நெறிகாட்டும் என்பதை இவ் ஆசிரியர் காட்டியுள்ள பாங்கு போற்றத்தக்கதாகும்; அன்னார்க்கு என் பாராட்டுகள்!

கதிர். மகாதேவன்

# நன்றியுரை

தமிழ்ப் பல்கலைக்கழகம் இலக்கியம், மொழியியல், கலை, சிற்பம், பண்பாடு, அறிவியல் முதலிய பல்வேறு துறைகளில் ஆய்வை மேற்கொண்டு தமிழுலகிற்குப் பல்வேறு ஆக்கபூர்வமான செயல்களை நிறைவேற்றிவருகின்றது. இவ்வகையான ஆய்வுகள் நூலாக்கம் பெறும்போது தமிழ் இலக்கிய உலகமும் சமுதாயமும் வளர்ச்சியுறும் என்ற நோக்கில் தமிழ்ப் பல்கலைக்கழகம் பல்துறை ஆய்வு நூல்களை வெளியிட்டு வருகின்றது. இவ்வகையில் "பக்தி இலக்கியத்தில் சமுதாயப் பார்வை" என்ற நூல் வெளிவருகின்றது.

"பக்தி இலக்கியத்தில் சமுதாயப்பார்வை" என்ற பொருண்மையில் ஆய்வுத்திட்டம் மேற்கொள்ள அனுமதியளித்த தமிழ்ப் பல்கலைக்கழக முன்னைத் துணைவேந்தர் மதிப்பிற்குரிய முனைவர் ச. அகத்தியலிங்கம் அவர்களுக்கு என் உளம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் வெளிவரப் பல்லாற்றானும் உதவி புரிந்ததுடன், இந் நூலுக்கு அணிந்துரை வழங்கியும் உதவிபுரிந்த தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் மதிப்பிற்குரிய முனைவர் கதிர். மகாதேவன் அவர்களுக்கும் என் உளமார்ந்த நன்றியைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

ஆய்வுக்குத் தேவையான கருத்துக்களை வழங்கியுதவிய தமிழ்ப் பல்கலைக்கழக இலக்கியத்துறையின் முன்னைத் தலைவர் முனைவர் சோ.ந. கந்தசாமி அவர்களுக்கும், இலக்கியத்துறைப் பேராசிரியர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுக்குத் தேவையான நூல்களை வழங்கியுதவிய தமிழ்ப் பல்கலைக்கழக நூலகத்தினர்க்கும், நூல் வெளிவரப் பல்லாற்றானும் துணைநின்ற தமிழ்ப் பல்கலைக்கழகப் பதிப்புத் துறையினர்க்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**தா. ஈசுவரபிள்ளை**

# குறுக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| அகத். | - | அகத்திணையியல் |
| அகம். | - | அகநானூறு |
| அதிபத்தர். | - | அதிபத்த நாயனார் புராணம் |
| அமர் நீதி. | - | அமர்நீதி நாயனார் புராணம் |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| ஏகாலி. | - | ஏகாலி நாயனார் புராணம் |
| கடவுள். | - | கடவுள் வாழ்த்து |
| கண்ணப்பர். | - | கண்ணப்ப நாயனார் புராணம் |
| கலித். | - | கலித்தொகை |
| கலிய. | - | கலிய நாயனார் புராணம் |
| கழறிற்றறிவார். | - | கழறிற்றறிவார் நாயனார் புராணம் |
| காரிநாயனார். | - | காரிநாயனார் புராணம் |
| காரைக்கால். | - | காரைக்காலம்மையார் புராணம் |
| கிளவி. | - | கிளவியாக்கம் |
| குங்கிலிய. | - | குங்கிலியக்கலய நாயனார் புராணம் |
| குலச்சிறை. | - | குலச்சிறை நாயனார் புராணம் |
| குறிஞ்சிப். | - | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந். | - | குறுந்தொகை |
| சக்தி. | - | சக்தி நாயனார் புராணம் |
| சண்டேசுர. | - | சண்டேசுர நாயனார் புராணம் |
| சாக்கிய. | - | சாக்கிய நாயனார் புராணம் |
| சிலம்பு. | - | சிலப்பதிகாரம் |
| சிறு. | - | சிறுபாணாற்றுப்படை |
| சிறுத்தொண்டர். | - | சிறுத்தொண்ட நாயனார் புராணம் |
| செருத்துணை. | - | செருத்துணை நாயனார் புராணம் |
| சோமாசி. | - | சோமாசி நாயனார் புராணம் |
| தடுத்தாட். | - | தடுத்தாண்டகொண்ட புராணம் |
| திருக்குறிப்பு | - | திருக்குறிப்புத் தொண்டர் புராணம் |
| திருச்சந்த. | - | திருச்சந்த விருத்தம் |
| திருஞான. | - | திருஞானசம்பந்தர் புராணம் |
| திருநகர. | - | திருநகரச் சிறப்பு |
| திருநாட்டு. | - | திருநாட்டுச் சிறப்பு |
| திருநாவுக். | - | திருநாவுக்கரசர் புராணம் |

| | | |
|---|---|---|
| திருநீலகண்டர். | - | திருநீலகண்ட நாயனார் புராணம் |
| திருப்பஞ்சாக்கர. | - | திருப்பஞ்சாக்கரத் திருப்பதிகம் |
| திருமங்கை. | - | திருமங்கையாழ்வார் |
| திருமழிசை. | - | திருமழிசையாழ்வார் |
| திருமு. | - | திருமுருகாற்றுப்படை |
| திருவா. | - | திருவாசகம் |
| திருவாய். | - | திருவாய்மொழி |
| திருவீழி | - | திருவீழிமிழலை |
| திருவெழு. | - | திருவெழுகூற்றிருக்கை |
| தி.வா.அ.பு. | - | தில்லைவாழ் அந்தணர் புராணம் |
| தொண்டரடி. | - | தொண்டரடிப்பொடியாழ்வார் |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நம்மாழ். | - | நம்மாழ்வார் |
| நமசிவாய. | - | நமசிவாயத் திருப்பதிகம் |
| நமிநந்தி. | - | நமிநந்தியடிகள் புராணம் |
| நற். | - | நற்றிணை |
| நான்முகன். | - | நான்முகன் திருவந்தாதி |
| நெடுநல். | - | நெடுநல்வாடை |
| நேசநாயனார். | - | நேசநாயனார் புராணம் |
| பட்டினப். | - | பட்டினப்பாலை |
| பதிற். | - | பதிற்றுப்பத்து |
| பழமொழி. | - | பழமொழிப்பதிகம் |
| புறத். | - | புறத்திணையியல் |
| புறம். | - | புறநானூறு |
| பூசலார் | - | பூசலார் நாயனார் புராணம் |
| பெரிய. | - | பெரிய திருமொழி |
| பெரும். | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொருநர். | - | பொருநராற்றுப்படை |
| மணி. | - | மணிமேகலை |
| மதுரை. | - | மதுரைக்காஞ்சி |
| மலை. | - | மலைபடுகடாம் |
| மனு. | - | மனுதருமச் சாத்திரம் |
| மானக்கஞ்சாற. | - | மானக்கஞ்சாற நாயனார் புராணம் |
| முருக. | - | முருகநாயனார் புராணம் |
| மூர்த்தி. | - | மூர்த்தி நாயனார் புராணம் |
| மெய்ப். | - | மெய்ப்பாட்டியல் |
| வாயிலார். | - | வாயிலார் நாயனார் புராணம் |
| விறன்மிண்டர் | - | விறன்மிண்ட நாயனார் புராணம் |

# பொருளடக்கம்

# இயல் – 1

# ஆய்வின் அறிமுகம்

## 1. ஆய்வின் நோக்கம்

'பக்தி இலக்கியத்தில் சமுதாயப்பார்வை'. என்னும் தலைப்பில் மேற்கொண்டுள்ள இவ்வாய்வு பக்தி இலக்கியத்தைச் சமுதாய நோக்கில் அணுகுவதை நோக்கமாகக் கொண்டுள்ளது. இவ்வாய்வின் மூலம் பக்தி இலக்கியம் காட்டும் அக்காலச் சமுதாயத்தின் அமைப்பு, சமுதாயத்தில் இடம்பெற்ற தரப்பிரிவுகள், தரப்பிரிவை உருவாக்கிய காரணிகள், சமுதாயத்தில் நிலவிய பண்பாடு, சமுதாயத்தால் போற்றிப் பாதுகாக்கப்பெற்ற சமூக மதிப்புகள், மக்களின் பொருளாதார நிலை, சமுதாயத்தில் இடம்பெற்ற பொருளாதார உறவுகள், சமயநிலை போன்றவை தெளிவுறுத்தப்பெறும். சமயத்தையும், பக்தியையும் அடிப்படையாகக் கொண்டு எழுந்த பக்தி இலக்கியம் வெறும் இறையுணர்வை ஊட்டும் இலக்கியம் என்ற நிலையில் மட்டும் அமையாது, அது தோன்றிய காலத் தமிழகத்தின் சமுதாய, பொருளாதார, சமய, பண்பாட்டுத் துறைகளைப் படம்பிடித்துக்காட்டும் பேரிலக்கியமாகவும், சமுதாய, பொருளாதாரச் சமத்துவச் சிந்தனைகளை வெளிப்படுத்தும் புரட்சி இலக்கியமாகவும் விளங்குமாறும் காட்டப்பெறும்.

## 1.2. ஆய்வின் எல்லை

சங்க இலக்கியத் தொகுப்பினுள் பரிபாடலும், திருமுருகாற்றுப் படையும் இறையுணர்வை மிகுதியாக வெளிப்படுத்தும் வகையில் அமைந்து காணப்பெறுகின்றன. அவற்றின் பின்னர், பக்தியை அல்லது சமயத்தை அடிப்படையாகக் கொண்டு எழுந்துள்ள பல நூல்களைக் காண்கிறோம். எனினும், தமிழ் இலக்கிய உலகில் அறிஞர் பெருமக்களால் பொதுவாகப் பக்தி இல்க்கியம் எனப் புகழப்பெறுகின்ற பன்னிரு திருமுறைகளும் நாலாயிர திவ்வியப் பிரபந்தமும் மட்டுமே இவண் ஆய்விற்கு எடுத்துக்கொள்ளப் பெறுகின்றன.

## 1.3. ஆய்வுப்பொருள் பாகுபாடு

பக்தி இலக்கியத்தில் சமுதாயப்பார்வை என்ற இவ்வாய்வுப்பொருள்

1. ஆய்வின் அறிமுகம்
2. சமயத்தின் சமூகச் செயல்பாடுகள்
3. சாதிமுறை
4. பொருளாதார ஏற்றத்தாழ்வுகள்
5. அடிமை நிலை
6. பண்பாடு
7. மதிப்புகள்
8. குடும்பம்
9. பெண்கள் நிலை
10. சமய நிலை
11. ஆய்வின் முடிபுரை

என்று பதினோர் இயல்களாகப் பாகுபடுத்தப்பெற்று ஆராயப் பெறுகின்றது. ஒவ்வோர் இயலின் இறுதியிலும் மேற்கோட் சான்றுக்களும், இறுதிப் பகுதியில் முதன்மை, துணை ஆதார நூல்களின் பட்டியலும் கொடுக்கப்பெற்றுள்ளன.

## 1.4. முறை வைப்பு

ஆய்வுப்பொருளை அறிமுகப்படுத்தும் ஆய்வின் அறிமுகம்' என்ற இயல் முதலாவதாக அமைகின்றது.

பக்தி இலக்கியத்தைச் சமுதாய நோக்கில் ஆராயப்புகும் முன்னர், அது சமயத்தை அடிப்படையாகக்கொண்டு எழுந்துள்ள காரணம் பற்றிச் சமயத்தின் பல்வேறு செயல்பாடுகளுள் சமுதாயத்துடன் தொடர்புடைய செயல்பாடுகள் எவையெவை எனச் சுட்டும் ' சமயத்தின் சமூகச் செயல்பாடுகள்' என்ற இயல் இரண்டாவதாக வைக்கப்பெற்றுள்ளது.

ஒரு சமுதாயத்தைப் பற்றி ஆராயும்போது முதலில் அச்சமுதாயத்தின் அமைப்பை அறிந்து கொள்ளுதல் இன்றியமையாதாது ஆகும். ஒரு சமுதாயம் பல்வேறு அரசியல், பொருளாதாரக் காரணிகளால் தரப்படுத்தப்பெறுதல் என்பது தவிர்க்க முடியாத பொது நிகழ்வாக உள்ளது. சமுதாயத்தரப் பிரிவுகள் தோன்றுதற்குரிய காரணிகளுள் சாதிமுறை என்ற சமுதாய நிறுவனம் இன்றியமையாது செயல்படுவதால் 'சாதிமுறை' என்ற இயல் மூன்றாவதாக அமைகின்றது.

சமூகத்தில் உயர்ந்த வகுப்பினர், இடைப்பட்ட வகுப்பினர், தாழ்ந்த வகுப்பினர் என்று பொருளாதார நிலையின் அடிப்படையில் மக்கள் பாகுபடுத்தப்பெறுகின்றனர். எனவே, தரப்பிரிவுகளை உருவாக்கும் மற்றொரு

காரணியாகிய 'பொருளாதார ஏற்றத்தாழ்வுகள்' என்ற இயல் அடுத்து அமைகின்றது.

சமுதாயத்தில் வாழ்கின்ற மக்களைக் குறிப்பிட்ட சில அரசியல், பொருளாதார, சமூக, சமயக் காரணங்களினால் ஆண்டான் என்றும், அடிமை என்றும் வேறுபடுத்துவதாலும் சமுதாயத்தில் தரப்பிரிவுகள் தோற்றம் கொள்ளகின்றன என்ற சமூகவியலாளர்களின் கருத்தை அடிப்படையாகக் கொண்டு அடிமை நிலை' என்ற இயல் நான்காவதாக இடம்பெறுகின்றது.

சமுதாயத்தைப் பற்றி ஆராயும்போது அச்சமுதாயத்தின் பண்பாட்டை விளக்குதல் என்பது இன்றியமையாதாது ஆகும். சமயம் அது நிலவுகின்ற சமுதாயத்தின், அதைப்பின்பற்றுகின்ற மக்களின் பண்பாட்டை வெளிப்படுத்தும் கருவியாகத் திகழ்கின்றதெனச் சமூகவியலாளர்கள் கருதுகின்றனர். இவ்வகையில் பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் நிலவிய பொதுப்பண்பாடுகள், சிறப்புப் பண்பாடுகள், பண்பாட்டுக் கூறுகள் என்பனவற்றை விளக்கும் 'பண்பாடு' என்ற இயல் அமைகின்றது.

பண்பாட்டின் இன்றியமையாக் கூறுகளுள் ஒன்று மதிப்புக்கள் ஆகும். ஒரு சமுதாயத்தின் பண்பாடு மேலோங்கி நிற்க இம்மதிப்புக்கள் பெரிதும் துணைநிற்கின்றன. பண்பாட்டின் பல கூறுகளுள் ஒன்றாகவே மதிப்புக்கள் காணப்பெறினும், அதன் சமூக இன்றியமையாமையைக் கருதிற்கொண்டும், பக்தி இலக்கியத்துள் இம்மதிப்புக்கள் பெருமளவில் சுட்டப்பெறுமாற்றாலும் 'மதிப்புக்கள்' என்ற இயல் தனியோர் இயலாகப் பண்பாட்டினை அடுத்து வைத்து விளக்கப்பெறுகின்றது.

சமுதாயத்தில் நிலவுகின்ற இன்றியமையாத நிறுவனங்களுள் ஒன்று குடும்பம் ஆகும். குடும்பமானது சமுதாயத்தில் காணப்பெறுகின்ற, சமுதாயம் எதிர்பார்க்கின்ற பண்பாட்டினையும், சமூக மதிப்புக்களையும் போற்றிப் பாதுகாக்கின்றது. குடும்ப உறுப்பினர்கள் இவற்றைத் தம் இளைய தலைமுறையினருக்குக் கடத்துகின்றனர். எனவே, 'குடும்பம்' என்ற நிறுவனம் குறித்து விளக்கும் இயல் எட்டாவதாக இடம் பெறுகின்றது.

ஒரு சமுதாயத்தின் மேன்மையையும், பண்பாட்டு உயர்வையும் அச்சமுதாயம் பெண்களை எந்த அளவுக்கு மதித்துள்ளது என்பதை வைத்து அறியலாம். எனவே, பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் பெண்கள் பெற்றிருந்த சமுதாய நிலையை வெளிப்படுத்தும் 'பெண்களின் நிலை என்ற இயல் ஒன்பதாவதாக வைக்கப் பெற்றுள்ளது.

பக்தி இலக்கியம் சைவ, வைணவ சமயச் சார்புடைய இலக்கியமே. எனினும், பக்தி இலக்கியம் மூலம் அக்காலச் சமுதாயத்தில் நிலவிய பிற சமயங்கள் பற்றிய அறிவும், அச்சமயங்களின் நிலை பற்றிய தெளிவும் கிடைக்கின்றன. மேலும் சமயமும் சமுதாய நிறுவனமே ஆகையால் சமயநிலை என்ற இயல் பத்தாவதாக இடம்பெறுகின்றது.

ஆய்வின் முடிபுரை என்ற பதினோராவது இயல் முன்னைய இயல்களில் மேற்கொண்ட ஆய்வின் வாயிலாகப் பெறப்பெற்ற முடிபுகளையும், குறிப்பிடத்தக்க செய்திகளையும் தொகுத்துக் கூறும் நிலையில் அமைகின்றது.

## 1.5. இயல்களின் விளக்கம்

### 1.5.1. ஆய்வின் அறிமுகம்

ஆய்வின் அறிமுகம் என்ற முதல் இயலில் ஆய்வின் நோக்கம், ஆய்வின் எல்லை, ஆய்வுப்பொருள் பாகுபாடு, முறைவைப்பு, இயல்களின் விளக்கம், இதற்கு முன்னர் இப்பொருள் குறித்து நிகழத்தப்பெற்ற ஆய்வுகள், இவ்வாய்வின் தேவை என்பன விளக்கப் பெறுகின்றன.

### 1. 5. 2. சமயத்தின் சமூகச் செயல்பாடுகள்

சமுதாயம், சமுதாயத்தின் அங்கமான நிறுவனம், இந்நிறுவனங்களுள் ஒன்றாகிய சமயம் என்பன பற்றிச் சமூகவியலறிஞர்கள் தரும் விளக்கங்களும், சமயத்தின் சமூகச் செயல்பாடுகளாகிய சமூகத்தை ஒருங்கிணைக்கும் கருவியாகச் செயலாற்றுதல், சமூக ஒட்டும் தன்மையை வலியுறுத்துதல், சமூக நியதிகளையும், மதிப்புக்களையும் புனிதமாக்குதல், சமூகத்தைக் கட்டுப்படுத்தும் கருவியாகச் செயலாற்றுதல், மக்களுக்கு உணர்ச்சிவயமான விடுதலை அளித்தல், சமூகத்தில் அவ்வப்போது நிகழும் மாற்றங்களுக்குத் துணைநிற்றல், சமூகத்தில் அமைதியை நிலைநாட்டப் பாடுபடுதல், சமூகப் பண்பாட்டை வெளிப்படுத்தல், சமூக அமைப்பினைப் பிரதிபலித்தல், மக்களிடையே சமத்துவ நிலையை உருவாக்கப்பாடுபடுதல் போன்றனவும் விளக்கப் பெறுகின்றன. சமூகவியலாளர்களுள் சிலர், சமயம் சமத்துவமின்மைக்கு நியாயம் கற்பித்தல், சமூக மாற்றங்களைத் தடைசெய்தல், வகுப்புச் சுரண்டல்களுக்குத் துணைநிற்றல் போன்ற சமூக ஊறுபாட்டுச் செயல்பாடுகளைக் கொண்டுள்ளமையையும் விளக்குவதைச் சுட்டிக்காட்டிப் பொதுவாகச் சமயம் என்ற சமூக நிறுவனம் பல சமூக நலச் செயல்பாடுகளையே கொண்டுள்ளது என்பது தெளிவுறுத்தப்பெறுகின்றது.

### 1. 5. 3. சாதிமுறை

இவ்வியலில் சாதிமுறை என்பதற்குச் சமூகவியலாளர் தரும் விளக்கங்களுள் சில சுட்டப்பெறுகின்றன. சாதிமுறை தோற்றம் கொள்ளுதற்கும் வளர்ச்சியுறுவதற்கும் உரிய காரணிகள், சாதிமுறைகளின் தன்மைகள் எனச் சமூகவியலாளர்கள் குறிப்பிடுவனவற்றுள் பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் பிறப்பு, தொழில்கள், கொல்லாமை என்ற அறநெறியின் தாக்கம், முற்பிறப்புவினை அல்லது விதி என்ற நம்பிக்கை, பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் என்பன சாதி முறையின் காரணிகளாகவும், அகமண முறை, பரம்பரைத் தொழில்களை மேற்கொள்ளுதல், உணவுத்தடை, உறுப்பினர் மீது கட்டுப்பாடு விதித்தல் என்பன

சாதிமுறையின் தன்மைகளாகவும் அமைந்து காணப்பெற்றமை இலக்கியச் சான்றுக்களுடன் விளக்கப் பெறுகின்றன. பின்னர், சமுதாயத்தில் காணப்பெற்ற சாதிப்பிரிவுகளும், உட்பிரிவுகளும் இனங்காணப்பெறுகின்றன. இச்சாதி முறையின் அடிப்படையில் சமுதாய உறுப்பினர்கள் உயர்ந்த சாதியினர் என்றும் தாழ்ந்த சாதியினர் என்றும் தரப்படுத்தப்பெற்றிருந்தனர் என்பதும், வைதீக அந்தணர்கள் உயர்சாதியினராக மதிக்கப்பெற்றுச் சமுதாய உயர்நிலையில் வாழ்ந்துள்ளனர் என்பதும், புலையர், சண்டாளர், குக்கர், பாணர் போன்ற குறிப்பிட்ட சில பிரிவினர் தாழ்ந்த சாதியினராகவும், சமூக, சமய இயலாமை நிறைந்தவர்களாகவும் வாழ்ந்துள்ளனர் என்பதும் விளக்கப்பெறுகின்றன. சமுதாயத்தில் சாதி முறையின் அடிப்படையில் நிலவிய ஏற்றத்தாழ்வுகளைக் கண்ணுற்ற நாயன்மார்களும், ஆழ்வார்களும் சாதி வேற்றுமையை மறந்து மக்கள் அனைவரும் சமமாக வாழவேண்டும் என்ற உயரிய நோக்கமுடன் இறைவன் அருட்செயல்களை இயம்பியும், அறிவுரைகள் கூறியும், தங்கள் வாழ்க்கையில் நடந்துகாட்டியும் சமத்துவச் சிந்தனையை எவ்வாறு வெளிப்படுத்தியுள்ளனர் எனக் காட்டப்பெறுகின்றது. அவர்கள் சாதிமுறையின் அடிப்படையிலான ஏற்றத்தாழ்வுகளைப் பாராட்டும் போக்கை வன்மையாகவும், மென்மையாகவும் கண்டித்தமையுடன், சாதி வேறுபாடற்ற சமத்துவச் சமுதாயம் மலர்வதற்குக் கூறிய அறிவுரைகளும் எடுத்துக் கூறப்பெறுகின்றன. இறுதியில் சமயம் சாதி முறையைத் தீர்மானிக்கும் காரணிகளுள் ஒன்றாகச் சமூகவியலாளர்களால் கருதப்பெறும் நிலையில், சமயத்தை அடிப்படையாகக் கொண்டு எழுந்த பக்தி இலக்கியம் மூலம் நாயன்மார்களும் ஆழ்வார்களும் சாதி வேறுபாடற்ற சமுதாயம் அமையப் பாடுபட்டமையும், இன்றையச் சமூக நலச் சிந்தனையாளர்களையும் விஞ்சிய நிலையில் முற்போக்குச் சிந்தனைகளை வெளிப்படுத்தியமையும், அத்துடன் அமையாது தங்கள் வாழ்க்கையில் அவ்வாறு வாழ்ந்துகாட்டியமையும் புலப்படுத்தப்பெறுகின்றன.

## 1. 5. 4. பொருளாதார ஏற்றத்தாழ்வுகள்

சமூக வகுப்புக்கள் குறித்துச் சமூகவியலாளர்களின் விளக்கங்களும், சமுதாய வளர்ச்சிப்போக்கில் பொருளாதார ஏற்றத்தாழ்வின் தோற்றமும், பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் நாகரிகச் சமுதாய அமைப்பின் கூறுகள் இடம்பெறுமாறும் முதற்கண் விளக்கப்பெறுகின்றன. பின்னர், வைதீக அந்தணர்களும், பெருங்குடி வணிகர்களும், செல்வர்களும், நிலவுரிமையுடைய வேளாளர்களும் பொருளாதார நிலையில் மேம்பட்ட உயர் வகுப்பினராக வாழ்த்துள்ளமையும், அவர்களின் உயர் வாழ்க்கை நிலையும், பொருளாதார நிலையும் எடுத்துக் காட்டப்பெறுகின்றன. சமுதாயத்தில் மக்கள் பொருளாதார நிலையின் அடிப்படையில் உயர் வகுப்பினர், தாழ்ந்த வகுப்பினர் எனத் தரப்படுத்தப்பெற்றிருந்தமையையும், வறியவர்களின் இழிந்த, இயலாமை நிறைநத, இரக்கமிக்க வாழ்க்கை நிலையையும் எண்ணிப்பார்த்து மனம் புழுங்கிய நாயன்மார்களும், ஆழ்வார்களும் சமத்துவச் சமுதாயம் அமைய முனைந்த முனைப்பு விளக்கப்பெறுகின்றது. இறை அன்பை வலியுறுத்தல், அறிவுரை கூறல், அச்சுறுத்தல் மூலமாகச் செல்வர்களைக் கொடை கொடுக்குமாறு தூண்டிப்

பணத்தைப் பரவலாக்குதல் என்ற பொருளாதாரக் கொள்கையை வலியுறுத்தினர். அதே நேரத்தில் வறியவர்களிடம் பிறரைச் சென்று இரக்காது உழைத்து வாழவேண்டும் என அறிவுறுத்திப் பொருளாதார நிலைக்கு அடிப்படையாகிய உழைப்பை மேற்கொள்ளத் தூண்டினர். இவ்வாறு நாயன்மார்களும் ஆழ்வார்களும் தற்காலப் பொருளதார அறிஞர்களின் கொள்கைகளை அன்றே நிலைநாட்டிப் பொருளாதாரச் சமத்துவச் சமுதாயம் தோன்றப் பாடுபட்டமை இவ்வியலில் காட்டப்பெறுகின்றது.

## 1. 5. 5. அடிமை நிலை

அடிமை, அடிமைநிலை என்பனவற்றின் விளக்கங்கள் முதற்கண் தரப்பெறுகின்றன. அடுத்து, பக்தி இலக்கியம் காட்டும் அடிமைநிலைக்குச் சமய நோக்கில் விளக்கம் அளிக்கப்பெறுகின்றது. பின்னர், பக்தி இலக்கியம் காட்டும் இறை அடிமைநிலை சமுதாயத்தில் பொருளாதார, சமய, சமூகச் சூழல்களால் நிலவிய அடிமைநிலையைப் பிரதிபலிப்பதாகத் தோன்றுமாறும் விளக்கப்பெறுகின்றது. உலகில் பிற பகுதிகளிலும், பழங்கால இந்தியச் சமுதாயத்திலும் அடிமை நிலையின் தோற்றத்திற்கும், வளர்ச்சிக்கும் உரிய சூழ்ல்களாகச் சமுதாய, பொருளாதார, வரலாற்று அறிஞர்களால் குறிப்பிடப்படுவனவற்றுள் பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் நிலவுரிமை அமைப்பு, வறுமை, பஞ்சம், கடன்படல், விலைக்கு வாங்குதல், விற்றல், ஒற்றிவைத்தல் போன்ற பொருளாதார, சமுதாயச் சூழல்கள் இடம்பெறுமாறு காட்டப்பெறுகின்றது. பக்தி இலக்கியம் சுட்டும் மூவகையான அடிமை கொள்ளும் நிலைகளும், அடிமைவகைகளும் காட்டப்பெறுகின்றன. இறுதியில் சமுதாயத்தில் மக்களுக்கு மக்கள் அடிமையாகும் அடிமைநிலையிலிருந்து மக்களை விடுவித்து நாயன்மார்களும், ஆழ்வார்களும் இறைவனுக்கு அடிமையாகி உயர்நிலையை அடைய அழைத்துச்செல்லுகின்றனர் என்ற கருத்து வலியுறுத்தப்பெறுகின்றது.

## 1. 5. 6. பண்பாடு

இவ்வியலில் பண்பாடு என்பதன் விளக்கங்கள், பண்பாட்டின் கூறுகள், பண்பாட்டின் பரிணாம வளர்ச்சி, பண்பாட்டின் செயல்பாடுகள், பண்பாட்டின் குணங்கள் என்பன முதற்கண் விளக்கப்பெறுகின்றன. பின்னர், பக்தி இலக்கியம் மூலம் அறியலாகும் அக்காலப் பண்பாடுகள் விளக்கப்பெறுகின்றன. இப்பகுதியில் சமுதாயத்தில் பொதுவாகக் காணப்பெற்ற வழக்கங்களும் குறிப்பிட்ட சில பிரிவினரால் பின்பற்றப்பெற்ற வழக்கங்களும், அரசியல் தொடர்பான வழக்கங்களும், சமயம் தொடர்பான வழக்கங்களும் சுட்டப்பெறுகின்றன, அடுத்து, சமுதாயத்தில் இடம்பெற்ற மருத்துவக்கலை, சோதிடக்கலை, யோகக்கலை, விடம் நீக்கும் கலை, ஆடற்கலை, விளையாட்டுக்கலை, பாடற்கலை முதலான கலைகள் காட்டப் பெறுகின்றன. பின்னர், குழந்தைச் சடங்குகள், திருமணச் சடங்குகள், இறப்புச் சடங்குகள் போன்ற சடங்குகளும், சமுதாயத்தில் மக்களால் மேற்கொள்ளப்பெற்ற நம்பிக்கைகளும் ஆகிய அருவப்பண்பாட்டுக் கூறுகள் இனம் காணப்பெற்றுக் குறிப்பிடப்பெறுகின்றன. உருவப் பண்பாட்டுக் கூறுகளான

அணிகலன்கள், கருவிகள், மணப்பொருட்கள், அழகுப்பொருட்கள், உணவுப்பொருட்கள், உடை வகைகள் போன்றனவும் சுட்டப்பெறுகின்றன. இவ்வியல் பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் இடம்பெற்ற பண்பாட்டை முழுமையாக விளக்கும் நிலையில் அமைகின்றது.

## 1. 5. 7. மதிப்புக்கள்

சமூக மதிப்புக்கள் என்பது பற்றிச் சமூகவியலாளர்கள் தரும் விளக்கங்களும், சமுதாயம் முன்னேற மதிப்புக்கள் ஆற்றும் பங்கும், சமயம் என்ற நிறுவனம் மதிப்புக்களைப் போற்றிப் பாதுகாத்தலாகிய செயல்பாட்டைக் கொண்டுள்ளமையும் விளக்கப்பெறுகின்றன. பக்தி இலக்கியம் உணர்த்தும் மதிப்புக்கள் வகை தொகை செய்யப்பெற்றுப் புலப்படுத்தப்பெறுகின்றன. நாயன்மார்களும், ஆழ்வார்களும் அறிவுரைகள் கூறியும், புராணக் கதைகளை எடுத்து இயம்பியும், இறைவன் அருட்குணங்களைப் போற்றியும் சமுதாயத்தில் மக்கள் வாழ்வாங்கு வாழ எவ்வெவற்றை மேற்கொள்ளுதல் கூடாது. எவ்வெவற்றைப் பின்பற்ற வேண்டும் என்றும், குடும்பம், அரசியல், சமயம், சமூகம் தொடர்பான மதிப்புக்கள் இவையிவை என்றும் கூறுமாறு விளக்கப்பெறுகின்றன.

## 1. 5. 8. குடும்பம்

உலகெங்கிலும் பரந்து காணப்பெறுகின்ற சமுதாய நிறுவனங்களுள் ஒன்றாகிய குடும்பம் பற்றிய ஆய்வினை மேற்கொண்ட சமூகவியலாளர்களின் குடும்பம் குறித்த விளக்கங்களை இவ்வியல் முதன்முதலில் தருகின்றது. சமூகவியலறிஞர்கள் குடும்பத்தை அதன் உறுப்பினர்களின் எண்ணிக்கையின் அடிப்படையிலும், அதிகாரம் செலுத்தும் பிரிவினர் யாவர் என்பதன் அடிப்படையிலும், இல்லறம் நடத்தும் இடத்தின் அடிப்படையிலும், திருமண முறையில் அடிப்படையிலும், மனைவி அல்லது கணவனின் எண்ணிக்கையின் அடிப்படையிலும் வகைப் செய்யுமாறு விளக்கப்பெற்று, இவற்றின் அடிப்படையில் பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் இடம்பெற்ற குடும்ப அமைப்பு எத்தன்மையது என இனங்காணப் பெறுகின்றது. பின்னர், குடும்பம் என்ற நிறுவனம் இயங்குவதற்கு அடிப்படைகளாக அமையும் இல்லற வாழ்க்கை, கணவன், மனைவியின் பங்கு என்பனவும், குடும்பத்தின் சமூகச் செயல்பாடுகள் எனக் கருதப்பெறும் குழந்தைகளைப் பெறுதல், குழந்தைகளை வளர்த்தல், பால் நடவடிக்கைகளில் ஒழுங்குகளை வலியுறுத்துதல், குழந்தைகளுக்குக் கல்வி வசதி அளித்தல், குடும்பத்தின் பொருளாதார, உடற்கூறுத் தேவைகளை நிறைவு செயதல், குழந்தைகளைச் சமூக மயமாக்குதல் என்பனவும் விளக்கப்பெறுகின்றன.

## 1. 5. 9. பெண்களின் நிலை

ஒரு சமுதாயத்தின் மேன்மையும், அச்சமுதாயத்தின் பண்பாட்டு உயர்வும் அச்சமுதாயத்தில் பெண்களின் அந்தஸ்த்து எவ்வாறு உள்ளது என்பதைப் பொறுத்தே அமைகின்றது என்ற சிந்தனைக்கேற்பப் பக்தி இலக்கியம் காட்டும்

சமுதாயத்தில் பெண்களின் நிலை எவ்வாறு காணப்பெற்றது என்பதை அறியும் வகையில் இவ்வியல் இடம்பெறுகின்றது. பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் பெண்கள் உயர்வாக மதிக்கப்பெற்றமையும், அவர்கள் சமய உரிமை, பொது நிகழ்ச்சிகளில் பங்குபெறும் உரிமை, சொத்துரிமை, கலைகள் கற்கும் உரிமை போன்றவற்றைப் பெற்றிருந்தமையும் விளக்கப்பெறுகின்றன. பின்னர். இறைவனிடம் அன்பு செலுத்துதல், இறையடியார்களைப் போற்றுதல் என்ற நோக்கங்களுக்காக ஆடவர்கள் செயல்படும்போது சமுதாயத்தில் பெண்கள் கணவனால் கைவிடப்படும் நிலை, கணவன் தவறுகளைத் தட்டிக்கேட்கும் உரிமையற்ற நிலை, ஆவர்களின் உரிமைப்பொருளாகக் கருதப்பெற்ற நிலை போன்றனவற்றிற்குள்ளாயினமையும், பெண்களின் சார்ந்து வாழும் நிலை, இழிநிலை என்பனவும் சுட்டிக்காட்டப் பெறுகின்றன. பெண்களின் சமுதாய வீழ்ச்சிக்குரிய காரணங்கள் குறிப்பிடப்பெறுகின்றன. சமுதாயத்தில் பெண்களில் சிலர் சில சூழல்களில் ஆடவர்க்கு இணையான மதிப்பைப் பெறாமையைக் கண்ணுற்றும், பெண்களுக்குச் சமுதாயத்தில் இணையான மதிப்பு அளிக்கப் பெற வேண்டும் என எண்ணியும் நாயன்மார்களும் ஆழ்வார்களும் வெளிப்படுத்திய ஆண், பெண் சமத்துவச் சிந்தனைகள் புலப்படுத்தப் பெறுகின்றன.

### 1. 5. 10. சமயநிலை

பக்தி இலக்கியம் காட்டும் சமய நிலையைப் பற்றி அறியப்புகும் முன்பு, பண்டைத் *தமிழகத்திலேயே சமய உணர்வு அரும்பி, மக்களின் வாழ்க்கையுடன்* பின்னிப் பிணைந்து நின்றது என்ற கருத்து தொல்காப்பியம், சங்க இலக்கியம் ஆகியவற்றின் துணைகொண்டு சுருக்கமாகக் குறிப்பிடப்பெறுகின்றது. அடுத்து, சங்கம் மருவிய காலப்பகுதியில் தமிழகச் சமய நிலையில் மாற்றம் ஏற்படுவதற்குப் பின்னணியாக அமைந்த தமிழக அரசியல் நிலை சுட்டப் பெறுகின்றது. சங்கம் மருவிய காலப்பகுதியில் சமண, பௌத்த சமயங்கள் பெருவளர்ச்சி பெற்றிருந்தமையும் இச்சமயங்களின் வளர்ச்சி நிலையைச் சிலப்பதிகாரமும் மணிமேகலையும் எடுத்துக் காட்டுமாறும் விளக்கப்பெறுகின்றன. பக்தி இலக்கியம் சைவ, வைணவச் சார்புடைய இலக்கியமாகத் திகழப்பெறினும், அது சமண, பௌத்த சமயங்களின் நிலையையும், இனக்குழுச் சமுதாய அமைப்பில் இடம்பெற்ற சமயத்தின் எச்சக் கூறுகள் சிலவற்றையும் புலப்படுத்துகின்றது. கடவுள் இல்லை என்ற கொள்கையுடைய நாத்திக் கொள்கையினரும் சமுதாயத்தில் வாழ்ந்துள்ளனர் என்பதும் புலப்படுத்தப்படுகின்றது. சமுதாயத்தில் மக்களின் உயர்மதிப்பைப் பெறுவதற்காகச் சமயங்கள் தங்களுக்குள் பூசலிட்டுக்கொண்ட நிலை சான்றுக்களுடன் விளக்கப்பெறுகின்றது. பின்னர், சமண, பௌத்த சமயங்களின் வளர்ச்சி குன்றியமையும், அதற்குரிய காரணங்களும், சைவ, வைணவ சமயங்களின் வளர்ச்சிநிலையும், அதற்குரிய காரணங்களும் விளக்கப்பெறுகின்றன.

### 1. 5. 11. ஆய்வின் முடிபுரை

ஆய்வின் இறுதிப்பகுதியாக அமையும் ஆய்வின் முடிபுரை என்ற இயலில்

முற்கூறிய இயல்களில் மேற்கொண்ட ஆய்வின் வாயிலாக அறியலாகும் முடிபுகளும், குறிப்பிடத்தக்க செய்திகளும், இவ்வாய்வினைத் தொடர்ந்து இனி மேற்கொள்ளுதற்குரிய ஆய்வுப் பொருட்களும் குறிப்பிடப்பெறுகின்றன.

## 1. 6. இந்த ஆய்வின் தேவை

பன்னிரு திருமுறைகளையும், நாலாயிரதிவ்வியப் பிரபந்தத்தையும் அடிப்படையாக வைத்துப் பல்வேறு தலைப்புக்களில் ஆய்வு நூல்களும், ஆய்வேடுகளும் வந்துள்ளன. பக்தி இலக்கியம் ஓர் அறிமுகம், திருஞான சம்பந்தர் ஓர் ஆய்வு, திருஞனசம்பந்தர் வரலாற்றாராய்ச்சியும் திறனாய்வும், அப்பர் தேவாரத் திறன், பெரியபுராணம் ஓர் ஆய்வு, பெரியபுராண ஆராய்ச்சி, ஆழ்வார்கள் கால நிலை போன்ற நூல்கள் சுட்டுதற்குரியனவாகும். இவை தவிர, பக்தி இலக்கியத்தில் அகமரபுகளின் செல்வாக்கு. பன்னிரு திருமுறைகளில் இயற்கை, திருஞான சம்பந்தர் தேவாரமும் சைவ சித்தாந்தக் கருத்துக்களும், திருஞானசம்பந்தர் தேவாரத்தில் இயற்கை, திருநாவுக்கரசர் தேவாரத்தில் தத்துவம், திருநாவுக்கரசர் தேவாரம் ஓர் ஆய்வு, சுந்தரர் தேவாரம் - கலை இலக்கியப் பார்வை, தேவார காலத்தில் சமுதாய வாழ்க்கை, அப்பர், சுந்தரர் பாடல்கள் ஒப்பாய்வு, தேவாரம் காட்டும் பௌத்தம், மூவர் தேவாரத்தில் காணும் இயற்கை நலம், தேவார மூவரின் சமுதாயப் பணி, காரைக்காலம்மையாரின் சமயமும் தத்துவமும், திருமந்திரம் ஒரு திறனாய்வு, பதினோராம் திருமுறை ஓர் ஆய்வு, பதினோராம் திருமுறைத் திறன், பெரியபுராணத்தில் சமுதாயமும் பண்பாடும், பெரியபுராணத்தில் இயற்கை வருணனைக் கூறுகள், பெரியபுராணப் பழுங்கதைகளில் அமைப்பியல் ஆய்வு, திவ்வியப்பிரபந்தத்தில் புராணக் கூறுகள், நாலாயிரதிவ்வியப் பிரபந்தமும் இலக்கிய வடிவங்களும், நாலாயிரதிவ்வியப் பிரபந்தத்தில் சமயமும் தத்துவமும், திவ்வியப் பிரபந்தத்தில் அணிகள், ஆழ்வார் பாடல்கள், திருவாய்மொழி ஆராய்ச்சி, பெரியாழ்வார் திருமொழி, ஆண்டாள் பாசுரங்களில் சமூக, சமய, பண்பாட்டு ஆய்வு, முதல் ஆழ்வார்கள் மூவர் முதலான தலைப்புக்கள் முனைவர் மற்றும் எம்.ஃபில் பட்டங்களுக்காகத் தேர்ந்தெடுக்கப் பெற்றுள்ளன. முற்கூறியன பக்தி இலக்கியம் என்ற தொகுப்பினுள் அடங்கும் ஏதேனும் ஒரு நூலை மட்டும் அடிப்படையாகக் கொண்டு அமைவனவாகவே பெரும்பாலும் காணப்பெறுகின்றன. இவ்வாய்வுகளில் சமுதாய நோக்கில் மேற்கொள்ளப்பட்டவை சிறிதளவே காணப்பெறுகின்றன. இவ்வகையில் பக்தி இலக்கியம் எனப் போற்றப்பெறுகின்ற பன்னிரு திருமுறைகளையும் நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தையும் முழுமையக எடுத்துக்கொண்டும், கல்வெட்டு, வரலாற்றுச் செய்திகளைத் துணையாகக் கொண்டும், சமுதாயவியல் நோக்கில் சமுதாயம், சமயம், பண்பாடு, அரசியல், பொருளாதாரம் போன்ற கூறுகளை ஆராய்வதன் மூலமும், பக்தி இலக்கியம் காட்டும் தமிழ்ச் சமுதாயம் பற்றிய விரிவான செய்திகளைத் தருவதன் மூலமும் இவ்வாய்வு தனித்தன்மை வாய்ந்ததாகத் திகழ்கின்றது எனலாம்.

# இயல் – 2

## சமயத்தின் சமூகச்செயல்பாடுகள்

பக்தி இலக்கியத்தைச் சமூகவியல் நோக்கில் அணுகும் முன்பு சமுதாயம் என்றால் என்ன? சமுதாயத்தின் அங்கமாகத் திகழும் நிறுவனம் என்பது யாது? அந்நிறுவனங்களுள் ஒன்றாகிய சமயம் என்பதன் விளக்கங்கள் யாவை? சமயத்தின் சமூகச் செயல்பாடுகள் யாவை? என்பனவற்றைச் காணுதல் ஏற்புடைத்தாகும்.

### 2. 1. சமுதாயம்

தனிமனிதர்களையும் (individuals), பல்வேறு அமைப்புக்களையும், நிறுவனங்களையும், குழுக்களையும், துணைக் குழுக்களையும் தன்னகத்தே கொண்ட ஓர் அமைப்பாகச் சமுதாயம் விளங்குகின்றது. பொதுவான உடற்கூறியல்புகளையும், பொதுவான விருப்பங்களையும் (common interests), பொதுவான வாழ்க்கை நோக்கங்களையும் (common mode of life), பொதுவான விதிகளையும் கொண்டுள்ள உறுப்பினர்களை ஒன்றிணைக்கும் சிறியதும், பெரியதும், நிரந்தரமானதுமாகிய அமைப்பைச் சமுதாயம் என்று கூறலாம். மேலும், குறிப்பிட்ட எல்லைக்குள் (specified territorry) வாழ்கின்ற மக்களால் மேற்கொள்ளப்பெறும் உட்செயல்களின் (interactions) அனைத்து முறைகளையும் சமுதாயம் எனக் கூறலாம் என்ற விளக்கமும் உள்ளது. ஒரு சமுதாயமானது தனிப்பட்டவர்களின் கூட்டமைப்பு, உரிமை மற்றும் ஒற்றுமை உணர்வு, ஏகதேசம் நிரந்தர இயல்பு முதலான சிறப்புத் தன்மைகளைக் கொண்டுள்ளதெனச் சமூகவியலாளர்கள் கருதுகின்றனர்.[1]

### 2. 2. நிறுவனங்கள்

சமுதாயம் பல்வேறு நிறுவனங்களைத் தன்னகத்தே கொண்டு திகழ்கின்றது. இந்நிறுவனம் குறித்துச் சமூகவியலாளர்கள் அளிக்கும் விளக்கங்கள் சிலவற்றைக் குறிப்பிடுதல் தகும். ஒழுக்கபூர்வமானதாகவும், சமூகப்பூர்வமானதாகவும் நிர்ணயிக்கப்பெற்றவை எனக் கருதத்தக்க சமூக நடவடிக்கைகளின் சாதாரணமுறையே நிறுவனம் ஆகும்.[2] நிலைத்து நிற்பதும், அமைக்கப்பெற்றதும், நிறுவப்பெற்றதும், சமுதாயத்தின் ஒன்று அல்லது பல சிக்கல்களைத் தீர்க்கும் ஒழுங்குமுறைகளைக் கொண்டதுமாகிய ஒன்றே நிறுவனம் எனப்படும்.[3] பொதுவாக மிக நீண்டகாலமாக நிறுவப்பெற்றதையும், சமூகத்தால் அங்கீகரிக்கப்பெற்றதையும் நிறுவனம் என்று கருதலாம். இந்நிறுவனங்கள்

இன்றியமையாச் சமூகச் செயல்களைச் சுற்றியெழும் சமூக நியமங்களின் (social norms) ஒழுங்குமுறைகள் எனக் கருதப்பெறுகின்றன.

ஒரு சமுதாயத்தைப் பற்றிய ஆய்வினை மேற்கொள்ளப் புகுவோருக்கு முதன்முதலில் நிறுவனங்களைப் பற்றிய அறிவு இன்றியமையாது தேவைப்படுகின்றது என்ற சிந்தனையைச் சமூகவியலாளர்கள் வெளிப்படுத்துகின்றனர். அத்தனை அளவுக்கு நிறுவனங்களின் செயல்பாடுகள் (functions) சமுதாயத்தில் அமைந்து காணப்பெறுகின்றன எனலாம். இக்காரணம் பற்றியே நிறுவனங்களைச் சமுதாயத்தின் கட்டப்பட்ட கட்டடங்கள் (building blocks of society) என வருணிப்பதாகத் தோன்றுகின்றது. இந்நிறுவனங்கள் சிறப்புறச் செயல்படுவதன்மூலம் சமுதாய அமைப்பினைச் (social structure) சிதறவிடாது கட்டிக்காக்கும் அரும்பணியைச் செய்கின்றன. இவ்வாறு சமுதாயத்தில் இயங்கிவரும் நிறுவனங்களுள் ஒன்றாகச் சமயம் என்ற நிறுவனம் திகழ்கின்றது.

## 2. 3. சமயம்

சமுதாயத்திற்குள் காணப்பெறும் எல்லா நிறுவனங்களையும் போன்றே சமயம் என்ற நிறுவனமும் மாறிக் கொண்டிருக்கும் இயல்பினை உடையதாகவிருப்பினும், உலகின் பெரும்பகுதியிலும் சமுதயத்தில் வாழ்கின்ற மக்களின் வாழ்க்கையில் மிக உன்னதமான சக்தியாகவும் மிக இன்றியமையாத சக்தியாகவும் திகழ்கின்றது. சமயம் என்ற சமுதாய நிறுவனம் பற்றிச் சமூகவியலாளர்களும் அறிஞர்களும் தரும் விளக்கங்கள் சிலவற்றைக் காணலாம்.

சமயம் என்பது அடையாளங்கள் அல்லது குறியீடுகள், நம்பிக்கைகள், மதிப்புக்கள், சடங்குகள், இயற்கையிறந்த சக்திகள் போன்றவற்றால் *நிறுவனமாக்கப்பெற்ற முறை* (institutionalized system) என்று குளுக், ஸ்டார்க் என்பார் (Glook & Stark) கருதுகின்றனர்.[4] இயற்கையின் போக்கையும், மனித வாழ்க்கையையும், கட்டுப்படுத்துவதாகவோ அல்லது இயக்கப் பெறுவதாகவோ நம்பப்பெறும் *மனித சக்திக்கும் மேலான ஒரு சக்தியுடன்* நல்லிணக்கம் செய்துகொள்வதையே சமயம் என்ற நிறுவனம் குறிக்கின்றது.[5] சமயம் என்பது தாழ்த்தப்பெற்ற, அழுக்கப்பெற்றமக்களின் பெருமூச்சு (sigh) என்றும், ஆன்மாவற்ற நிலையின் ஆன்மா (soul of soulless condition) என்றும் பெடாமோர் (Bettamore) சமயம் என்ற நிறுவனத்தை வருணிக்கின்றார்.[6] சமயம் என்பது புனிதப்பொருள்களுடனும் நம்பிக்கைகளுடனும் தொடர்புடைய நடவடிக்கைகளின் ஒருங்கிணைந்த முறை (unified system) என இமைல் டர்க்கிம் (Emile Durkheim) விளக்குகின்றார். மேலும் இவர் ஒவ்வொரு சமயமும் மக்களின் தினசரி வாழ்க்கைக் கூறுகளையும், புனித எண்ணங்களையும் அடிப்படையாகக் கொண்டு வேறுபடுத்தப்பெறுமாற்றைக் குறிப்பிடுகின்றார். இயற்கையிறந்த பொருள் அல்லது பொருள்களைச் சுற்றியும், மனித உறவுகளைச் சுற்றியும் உருவாக்கப்பெறுவதே சமயம் என்ற விளக்கத்தைச் சமூகவியல் அகராதி தருகின்றது.[7] நினியன் ஸ்மார்ட் (Ninion Smart) என்பவர் சமயம் என்பது

கோட்பாடுகள், ஐதீகங்கள், ஒழுக்கநெறிப்போதனைகள், சடங்குகள், சமய நிறுவனங்கள், மத அனுபவம் தரும் உந்துதல்கள் அல்லது இயக்கப்பாட்டுயிர்ப்பு என்ற ஆறு பரிணாமங்களைக் கொண்டுள்ளமையைச் சுட்டுகின்றார்.

சிலவாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவினராகிய மக்கட்குலத்தார் தமது குறைவுடைய அறிவினை மட்டும் துணையாகக் கொண்டு அமைத்துக் கொள்ளும் உலகியல் வாழ்க்கை முறைகளைவிட நாடு, மொழி, இனம் என்று வேற்றுமைகளுக்கு இடம்தராது எல்லா உயிர்களுக்கும் உரிய தனிமுதற்பொருளாயும் எல்லா உயிர்களுக்கும் உயிராயும் நின்று உலகை இயக்கியருளும் தெய்வம் ஒன்று உண்டு என்ற தெளிவுடையவராய்த் தெய்வத்தின் திருவருள் வழி அடங்கிநின்று எல்லா உயிர்களும் வையத்துள் வாழ்வாங்கு வாழும்வண்ணம் அமைத்துக்கொள்ளும் வாய்மையான ஒழுக்கநெறியே சமயம் என்று மேற்கொள்ளத்தகும் சிறப்புடையதாகும் என்றும், உயர்திணை எனச் சிறப்பிக்கப்பெறும் மக்கட் குலத்தார் அறத்தின் வழி நிலைபெற்றுப் பொருள் ஈட்டித் தாமும், பிறரும் இன்பமுடன் இனிது வாழ்தல் வேண்டித் தமது வாழ்க்கையில் தவறாது கடைப்பிடித்தற்கு அமைத்துக் கொண்ட ஒழுக்கநெறியே சமயம் என்ற பெயரால் அழைக்கப் பெறுகின்றது என்றும் அளிக்கப்பெறும் விளக்கங்கள்[8] இவண் சுட்டுதற்குரியன ஆகும். சராசரி மனித வாழ்க்கையை உயிர்ப்புள்ளதாக்கி முழுமையாக்கும் உணர்வின் தேவையில் தோன்றியதே சமயம் என்றும் கருதப்பெறுகின்றது.[9] சமயம் என்பது வாழ்க்கை முறை. அதாவது மனிதனை நெறிப்படுத்தி, அவன் உள்ளத்தைப் பக்குவப்படுத்தும் கருவியாகத் திகழ்கின்றது. குறை நீக்கத்துக்கும், நிறை நலம் பெறுவதற்கும் சமயம் இன்றியமையாதது ஆகும் என்று சமயத்தின் இன்றியமையாமையும் விளக்கப்பெறுகிறது.[10] இவ்விளக்கங்களை நோக்குமிடத்து, சமயம் என்பது நம்பிக்கைகள், சடங்குகள், இயற்கையிறந்த சக்திகள் போன்றவற்றை அடிப்படையாகக் கொண்ட, சமுதாயச் செயல்பாடுகள் பலவற்றைக் கொண்ட ஒரு சமுதாய நிறுவனம் என்ற பொதுவான விளக்கம் கிடைக்கின்றது.

## 2. 4. சமயத்தின் சமுகச் செயல்பாடுகள்

சமுதாயத்திலேயே தோன்றி, சமுதாயத்திலேயே வளர்ச்சியுறுகின்ற நிறுவனங்களுள் ஒன்றாகச் சமயம் விளங்குமாற்றால் சமுதாயத்திற்கும் சமயத்திற்கும் இடையே பல்வேறு தொடர்புகள் காணப்பெறுமாற்றை அறியலாம். சமுதாயமும் சமயமும் நெருங்கிய உட்தொடர்புடையன என்றும், ஒன்றின் இயக்கமின்றி மற்றொன்று செயல்படமுடியாது என்றும் சமூகவியலாளர்கள் கருதுகின்றனர். சமூகவிலாளர்கள் சமயம் என்ற நிறுவனத்தைக் குறித்து மேற்கொண்ட ஆய்வுகள் பலவும் சமயத்தின் சமூகச்செயல்பாடுகளை (social functions) விளக்குகின்றன. டாக்கியாம் என்பவர் சமயம் ஒருவகையான சமூகவியல் என்றும், மனித வாழ்க்கையையும், மனித இனங்களுக்கிடையேயுள்ள உறவுகளையும் சுற்றுப்புற உலகை அடிப்படையாகக் கொண்டு அது விளக்குகின்றது என்றும் குறிப்பிடுகின்றார்.[11] சமயமே சமூகம் என்பதும் சமூகமே சமயம் என்பதும் அவர் கொண்டுள்ள துணிவு. மேலும், சமயம் சமூகத்தால்

புனிதமானதெனக் கொள்ளப்பெறும் மனித வாழ்க்கையின் கூறுகளைக் கொண்டுள்ள ஒரு சமூக இயல் நிகழ்ச்சி (social phinomenon) என்ற கருத்தும் நிலவுகின்றது. மக்களால் உருவாக்கப்பெறுவனவும், விளக்கப்பெறுவனவுமே சமயமுறைகளாகத் (Religious systems) திகழ்கின்றன. எனவே, சமயம் சமுதாய உற்பத்திகளுள் (social products) ஒன்றாகக் கருதப்பெறுகின்றது. மக்களே அதனைக் கூட்டாகச் சேர்ந்து உருவாக்குகின்றனர். இவற்றால் சமுதாயத்துடன் சமயம் என்ற நிறுவனம் கொண்டுள்ள தொடர்புகள் புலனாகின்றன. இத்தொடர்புகளின் விளைவான சமயத்தின் சமூகச் செயல்பாடுகள் குறித்துக் காண்போம்.

சமயம் சமுதாயத்தை ஒருங்கிணைக்கும் இணைப்புக் கருவியாக நின்று செயல்படுமாற்றை விளக்கும் சமூகவியலாளர்கள் சமயம் இல்லையென்றால் சமுதாயம் குழப்பமடையும் என்ற நிலையையும் எடுத்துக்கூறுகின்றனர். சமய அர்ப்பணம் (Religious dedication) இல்லையென்றால் சமூக ஒழுங்கு இல்லாமல் போய்விடும் என்ற கருத்தைச் சமூகவியலாளர்கள் அனைவரும் ஒருமுகமாக ஏற்றுக்கொள்ளவில்லை. எனினும், சமயம் சமுதாய ஒற்றுமைக்குப் பெரிதும் துணைநிற்கின்றனது என்ற கருத்தைப் பெரும் பான்மையோர் ஏற்றுக்கொள்கின்றனர்.[12] சமுதாயத்தின் அங்கமாகத் திகழும் தனிமனிதர்களின் வாழ்க்கையிலும் சமயத்தின் செல்வாக்கு பெருமளவில் இடம்பெறுமாற்றை உணரமுடிகின்றது. தனிமனிதர்களிடையே சமயம் ஒற்றுமை உணர்வை ஊட்டுகின்றது. (sense of identity). அதாவது ஒரே கருத்தையும் ஒரே வாழ்க்கை முறையினையும், ஒரே சூழலையும், ஒரே நம்பிக்கையையும், ஒரே சடங்கு முறையினையும் கொண்ட மக்களையெல்லாம் ஒருங்கிணைத்து அவர்கள் ஒன்றிய உணர்வுடன் வாழ வழிவகுக்கின்றது. இதனால் சமயம் குழு ஒற்றுமையை நாடுவோர்க்கு வாய்ப்பளிக்கும் சக்தியாகத் திகழ்கின்றது. நம்பிக்கை உணர்வுடன் தன்னைச் சார்ந்தவர்களிடையே சமூக ஒட்டும் தன்மையைப் (social cohesion) பலப்படுத்துகின்றது. புனிதப் பொருள்களுடனும், நம்பிக்கைகளுடனும் தொடர்புடையது சமயம் என்று விளக்கம் கூறும் டர்கியாம் இந்நம்பிக்கைகளைக் கொண்ட மக்களை ஒரே இனமாக ஒன்றிணைக்கும் சமயத்தின் சமூகச் செயல்பாட்டையும் சுட்டுகின்றார்.

சமயம் மக்களின் வாழ்க்கைக்குப் பொருளையும் (meaning), விளக்கத்தையும் அளிப்பதன் மூலம் சமூக நியதிகளையும், சமூக மதிப்புகளையும் புனிதமாக்குகிறது.

உலகச் சமுதாயங்கள் அனைத்திலும் காணப்பெறும் அடிப்படையான சிக்கல்களுள் ஒன்று சமூகக் கட்டுப்பாட்டைக் காப்பதும், அதனைப் பராமரிப்பதும் ஆகும். ஒரு சமுதாயம் கட்டுப்பாட்டினின்றும் வழுவும்போது அக்கட்டுப்பாட்டை நிலை நிறுத்திச் சமுதாயத்தைக் காக்க வேண்டிய கட்டாய நிலை ஏற்படுகின்றது.

இந்நிலையில் சமயம் பல சடங்குகளையும், வழக்கங்களையும், நம்பிக்கைகளையும் தன் உறுப்பினர்களிடையே புகுத்திச் சமூக நியதிகளையும், சமூக மதிப்புக்களையும் மக்கள் ஏற்கவும், அங்கீகரிக்கவும் செய்கின்ற சமூகக் கட்டுப்பாட்டுக் கருவியாகவும் செயலாற்றுகின்றது. சமூகக் கட்டுப்பாட்டை உருவாக்குவதில் சமய ஏற்புகள் (Religious sanctions) இன்றியமையாத பங்காற்றுகின்றன.

தனி மனிதர்களுக்குச் சமயம் உணர்ச்சி பூர்வமான விடுதலையை (emotional release) அளிப்பதன் மூலம் சமுதாய உறுப்பினர்கள் சமுதாயத்துடன் இணைந்துவாழும் தன்மையை ஏற்படுத்திக்கொடுக்கின்றது. மக்களின் குறுகிய, நிலையற்ற வாழ்க்கைக்கு அழிவற்ற முக்கியத்துவம் கொடுக்கின்றது. தனி மனிதர்களின் வாழ்க்கையில் எதிரிடும் துன்பகரமான நேரங்களிலும் சமுதாயத்தில் அவ்வப்போது தோன்றும் நெருக்கடியான நேரங்களிலும்ஆறுதல் அளிக்கவும், வலிமையூட்டவும் சமயம் துணைநிற்கின்றது. மக்களின் தினசரி வாழ்க்கையில் களைப்பு ஏற்படும்போது நம்பிக்கைகளை வலியுறுத்துவதன் மூலமும் மகிழ்ச்சியையும், நம்பிக்கையையும் ஊட்டிக் களைப்பை நீக்கும் அரும்பணியை மேற்கொள்கின்றது.[14] மக்களின் வாழ்க்கையில் ஏற்படும் தோல்விகள், உள்ளத்தில் பதிந்து காணப்பெறும் இயலாமை உணர்வுகள் ஆகியனவற்றால் தளர்கின்றபொழுது அவர்களுக்கு ஆதரவையும், உணர்ச்சிமயமான உதவிகளையும் அளிக்கின்றது. இதனால்தான் தொந்தரவு நிறைந்த சமுதாயத்திற்குச் (troubled society) சமயம் தேவை என்று கருதப் பெறுகின்றது.

சமுதாயத்தில் பல்வேறு காரணங்களினாலும், சூழல்களாலும், நிகழும் சமூக மாற்றங்களுக்கும் (social changes) சமூகத்தின் நிலைத்த தன்மைக்கும் சிறந்ததொரு சக்தியாகச் சமயம் விளங்குகின்றது. மக்கள் சமுதாயத்தில் சமூக மாற்றங்களைக்கொண்டு வரவும், சமுதாயத்தில் நிகழும் சமூக மாற்றங்களை அவர்கள் ஏற்கவும் சமயம் ஊக்கம் கொடுக்கிறது.

சமுதாயத்தில் சிலர் அதிகாரம், செல்வம், உயர்சமூக அந்தஸ்த்து ஆகியனவற்றைப் பெற்றுச் சமூகத்தரப் பிரிவில் (social stratification) உயர்நிலையிலும், சிலர் அதிகாரமின்மை, வறுமை, தாழ்ந்த சமூக அந்தஸ்த்து போன்றனவற்றால் சமுதாயத் தாழ்நிலையிலும் காணப்பெறுகின்றனர். சிலர் உயர்சாதியினராகவும், சிலர் தாழ்ந்த சாதியினராகவும், சிலர் உயர் வகுப்பினராகவும், சிலர் தாழ்ந்த வகுப்பினராகவும், சிலர் ஆண்டானாகவும், சிலர் அடிமையாகவும் வாழ்கின்றனர் என்பதற்குரிய காரணங்களாக ஊழ்வினை, வினைப் பயன் போன்ற சமய நம்பிக்கைகளையும், சமயக்கொள்கைகளையும் எடுத்துக்கூறிச் சமுதாயத் தரப்பிரிவுகளுக்கு நியாயம் கற்பிக்கின்றது. இதனால் மக்கள் சமய நம்பிக்கைகளின் அடிப்படையில் இவ்வேற்றத்தாழ்வு நிலைகளைப் பொறுமையுடன் ஏற்றுக்கொண்டு அமைதியாக வாழ்க்கை நடத்துகின்றனர். இதனால் சமூக வரிசைகள் (social arrangements) பாதுகாக்கப்பெறுகின்றன.

சமயம் சமுதாய அந்தஸ்த்துக்குச் சாத்வீக அனுமதி அளிக்ன்றது.[15] இவ்வாறு சமூக வேறுபாடுகளை ஒழுங்குபடுத்தும் சக்தியாகவும், நியாயப்படுத்தும் சக்தியாகவும் சமயம் செயல்பட்டுச் சமூக அமைதியை நிலை நாட்டுகின்றது.

மாக்ஸ்வெபர் ( Max Webber) சமயம் சமுதாயத்தின் பொருளாதார அமைப்பைத் தீர்மானிக்கும் சக்தியாகச் செயல்படுமாற்றையும் விளக்கிக் காட்டுகின்றார். அவர் சமயத்திற்கும் சமூக, பொருளாதார ஒழுங்குகளுக்கும் இடையேயுள்ள தொடர்புகளை ஆராய்ந்து, சம்யம் உள்ளிட்ட அனைத்துச் சமூக நிறுவனங்களும் பொருளாதாரக் காரணிகளால் தீர்மானிக்கப்பெறுகின்றன என்ற முடிபினை வெளியிட்டுள்ளார். இக்கருத்து சமூகவியலாளர்கள் உள்ளிட்ட அறிஞர்கள் பலராலும் ஏற்றுகொள்ளப்பெறுகின்றது.

ஏனைய சமுதாய நிறுவனங்களைப் போன்று சமயம் என்ற நிறுவனமும் சமுதாயத்தின் குறிப்பிட்ட பண்பாட்டுப் பொதுமைகளையும், வேறுபாடுகளையும் புலப்படுத்துவதுடன் தனிப்பட்ட மனிதர்களதும் உறவுகளுக்கிடையேயுள்ள செயல்பாடுகளையும் வெளிப்படுத்துகின்றது.[16] ஒரு சமயத்தின் நம்பிக்கைகளும், சடங்குகளும், வழிபாடுகளும், கொள்கைகளும் சமுதாயத்தில் அச்சமய நெறியைப் பின்பற்றுகின்ற மக்களின் பண்பாட்டின் அடிப்படையிலேயே அமைகின்றன எனக் கருதலாம்.

சமயங்கள் அனைத்தும் மக்களின் வாழ்க்கையை இயற்கையிறந்த சக்திகள் தீர்மானிக்கின்றன என்ற பொதுவான நம்பிக்கையைக் கொண்டுள்ளன. எனவே, பழங்காலம் முதல் இக்காலம் வரையிலும் எல்லா மனிதச்சமூகங்களும் வாழ்க்கையின் நோக்கத்திற்கும், இயக்கத்திற்கும் சமய நிறுவனத்தையே நம்பியுள்ளன. இதனால் மக்களின் வாழ்க்கை முழுவதும் சமய நிறுவனத்தைச் சுற்றிப் பின்னிப் பிணைந்து அமைகின்றன எனக் கொள்ளலாம்.

சமூகவியலாளர்களுள் பெரும்பாலோர் சமயம் சமூக அமைப்பைத் (social structure) தீர்மானிக்கும் சக்தியாகவும், சமூக அமைப்பைப் பிரதிபலிக்கும் தன்மையைக் கொண்டுள்ளதாகவும் விளங்குமாற்றை ஏற்றுக்கொள்ளுகின்றனர். ஓர் உயிரின் வாழ்க்கையைச் சமுதாய வாழ்க்கையுடன் இணைத்து வளர்க்கும் சமயம் தன் மேலான நடவடிக்கைகளினால் சமுதாய அமைப்பு கால்கொள்ளவும் துணைசெய்கின்றது. இதனால் சமயம் அது நிலவும் சமுதாயத்தின் உண்மை நிலைகளை அறிந்துகொள்ளப் பெரிதும் துணைநிற்கும் எனக் கருதுகின்றனர்.

சமுதாயத் தாழ்நிலையிலுள்ள மக்கள் சமய மதிப்பைப் பெறுவதன் மூலம் தங்கள் சமூக மதிப்பின்மையை எங்ஙனம் ஈடு செய்கின்றனர் என்பதை லிப்ஸ்டன் போப் ( Lipston Pope ) என்பார் விளக்குகின்றார். ஓர் ஆலையில் வேலைசெய்யும் தொழிலாளர்களுக்கு அவர்கள் பின்பற்றும் சமயமானது இன உணர்வையும்,

முயன்றுவாழும் வாழ்க்கையையும், நம்பிக்கையையும் ஊட்டுமாற்றை எடுத்துக்காட்டுகின்றார். அவர்கள் தாம் ஆலை உரிமையாளர்களைவிட மேலானவர்கள் என்றும், உலகில் வறியவர்களாகக் காணப்பெறினும் கடவுளின் கண்களின் முன்னர் மேலானவர்களாக உள்ளோம் என்றும் நம்பிக்கை கொள்வதால் வாழ்க்கையில் ஒரு பிடிப்புடன் வாழ்கின்றனர். மேலும், சமுதாயத்தில் தாழ்நிலையுற்றவர்கள் இறைவன் முன்னர் அனைவரும் சமம் என்றும், இறைவனிடம் அன்பு செலுத்துவதன்மூலம் உயர்நிலை அடையலாம் என்றும் கூறப்பெறும் சமய அறிவுரைகளால் அனைவரும் சமமாக வாழமுடியும் என்ற நம்பிக்கையைப் பெறுகின்றனர். இவ்வாறு சமயம் என்ற சமூக நிறுவனம் சமுதாய அமைப்பைத் தீர்மானித்தல், சமூகக் கட்டுப்பாட்டைக் காத்தல், சமூக வரிசைகளுக்கு நியாயம் கற்பித்தல், சமூக அமைதியை நிலைநாட்டல், சமத்துவச்சமுதாயத்தை உருவாக்கத் துணை நிற்றல், தனிமனிதர்களுக்கு ஆறுதல் அளித்தல் முதலான பல்வேறு சமூகச் செயல்பாடுகளைக் கொண்டுள்ளமை அறியத்தக்கதாகும்.

சமுதாயத்திற்கும், தனிமனிதர்களுக்கும் பல்வேறு நிலைகளில் ஆக்கபூர்வமான தொண்டாற்றும் சமயமானது சில நிலைகளில் சமுதாயத்திற்கு நன்மை செய்வதற்குப் பதிலாக ஊறு விளைவிக்குமாறும் சமூகவியலாளர்கள் சிலரால் சுட்டிக்காட்டப்பெறுகின்றது. அவற்றுள் சமயம் பல்வேறு சமூகத்தேவைகளை நிறைவேற்றும் பணியில் ஈடுபடும்போது சமூக வகுப்புகள் (social classes) உருவாகவும் துணைநிற்கின்றது என்ற கருத்து[18] சுட்டத்தக்கதாகும். சமூகச் சமத்துவ நிலையை வளர்க்கத் துணைநிற்கும் சமயம், சமூகச் சமத்துவமின்மையை ஆதரிக்கவும் செய்கின்றது எனக் கூறப்பெறுகின்றது. சமுதாய வகுப்பில் மேல் நிலையுற்ற பிரிவினரும் சாதிமுறையில் உயர்நிலையுற்ற பிரிவினரும் தங்கள் சமூக அந்தஸ்த்துக்கு நியாயம் கற்பிக்கச் சமய நம்பிக்கைகளையும், சமயக் கருத்துக்களையும் துணையாகக் கொள்கின்றனர். இத்தகைய ஏற்றத்தாழ்வு நிலைகளுக்குச் சமுதாய, பொருளாதாரச் செயல்பாடுகளே காரணங்கள் என்பதற்குப் பதில் இவர்கள் முற்பிறப்புவினை, விதி போன்ற சமயக் காரணங்களைக் கற்பிக்கின்றனர். இதனால் சமயம் என்ற நிறுவனம் சமுதாய மக்களுக்கு எதிரானது என்றும், அது வகுப்புச் சுரண்டல்களுக்குத் துணைநிற்கும் கொடிய சக்தி என்றும் கருதப்பெறுகின்றது.

சமூக மதிப்பைப் பாதுகாப்பதில் சமயம் மிகக் குறைந்த சக்தியகவே செயல்படுகின்றது என்றும், சமூகமாற்றம் நிகழாவண்ணம் அது தடை செய்கின்றது என்றும் செர்மன் நாட்டுச் சமூகவியல் அறிஞராகிய மார்க்சு குற்றம் சாட்டுகின்றார். மனிதர்கள் நம்பிக்கைகளையும், சமய நடவடிக்கைகளையும் உருவாக்கி அவற்றைப் புனிதப் பொருள்களுடன் தொடர்புபடுத்துகின்றனர். மனிதர்களிடம்

இயற்கையாகவே மாற்றத்தை உருவாக்கும் ஆற்றலும், மாற்றத்தை விரும்பும் இயல்பும் அமைந்து காணப்பெறுகின்றன. எனினும், அவர்களால் உருவாக்கப்பெற்ற சமயத்தின் தாக்கத்தால் அவ்வாறு செய்ய இயலாதவர்களாயுள்ளனர். ஏனெனில். மக்கள் சமயத்தைத் தங்களைக் கட்டுப்படுத்தும் சக்தியாக எண்ணுகின்றனர். சமூகச் சமத்துவமின்மையையும், சம நீதியின்மையையும் சமுதாயத்திலிருந்து அகற்றுதல் அல்லது அகற்றமுயலுதல் என்பது இறைவனின் விருப்பத்திற்கு எதிரான செயல் என்ற சிந்தனை சமய நம்பிக்கையுடையவர்களின் மனத்தில் ஆழமாக வேரூன்றிக் காணப்பெறுகின்றது. [19] சமுதாயத்தில் முற்கூறிய சிற்சில ஊறுகளை விளைவிக்கும் சமயத்தின் செயல்பாடுகளைக் கண்ணுற்ற பியர்ஸ் என்பவர் சமயம் என்ற நிறுவனத்தை வானில் உள்ள அழுக்கு நிறைந்த பறவைகள் தங்கள் கூடுகளைக் கட்டிக்கொள்ளும் அழகான மரம் என்று வருணிக்கின்றார்.[20]

இவ்வாறு சமயம் சமுதாயத்திற்குப் பற்பல நன்மைகளை விளைவிக்கின்ற, சமுதாயத்திற்குத் தேவையான நிறுவனம் என்றும், சிற்சில தீமைகளை விளைவிக்கின்ற செயல்பாடுகளைக் கொண்ட நிறுவனம் என்றும் இரு வேறுபட்ட சிந்தனைகள் அறிஞர்களிடையே காணப்பெறுகின்றன. இவ்விருவேறு சிந்தனைகளையும் ஒருங்குவைத்தப் பார்க்கும்போது சமயம் என்ற நிறுவனம் எப்போதும் சமூக அழிவையும், சமூகப் பலமின்மையையும் ஏற்படுத்தும் செயல்பாடுகளை மட்டும் கொண்டிருக்கவில்லை என்றும், உறுதியாக அது சமுதாய ஒற்றுமையையும், பல சமூக நற்செயல்களையும் கொண்டுள்ளது என்றும் துணியலாம். இச்சமயத்தை அடிப்படையாகக் கொண்டு எழுந்தனவே பக்தி இலக்கியமாகையால் அவற்றுள் சமயச் சிந்தனைகள் மட்டுமின்றிச் சமுதாயச் சிந்தனைகள் பலவும் இடம்பெறுகின்றமையை அறியலாம். பக்தி இலக்கியத்துள் இடம்பெறும் சமுதாயச் சிந்தனைகளைப் பின்வரும் இயல்களில் காணலாம்.

## 2. 5. முடிபுகள்

1. சமுதாயம் பல்வேறு நிறுவனங்களைத் தன்னகத்தே கொண்டு விளங்குகின்றது.
2. சமுதாயத்தில் காணப்பெறும் நிறுவனங்களுள் சமயமும் ஒன்றாகத் திகழ்கின்றது.
3. சமயம் சமுதாயச் செயல்பாடுகள் பலவற்றைக் கொண்டுள்ளது.
4. சமயம் சமுதாயத்தை ஒருங்கிணைக்கும் இணைப்புக் கருவியாகச் செயலாற்றுகின்றது.
5. சமூக உறுப்பினர்களிடையே ஒட்டுந்தன்மையை வலியுறுத்துகின்றது.

6. சமுதாயத்தில் நிலவும் நியதிகளையும், மதிப்புகளையும் புனிதமாக்கி மக்களைப் பின்பற்றத் தூண்டுகின்றது.

7. சமுதாய ஒழுங்குகளைக் கட்டாயம் பின்பற்றுமாறு மக்களை அறிவுறுத்துவதன்மூலம் அது சமூகக் கட்டுப்பாட்டுக் கருவியாகச் செயலாற்றுகின்றது.

8. உலக வாழ்க்கையில் அல்லலுறும் மக்களுக்கு உணர்ச்சி பூர்வமான விடுதலை அளிக்கின்றது.

9. சமுதாய மாற்றங்களுக்கும், அம்மாற்றங்களை மக்கள் ஏற்கவும் துணை நிற்கின்றது.

10. சமுதாயத்தில் காணப்பெறும் தரப்பிரிவுகளுக்கு நியாயம் கற்பித்துச் சமூக அமைதியைக் காக்கின்றது.

11. சமுதாயத்தில் காணப்பெறும் பண்பாட்டுப் பொதுமைகளையும், வேறுபாடுகளையும் வெளிப்படுத்துகின்றது.

12. சமுதாயத்தில் காணப்பெறும் பொருளாதார அமைப்பினையும், பொருளாதார உறவுகளையும் தீர்மானிக்கின்றது.

13. சமூக அமைப்பைத் தீர்மானிக்கும் சக்தியாகவும், பிரதிபலிக்கும் சக்தியாகவும் செயல்படுகின்றது.

14. சமூக, பொருளாதாரச் சமத்துவத்தை நிலை நாட்டப்பாடுபடுகின்றது.

15. முற்கூறிய சமூகச் செயல்பாடுகளைக் கொண்ட சமயம் சமுதாயத்துக்கு ஊறு விளைவிக்குமாற்றையும் சமூகவியலாளர்கள் சுட்டுகின்றனர்.

16. சமயம் சமூகச் சமத்துவமின்மைக்கு நியாயம் கற்பிக்கின்றது என்றும், வகுப்புச் சுரண்டல்களுக்குத் துணை நிற்கின்றது என்றும், சமூக மதிப்பைப் பாதுகாப்பதில் குறைந்த அளவே செயலாற்றுகின்றது என்றும், சமூக மாற்றத்தைத் தடைசெய்கின்றது என்றும் கூறுவர்.

17. சமயம் நன்மை விளைவிக்கும் செயல்பாடுகளையும் ஊறு விளைவிக்கும் செயல்பாடுகளையும் கொண்டுள்ளதாயினும் அது பல சமூகச் செயல்பாடுகளைக் கொண்டு திகழ்கின்றமை புலனாகின்றது.

**மேற்கோள்சான்றுகள்**

1 P.C Deb, **Rural Sociology**, p 10.

2 James B. Mckee, **Sociology-A Study of Society**, P.128

3 Ranald W. Smith, Frederic W Preston, **Sociology**, An Introduction, P 169.

4. George Ritzer, **Sociology**, P.449.
5. Reinach S. Orphen, **A History of Religion**, P.3.
6. *Jon M. Shepered*, ***Sociology***, *P.355.*
7. Henray Pratt Fairchild, (Edit) , **A Dictionary of Sociology**, P.355.
8. க. வெள்ளை வாரணனார், " சங்க இலக்கியத்தில் சமய நோக்கு", சங்க இலக்கியக் கருத்தரங்கம், ப. 2.
9. வை. இரத்தினசபாபதி, 'அணிந்துரை', சமய இலக்கியங்கள். ப. 7.
10. குன்றக்குடி அடிகளார், நமது நிலையில் சமயம் சமுதாயம், ப. 2.
11. George Ritzer, op.cit., P.449.
12. Jon M. Shepered, op.cit., P.349.
13. Ronald W. Smith, Frederic W. Preston, op. cit., P.220.
14. Kingsley Davis, **Human Society**, P.529.
15. Ronald W. Smith, Frederic W. Preston,op. cit., P.223.
16. Mercer and Warderer, **The Study of Society**, P.264.
17. Ronald W. Smith, Frederic W. Preston, op. cit., P.228.
18. Ronald W. Smith, *Frederic W. Perston, op. cit.,* P.223.
19. Jon M. Shepered, op.cit., PP 354-355.
20. Ambrose Bierce, **The England Devil's Dictionary**, P.241

# இயல் - 3

# சாதிமுறை

சமூக நிறுவனங்களுள் ஒன்றாகிய சாதிமுறை பற்றிய சமூகவியலாளர்கள் விளக்கங்கள், பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் நிலவிய சாதிமுறையைத் தீர்மானிக்கும் காரணிகள் (determining factros of the caste system), சாதிமுறையின் தன்மைகள் (features of caste system), சாதிப்பிரிவுகளும் உட்பிரிவுகளும், சாதிமுறையின் அடிப்படையில் சமுதாயத்தில் உயர்நிலை அடைந்திருந்த பிரிவினர், தாழ்நிலை அடைந்திருந்த பிரிவினர், அவர்களுடைய வாழ்க்கைநிலை, சாதி வேறுபாடுகளின் அடிப்படையில் ஏற்றத்தாழ்வுகளைக் கொண்டிருந்த சமுதாயத்தை மாற்றிச் சாதிவேறுபாடுகளற்ற சமநிலையான சமுதாயத்தை உருவாக்க நாயன்மார்களும், ஆழ்வார்களும் மேற்கொண்ட முயற்சிகளை வெளிப்படுத்தும் சிந்தனைகள் போன்றவற்றை ஆராயும் நிலையில் இவ்வியல் அமைகின்றது.

## 3. 1. சாதி - சொல் விளக்கம்

தமிழ் மொழியில் சாதி என்ற சொல்லானது காஸ்ட் (caste) என்ற ஆங்கிலச் சொல்லுக்கு நிகராகப் பயன்படுத்தப்பெறுகின்றது. காஸ்ட் என்ற ஆங்கிலச் சொல் காஸ்டா (casta) என்ற போர்ச்சுக்கீசியச் சொல்லிலிருந்து உருவாக்கம் பெற்றதாகக் கருதப்பெறுகின்றது. இப்போர்ச்சுக்கீசியச் சொல்லானது ஐரோப்பியர், இந்தியர், கிரேக்கர் ஆகியோரிடையேயுள்ள கலப்பினங்களைக் குறிக்கப் பயன்படுத்தப் பெற்றது. மேலும், காஸ்ட் என்ற சொல்லானது காஸ்டஸ் (Castus) என்ற இலத்தீன் மொழிச் சொல்லிருந்து உருவாக்கம் பெற்றது என்றும் கருதுவர். சாதி என்பது சமுதாயப் பிராணிகளின் (social insects) பலதரப்பட்ட பிரிவுகளைக் குறிக்கப் பயன்படுத்தப் பெறுகின்றது என்று டார்வின் சுட்டுகின்றார்.

## 3. 2. சாதிமுறை - விளக்கம்

சாதிமுறை பற்றிச் சமூகவியலாளர்கள் தரும் விளக்கங்கள் சிலவற்றை இவண் காணுதல் தகும். சாதி என்பது குடும்பங்களின் தொகுப்பு அல்லது குறிப்பிட்ட தொழில்களுடன் தொடர்புடைய பொதுப்பெயரைக் கொண்ட குடும்பங்களின் குழுக்கள் என்று சர். எச். ரிஸ்லே விளக்கம் தருகின்றார். மனிதனோ அல்லது இறைவனோ பொது மூதாதையராக (general ancestors)

அமைந்த குடும்பங்களின் வழித்தோன்றல்களையும், ஒரே தொழிலை மேற்கொண்டவர்களையும் கொண்ட அமைப்பு என்றும் அவர் குறிப்பிடுகின்றார். மேலும், சாதிமுறை என்பது பொதுப் பெயரைக்கொண்ட குடும்பங்களின் திராட்சியையோ, அல்லது அவ்வாறான குடும்பங்களை உள்ளடக்கிய குழுக்களையோ குறிக்கும் என்றும் இப்பொதுப்பெயரானது ஒரு குறிப்பிட்ட தொழிலுடன் தொடர்புடையதாகவோ அல்லது ஒரு குறிபிட்ட தொழிலைக் குறிப்பதாகவோ அமையும் என்றும், விண்ணிலோ, மண்ணிலோ காணப்பெறுவோராகக் கொள்ளத்தக்க கற்பிதமான முன்னோடிகளின் வம்சாவழியினராகக் கருதப்பெறும் என்றும், அம்முன்னோடியின் பெயரையும், தொழிலையும் கடைப்பிடித்து வருவதாக அறைகூவும் என்றும் நீண்ட விளக்கம் தருகின்றார்.[1] எந்தப் பிரிவினருடனும் எவ்விதத் தொடர்பும் கொள்ளாமல், அகமண முறையை மட்டும் மேற்கொண்டு, உணவு, நீர் முதலியவற்றைப் பிற பிரிவினரிடமிருந்து பெறாது, ஆனால் தம் சொந்தப் பிரிவினருடன் மட்டும் உறவுகொள்ளும் மக்கட்பிரிவைச் சாதிமுறை என்று கூறலாம் என்பது நெஸ்பீல்டு தரும் விளக்கம் ஆகும். இச்சாதிமுறை சமுதாயத்தின் துணை நிறுவனமே அன்றிப் போட்டியானது அன்று என்றும் கருதப்பெறுகின்றது. [2] சாதிமுறை என்பது திருமண உறவை அடிப்படையாகக் கொண்ட மக்கட் பிரிவினை என்று திருமண உறவுக்கு அழுத்தம் கொடுத்து அளிக்கப்பெறும் விளக்கமும் காணப்பெறுகின்றது.[3] இவ்வாறு சமூகவியலாளர்கள் பலரும் தரும் விளக்கங்களை ஒருங்கு வைத்துப் பார்க்கும்போது சாதிமுறை என்பது பிறப்பினால் தீர்மானிக்கப்பெற்று, அகமண முறையினால் பேணப்பெற்று, சலுகை மற்றும் உரிமைகளால் வரையறை செய்யப்பெற்று, தீட்டு உணர்வுகளால் ஊட்டம் பெறுவதால் குழுக்களாகப்பெற்று, மதக்காரணங்களாலும், தத்துவங்களாலும் முத்திரையிடப்பெற்று இயங்கும் ஒரு சமுதாய நிறுவனம் (social institution) என்று பொதுவாகக் கூறலாம்.

## 3. 3. பழங்கால இந்தியாவில் சாதிமுறை

பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் நிலவிய சாதிமுறையைப் பற்றி ஆராயப்புகும் முன்பு பழங்கால இந்தியாவில் நிலவிய சாதிமுறையைப் பற்றியும் அறியவேண்டிய இன்றியமையாமை உள்ளது. ஏனெனில், இந்தியச் சமுதாய அமைப்பில் சாதிமுறை ஒரு குறிப்பிட்ட தன்மையாகவும், [4] இன்றியமையாத வடிவமாகவும் [5] காணப்பெறுவதாகச் சமூகவியலாளர்கள் கருதுவதே ஆகும். இந்தியாவில் சாதிமுறை மிகப்பெரிய அளவில் காணப்பெறுவதுடன், மிக நீண்ட காலமாகத் தொடர்ந்து நிலவியும் வருகின்றது. இருக்கு வேதத்திலும், யசுர் வேதத்திலும் கூடச் சாதிவேறுபாடுகளைச் சுட்டும் குறிப்புகள் காணப்பெறுகின்றன என்பர். [6] மனுதருமச் சாத்திரம் முப்பது வகையான சாதிப்பிரிவுகளைக் காட்டுமாற்றைச் சுட்டுவர். சுமார் கி. மு. 150 இல் எழுந்ததாகக் கருதப்பெறும் பதஞ்சலியில் மிகப்பெரும் அளவிலான சாதிப் பிரிவுகள் குறிப்பிடப்பெறுகின்றன.[7]

இந்தியாவில் பயணம் செய்த யுவான்சுவாங் என்பவர் தன் பயணக் குறிப்பில் இந்தியாவில் கலப்புச் சாதிகள் (mixed castes) ஏராளமாக உள்ளன என்றும், அவற்றை வருணிக்கமுடியாது என்றும் வியந்து கூறியுள்ளார்.[8] இவை சாதிமுறை என்ற நிறுவனம் இந்தியாவில் தொன்மைக்காலம் முதலாகவே பரந்து காணப்பெற்ற ஓர் அமைப்பு என்ற கருத்தை நிறைவுசெய்கின்றன.

ஆனால், சாதிமுறையையும். சாதி முறையை ஒத்த குழுக்களையும் இந்தியாவில் மட்டுமன்றி, அரேபியா, பாலனீசியா, சப்பான், எகிப்து, உரோம், சீனா போன்ற நாடுகளிலும் பரவலாகக் காணமுடிகின்றது என்பதைப் பெரும்பாலான சமூகவியலாளர்கள் ஒத்துக்கொள்ளுகின்றனர்.[9] முற்கூறிய நாடுகளில் அந்தஸ்து, மேன்மை (nobility), தொழில்கள் போன்றவை சமூகவேறுபாடுகளுக்குக் காரணங்களாக அமைகின்றமை சுட்டுதற்குரியது ஆகும்.[10]

மானிடவியலறிஞர்கள் சிலர் மாறுபட்ட எண்ணங்களையும் வெளிப்படுத்துகின்றனர். சாதிமுறை அதன் தன்மைகளால் இந்தியச் சமூக அமைப்பின் சிறப்புத் தன்மையாக விளங்குகின்றது என்பதும், வேறு எங்கும் காணமுடியாத அளவுக்கு இந்தியச் சமூக அமைப்பின் ஒரு கூறாகச் திகழ்கின்றது என்பதும் அவர்களது கருத்துக்கள் ஆகும். இவ்வாறு இரு வேறுபட்ட கருத்துக்கள் காணப்பெறினும், சாதி முறையையோ அதன் தன்மைகளை ஒத்த கூறுகளையோ ஏதேனும் ஒருவகையில் உலகச் சமுதாயங்களில் காணமுடிகின்றது எனக் கொள்ளலாம். ஆயினும் இந்தியாவிற்கு வெளியேயுள்ள இடங்களில் சாதிமுறை ஒரு சமூகப்பண்பு (social survival) என்ற நிலையிலும், இந்தியாவில் அது எங்கும் பரவியது (ubiquitous), வாழ்க்கையின் முதன்மையானது, இன்றியமையாத காரணி என்ற நிலைகளிலும் காணப்பெறுகின்றமை சுட்டுதற்குரியது ஆகும்.

## 3. 4. பக்தி இலக்கியம் காட்டும் சாதிமுறை

சங்க காலத் தமிழகத்திலேயே சில குறிப்பிட்ட தொழில்களைச் செய்துவந்தவர்கள் சமுதாயத் தரப்பிரிவில் தாழ்நிலையில் வைத்து மதிக்கப்பெற்றனர் எனக் கருதுவதற்குரிய குறிப்புக்கள் சங்க இலக்கியத்தில் காணக்கிடைக்கின்றன. சுடுகாட்டில் உப்பில்லாத சோற்றைப் படைத்துச் சுடுகாட்டைக் காவல் செய்யும் தொழிலை மேற்கொண்டவர்களும், இறந்த மிருகங்களின் தோலைப் பயன்படுத்திச் செய்யப்பெற்ற யாழை இயக்கிய பாணர்களும், துடி கொட்டிய துடியர்களும், தண்ணுமை இயக்கியவர்களும் புலையர்கள் எனவும், ஆடைகளின் அழுக்கை நீக்கிச் சுத்தம் செய்யும் தொழிலை மேற்கொண்ட வண்ணாத்தி புலைத்தி எனவும் சுட்டப்பெறுகின்றனர்.[11] இவர்கள் இழிசினர் என்றும் இழிபிறப்பாளர் என்றும் சுட்டப்பெறுமாற்றால்[12] சமுதாயத்தினரால் இழிவாகக் கருதப்பெற்றிருந்தனர் என எண்ணத்தோன்றுகின்றது. கல்வியின் சிறப்பை விளக்கும் புறப்பாடல் ஒன்றின் மூலம்[13] சமுதாயத்தில் பிறப்பின் அடிப்படையில் அமைந்த உயர்ந்த குலம், தாழ்ந்தகுலம் பற்றிய சிந்தனை வெளிப்படுவதாகக் கொள்ளலாம். இவை சங்க

காலத் தமிழ்ச் சமுதாயத்திலேயே பிறப்பின் அடிப்படையிலும் தொழிலின் அடிப்படையிலும் மக்களுள் சிலரைத் தாழ்ந்தவர்கள் எனப் பாகுபடுத்தும் சாதிமுறையின் தன்மைகள் இடம்பெற்றுவிட்டமையைக் காட்டுவனவாகக் கொள்ளலாம். ஆனால், சங்க காலத்தில் சாதிமுறை என்ற சமூக நிறுவனம் நன்கு வலுப்பெறவில்லை என்பதும், சாதிமுறையின் அடிப்படையில் தீண்டாமை எண்ணம் நிலவவில்லை என்பதும், சமுதாயம் நெகிழும் தன்மையுடனேயே காணப்பெற்றது என்பதும் இவண் சுட்டுதற்குரியன ஆகும். பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் சாதிமுறை வளர்ச்சியுற்ற நிலையை அறிய முடிகின்றது. இனி, சாதிமுறையின் தோற்றத்திற்குரிய காரணிகளாகவும், சாதிமுறையின் தன்மைகளாகவும் சமூகவியலாளர்கள் குறிப்பிடுவனவற்றுள் பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் எவையெவை இடம்பெற்றிருந்தன என்பதை முதற்கண் காணுதல் ஏற்புடைத்து ஆகும்.

### 3. 4. 1. சாதி முறையைத் தீர்மானிக்கும் காரணிகள்

சாதிமுறையின் தோற்றம் நமக்குப் புரியாத புதிராக உள்ளது என்றும், சாதிமுறை திடீரெனத் தோன்றிய புரட்சி இயக்கத்தின் (Revolutionarymove) விளைவு அன்று என்றும், அது படிப்படியாகவும், நீண்டகாலமாகவும் நிகழ்ந்துள்ள மாற்றம் என்றும் கூறும் சமூகவியலாளர்கள் சாதிமுறையின் தோற்றத்திற்கும், வளர்ச்சிக்கும் உரிய காரணிகள் சிலவற்றை ஆராய்ந்து கண்டுள்ளனர். அவற்றுள்,

1. பிறப்பு
2. தொழில்கள்
3. வருணமுறை ( varna system )
4. சமயம்
5. கர்மம் என்ற நம்பிக்கை
6. தொழிலை மாற்றினால் கேடுவரும் என்ற நம்பிக்கை
7. ஒவ்வொரு பொருளுக்கும் ஓர் உயிர்ப்பொருள் உண்டு என்ற நம்பிக்கை
8. பொது மூதாதையர் உண்டு என்ற நம்பிக்கை
9. பொருளாதார ஏற்றத்தாழ்வுகள்
10. சமூக அமைப்பு
11. பார்த்தொழுகுதல் அல்லது போலச்செய்தல் என்னும் உளவியல் தன்மை
12. கல்வி வசதியின்மை

13 போக்குவரத்து வசதியின்மை

14. தொடர்பு வசதியின்மை

15. கொல்லாமை என்ற அறநெறியின் தாக்கம்

16. தூய்மையின்மை

போன்றனவற்றைக் குறிப்பிடுக் கூறலாம் பக்தி இலக்கியத்திலும் இக்காரணிகளுள் சில இடம்பெறுமாற்றைக் காணலாம்.

## 3. 4. 1. 1. பிறப்பு

பிற சமுதாயங்களில் தனி மனிதனின் சமூக அந்தஸ்த்து (social status) அவனுடைய செல்வம், அவன் பெற்றுள்ள கல்வி போன்றனவற்றை அடிப்படையாகக் கொண்டு தீர்மானிக்கப்பெற, இந்தியச் சமுதாயத்தில் தனி மனிதனின் சமூக அந்தஸ்த்து அவன் பிறப்பையும் அடிப்படையாகக் கொண்டு தீர்மானிக்கப்பெற்றது மக்கள் பிறப்பை அடிப்படையாகக் கொண்டு இன்னச் சாதியினர் என முத்திரையிடப் பெற்றதுடன், ஒரு சாதியிலிருந்து இன்னொரு சாதிக்கு மாறும் வாய்ப்பின்றி, வாழ்க்கை முழுவதும் அச்சாதியிலேயே வாழ்ந்து இறக்கவேண்டிய கட்டாய நிலைக்கு உள்ளாக்கப் பெற்றனர். [14] சூத்திர ஆணுக்கும் பிராமணப் பெண்ணுக்கும் பிறந்தவர்கள் சண்டாளர்கள் என்றும், பிராமண ஆணுக்கும சூத்திரப் பெண்ணுக்கும் பிறந்தவர்கள் அந்தயஜாஸ் (Anthyajas) என்றும் பாகுபடுத்தப்பெற்றனர் பிறப்பின் அடிப்படையில் சாதி தோற்றம் கொண்டது என்ற கருத்தை நிறைவு செய்வனவாய் இவை அமைகின்றன பிறப்பின் அடிபபடையில் தோற்றம் பெற்ற சாதிகள் பலவற்றைச் சைன நூல்கள் சாதி சங்கிதாஸ் (Sati Sangitas) என்கின்றன.[15] புறமணங்கள் மூலம் பிறந்த குழந்தைகளைத் தந்தையின் சாதியாகவோ, தாயின் சாதியாகவோ, இருவருக்கும் இடைப்பட்ட சாதியாகவோ (intermediate caste) கருதினர். இவ்வாறு பிறப்பு சாதியின் தோற்றத்திற்குரிய காரணிகளுள் ஒன்றாக அமைந்துள்ளமையை விளக்குவர்.

அடியார்களின் வாழ்க்கை வரலாறுகளை எடுத்து மொழியும் இடங்களில் அவர்களின் பிறப்புப் பற்றிய குறிப்புக்களும் இடம்பெறுகின்றன வேடர் குலத்தைச் சார்ந்த கணணப்ப நாயனாரின பணபுகளை விளக்குமிடத்து அவர் பிறப்பின் சார்பினால் வரும் குறறங்களையே குணங்களாகக் கொள்பவர் என்று சுடடப்பெறுகினறது [16] திருக்குறிபபுத் தொண்டர் பிறபபினால் ஏகாலியர் குலத்தைச் சார்ந்தவராகக் காடடப பெறுகின்றார [17] காஞ்சி மாநகர வருணனைப பகுதியில நாறகுலஙகளிலும் ஒவ்வாப் புணர்ச்சிகளின் விளைவுகளால் உயர்நதனவும தாழநதனவுமாகிய சாதிகள் அவண் நிலைபெற்றுக் காணபபெறுகினறமையும விளக்கப் பெறுகின்றது [18] இவற்றால் மக்களின்

பிறப்பினை அடிப்படையாகக் கொண்டு சாதிகள் தீர்மானிக்கப்பெற்றமையும், கலப்பு மணங்களின் விளைவினால் பிறந்தவர்களுள் சிலரை உயர்வானவர்கள் என்றும் சிலரைத் தாழ்ந்தவர்கள் என்றும் கருதப்பெற்றமையும் புலனாகின்றன.

பல்லவர் காலத்தில் மக்களின் பிறப்பை அடிப்படையாகக் கொண்டு உருவாகும் வருணதரும முறைக்குச் சமுதாயம் மாறிக்கொண்டிருந் தமையைக் குறிப்பர். [19] சோழப் பேரரசர்கள் காலக் கல்வெட்டுக்களுள் சில இதரகாரர் என்ற பிரிவினரைச் சுட்டுவதுடன், இவர்கள் உயர்ந்த சாதி ஆணுக்கும் தாழ்ந்த சாதிப் பெண்ணுக்கும் பிறந்த அனுலோமா என்ற பிரிவைச் சார்ந்தவர்கள் என்றும் குறிப்பிடுகின்றன. [20] மேலும், அந்தணப் பெண்ணுக்கும், வைசிய ஆணுக்கும் பிறந்த குழந்தைகள் அயோகவான் என்றும் இவாகள் பிரதிலோமா வகுப்பைச் சார்ந்தவர்கள் என்றும், இவர்கள் கடவுளர்க்கும், அந்தணர்க்கும், அரசர்க்கும் ஆடைகள் நெய்து கொடுக்கும் தொழிலை மேற்கொண்டவர்கள் என்றும் சில கல்வெட்டுக்கள் அறிவிக்கின்றமை [21] இவண் சுட்டுதற்குரியது ஆகும்.

### 3. 4. 1. 2. `தொழில்கள்

சமுதாயத் தேவைகளை நிறைவேற்றும் பொருட்டு ஒவ்வொரு தொழிலையும் குறிப்பிட்ட சிலர் செய்து வந்தனர். இவ்வாறு குறிப்பிட்ட தொழில்களைத் தலைமுறை தலைமுறையாகச் செய்துவந்த பிரிவினர் தத்தம் தொழில் நுட்பங்களைப் பாதுகாத்து வைபபதற்காகத் தத்தம் தொழில்களை மேற்கொண்ட பிரிவினர்களிடம் மட்டுமே பெண் எடுத்தும், பெண் கொடுத்தும் திருமணம் செய்துகொண்டனர். இவர்கள் நாளடைவில் ஒரு குறிப்பிடட சாதியினராகக் கருதப்பெற்றுவிட்டனர் எனச் சமூகவியலாளர்கள் சாதிமுறையின் தோற்றத்திற்குத் தொழில்கள் காரணமாக அமைந்தமையை விளக்கிச் செல்கின்றனர். மக்களிடையே தொழில் வேறுபாடுகள் பெருகப்பெருகச் சாதிகளும் புதிது புதிதாய்த் தோற்றம்பெறலாயின. கூடைமுடைவோர், இரதகாரர், தோல்பதனிடுவோர் முதலான தொழில்களை மேற்கொண்டவர்களைப் பௌத்த நூல்கள் ஈனச்சாதிகள் எனக் குறிப்பிடுகின்றமையைச் [22] சான்றுகாட்டலாம். தொழில் அடிப்படையில் தோன்றிய சாதிகளைச் சைன நூல்கள் கர்ம சங்கீதாஸ் (Karma Sangitas) என வகைப்படுத்துகின்றன. பக்தி இலக்கியத்துள் வெட்டிமைத் தொழிலை மேற்கொண்டவர்கள் புலையர் எனக் காட்டப்பெறுமாற்றால் [23] அக்காலச் சமுதாயத்திலும் தொழில் அடிப்படையில் சில பிரிவினர் குறிப்பிட்ட சாதியினராகக் கருதப்பெற்றிருந்த நிலை வெளிப்படுகிறது.

### 3. 4. 1. 3. கொல்லாமை என்ற அறநெறியின் தாக்கம்

பிற உயிரினங்களைக் கொல்லுதல் பாவம் என்ற அறநெறியின் செல்வாக்கினால் பிற உயிரினங்களைக் கொல்லும் தொழில்களை மேற்கொண்டவர்களும், பிற உயிர்களைக் கொல்லும் தொழில்களுடன்

தொடர்புடைய தொழில்களைச் செய்தவர்களும் இழிவானவர்களாகக் கருதப்பெற்று இழிந்த சாதியினர் என ஒதுக்கப்பெற்றுள்ளனர். வேட்டையாடிப் பிற உயிர்களைக் கொன்றவர்களும், மீன் பிடித்தல் தொழில் செய்தவர்களும், தோல் பதனிடும் தொழில் செய்தவர்களும், இழிவானவர்களாகவும், புறச் சாதியினராகவும் (out - castes) கருதப்பெற்றிருந்தனர். இறைச்சிக்காக ஆடுமாடுகளைக் கொல்லும் தொழில் செய்தவர்கள் அந்தயஜாஸ் என ஒதுக்கப் பெற்றிருந்தனர்.

இறைவன் தன்னிடம் உண்மையான அன்பு கொண்டவர் யாவராயினும் அவர்களுக்கு அருளும் அருங்குணம் உடையவன் ஆகையால், இறைவனிடம் அன்பு செலுத்துவோர் யாவராயினும் அவர்கள் அனைவரும் நம்மால் வணங்கத் தக்கவராவர் என்ற கருத்தை வலியுறுத்தப் புகுந்த திருநாவுக்கரசுநாயனார் ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும் சிவ பொருமானுக்கு அன்பராகில் நாம் வணங்கும் தெய்வம் ஆவார் எனக் குறிப்பிடுகின்றார். [24] இதனால் பசுக்களைக் கொன்று தின்னும் பிரிவினர் கொல்லாமை என்ற அறநெறியின் செல்வாக்கின் காரணமாகப் புலையர் எனக் கருதி ஒதுக்கப்பெற்றிருந்தனர் என்பது தெளிவாகின்றது. மேலும், 'புலையேரேனும்' என இழிவு சிறப்பு உம்மை கொடுத்துக் கூறப்பெற்றமையால் அவர்கள் சமுதாயத் தாழ்நிலையும் புலப்படுகின்றது. பொல்லாப் புலாலை நுகர்பவரைப் புலையர் என்றே திருமங்கையாழ்வாரும் சுட்டுகின்றார். [25] பெரியபுராணத்துள் போர்வை, விசி, வார், வீணைக்கும் யாழுக்கும் உரிய தந்திரி, அருச்சனைக்குரிய கோரோசனைப் பொருள்கள் முதலியனவற்றைக் கோயிலுக்கு அளித்து வந்த நந்தனார் புலையர் என்றே குறிப்பிடப்பெறுதலும் இவண் சுட்டுதற்குரியது ஆகும். [26] இவற்றால் பிற உயிர்களைக் கொல்லும் தொழில் செய்தவர்களும், அதனுடன் தொடர்புடைய தொழில்களைச் செய்தவர்களும் இழிந்த சாதியினராகக் கருதப்பெற்றனர் என்ற சமூகவியலாளர்களின் சிந்தனை வலுப்பெறுகின்றது.

திருமூலர் அந்தணர் ஒழுக்கங்களை விளக்கும்போது அவர்கள் பிற உயிர்களைப் பலிகொடுத்துச் செய்யும் வேள்விகளை வெறுத்தொதுக்குகின்றார். வேதாந்திகள் உயர்ந்த எண்ணங்களை நன்கு அறிந்தும், கேட்டும் உள்ளார்கள். [27] இருந்தும்கூட அவர்கள் நிலையாகச் செய்துவரும் கொலை வேள்விகளை விட்டொழிக்கவில்லையே என வருந்திய நிலையில் அவ்வாறு அவர்கள் செய்யும் வேள்விகளைப் புலை வேள்விகள் எனச் சாடுகின்றார். [28] வில், அம்பு போன்ற கருவிகளால் விலங்குகளையும், பறவைகளையும் வேட்டையாடிக் கொன்றும், அவற்றின் ஊனை உண்டும் வாழும் வேடவர்கள் [29] பசுக்களைக் கொன்று தின்னும் பாவிகள் என்றும், பாவச் செயல்கள் மிக்க கொடுமைகளுக்கு அஞ்சாத வேடர்கள் என்றும் திருமூலரால் பழித்துரைக்கப்பெறுகின்றனர். [30] சேக்கிழார்பெருமான் கண்ணப்பரின் வேடர்குலத்து இயல்பினைக் காட்டும்போது உயிர்களுக்குக் கொடுமை செய்வதில் தீக்குணர் என்கின்றார். [31] எத்தகைய கொடுமைகள் செய்தவராயினும் இறைவனை உள்ளன்புடன் வழிபடுவாராயின் அவர்களும் உத்தமராகிவிடுவார் என்ற உயரிய சிந்தனையை வலியுறுத்துமிடத்துப் பிற உயிர்களைக் கொன்று வாழும் நகும் குலத்தவராயினும் உண்மை அன்பு

செலுத்தினால் இறைவன் அருள்கிட்டும் என உரைக்கப்பெறுமாற்றைக் காண்கிறோம்.[32] இவற்றால் பிற உயிர்களைக் கொல்லும் தொழிலைச் செய்தவர்கள் கொல்லாமை என்ற அறநெறியின் அடிப்படையில் பாவச்செயல் மிக்கவராகவும், தீக்குணம் உடையவராகவும் கருதப்பெற்றமையும் விளக்குன்றது.

### 3. 4. 1. 4. முற்புறப்புவினை அல்லது விதி என்ற நம்பிக்கை

வருணமுறையில் சமுதாய உயர்நிலை வகித்த அந்தணர்கள் தாழ்நிலை வகித்தவர்களிடம் முற்பிறப்பில் நன்மை செய்தவர்களே அந்தணர்களாகவும், தீவினை செய்தவர்களே தாழ்ந்த அல்லது இழிந்த வருணத்தினராகவும் பிறக்கின்றனர் என்ற நம்பிக்கையை மக்களிடம் பரப்பினர். மனுதருமச் சாத்திரம் முதலான தரும நூல்களும் கர்மம் அல்லது முற்பிறப்பு வினை என்ற கொள்கையை வலியுறுத்துகின்றன. இதனால், தாழ்நிலையுற்ற பிரிவினர் தமக்கு இழைக்கப்பெற்ற கொடுமைகளுக்கும், இழிநிலைகளுக்கும் முற்பிறப்பில் தாம் செய்த வினையே காரணம் என்று எண்ணிப் பொறுமைக் குணத்தின் அடிப்படையில் சாதிமுறை எவ்விதத் தடைகளும் இன்றி வளர்ச்சியுறும் வாய்ப்பைப் பெற்றது எனக் கூறுவர்.

சிவகுருவின் பெருமைகளை விளக்கப்புகுந்த திருமூலர், மிகுந்த தவங்களை மேற்கொண்ட சிவகுருவைப் போற்றி மதிக்கவேண்டும் என்றும், அவர்கள் மனம் வருந்தத் தக்க செயல்களைச் செய்தல் கூடாது என்றும், அவ்வாறு செய்பவர்கள் எண்ணற்ற பிறப்புக்கள் புலையராகப் பிறப்பர் என்றும் அறிவுரைகள் வழங்குகின்றார். [33] இறைவன் பெருமைகளை விளக்குமிடத்து இறைவனை உள்ளன்புடன் வணங்குவோர் இப்பிறப்பில் விதிவசத்தால் கடைப்படு சாதியினராகப் பிறப்பினும், இறைவன் அருளால் உயர்கதியை அடைவர் என்ற கருத்து விளக்கப் பெறுகின்றது. [34] இவற்றால் முற்பிறப்பில் கொடுமைகளும், தீமைகளும், பாவச் செயல்களும் செய்தவர்கள் அடுத்த பிறப்பில் புலையராகப் பிறப்பர் என்றும், ஒருவர் கடைப்படு சாதியுள் பிறக்கக் காரணம் அவருடைய விதிப்பயனே என்றும் நம்பிய சமய நம்பிக்கைகள் வெளிப்படுத்தப்பெறுகின்றன. சாதியின் தோற்றத்திற்கும், வளர்ச்சிக்கும் - குறிப்பாக இந்தியாவில் - இந்து சமயத்தின் பங்கு அதிகமாக உள்ளது என்று சமூகவியலாளர்கள் கருதுகின்றனர். இயற்கையிறந்த ஆற்றல் மீது மக்கள் கொண்ட அசைக்கமுடியாத நம்பிக்கைகளாலும் சாதிமுறை நன்கு வளர்ச்சி பெறுகின்றது என்று அவர்கள் ஆராய்ந்துகண்டுள்ள முடிபும் இவண் எண்ணுதற்குரியது ஆகும்.[35] இந்து சமயம் தவிர ஏனைய சமயங்களும் சாதிமுறையை வளர்க்கின்றன என்பதைச் சமூகவியலாளர்கள் ஏற்றுக் கொள்கின்றனர். [36] எனினும், இந்து சமயம் இயற்கை இறந்த சக்திகள் மேல் கொண்டுள்ள நம்பிக்கையால் சாதிமுறையைப் புனிதமுடையதாக ஆக்குகின்றது என்பதையும், [37] இந்து சமூகம் மாற்றங்களுக்கு இடம் கொடுக்கின்றமையால் சாதித்தன்மை தொடர வாய்ப்பளிக்கின்றது என்பதையும் [38] வலியுறுத்துகின்றனர்.

### 3. 4. 1. 5. பொருளாதார ஏற்றத்தாழ்வுகள்

சாதிமுறை பொருளாதார ஏற்றத்தாழ்வுகளுடனும் தொடர்புடையனவாகவே காணப்படுகின்றது.[39] இப்பொருளாதார ஏற்றத்தாழ்வுகளினால் நலிவுற்ற பிரிவினர் மேம்பட்ட பிரிவினருக்கு அடங்கி வாழும் நிலை உருவாயிற்று. பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் நிலவியமைக்கான சான்றுகள் கிடைக்கின்றன. [40]

இவ்வாறு பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் சாதிமுறையின் தோற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் உரிய காரணிகளுள் சில இடம்பெறுமாற்றை அறியலாம். இனி, சாதிமுறையின் தன்மைகள் இடம்பெறுமாற்றை நோக்கலாம்.

### 3. 4. 2. சாதிமுறையின் தன்மைகள்

சமூகவியலாளர்கள் சாதிமுறை தனக்கே உரித்தான சில தன்மைகளைக் கொண்டுள்ளமையை விளக்குகின்றனர். அவற்றுள்.

1. அக மணமுறை
2. உணவு விலக்குக்கொள்கை
3. நெகிழாத் தன்மை
4. மரபுரிமை
5. உறுப்பினர் மீது கட்டுப்பாடுகள் விதித்தல்
6. படிநிலை அமைப்புக்கள்
7. குழுப்போராட்டம்
8. தொழில்களைத் தீர்மானித்தல்

என்பன சுட்டுதற்குரியனவாகும். இத்தன்மைகளுள் சில பக்தி இலக்கியத்துள் காட்டப்பெறுகின்றன.

### 3. 4. 2. 1. அகமணமுறை (Endogamous marriage)

சாதி உறுப்பினர்களுள் ஒரு குறிப்பிட்ட சாதியைச் சார்ந்தவர்கள் அதே சாதியைச் சார்ந்த உறுப்பினர்களையே திருமணம் செய்யவேண்டும் என வலியுறுத்துவதையும், கலப்பு மணத்திற்குத் தடைசெய்வதையும் சாதிமுறையின் தன்மைகளுள் ஒன்றாகக் குறிப்பிடுவர். [41] தரும நூல்களும் இவ்வகமண முறையை வலியுறுத்துவதன் மூலம் சாதித் தன்மையை நிலைநாட்டுகின்றன. மனுதருமச் சாத்திரம் ஒவ்வொருவரும் தத்தம் சாதிக்குத் தக்க பெண்ணை மணம் செய்தலே கடன் என்றும், அதனை மீறுவோர்களைத் தண்டிக்கவேண்டும் என்றும் அறிவுறுத்துகின்றமையைச் சான்றாகக் காட்டலாம். [42] ஒருவர் தம் சாதியைச் சார்ந்த பெண்ணை மணப்பதன் மூலம் சிறந்த குழந்தைகள்

பிறப்பதுடன், தந்தையின் குடும்பமும் அதனால் மேன்மையுறும் என வசிட்ட தருமநூலும், கௌதம தரும நூலும் விளக்குகின்றன. [43] பிரகஸ்பதி கலப்புமணம் புரிவதைக் கண்டிக்கின்றது. [44] இக்கலப்புமணத் தடையே சாதிமுறையின் மற்றொரு தன்மையாகிய உணவு விலக்குக் கொள்கைக்கும் காரணமாக அமைகின்றது எனக் கருதும் ஹட்டன் (Hutton) ஒருவன் உண்ணத் தகுதியற்ற வீட்டில் பெண்ணெடுத்தால் அப்பெண் சமைக்கும் உணவை அவனால் உண்ணமுடியாது போகின்றது என்ற காரணமும் கூறுகின்றார்.

அடியார் வரலாறுகளை விளக்குமிடங்களில் அக்காலச் சமுதாயத்தில்-குறிப்பாக அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்ற நால்வகைப் பிரிவினர்களிடையே யாவது - குலவழிமணமுறை அல்லது அகமணமுறை நடைமுறையில் பெரிதும் போற்றப்பெற்றிருந்தது எனக் கருதுவதற்குரிய குறிப்புக்கள் கிடைக்கின்றன. அந்தணர் குலத்தில் பிறந்த எச்சதத்தனின் மனைவி அவன் திருமணம் செய்துகொள்ளுதற்கேற்ற மரபில் - வாய்ந்த மரபில் - வந்தவள் எனக் குறிப்பிடப் பெறுகின்றாள். [45] சுந்தரருக்குத் திருமணம் செய்விக்க விரும்பிய குலமுதல் அறிவின் மிக்கோராகிய பெரியார்கள் அவர் பிறந்த அந்தணர் குலத்தில் தோன்றிய பெண்ணைத் தேர்ந்தெடுக்கக் குலமும், கோத்திரமும் ஆராய்ந்து நாடுகின்றனர். [46] திருஞானசம்பந்தரின் பெற்றோர்கள் அந்தணர் குலத்துள் கௌணியர் கோத்திரத்தைச் சார்ந்த சிவபாதவிருதயரும், அத்தகைய வேதியர் மரபில் வந்த அம்மையாரும் என அறிமுகப்படுத்தப்பெறுகின்றனர். [47] திருஞான சம்பந்தருக்கு நெறிப்படி திருமணம் செய்விக்கும் எண்ணமுடன் அவரை அணுகிய பெரியோர்கள் வைதீகமாகிய பெருநெறியில் ஒழுகுகின்ற திருமணத்திற்கு இசையவேண்டும் என வேண்டுகின்றனர். சம்பந்தரும் அதற்கு இசையவே, மறையவர் மரபில் வந்த குலம் முதலியவற்றால் இசைவுடைய, திருப்பெருமணநல்லூரில் வாழும் நம்பாண்டார்நம்பி என்பவருடைய மகளை அவருக்கு மணம் செய்விக்க எண்ணுகின்றனர். [48]

வணிகர் குல மரபில் தோன்றிய காரைக்கால் அம்மையார் தக்க பருவம் அடைந்ததும் மணம் செய்விக்க எண்ணி அவர் மரபினுக்கேற்ற தொல்குலத்து வணிகர் மரபில் மகட்பேசப் பெரியோர் முனைகின்றனர். அவ்வாறே அவருக்கு வணிகர்குல மைந்தனே கணவனாக அமைகின்றான்.[49]

வேளாளர் குலத்து உதித்த புகழனார் தமக்கு உரிமையாக உடைய வேளாளர் குலத்தில் குறுக்கையர் பிரிவில் பிறந்த குலம், குடி முதலியனவற்றால் ஒத்த மாதினியாரை மணம் புரிந்துள்ளார். [50] திருநாவுக்கரசரின் தமக்கையார் திலகவதியாருக்கு மணம் செய்விக்க எண்ணி அவர் மரபிலுள்ள பெரியோர்கள் குணம் பேசியும், குலம் பேசியும் வருகின்றனர். [51] மானக்கஞ்சாற நாயனாரின் மகளைக் குலத்தில் ஒத்த கலிக்காமருக்குத் திருமணம் செய்விக்கப் பெரியோர் வருகின்றனர். [52] இதனைக் கண்ட மானகஞ்சாற நாயனார் ஏயர்கோன்கலிக்காமர் எந்தமது மரபினுக்குத் தகும் பரிசு என எண்ணி மனம் மகிழ்ச்சியுற்று மணம் செய்துகொடுகின்றார். [53] இவை சமுதாயத்தில் சில பிரிவினரிடமாவது அகமணமுறை போற்றப்பட்டிருந்தமையைக் காட்டுவனவாய் அமைகின்றன.

### 3. 4. 2. 2. பரம்பரைத் தொழில்கள் – தொழில் தீர்மானிக்கப்பெறல்

சாதிமுறையில் ஒருவரின் தொழில் முன்னரே தீர்மானிக்கப்பெற்றுவிடுகின்றது. சாதிமுறை ஒருவரை அவர் முன்னோர்கள் செய்துவந்த தொழிலையே தொடர்ந்து செய்து வருமாறு வலியுறுத்துகின்றது. தான் விரும்பிய தொழிலைச் செய்வதற்குரிய வாய்ப்பு இல்லை. அரசுக்குத் தேவையான தொழிலாளர்களைப் பற்றிப் பேசும் சாணக்கியம் அவர்கள் அந்தந்தத் தொழிலுக்குப் பிறந்தவர்களாக இருக்க வேண்டும் என வலியுறுத்துதல் எண்ணுதற்குரியது ஆகும்.

காஞ்சிமா நகரம் உயர்ந்த, இழிந்த சாதிகள் தங்கள் தங்கள் மரபினுக்கேற்ற தொழில்முறையால் தவறாமல் நீடும்படி குணத்துடன் பெருக வாழ்ந்திருக்கும் பலவாகிய இருக்கைகளைக் கொண்டது என வருணிக்கப் பெறுகின்றது. 54 புலையர் சாதியிற் பிறந்த நந்தனார் தன் பிறப்பின் சார்பினால் வந்த புலைமைத் தொழிலையே செய்துவந்தமையைச் சேக்கிழார் பெருமான் காட்டுகின்றார். 55 திருநீலகண்ட நாயனார் தான் பிறந்த குயவர் குலத்திற்கேற்பத் தம் மரபுவழி நின்று மட்கலங்களைச் சமைக்கும் தொழிலைச் செய்துவருகின்றார். 56 இதனால் சாதிமுறையின் தன்மைகளுள் ஒன்றாகிய பரம்பரைத் தொழிலைச் செய்துவருதல் சமுதாயத்தில் இடம்பெற்றமை புலனாகின்றது.

### 3. 4. 2. 3. உணவுத் தடை

ஒரு பிரிவைச் சார்ந்தவர் மற்றொரு பிரிவைச் சார்ந்தவரிடமிருந்து உணவு பெற்று உண்பதைத் தடைசெய்தல் சாதிமுறையின் மற்றொரு தன்மையாகக் கூறப்பெறுகின்றது. 57 வண்ணான், துணிகளுக்கு நிறம் போடுகின்றவன், தீட்டுக்காரன், நட்டுவன், தோணிக்காரன், பிரம்புவேலை செய்கிறவன் போன்றவர்களின் அன்னத்தைப் பிறர் உண்ணுதல் கூடாது எனத் தடைவிதிக்கும் மனு தருமச் சாத்திரம், இவர்கள் உயர் சாதியினர் உண்டு எஞ்சிய உணவை உண்ணுதற்குக் கூடத் தடைவிதிக்கின்றது. 58 இது சாதிமுறையின் உணவு விலக்குத் தன்மையைக் காட்டுகின்றது. மேலும் இந்நூல் அந்தணர்கள் சண்டாளர்களின் உணவைத் தெரியாமல் தொட்டால் சண்டாளருக்குச் சமம் ஆகிவிடுவர் என்றும் எச்சரிக்கின்றது. 59

அமர்நீதி நாயனார் மறையவர் வடிவில் மாற்றுரு கொண்டு வந்த இறைவனிடம், அடியார்பால் தான் கொண்ட அன்பின் காரணமாகத் திருமடத்தில் தங்கி, உணவு உண்டு களைப்பு நீங்கிச் செல்லுமாறு வேண்டுகின்றார். இவ்வமயம் சமுதாயத்தில் காணப்பெற்ற உணவுத்தடை என்ற சாதித்தன்மை வெளிப்படுகின்றது. அமர்நீதி நாயனார் மறையவரிடம் தாங்கள் அமுது செய்தருளுவதற்கு ஏற்றவாறு நிறைந்த வேதியர்களால் தூயதாகச் சமைக்கப்பெற்ற உணவு உள்ளது என்றும், எனவே அமுது செய்தருள வேண்டும் என்றும் வேண்டுகின்றார். 60 இவண் அடியார்களுக்காகத் தூய்மையுடன் சமைக்கப்பட்ட உணவு உள்ளது என்று கூறினார் எனக் கொள்ளினும், நான்மறைத்

தவச்சீலர்க்கெனக் குறிப்பிடுவதும், வந்தவர் நான்மறை அந்தணர் என்பதும் ஆழ்ந்து நோக்குதற்குரியன ஆகும். இதனால் அந்தணர்கள் உண்பதற்கு அந்தணர்களாலேயே உணவு சமைக்கப்பெற்றது என்பதும், பிறர் சமைத்த உணவை அந்தணர்கள் உண்பதில்லை என்பதும் பெறப்படுகின்றன. அமர்நீதி நாயனாரின் கூற்று அந்தணர் வடிவில் வந்த அடியவர் மனத்தயக்கத்தைத் தீர்க்கும் வகையிலும், சமுதாயத்தில் அந்தணர்களிடமாவது உணவு விலக்குக் கொள்கை நடைமுறையில் இருந்தது எனக் கருதும் வகையிலும் அமைந்துள்ளதாகத் தோன்றுகிறது.

### 3. 4. 2. 4. உறுப்பினர் மீது கட்டுப்பாடு விதித்தல்

சாதி உறுப்பினர் மீது கடுமையான கட்டுப்பாடுகள் விதிப்பதுடன், அவற்றை மீதுவோர்களைச் சாதிச் சட்டங்கள் மூலம் தண்டிப்பதையும் சாதிமுறையின் மற்றுமொரு தன்மையாகக் காட்டுவர். சாதிக் கட்டுப்பாடுகளை மீறுவோர்களைச் சாதிக்கு அப்பாற்பட்டவர்களாகக் கருதி ஒதுக்கிவைத்தல், ஊரை அல்லது கிராமத்தைவிட்டு விலக்கி வைத்தல், அவர்களுடன் கொண்டுள்ள சமுதாய, பொருளாதாரத் தொடர்புகளைத் தடைசெய்தல் போன்ற சாதித் தண்டனைகளால் விரும்பியோ, விரும்பாமலோ சாதிக்கட்டுப்பாடுகளைப் பின்பற்ற வேண்டிய கட்டாய நிலைக்கு உள்ளாகின்றனர். சாதிக் கட்டுப்பாடுகளை மீறுவோர்க்குரிய தண்டனைகளை மனுதருமச் சாத்திரம் விளக்குகின்றது. [61]

காவிரி நாட்டு வருணனையுள் சாதிகள் தத்தமக்கு விதிக்கப்பெற்ற ஒழுக்கங்களில் மக்கள் தவறாதிருக்கும் நிலை விளக்கப்பெறுகின்றது. [62] இதனால் ஒவ்வொரு சாதிக்கும் ஒவ்வொரு ஒழுக்கம் வலியுறுத்தப்பெற்றமையும், மக்கள் அவற்றிலிருந்து தவறாமையும் விளங்குகின்றன. முதலாம்பரமேசுவரவர்மனின் தந்தையாகிய மகேந்திரவர்மன் வருணதருமத்தைக் கடுமையாகக் கடைப்பிடித்தவன் என்பதைக் கூரம் பட்டயமும், சாதிமுறை விதித்த எல்லா ஒழுங்குகளையும் கடைப்பிடித்தமை, எல்லாச்சாதிகளுக்கும் சிறப்புச் சட்டங்கள் செய்தமை போன்றனவற்றைக் காசக்குடிச் செப்பேடுகளும் செப்புகின்றன. [63] இவற்றால் பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் சாதிமுறையின் தன்மைகளுள் சில இடம்பெற்றமையை உணரமுடிகின்றது. இவ்வாறு அமைந்த சாதிமுறையின் அடிப்படையில் சமுதாயத்தில் காணப்பெற்ற சாதிப்பிரிவுகளையும் அவற்றின் உட்பிரிவுகளையும் இனி விளக்கலாம்.

### 3. 4. 3. சாதிப்பிரிவுகளும் உட்பிரிவுகளும்

பக்தி இலக்கியத்துள் அந்தணர், [64] ஆயர், [65] ஈழர், உருத்திரக்கணிகையர், ஏகாலியர், [66] குக்கர், [67] குயவர் [68] சண்டாளர், [69] சாலியர், [70] சூத்திரர், [71] செக்கர் [72] (எண்ணெய் ஆட்டும் தொழில் செய்பவர் அல்லது தயிலவினைத் தொழிலாளர்). நுழையர் [73] (பரவர் அல்லது பரதவர்). பாணர், புலையர் [74] மாமாத்தியர், [75] மிலேச்சர், வண்ணார், [76] வணிகர், [77] வேடர், [78] வேளாளர் [79] போன்ற பிரிவினர் சுட்டப்பெறுகின்றனர். சங்க காலத்தில்

ஐந்நிலப் பாகுபாடுகளின் அடிபடையில் அமைந்துகாணப்பெற்ற குறவர், வேடர், ஆயர், வேளாளர், பரதவர் ஆகிய திணைநிலைக் குழுவினரும், அந்தணர், வணிகர் போன்றவர்களும், எண்ணெய் எடுத்தல், ஆடைகளைச் சுத்தம்செய்தல் போன்ற தொழில்களை மேற்கொண்ட பிரிவினரும் பக்தி இலக்கியக் காலத்தில் சாதிக் குழுவினராக மாற்றம் பெற்றுள்ள நிலையை உணர்கின்றோம்.

பக்தி இலக்கியத்துள் இடம்பெறும் நாயன்மார்களும், ஆழ்வார்களும், அடியார்களும் பல்வேறு சாதிப்பிரிவுகளையும், அவற்றின் உட்பிரிவுகள் அல்லது கிளைப் பிரிவுகளையும் சார்ந்தவர்களாகக் காணப்பெறுகின்றனர். அந்தணர் குலத் தோன்றல்களாக அமர்நீதி நாயனார், உருத்திரபசுப்பதியார், கணநாதர், காரிநாயனார், பூசலார் நாயனார், பெரியாழ்வார், முருகநாயனார் போன்றோர் திகழ்கின்றனர். மேலும், எச்சத்தத்தன் அந்தணர் குலத்துள் காசிபகோத்திரத்தையும், திருஞானசம்பந்தர் கௌணியகோத்திரத்தையும், மாணிக்கவாசகர் மானமங்கலத்தார் என அழைக்கப்பெறும் ஆமாத்தியார் கோத்திரத்தையும் சார்ந்தவர்களாகக் கூறப்பெறுமாற்றால் அந்தணர் குலத்தினுள்ளும் பல உட்பிரிவுகள் காணப்பெற்றமை புலனாகின்றது. ஐயடிகள்காடவர்கோன், கோச்செங்கட்சோழன், திருமழிசையாழ்வார் போன்றோர் அரசர்கள். ஆனாயர், திருமூலர் போன்றோர் ஆயர்கள், ஏனாதி நாயனார் ஈழக்குலத்தையும், பரவையார் உருத்திரக்கணிகையர் குலத்தையும், திருக்குறிப்புத் தொண்டர் ஏகாலியர் குலத்தையும் திருநீலகண்ட நாயனார் குயவர் குலத்தையும், வாயிலார் நாயனார், நம்மாழ்வார் போன்றோர் சூத்திரக்குலத்தையும், கலியர் செக்கர் குலத்தையும், திருமங்கையாழ்வார் மிலேச்சர் அல்லது கள்ளர் குலத்தையும், திருநீலகண்டயாழ்ப்பாணரும், திருப்பாணாழ்வாரும் பாணர் குலத்தையும், திருநாளைப்போவார் புலையர் குலத்தையும், திருக்குறிப்புத் தொண்டர் வண்ணார் குலத்தையும் சிறுத்தொண்டநாயனார் மாமாத்தியார் குலத்தையும், கண்ணப்ப நாயனார் வேடர் குலத்தையும் அமர்நீதிநாயனார், கலிகம்பர், மூர்த்தி நாயனார் போன்றோர் வணிகர் குலத்தையும், விறன்மிண்ட நாயனார், சக்தி நாயனார், மூர்க்க நாயனார், சங்கிலியார், திருநாவுக்கரசு நாயனார் போன்றோர் வேளாளர் குலத்தையும் சார்ந்தவராகக் காட்டப்பெறுகின்றனர். இவர்களுள் திருநாவுக்கரசு நாயனார் வேளாளர் குலத்துள் காணப்பெறும் உட்பிரிவுகளுள் ஒன்றாகிய குறுக்கையர் குலத்தில் தோன்றியுள்ளார்.

பக்தி இலக்கியத்துள் இடம்பெறும் ஊர்வருணனைகளில் நால்வகைப் பாகுபாடுகளைப் பற்றிய குறிப்புக்களைக் காணமுடிகின்றது. "சாதிகள் நான்கும் தழைக்கும் தன்மையதாகி" [80] என்றும், "உயர்வுடைய நாற்குலங்கள்" [81] என்றும் வரும் பாடல் அடிகளைச் சான்றுகளாகக் கூறலாம். இறைவன் பெருமைகளை விதந்தோதுமிடத்து அவன் நால்வகை வருணமாகக் காட்சியளிக்கின்றமை சுட்டப்பெறுகின்றது. [82] திருமழிசையாழ்வார் தன் நிலையினையும், வாழ்க்கைத் துன்பங்களையும் இறைவனிடம் வருந்தி மொழியுமிடத்தில் குலங்களாய ஈரிண்டினில் ஒன்றிலும் பிறந்திலேன் என்கிறார். [83] இறைவன் இவரிவர், இன்னின்னார் என்று வேறுபாடுகள் பாராட்டாது அன்பு செய்தவர் அனைவரையும் ஆதரிக்கும் அருட்பண்பினன் என்ற கருத்தைக் கூறுமிடத்து நான்கு

குலத்தவராயினும், அந்நான்கு குலங்களினின்றும் நீங்கிய ஏனையோராயினும் அன்பு செலுத்துவோர்க்கு அருள்புரிவான் என்றும். 84 நான்கு சாதிகளில் கீழ் இழிந்த சாதிகளில் பிறந்தவராயினும் அருள்புரிவான் என்றும் 85 உரைக்கப்பெறுகின்றன.

உலகியல் துன்பங்களைத் தம் துன்பங்களாகக் கொண்டு கற்பார் உள்ளத்தில் இறைப்பற்றை மிகுவிக்கும் வகையில் அமைந்த பாடல்களில் உலகில் நிலவிவரும் நாசமாகிய குல நலங்களால் மக்கள் துன்புறுகின்றமையும்.86 சாதி முதலாகிய சுழிகளில் அகப்பட்டு நிலைதடுமாறுகின்றமையும், 87 எண்ணற்ற குலங்களில் பிறந்து எய்த்து வருந்துகின்றமையும் 88 எடுத்துக்கூறப்பெறுகின்றன. இவற்றால் சாதிமுறைறையின் அடிப்படையில் அமைந்த நால்வகைப் பிரிவுகளும், அவற்றினின்றும் வேறுபட்ட பல்வேறு பிரிவுகளும், அவற்றின் உட்பிரிவுகளும் சமுதாயத்தில் நிலவியிருந்தமை தெளிவாகின்றது.

பல்லவ மன்னர்களின் ஆட்சியிலும் அந்தணர், அரசர், வணிகர், சூத்திரர் என்று நால்வகைப் பாகுபாடுகளைக் கொண்ட சமுதாயத்திற்கு முதன்மை அளிக்கப்பெற்றிருந்தது. 89 பல்லவ மன்னர்கள் வருண.முறையின் அடிப்படையிலான சமூக அமைப்பை நிலைநாட்டுவதைத் தங்கள் கடமையெனக் கருதியிருந்தனர். இதனால் வேற்றுமை பாராட்டப்பெற்றதும், சாதி அடிப்படையிலானதும் ஆகிய சமுதாயம் உருவாகிவிட்டது என்று கருதுவர். பல்லவர் காலத்தில் தோற்றம் பெற்ற சாதிப்பிரிவுகள் சோழப் பேரரசர்கள் காலத்தில் நூற்றுக்கணக்கில் பல்கிப் பெருக ஆரம்பித்தன. மக்களிடையே புதிது புதியனவாய்ச் சாதிப் பிரிவுகள் தோன்றலாயின. தமிழ்ச் சமுதாயத்தைக் துண்டாடி, உயர்வு தாழ்வுகளைக் கற்பித்துக் குடிமக்களின் நலன்களை உயர் சாதியினராகிய ஒருசிலர் கைகளில் குவிக்கும் குல வேறுபாடுகள் சோழப்பேரரசர்கள் காலத்தில் நிலைத்துவிட்டன. 90 சமுதாயத்தை அந்தணர் - அந்தணரல்லாதார் எனப் பாகுபடுத்தும் போக்கில் அழுத்தம் காணப்பெற்றது. 91 சோழப்பேரரசர்கள் காலக் கல்வெட்டுக்கள் பலவற்றில் வெள்ளாளர், கைக்கோளர், செட்டி, மன்ரதி (manrati), இடையர், குயவர், பள்ளர், பறையர், கம்மாளர், தச்சர், தட்டார், வேட்கோ, குதிரைச் செட்டியார், சாலியர், சுருதிமார், மாணிக்கிரமார், வேட்டுவர், கள்ளர், பட்டினவர், திரையர், வலையர், இளமகன், தன்ம வணிகன், சோனாகர், நாவிதர் முதலிய முப்பத்தொரு சாதிப்பெயர்கள் இடம்பெறுகின்றன. 92 இவற்றுள் பல பக்தி இலக்கியத்துள் காணப்பெறுதல் சுட்டத்தக்கது ஆகும்.

### 3. 4. 4. உயர்ந்த சாதிகள் — தாழ்ந்த சாதிகள்

சமுதாயத்தில் காணப்பெற்ற சாதிகளுக்கிடையேயும், அவற்றின் உட்பிரிவுகளுக்கிடையேயும் உயர்ந்த சாதிகள், தாழ்ந்த சாதிகள் என்று பாகுபடுத்தும் போக்கு நிலவியமையையும் உணரமுடிகின்றது. 93 மக்களிடையே இறைப்பற்றை ஊட்ட உளம்கொண்ட திருஞானசம்பந்தப் பெருமாள் உயர்ந்த குலத்தில் பிறந்தவர்களாயினும் ஆகுக: தாழ்ந்த குலத்தில் பிறந்தவர்கள் ஆயினும் ஆகுக: உண்மை அன்புடன் இறைவனை நினைப்பவர்க்கு அவன் திருவருள் உறுதியாகக் கிட்டும் என்று கூறுவதை 94 நோக்கும்போது சமுதாயத்தில்

சாதிகளின் அடிபடையில் உயர்ந்த குலத்தவர், தாழ்ந்த குலத்தவர் என்னும் ஏற்றத்தாழ்வுகள் நிலவியிருந்தன என்று எண்ணத்தோன்றுகின்றது. பக்தி இலக்கியத்துள் உயர்ந்த குலத்தவர். உயர்ந்தகுலம் என்பதைச் சாதியின் மிக்க சீரார். இழியாக் குலம், உயர்ந்த இனம் எனப்படும் குலம், ஓங்குகுலம் என்ற தொடர்களும். [95] தாழ்ந்த குலத்தவர், தாழ்ந்த குலம் என்பதை இழிகுலத்தவர், குலமிலர், கீழ் மகன், பொல்லாக் குலம், ஒவ்வாக்குலம், கடைக்குலம் சுடைப்படு சாதி என்ற தொடர்களும் [96] குறிப்பிடுகின்றன. சாதிமுறையின் அடிப்படையில் அமைந்த உயர்ந்த குலத்தவர், தாழ்ந்த குலத்தவர் பற்றிப் பக்தி இலக்கியம் காட்டுமாற்றை விளக்குதல் தகும்.

## 3. 4. 4. 1. வைதீக அந்தணர்களின் உயர்நிலை

தமிழகத்தில் பல்லவ மன்னர்களின் ஆட்சிக் காலத்தின்போது வட இந்தியாவிலிருந்து பெருமளவு அந்தணர்கள் வரவழைக்கப்பெற்றுக் குடியமர்த்தப்பெற்றனர். கி.பி. 8, 9 ஆம் நூற்றாண்டுகளெனக் கருதப்பெறும் பல்லவ மன்னர்களின் காலத்துச் செப்பேடுகள் அவீஸ்த்தா. கௌடின்யா, குஸ்தா முதலான முப்பது வகையான அந்தணர்களின் கோத்திரப் பெயர்களைச் சுட்டுகின்றன. [97] வடக்கிலிருந்து தமிழகம் வந்து குடியேறிய அந்தணர்களுக்குச் சமயப்பணியும், நிர்வாகப் பணியும் கிட்டியமையாலும், வேதக்கல்வி அவர்களுக்கே உரியதாகக் காணப்பெற்றமையாலும் தமிழகச் சமூக அமைப்பில் பெரும் மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன என்பதைப் பல்லவர் காலத் தமிழகச் சமுதாய வரலாறுகளால் அறியலாம். சோழப் பேரரசர்கள் காலத்திலும் மன்னர்கள் வெளியிடங்களிலிருந்து அந்தணர்களை வரவழைத்துக் கோயில்களிலும், மடங்களிலும், கல்வி நிறுவனங்களிலும், வேதபாராயணம் செய்பவர்களாவும், புரோகிதர்களாகவும் பணி அமர்த்தினர். இவ்வாறு தமிழக வரலாறு மூலம் சமுதாயத்தில் வைதீக அந்தணர்கள் பெருமளவு வாழ்ந்துள்ளமை தெரிகின்றது. பக்தி இலக்கியத்திலும் வைதீக அந்தணர்கள் பற்றிய குறிப்புக்கள் உள்ளன.

### பெயர்கள்

பக்தி இலக்கியத்துள் இவர்கள் அந்தணர், [98] ஆரியர், [99] இருக்குவாய் முனிக்கணங்கள், [100] சதுப்பேதிமார், [101] தீ மேவும் தொழிலாளர், [102] பட்டர், [103] பார்ப்பார். [104] புரிநூலார், [105] பூசுரர், [106] மறையவர், [107] வடமொழி வாணர் [108] வேதவாணர், [109] வேதவாய்த் தொழிலாளர், [110] வேதியர் [111] முதலான பல பெயர்களால் சுட்டப்பெறுகின்றனர். இப்பெயர்களை நோக்கும்போது இவர்கள் வைதீக அந்தணர்களே என ஐயமின்றிக் கருதமுடிகின்றது.

## 3. 4. 4. 1. 1. வைதீக அந்தணரின் இயல்புகள்

ஊர், நகர, ஒலி வருணனைகளின் போதும், மாட மாளிகைகளின் வருணனைகளின்போதும், அடியார்களின் வரலாறு கூறப்பெறும்போதும்

இடம்பெறும் அந்தணர் பற்றிய குறிப்புக்களால் வைதீக அந்தணர்களின் இயல்புகளைப் பக்தி இலக்கியம் வெளிப்படுத்துகின்றது. இவர்கள் முப்புரி நூலை அணிந்தவர்கள், 112 மூவெரி ஓம்புவோர்கள், 113 நால்வகை வேதங்களைக் கற்றுணர்ந்தவர்கள், 114 ஐவகை வேள்விகளை மேற்கொள்வோர்கள், 115 ஆறங்கம் உணர்ந்தவர்கள், 116 அறு தொழில் புரிவோர்கள், 117 ஏழிசை அறிந்தவர்கள், 118 வேதங்களை ஓதுவோர்கள் 119 எனக் காட்டப்பெறுகின்றனர். ஊர் வருணனைகளில் அந்தணர்கள் வாழும் ஊர்களில் யூக தம்பக் கூடங்கள் நிரம்பக் காணப்பெறுகின்றனமை சுட்டப்பெறுகின்றது. 120 மன்னர்களும் அந்தணர்களைக் கொண்டு பல யாகங்களைச் செய்வித்துள்ளனர். சீர்அநபாயன் என்ற மன்னர் அந்தணர்களால் பல யாகங்களைச் செய்வித்தமையைத் திருநகரச்சிறப்புப் பகுதியின் மூலம் அறிகிறோம். 121

அந்தணர்கள் இருக்கு வேதத்தையும், சாம வேதத்தையும் ஓதுதல் தனித்தனியாகச் சுட்டப்பெறுகின்றது. 122 அருமறைகளைக் கற்றல் அந்தணர்களின் அருங்கலமாகக் கருதப்பெற்றது. 123 பார்ப்பனச் சிறார்களும், மறைச்சிறு மாணர்க்கர்களும் வேதங்களைக் கற்கின்றனர். 124 அந்தணர்கள் வேதம் ஓதுவதைக் கேட்டுப் பழக்கம் பெற்றுள்ள கிளிகளும் வேதங்களை ஓதுவதுடன். 125 வேதம் ஓதும்போது நிகழும் தவறுகளையும் திருத்துகின்றன. 126 அந்தணர்கள் மான்தோல், குடை, தருப்பை, மூங்கில்தண்டு, குழைக்குடுமி ஆகியனவற்றைக் கொண்டுள்ளனர். 127 பல கலைகளைக் கற்றுத் தேர்ந்தோராகக் காட்சியளிக்கின்றனர். 128 காலை வேளைகளில் குளங்களிலும், ஏரிகளிலும் சென்று நீராடித் தருப்பணம் செய்கின்றனர். 129 தன்னை முட்டவந்த பசுவை அடித்தவனைக் கண்டு, அந்தணனாகிய விசாரசருமன் பசுவின் பெருமைகளை எடுத்து மொழிதல் அந்தணர்கள் பசுவைப் புனிதமான விலங்காகக் கருதியமையைக் காட்டுகின்றது. அந்தணர்கள் வைதீகச் சடங்குகளை மேற்கொள்கின்றனர். சிவநேசர் மகன் பிறந்தபொழுதும், சுந்தரர் திருமணத்தின்பொழுதும் மேற்கொள்ளும் சடங்குகள் அனைத்தும் வைதீக நெறிகளின் அடிப்படையிலான சடங்குகளாகவே காட்சியளிக்கின்றன. 130 இவை மனுதருமச் சாத்திரம் போன்றனவற்றில் சுட்டப்பெறும் 131 வைதீக அந்தணர்களின் சடங்குகளாகவே உள்ளன. அந்தணர்கள் சாத்திரம் பேசும் இயல்புடையவர்களாக விளங்கினர் 132

### 3.4.4.1.2. அந்தணர் பெருமைகள்

அந்தணர்கள் நுணங்கிய கேள்வியறிவினை உடையவர்கள், நீதியான கேள்வியுடையவர்கள், ஐம்புலன்களை அடக்கியவர்கள். அறத்தில் மிக்க மேன்மையானவர்கள், அறத்தையே பொருளாகக் கொண்டவர்கள், தானத்தில் தலைசிறந்தவர்கள், குற்றமற்ற ஒழுக்கங்களைக் கொண்டவர்கள், விதிமுறைகளில் வழுவதாவர்கள், சிவஞான ஒழுக்கங்களில் தலைசிறந்தவர்கள், மிக்க தவங்களை

மேற்கொண்டவர்கள், தேவார் சிந்தையுடையவர்கள், நலங்கள் நிறைந்தவர்கள், தொன்மையான சிறப்பினைப் பெற்றவர்கள், தகுதிகள் நிரம்பியவர்கள், தக்கனவற்றை உணர்ந்தவர்கள், பண்ணியங்கள் நிறைந்தவர்கள், புனிதமுடையோர்கள், செப்பத்தகு புகழை உடையவர்கள், செம்மையாளர்கள், பொய்யாநாவினை உடையவர்கள், பொய்யா மனத்தினர் என அறிவாலும், அறத்தாலும், ஒழுக்கத்தாலும், தவத்தாலும், புகழாலும், உண்மையினாலும் உயர்ந்தவர்களாக மக்களால் கருதப்பெற்றிருந்தனர், மேலும், அவர்கள் இத்தகைய பெருமைகளைக் கொண்டவர்களாகத் தம்மைக் காட்டியும் உள்ளனர். அந்தணர் பற்றிய வருணனைகளும் அடைமொழிகளும் இக்கருத்தை நிறுவுகின்றன. [133]

### 3. 4. 4. 1. 3. அந்தணர்களின் உயர் வாழ்க்கை நிலை

இத்தகைய பெருமைகளைக் கொண்டவர்கள் எனக் கருதப்பெற்ற வைதீக அந்தணர்கள் பொறுமை நிறைந்தவர்கள், கோபம் முதலிய பகைகளை நீக்கியவர்கள், தெய்வத்தன்மை வாய்ந்தவர்கள் என்று சமுதாயத்தால் நன்கு மதிக்கப்பெற்றனர். [134] அவர்கள் புரிசடைக் கடவுளாகிய சிவபெருமானின் திருவருளைப் பெற்றவர்கள்,[135] இருபிறப்பாளர்கள்,[136] மண்ணுலகத் தேவர்கள் [137] எனக் கருதப்பெற்றனர். இச்செய்திகள் பிராமணன் பிறப்பினால் தேவர்களுக்கும் பூசிக்கத் தக்கவனாய் இருக்கிறான் என்றும் மனிதர்களுக்குள்ளும் உயர்வடைந்திருக்கிறான் என்றும் கூறும் மனுதருமச் சாத்திரக் கருத்துக்களுடனும், [138] அந்தணர்கள் மண்ணுலகத் தேவர்களாகக் கருதப்பெற்றனர் எனக்கூறும் காசக்குடிச் செப்பேட்டுச் செய்திகளுடனும் [139] ஒத்துள்ளமை அறியத்தக்கது ஆகும்.

அந்தணர்கள் சாதியின் மிக்கவர்கள், தமக்கு நிகராகப் பிறரை இல்லாத தன்மையர், தமர்களில் தலையாயவர், தென்திசைக்குத் திலதமன்னவர், ஏழுலகுங்களாலும் போற்றத் தக்கவர் என்று மக்களால் நம்பப்பெற்றனர். [140] அந்தணர்கள் நடத்தும் வேள்விகளால் வானத்திலும், நிலத்திலும், திசைகளிலும் உள்ள தெய்வங்கள் சிறப்பெய்தும்: ஊழி பெருகும்: வேள்விகளிலிருந்து எழும் புகையானது மழையைப் பெய்விக்கும் என்றெல்லாம் மக்களை நம்பச் செய்தமையால் அந்தணர்கள் நடத்தும் வேள்விகளுக்கு மக்கள் பொன்னையும், பொருளையும் வாரி வாரி வழங்கினர். [141] *கௌடில்யரின் அர்த்த சாத்திரமும்* இயற்கைக் கொடுமைகளைத் தடுக்க மக்கள் அந்தணர்களை வணங்கவேண்டும் என அறிவுறுத்துகின்றமையும் [142] இவண் எண்ணுதற்குரியது ஆகும்.

அந்தணர்கள் தாம் உயிர்களுக்குக் கலிவராமல் காக்கும் தன்மையுடையவர்கள் என்றும், தாம் இன்பமாக வாழ்ந்தால் மன்னனும் சிறந்து விளங்குவான் என்றும் அறிவுறுத்தியமையால் மக்களும் அவர்களைப் பார் விளங்க வந்தவர்கள். மண்ணில் பெருமை வாய்ந்தவர்கள் என எண்ணிச் சமூகத்தரப்பிரிவில் உயர்நிலையில் வைத்துப் போற்றியுள்ளனர் எனத் தோன்றுகின்றது. [143] இதனால் வடக்கில் சத்திரியர்களுக்கு மேலாக அந்தணர்கள் தம் மேலாண்மையை (superiority) நிலைநாட்டியமையைப் போன்று தமிழகத்திலும் உயர்மதிப்பைப் பெற்றுள்ளனர் எனக் கருதுவர்.[144] மனுதரும நூல் அரசர்கள்

அந்தணர்களைக் காலையில் எழுந்ததும் வணங்கவேண்டும் என்றும், அவர்களை வரவேற்று அவர்களின் அறிவுரைகளின்படி நீதி வழங்கவேண்டும் என்றும் அறிவுரைகள் கூறுகின்றது. [145]

தமிழகத்திலும் மன்னர்கள் அந்தணர்களை அரச குருக்களாக ஏற்றுக்கொண்டு அவர்களைப் போற்றியமையை "மறுதஞ்சித மார்க்கத்தினால் குரு சரிதம் கொண்டாடி" எனச் சீவரமங்கலம் செப்பேடு சுட்டுவதால் அறியலாம். [146] அர்த்தசாத்திரம், காத்யாயனா போன்ற தரும நூல்களின் கருத்துக்களை ஒத்த நிலையில் அந்தணர்கள் பிறர் யாருக்கும் அடிமையாதல் இல்லை என்ற எண்ணமும் சமுதாயத்தில் இடம்பெற்றமையை அறிகின்றோம். [147] அந்தணர்கள் நீதிகூறும் அவையில் உறுப்பினர்களாகவும், தலைவர்களாவும் பதவி வகித்துள்ளனர். சுந்தரைத் தடுத்தாட்கொள்ளும் விருப்புடன் வந்த இறைவன் அவரைத் தம் அடிமை எனக் கூறியதும் சுந்தரர் மறுக்கின்றார். உடன் இறைவன் வெண்ணெய்நல்லூருக்குச் சென்று அவையில் வீற்றிருக்கும் நான்மறையோரிடம் மூல ஓலையைக்காட்டி முறையிடுவேன் என்று கூறுகின்றார். கூறியவாறே வெண்ணெய்நல்லூர் சென்று நான்மறையோர் வீற்றிருக்கும் சபையில் முறையிடவும் செய்கின்றார். [148] இதனால், கிராமங்களிலுள்ள அறங்கூறவைகளில் மறையோர்கள் தலைவர்களாகவும் உறுப்பினர்களாகவும் வீற்றிருந்தமை புலனாகின்றது. இதனைப் போன்று மாற்றுருவம் கொண்டுவந்த இறைவன் தான் கொடுத்த திருவோட்டினைத் தவறவிட்டமைக்காக நீலகண்ட நாயனாரை அழைத்துச்சென்று அந்தணர் நிறைந்த சபையில் வழக்கை விசாரிக்குமாறு வேண்டுமாற்றையும் காண்கிறோம். [149]

ஊர் வருணனைகளிலும், கோயில் வருணனைகளிலும், இறைவனின் பெருமைகளை விளக்குமிடங்களிலும் பக்தி இலக்கியம் அந்தணர்கள் பெற்றிருந்த சமயச் செல்வாக்கையும் பறைசாற்றுகின்றது. இறைவன் அந்தணர்களால் நாளும் அடிபரவப் பெறும் தன்மையன் என்றும், அந்தணர்களால் வாழ்த்தப்பெறும் தன்மையன் என்றும் வருணிக்கப்பெறுகின்றான். [150] இறைவனே நான்மறைகளின் உருவமாகவும், இருக்கினில் இன்னிசையாகவும், வேதமுதல்வனாகவும், விளங்கு புரிநூலினனாகவும், அந்தணர் ஓமமாகவும், நான்மறையவனாகவும், அந்தணர் தம் அமுதமாகவும், அந்தணர் கற்பாகவும் அந்தணர்களுடன் தொடர்புபடுத்தி வருணிக்கப்பெறுகின்றான். [151] அடியார்களின் வரலாறு கூறும் பெரியபுராணத்துள் மாற்றுருவம் கொண்டுவரும் இறைவன் மார்பில் பூணூலும், கையில் குடையும், வெள்ளாடையும், தருப்பையும் கொண்டு காட்சியளிக்கின்றான். தில்லைப்பெருமானை வணங்கப் பெருவேட்கை கொண்டிருந்த நந்தனார் தன் எண்ணத்துக்குத் தன் சாதி தடையாக அமைவதை எண்ணி மனம் மறுகும்போது இறைவன் அவர் கனவில் தோன்றித் தில்லை அந்தணர்கள் வளர்க்கும் நெருப்பிடை மூழ்கி எழுந்துவந்து தம்மை வணங்குமாறு மொழிந்தருள்கின்றான். அவ்வாறே அந்தணர்கள் வளர்த்த நெருப்பிடை மூழ்கி எழுந்த நந்தனார் மார்பில் வெண்புரி நூலையும், சடைமுடியையும் கொண்ட புண்ணிய உருவமுடைய அந்தணர் வடிவிலேயே வந்ததாகக் காட்டப்பெறுகின்றார். [152] இந்நிகழ்ச்சிகள்

அக்காலச் சமுதாயத்தில் அந்தணர்கள் அடைந்திருந்த சமுதாய, சமய மேம்பாடு, ஆதிக்க நிலை ஆகியனவற்றின் வெளிப்பாடுகளே என்ற எண்ணத்தைத் தோற்றுவிக்கின்றன. வைதீக அந்தணர்கள் மன்னர்களும் மக்களும் அளித்த கொடைகளைப் பெற்றுப் பொருளாதாரநிலையிலும் மேம்பட்டுத் திகழ்ந்துள்ளனர்.[155]

இவற்றால் பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் சாதிமுறையின் அடிப்படையிலான தரப்பிரிவில் வைதீக அந்தணர்கள் உயர்நிலையில் வாழ்ந்துள்ளமை விளங்குகின்றது.

## 3. 4. 4. 2. தாழ்ந்த சாதியினர்

*சமுதாயத்தில் அந்தணர்கள் மிக உயர்ந்த நிலையில்* வாழ்ந்துள்ளமையைப் போன்று புலையர்கள், சண்டாளர்கள், குக்கர், பாணர் போன்றோர் மிகத் தாழ்ந்த நிலையில் மதிக்கப்பெற்றமையையும் பக்தி இலக்கியம் மூலமாக அறியமுடிகின்றது.

### 3. 4. 4. 2. 1. புலையர்கள்

இறைவனிடம் அன்பு செலுத்துவோர் யாவராயினும் அவர்களும் நம்மால் வணங்கத்தக்கவரே என்ற புரட்சிக் கருத்தைப் பரப்பிய *திருநாவுக்கரசர்* ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும் கங்கை வார்சடை கரந்தார்க்கு அன்பராகில் நாம் வணங்கும் தெய்வம் ஆவர் என்கின்றார். இதனால் புலையர் பசுக்களைக் கொன்று, அவற்றின் ஊனைத் தின்னும் இயல்பினர் என்பது தெரிகின்றது. பழம் இந்துச் சமுதாயத்தில் மாட்டிறைச்சி உண்ணுதல் என்பது சமூகத் தடையாகக் (social taboo) கருதப்பெற்றது. இந்து சமயக் கருத்துப்படி காளையானது சிவபெருமானின் ஊர்தியாகையால் பசுவும் இந்துச் சமூகத்தின் புனித விலங்காகக் கருதப்பெற்றது. [154] இச்சமயக் கருத்தின் அடிப்படையாலும் புலையர்கள் தாழ்ந்த சாதியினர் எனக் கருதப்பெற்றிருக்கலாம் என்று எண்ண முடிகின்றது,

**நந்தனர்** புலையர் குலத்தில் தோன்றியவராகப் பெரியபுராணம் காட்டுகின்றது. இவர் நிலவுரிமை அமைப்பில் இணைக்கப்பெற்ற விவசாய வேலை செய்யும் மிகத் தாழ்ந்த சாதி உறுப்பினராகக் காணப்பெறுகின்றார். புலையர்கள் வாழும் பகுதிகள் புலைப்பாடிகள் என அழைக்கப்பெற்றன. இக்காலத்திலும் கொடைக்கானல் மலைத் தொடர்களில் புலையர்கள் என்ற இனத்தவர் வாழ்கின்றனர். இவர்கள் வாழும் ஊர்களும் புலைப்பாடிகள் என்றே அழைக்கப்பெறுகின்றன[155] என்ற கருத்து இவண் ஒப்புநோக்குதற் குரியது ஆகும். இவர்கள் சமுதாயத் தாழ்நிலையிலே வாழ்ந்துள்ளனர். நந்தனர் வரலாறு இப்புலையர் தம் தொழிலுக்காக விடப்பெற்ற மானியங்களை உரிமையாகக் கொண்டு வாழ்ந்துள்ளமையைக் காட்டுகின்றது. [156]

### 3. 4. 4. 2. 2. சண்டாளர்கள்

குலந்தாங்கு சாதிகளில் கீழ் இழிந்த சண்டாள சண்டாளரேனும் இறைவனிடம் உண்மை அன்பு கொண்டவராயின் அவரும் நம் அன்பர்களே என்ற கருத்தினால் சண்டாளர்கள் என்போர் நால் வகையாகப் பாகுபடுத்தப்பட்டிருந்த சாதிகளின் கீழ் அமைந்த பல்வேறு வகையான சாதிகளில் ஒரு பிரிவினர் என்பதும், இவர்கள் சமுதாயத்தில் தாழ்ந்த சாதியினராக ஒதுக்கப்பெற்றிருந்தனர் என்பதும் புலனாகின்றன. பழங்கால இந்தியச் சமுதாயத்தில் சண்டாளர்கள் மிக இழிந்த வாழ்க்கையே வாழ்ந்துள்ளனர். பிறப்பின் அடிப்படையில் இவர்கள் சென்ம சண்டாளர் எனவும், தொழில்களின் அடிப்படையில் கர்ம சண்டாளர்கள் எனவும் வகைப்படுத்தப்பெற்றிருந்தனர். பிராமணப் பெண்ணுக்கும், சூத்திர ஆணுக்கும் பிறந்தவர்கள் அல்லது தவறான உறவுகளால் பிறந்தவர்கள் சண்டாளர்கள் எனப் பிறப்பின் அடிப்படையில் கருதப்பெற்றனர். இவர்களைத் தீண்டுதல் பாவம் என ஆபஸ்தம்பாவும். [157] இவர்களைத் தீண்டினால் நீராடவேண்டும் எனப் புத்தாயனாவும் [158] அறிவுரைகள் கூறுகின்றன. இவர்கள் நகரின் உள்ளே செல்லும்போது உயர்சாதியினர் தம் வருகையை அறிந்துகொள்ளும்பொருட்டுக் கைகளில் வைத்துள்ள கட்டைகளை ஒன்றுடன் ஒன்று அடித்து ஒலி எழுப்பிக்கொண்டே செல்வர். மனு இவர்கள் ஊருக்கு வெளியே வாழவேண்டும் என்றும் இவர்களுடன் ஒரே மரத்தின் நிழலில் கூட நிற்கக்கூடாது என்றும் கட்டுப்பாடுகள் விதிக்கின்றன. [159] பௌத்த சாதக நூல்களும் சண்டாளர்களை மிகவும் இழிவானவர்களாகவே காட்டுகின்றன. [160] இவர்கள் ஊருக்கு வெளியே வாழ்ந்தமையால் எல்லையில் வாழ்நர் என்ற பெயரையும் பெற்றிருந்தனர். இவ்வாறு பிற சமுதாயங்களில் காணப்பெற்ற இழிநிலைகளை ஒத்த நிலையிலேயே தமிழகத்திலுள்ள சண்டாளர்களும் வாழ்ந்திருக்கலாம் என்றும், அதனைக் கண்ட ஆழ்வார் அவர்களுக்குச் சமுதாயத்தில் சம அந்தஸ்த்து (equal status) அளிக்கவேண்டும் என்ற உயரிய நோக்குடனேயே இத்தகைய எண்ணத்தை வெளிப்படுத்தியுள்ளார் என்றும் தோன்றுகின்றன.

### 3. 4. 4. 2. 3. குக்கர்

குடிமையில் கடைப்பட்ட குக்கரேனும், இறை அன்பராயின், அடியார்களால் நன்கு மதிக்கப்பெறுவர் என்று கூறுமிடத்தில் குக்கர் பற்றிய குறிப்பு உள்ளது. குடிமையில் கடைப்பட்டவர் என்பதாலும், குக்கரேனும் என இழிவு உம்மை கொடுக்கப்பெற்றமையாலும் இவர்களும் சாதியடிப்படையில் சமுதாயத் தாழ்நிலையுற்று வாழ்ந்த பிரிவினரே என்று எண்ண இடமுள்ளது. குக்கர் என்பவர்கள் விவாசயத் தொழில் செய்யும் தாழ்ந்த சாதியினர் எனக் கருதப்பெறுகின்றனர்.

### 3. 4. 4. 2. 4. பாணர்

அடியார் வரலாறுகளைப் பார்க்கும்போது பாணர் என்ற பிரிவினரும் சமுதாயத் தரப்பிரிவில் தாழ்நிலையுற்று வாழ்ந்தவர்களே என்று எண்ணத் தோன்றுகின்றது. திருநீலகண்டயாழ்ப்பாண நாயனாரின் வரலாறு பாணர்களின் சமுதாய வாழ்க்கை நிலையைக் காட்டும் சான்றாக அமைகின்றது. 161 இவர்களும் சாதிமுறையின் காரணிகளுள் ஒன்றாகிய கொல்லாமை என்ற அறநெறியின் செல்வாக்கினால், விலங்குகளின் தோலைப் பயன்படுத்திச் செய்யப்பெற்ற யாழைக் கொண்டிருந்தமையால் இழிந்த சாதியினராகக் கருதப்பெற்றிருக்கலாம் எனத் தோன்றுகின்றது. முதன்முதலில் சமுதாயத்தில் சமமாகக் கருதப்பெற்றிருந்த பாணர்கள் சாதிமுறையின் தோற்றக்காலத்தில் புலையர் அல்லது இழிசினர் என மாறிவிட்டனர் என்றும் 162 வழிபாட்டு முறைகளிலும் திருவிழாக்களிலும் முதலிடம் பெற்றிருந்த பாணர்கள் பின்னர் வந்த சமயப் பழக்கவழக்கங்களால் இழிநிலை அடைந்துவிட்டனர் என்றும் 163 கருதப்பெறுகின்றனர்.

புலையர், சண்டாளர், குக்கர், பாணர் என்பர்களைத் தவிரச் சமுதாயத்தில் வேறு பல சாதியினர் குறிக்கப்பெறினும், இவர்கள் இழிநிலையில் வாழ்ந்துள்ளனர் என்பதற்குப் பக்தி இலக்கியத்தில் குறிப்புகள் காணப்பெறவில்லை.

### 3. 4. 4. 3. தாழ்ந்த சாதியினரின் சமுதாய இழிநிலைகள்

சாதிமுறையானது சமுதாயத்தில் பல தீய செயல்களை விளைவிக்கின்றது. இதனால்தான் சமூகவியலாளர்கள் சாதிமுறையை மக்களின் தினசரி வாழ்க்கையைப் பாதிப்புக்கு உள்ளாக்கும் கொடிய சக்தியாகக் கருதுகின்றனர் எனலாம். 164 ஜான்வில்சன் என்பவர் சாதிமுறை இந்தியாவின் சாபம் (Curse) என்றும், இந்திய மக்களின் இழிநிலை எனப்படும் குழந்தையை ஈன்றெடுத்த பெற்றோர் (Parents of Indian woes) என்றும் அதன் கொடுமையை வருணிக்கின்றார். மார்வின் என்பவர் இந்தியச் சமூகத்திற்கு மிகப் பெரிய தீமை விளைவிக்கக் கூடியதும், இந்திய மக்களுக்கு மிகப்பெரிய துன்பம் விளைவிக்கக் கூடியதும் ஆகிய நிறுவனமாகச் சாதிமுறையைச் சுட்டுகின்றார். ஷெர்ரிங் (Sherring) சாதிமுறை மனித இனத்தைக் குறைவுபடுத்துவதற்காகக் கண்டுபிடிக்கப்பட்ட கொடிய மனமுடைய சமூகமுறை (hard hearted social system) என்கிறார். சமூகவியலாளர்கள் குறிப்பிடும் சாதிமுறையின் கொடுமைகளுள் (evils of caste system) தீண்டாமை, இயலாமை நிலை என்பன பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்திலும் இடம் பெற்றமையை இனி விளக்குவோம்.

குறிப்பிட்ட சில பிரிவினரைத் தீண்டற்குத் தகுதியற்றவர்களாகவும், இழிந்தசாதியினராகவும் கருதி ஒதுக்கிவைத்து அருவருப்பான விலங்குகளை விடவும் இழிவானவர்களாக உயர்சாதியினர் கருத முற்பட்டபோது சாதிமுறையின் கொடுமை உச்ச நிலையை அடைந்துவிட்டது என்பர். இந்தியச் சமுதாயத்தில் காணப்பெற்ற தீண்டாமை என்பது பிற சமுதாயங்களில் காணப்பெற்ற தீண்டாமை

பற்றிய எண்ணங்களைவிடச் சற்று ஆழமான. மாறுபட்ட பொருளைத் தருகின்றமை ஈண்டு கருதுவதற்குரியது ஆகும். இந்தியாவில் தீண்டாமை என்பது உடற்கூறு. வெளித்தோற்றம், மனிதனின் பிறப்பு, பரம்பரை என்பனவற்றுடன் தொடர்புடையதாய்க் காணப்பெறுகின்றது. [165] இந்தோ ஆரியர்களிடம் வருணமுறையின் விளைவாக முதன்முதலில் தோற்றம் பெற்ற தீண்டாமை எண்ணம், காலப்போக்கில் படிப்படியாகச் வளர்ச்சியுற்று, ஆரியர்களது பண்பாட்டுக் கலப்பினால் தமிழகம் உள்ளிட்ட பல பகுதிகளிலும் பரவியதாகக் கருதுகின்றனர். சங்க இலக்கியத்துள் காணப்பெறாத தீண்டாமை எண்ணம் பின்னர் எழுந்துள்ள இலக்கியங்களில் இடம்பெறுமாற்றை இக்கருத்துக்குச் சான்றாகக் கொள்ளலாம்.

தீண்டாமை எண்ணம் தோன்றுதற்குரிய சூழல்களும், காரணங்களும் சமுதாயத்தின் பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள் ஆகியனவற்றைப் பொறுத்துச் சமுதாயத்துக்குச் சமுதாயம் வேறுபட்டுக் காணப்பெறும். எனவே, தீண்டாமைக்குரிய காரணங்கள் இவையிவை என அறுதியிட்டுக் கூறமுடியாதென்பது சமூகவியலாளர்களின் கருத்தாகும், எனினும், பொதுவான சில காரணங்களைச் சுட்டிக் காட்டுகின்றனர். தீண்டாமைக்குரிய காரணங்களுள் ஒருபகுதி சமூக வழக்கமாகவும் (social custom) ஒரு பகுதி சமயமாகவும் காணப்பெறுகின்றமையை உறட்டன் (Hutton) கூறுகின்றார். நிசாதர்கள், சண்டாளர்கள் போன்றோர் தீண்டத்தகாதவர்கள் எனக் கருதப் பெற்றமைக்கு அவர்களுடைய பிறப்பைக் காரணமாகக் காட்டுவர் சிலர்.[166] ஊரைச் சுத்தம் செய்வோர், ஆடுமாடுகளைக் கொல்வோர் போன்றவர்கள் தீண்டத்தகாதவர்கள் ஆயினமைக்கு அவர்கள் மேற்கொண்ட தொழில்களே காரணம் எனக் கருதப் பெறுகின்றது. ஒவ்வொரு சாதியினரும் தனித்தனியாக வெவ்வேறு பகுதிகளில் வாழ்ந்தமையாலும் தீண்டாமை எண்ணம் வலுவடைந்துள்ளது எனவும் கருதப்பெறுகின்றது. [167]

மேல் சாதியினர், தாழ்ந்த சாதியினர் என்று சாதிமுறை உருவாக்கும் சமுதாயத் தரப்பிரிவுகளில் மேல் சாதியினர் ஆதிக்கம் நிறைந்த ஆளும் சாதியினராக மாறிவிடுகின்றனர். இவர்களுடைய உயர் நிலையினாலும், ஆளுமையாலும், ஆதிக்கத்தினாலும் தாழ்ந்த சாதியினர் பலநிலைகளில் இயலாமை நிறைந்த வாழ்க்கை வாழ வேண்டிய சூழல் உருவாகிவிடுகின்றது. இவ்வியலாமை நிலையும் சாதிமுறையின் கொடுமைகளுள் ஒன்றாகக் கருதப் பெறுகின்றது. தீண்டாமைக்கு இவ்வியலாமை நிலையும் வழி அமைத்துக் கொடுக்கின்றது. தாழ்ந்த சாதியினர் நீதி பெறுவதிலும், சமய நடவடிக்கைகளில் பங்குகொள்வதிலும் இயலாமை நிறைந்தவர்களாகக் காணப்பட்டனர். துன்பமிக்க, இழிவுமிக்க. இரங்கத்தக்க வாழ்க்கை வாழ்ந்தனர் அல்லது வாழுமாறு பணிக்கப்பெற்றனர். இவர்கள் உயர்ந்த சாதியினர் வாழும் தெருக்களில் செல்லவும், அவர்கள் பயன்படுத்தும் பொதுச்சாலைகள், பொதுக்கிணறுகள் ஆகியனவற்றைப் பயன்படுத்தவும், பள்ளிகளில் தங்கள் குழந்தைகளைக் கல்வி கற்க அனுப்பவும், கோயில் சடங்குகளிலும், சமயவிழாக்களிலும் கலந்து கொள்ளவும், உயர்ந்த சாதியினரைப் போன்று உணவு, உடை, உறையுள் போன்றனவற்றைப் பயன்படுத்தவும், மருத்துவ வசதி பெறவும், பொது நிகழ்ச்சிகளில்

கலந்துகொள்ளவும் இயலாத இயலாமைநிறைந்த வாழ்க்கை வாழ்ந்துள்ளனர். இவ்வாறு சாதிமுறை தீண்டாமைக்கும், இயலாமை நிறைந்த வாழ்க்கைக்கும் காரணமாக அமைந்ததைச் சமூகவியலாளர்கள் விளக்கிச் செல்வர்.

பக்தி இலக்கியம் மூலமும் சமுதாயத்தில் சாதிமுறையின் கொடுமைகளாகிய தீண்டாமை, இயலாமைநிலை என்பன இடம்பெற்றிருந்தன என அறியலாம். நமிநந்தியடிகள் இறைவனின் திருவீதி எழுச்சித் திருவிழாவைக் கண்டு வீடு திரும்பியதும் தன் மனைவிடம் திருவிழாவின்போது அனைவரும் போதர இளிவரவுத் தொடங்கிற்று என்கின்றார்.[168] இவண், இறைவனின் திருவீதி எழுச்சித் திருவிழா போன்ற இறைத் தொடர்பான நிகழ்ச்சிகளில் கலந்துகொள்ளும் உரிமையும், வாய்ப்பும் அனைத்துச் சாதிப்பிரிவினருக்கும் காணப்பெற்றன என்ற உண்மை புலனாகின்றது. எனினும், நமிநந்தியடிகள் கூற்றை நோக்கும்போது உயர்ந்த சாதியினர் தாழ்ந்த சாதியினரைக் தீண்டுதல் தீட்டு என்றும், அவ்வாறு தீண்டினால் நீராடித் தூய்மை செய்த பின்னரே வீட்டிற்குள் செல்லலாம் என்றும் தீண்டாமையைப் பற்றிய சிந்தனை மக்களிடம் - குறிப்பாக உயர் சாதியினரிடமாவது-நிலவியிருந்தது என்ற எண்ணம் மேலெழக் காண்கின்றோம்.

நந்தனார் தில்லையம்பலத் திருப்பதியில் எழுந்தருளியுள்ள இறைவனைக் காணவேண்டும் என்ற தீராக்காதலால் தவிப்பதும், அத்திருத்தலத்தை அடையும் தகுதி தன் குலத்துடன் பொருந்துவதில்லை எனத் தவிப்பதுமாக மனம் ஊசலாடி வாழ்ந்து வருகின்றார். இறுதியில் இறைவனிடம் கொண்ட எல்லையற்ற காதல் காரணமாக அங்கு எவ்வாறாயினும் சென்றுவிடுவது என்ற மன உந்துதலினால் தில்லை நகர் எல்லை வரையிலும் சென்றுவிடுகின்றார். உடனே தன் கீழாகிய குல நினைவு மேல் எழவே அவ்வெல்லைக்கு மேல் செல்லாது, அங்கேயே நின்றபடி இறைவனை வணங்குகின்றார். தில்லையில் அந்தணர்களின் ஆகுதித் திண்ணைகள் மூவாயிரம் உள்ளமையால் அங்குச் செல்லுதல் அரிதென எண்ணுகின்றார். இன்னல்தரும் இழிபிறவி தடையாக நிற்கின்றதே என மனம் மறுகுகின்றார். அவருடைய மனச் சுழற்சியையும் அன்பின் மிகுதியையும் கண்ணுற்ற இறைவன் நந்தனாருடைய கனவில் தோன்றித் தில்லைவாழ் அந்தணர்கள் வளர்க்கும் நெருப்பினிடையில் மூழ்கி முன்னணைவாய் என அருளினார். அவ்வாறே அந்தணர்கள் கனவிலும் நந்தனாருக்காக நெருப்பு வளர்க்குமாறு ஆணையிட்டு அருவினார். நந்தனர் அந்தணர்கள் வளர்த்த நெருப்பிடை மூழ்கி எழுந்து இறைவனை வணங்கி மகிழும் பேறு பெற்றார் என்ற வரலாற்றைக் காண்கின்றோம்.[169] இவ்வரலாறு நந்தனார் போன்ற புலையர் சாதியினர் சமுதாயத்தில் அடைந்திருந்த இழி நிலைகளையே காட்டுகின்றது எனலாம். தில்லை செல்ல எண்ணுதலும், தன் குலம் நினைந்து அவ்வெண்ணத்தைக் கைவிடுதலும் ஆகிய நந்தனாரின் உள்ள நிலை புலையர் போன்ற இழிந்த சாதியினரின் உள்ள நிலையை உளவியல் நோக்கில் காட்டுவதாகக் கொள்ளலாம். மேலும். புலையர் போன்ற இழிந்த சாதியினராகக் கருதப்பெற்றவர்கள் உயர்ந்த சாதியினர் வாழும் கிராமங்களின் உள்ளே நுழைய முடியாத நிலை காணப்பெற்றமையும் புலனாகின்றது. புலையர் சாதியைச் சார்ந்த

நந்தனாரே தன் இயலாமை நிலைக்காக மனம் புழுங்கிய நிலையில் இன்னல்தரும் இழிபிறவி எனத் தன் பிறவியைக் கடிகின்றார். அவரது இறையன்பின் உயர்வைக் கண்ட இறைவனும் கூட அவரை நெருப்பிடை மூழ்கி அவர் சாதித் தன்மையை நீக்கித் தூய்மைசெய்த பின்னரே கோயிலினுள் நுழையச் செய்ததாகக் காட்டப்பெறுதல் தாழ்ந்த சாதியினரின் சமுதாயத் தாழ்நிலையையே காட்டுகின்றது எனக் கூறலாம்.

காஞ்சிமாநகர வருணனையிலும் உயர்ந்த சாதியினரும், தாழ்ந்த சாதியினரும் தங்கள் தகுதிகளுக்கு ஏற்பத் தனியிடங்களில் பொருந்தி வாழ்வதாகக் காட்டப்பெறுதல் இவண் எண்ணுதற்குரியது ஆகும். புலையர் போன்ற தாழ்ந்த சாதியினர், உயர்ந்த சாதியினர் வாழும் இடங்களிலிருந்து தொலைவிலுள்ள ஒதுக்குப்புறமான இடங்களில் வாழ்ந்துள்ளனர். புலையர்கள் வாழ்ந்த இடங்கள் புலையச் சேரிகள் எனப்பெற்றன. [170] சோழ மன்னர்கள் காலத்திலும் தீண்டாச் சேரிகள் பற்றிய குறிப்புக்கள் இடம்பெறுதல் [171] இவண் சுட்டுதற்குரியது ஆகும்.

திருஞானசம்பந்தரும், திருநீலகண்ட யாழ்ப்பாணரும் அந்தணர் - பாணர் என்ற வேறுபாடுகள் சிறிதும் இன்றி இறை அன்பர்கள் என்ற உயரிய நோக்கில் பழகினும், சமுதாயத்தில் நிலவிய சாதிவேறுபாடுகளைப் புலப்படுத்தும் நிகழ்ச்சி ஒன்றும் காட்டப்பெறுகின்றது. [172] திருஞானசம்பந்தர் திருநீலகண்ட யாழ்ப்பாணரையும், அவர் மனைவியையும் அழைத்துக் கொண்டு கோயில் புறத்திரு முற்றம் வரையில் மட்டுமே சென்று யாழ்ப்பாணரிடம் இங்கிருந்துகொண்டே உங்கள் இறைவரை யாழிசை மீட்டிப் புகழ்ந்து பாடுவீராக என வேண்டுகின்றார். திருஞானசம்பந்தப் பெருமானுக்குச் சாதிவேறுபாடுகளைப் பாராட்டும் எண்ணம் அறவே இல்லை என்பதற்குப் பல சான்றுகள் உள்ளன. எனினும், அக்காலச் சமுதாயத்தில் பாணர்களை உயர்வாக மதிக்காத, பாணர்களைத் திருக்கோவிலினுள் செல்ல அனுமதிக்காத உயர் சாதியினரை மனத்துட்கொண்டே இவ்வாறு செய்திருக்கலாம் என்று தோன்றுகின்றது. இவற்றால் சண்டாளர், புலையர், பாணர், குக்கர் போன்றவர்கள் இயலாமை நிறைந்த, தீண்டத்தகாத இழிந்த சாதியினராகக் கருதப்பெற்றிருந்தமை வெளிப்படுகின்றது. இச்சமுதாய நிலையை மனத்துட்கொண்டே திருநாவுக்கரசர் இறைவன் இருக்கின்றான்; குலங்கள் என் செய்யும்; எனவே சோர்ந்திடாதே என மனத்துக்கு அறிவுரை கூறுவது போலச் சமுதாயத் தாழ்நிலையில் உள்ளவர்களுக்கு ஆறுதல் அளிக்கின்றார் எனலாம். [173]

பக்தி இலக்கியச் செய்திகளுடன் ஒத்த நிலையில் தாழ்ந்த சாதியினரின் இழிநிலைகளைக் காட்டும் கல்வெட்டு. வரலாற்றுச் செய்திகளும் காணக்கிடைக்கின்றன. பல்லவர் காலத்தில் கள் இறங்குவோர் அந்தணர் இல்லங்களில் உள்ள பனை மரங்களில் கள் இறக்குவதற்கும் தடைசெய்யப்பெற்றிருந்தனர். பல்லவர் காலத் தமிழகத்தில் சமுதாயத் தாழ்நிலையுற்ற பிரிவினர் தங்கள் தாழ்ந்த சமூக அந்தஸ்தத்தை ஏற்றுக் கொண்டதுடன். உயர்ந்த சாதியினரால் நசுக்கவும் பெற்றிருந்தனர். [174] தாழ்ந்த

சாதியினரிடம் வட்டி வாங்குவதில் கூட வேறுபாடுகள் பாராட்டப்பெற்றன என்பதையும் அறிகின்றோம். வெளச்சேரி என்ற இடத்தில் கண்டெடுக்கப்பட்ட முதலாம் இராசேந்திர சோழனின் ஆறாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு வெளச்சேரியிலுள்ள பிராமணரல்லாதவரின் நிலங்கள் கட்டாயப்படுத்தப்பெற்ற நிலையில் கோயில்களுக்குக் கொடுக்கப்பெற்றமையைக் காட்டுகிறது. [175] மன்னர்கள் அந்தணர்களின் சார்பில் நிலங்களை வாங்கிக் கோயில்களுக்குக் கொடுத்துள்ளனர்.[176] இரண்டாம் இராசாதிராசனின் அச்சாபுரக் கல்வெட்டுகள் அந்தணர்கள் ஏர்பிடித்தல் கூடாதென்றும், தொழிலாளர்கள் தம் இல்லங்களில் நிகழும் நிகழ்ச்சிகளுக்குப் பேரிகை கொட்டுதல் கூடாது என்றும், குயவர்கள் ஒரு மேலாடை மட்டுமே அணியலாம் என்றும் குலோத்துங்க சோழச் சதுர்வேதி மங்கலச் சபையோர் தடைவிதித்தமையையும், [177] காவடிக்காரர், குயவர், உவச்சர், கைக்கோளர், நாவிதர் போன்றோர் தலையில் அதிகம் மயிர்வளர்க்கக் கூடாதென்றும், மகிழ்ச்சியான வேளைகளில் பேரிகை கொட்டக்கூடாதென்றும் தடைகள் விதித்தமையையும் [178] காட்டுகின்றன.

### 5. 4. 5. சமத்துவச் சிந்தனைகள்

பக்தி இலக்கியம் தோன்றிய காலத் தமிழ்ச் சமுதாயத்தில் நிலவிய சாதிமுறையின் அடிப்படையிலான ஏற்றத்தாழ்வுகளையும், சாதிமுறையின் கொடிய விளைவுகளையும், சாதிமுறையின் கீழ் வாழ்ந்த தாழ்ந்த சாதியினரின் இன்னல்களையும் இழிநிலைகளையும், இயலாமைகளையும் கண்ணுற்ற நாயன்மார்களும் ஆழ்வார்களும் சாதிமுறையினால் ஏற்படும் சமுதாய ஏற்றத்தாழ்வு நிலைகளை அகற்றி, இறைவன் என்ற குளிர் நிழலில் மக்கள் அனைவரையும் வேறுபாடுகள் இன்றி ஒன்றுபடச் செய்து, சமத்துவச் சமுதாயத்தை உருவாக்க முயன்றுள்ள முற்போக்குச் சிந்தனைகளை வெளிப்படுத்தியுள்ளனர். பிறப்பின் அடிப்படையிலும், மக்கள் மேற்கொண்ட தொழில்களின் அடிப்படையிலும் காணப்பெறும் சமுதாய ஏற்றத்தாழ்வுகள் சமுதாய நியதியாக வளர்ச்சியுற்று மக்கள் இனத்தைக் கொடுமைப்படுத்துவதைப் பக்தி இலக்கியம் பல இடங்களில் வன்மையாகக் கண்டிக்கின்றது. இதனைக் கண்ணுற்றே ஸ்பென்சர் என்ற அறிஞர் பக்தி இயக்கம் மக்களிடையே பிராந்திய உணர்வையும், வட்டாரப் பற்றையும் பரப்பியதெனக் குறிப்பிடுகின்றார். [179] சாதி, குலம், பிறப்பு என்றும் சுழிகளில் அகப்பட்டுத் தட்டுத்தடுமாறித் துன்புறும் நிலையில், இவற்றுக்கெல்லாம் அப்பாற்பட்டு இறைவன் மீது தீவிரமான அன்பைச் செலுத்துவது மட்டுமே மக்கள் மறுமை அடைவதற்குரிய சிறந்த வழி எனப் பறைசாற்றியும், சாத்திரங்கள் பேசியும், சாத்திரநெறிகளைப் பின்பற்றியும் சமுதாயத்தைத் துண்டாடுவதைக் கடிந்தும் அரும் தொண்டாற்றியமையால்தான் பக்தி இயக்கம் அன்றைய தமிழ்ச் சமுதாயத்தில் ஆழமாக வேரூன்றித் தழைத்தது என்று கூறின் மிகையன்று ஆகும். சைவ, வைணவ அடியார்கள் தாம் பிறப்பினால் பல்வேறு சாதிகளையும் உட்பிரிவுகளையும் சார்ந்தோராகக் காணப்பெறினும், அனைவரையும் தொண்டர் குலமாக, அடியார் இனமாகக் கருதிப் போற்றினர். அடியார்களின் இப்பக்தி நெறியானது இறை அன்பு என்ற கருவியால் சாதிவேறுபாடுகளற்ற சமுதாயத்தை உருவாக்கத் துணைநின்றது. எனவே, பக்தி நெறியானது கடவுளரை

அடிப்படையாகக் கொண்ட அறிவு கலந்த அன்பாக மட்டுமோ அல்லது குருட்டு வழிபாட்டுக் கோட்பாடாகவோ திகழாது. உலகிடை வாழும் அனைத்து உயிர்களிடத்தும் அன்பு செலுத்தும் தனிப்பெரும் தொண்டு நெறியாகத் திகழ்ந்தது எனக் கருதப் பெறுகின்றது. பிறர் நல்வாழ்வை அடிப்படையாகக் கொண்ட தூயநெறியாக விளங்கியது. அணுக இயலாமை, தீண்டாமை போன்ற சமுதாயக் கொடுமைகளை எதிர்க்க முற்பட்டதன் தொடக்க நிலையாகக் கொள்ளமுடிகின்றது. நாயன்மார்கள், ஆழ்வார்களுடைய பாடல்களில் பொருள் அற்ற உலகக் கட்டுக்களைத் தூய அன்பு ஒன்றினால் மட்டுமே வென்றுவிடமுடியும் என்ற சிந்தனை ஒளிர்விடுகின்றது. இறை அன்பில் சமுதாய வேறுபாடுகளை அறவே மறந்து அனைவரும் ஒன்றாகக் கலந்து நிற்கும் பண்பைப் பக்தி இலக்கியப் பாடல்களில் காண்கின்றோம். இவ்வடிப்படையில் பக்தி இலக்கியத்துள் இடம்பெறும் சமத்துவச் சிந்தனைகளை இனி விளக்கிக் காட்டலாம்.

### 3. 4. 5. 1. அடியார் வாழ்க்கையில் சமத்துவச் சிந்தனைகள்

அடியார்களின் வாழ்க்கை வரலாறுகளை நோக்குமிடத்து அவர்கள் இறை அன்பின் அடிப்படையில் சாதி வேறுபாடுகளைக் களைந்து, அனைவரையும் சமமாக மதித்துச் சமத்துவச் சமுதாயத்தை உருவாக்க வழிகாட்டியமை தெரிகின்றது. திருஞானசம்பந்தப்பெருமாள் அந்தணர் கோத்திரத்துக் கௌணியர் குலத்தில் தோன்றிய உயர்சாதியின் உறுப்பினராகக் காணப்பெற்ற போதிலும், தாழ்ந்த சாதியராகிய திருநீலகண்ட யாழ்ப்பாணருடன் மிக நெருங்கிய உறவு கொண்டிருந்தார். திருநீலகண்ட யாழ்ப்பாணரும் அவர் மனைவியும் சம்பந்தரை வணங்கும் எண்ணமுடன் அருகில் வந்ததும், சம்பந்தர் தன்னைச் சுற்றிக் குழுமியிருந்த அந்தணர்களிடையேயிருந்து எழுந்துவந்து திருநீலகண்ட யாழ்ப்பாணரையும் அவர் மனைவியையும் சாதிவேற்றுமை பாராட்டாது வணங்குகின்றார். 180 இதனைப் போன்றே திருநீலகண்ட யாழ்ப்பாணரைக் கோயிலின் புறமுன்றிலில் அழைத்துச் சென்று இங்கிருந்தே உங்கள் இறைவரை யாழிசைத்துப் போற்றுக என வேண்டுகின்றார். [181] இவண் 'உங்கள் இறைவர்' எனக் குறிப்பிடுதல் சுட்டுதற்குரியது ஆகும். தாழ்ந்த சாதியினராயினும், இறைவன் அனைவருக்கும் பொதுவானவன் என்ற சமத்துவச் சிந்தனையை வெளிப்படுத்துகின்றார். சம்பந்தர் இறைவன் பெருமைகளைப் போற்றிப்பாடும்போது நீலகண்ட யாழ்ப்பாணர் உடலிருந்து யாழிசைத்துக் கொடுக்கின்றார். திருநீலநக்கர் இல்லத்திற்குத் திருநீலகண்டயாழ்ப்பாணரை அழைத்துச்சென்று உணவு உண்ண வசதி செய்துகொடுக்கின்றார். வேள்வி நடக்குமிடத்தில் யாழ்ப்பாணர் தன் பக்கலில் அமர இடமும் ஒதுக்கிக் கொடுக்கின்றார். இவற்றால் சமுதாயத்தில் மிக உயர்ந்த சாதியாக மதிக்கப்பெற்ற அந்தணர் குலத்தவர் தாழ்ந்த சாதியாகக் கருதப்பெற்றபாணர் குலத்தவருடன் வேறுபாடு கருதாது நெருங்கி உறவாடியமை விளங்குகின்றது.

வேளாளர் குலத் தோன்றலாகிய திருநாவுக்கரிசரிடம் அந்தணர் குலத்துதித்த அப்பூதி அடிகள் தன்னையும் தன்குடும்பத்தையும் ஒப்படைக்கின்றார். இது சாதி வேற்றுமைகளைச் சமுதாயத்திலிருந்து விரட்டியடிக்கும்

திருப்பணிக்கொரு சான்றாகும். அப்பர் பெருமானின் வருகையை அறிந்து அவர் திருவடிகளில் இன்னின்னார் வணங்கினர் எனக் காட்டுமிடத்தில் இருபிறப்பாளரும், அல்லா ஏனையோரும் வணங்கியமை கூறப்பெறுகின்றது. அப்பர் பெருமானின் இறைப்பற்றின் முன்னர் உயர் சமூக, அரசியல், பொருளாதார, சமய மதிப்பினைப் பெற்றிருந்த அந்தணர்களும் கூடத் தம் சமூக உயர்வை மனத்திற்கொள்ளாது, சாதிப்பெருமையை நினைக்காது வணங்கி நின்றமையை உணர்கின்றோம். இதற்கேற்பவே அப்பர்பெருமானும் புலையர்களும் நம்மால் வணங்கத்தக்கவர் என்று புரட்சிக்குரல் எழுப்பிச் சமுதாயத் தாழ்நிலையில் வாழ்ந்த புலையர்களை இறையன்பின் மூலம் வணங்கத்தக்க உயர்நிலைக்கு மாற்றியபெருமை எண்ணி வியத்தற்குரியது ஆகும்.

அகமண முறை என்ற சாதீயத் தன்மை சமுதாயத்தில் உயர்ந்த சாதியினர் எனக் கருதப்பெற்றவரிடமாவது மேலோங்கி நின்ற நிலையில் அந்தணர் குலத் தோன்றலாகிய சுந்தரர் சங்கிலியார் என்ற வேளாளர் குலப் பெண்ணையும், பரவையார் என்ற உருத்திரக்கணிகையர் குலப் பெண்ணையும் மணம்புரிந்து, சமுததாயத்தில் ஆங்காங்கே தலைதூக்கிநின்ற அகமணமுறைக்குச் சாவுமணி அடித்துச் சமுதாயப் புரட்சியைத் தோற்றுவித்தார் என்று ஐயமின்றிக் கூறலாம். மேலும், சுந்தரர் தம் திருத்தொண்டர் தொகையில் தாழ்ந்த சாதியினர் எனக் கருதப்பெற்ற குயவர், பாணர் போன்றோர்க்குத் தம்மை அடியவராகக் குறிப்பிடுகின்றமை சாதிமுறையின் அடிப்படையிலான ஏற்றத்தாழ்வுகளை ஏற்றுக்கொள்ளாத அவரது சமத்துவ உளப்போக்கைப் பறைச்சாற்றுகின்றது எனலாம்.

மிகத்தாழ்ந்த சாதியாகக் கருதப்பெற்ற புலையர் குல நந்தனார் நெருப்பிடை மூழ்கி எழுந்ததும் அந்தணர் உருவில் காட்சியளித்தமையைக் கண்டு உயர் சாதியினராகிய தில்லைவாழ் அந்தணர்கள் வணங்கியதுடன், கோயிலின் உள்ளே சென்று இறைவனை வழிபடவும் வழிசெய்தனர். இந்நிகழ்ச்சி பிறப்பினால் தாழ்வடைந்தவராயினும் இறை அன்பு கொண்டாராயின் உயர்நிலையை அடைய முடியும் என்ற சமத்துவச் சிந்தனையைப் புலப்படுத்தும் சான்றாக அமைகின்றது.

சோமாசிமாறநாயனார் ஈசனிடத்து அன்பு கொண்டவர் யாவராயினும் அவரே நம்மை ஆள்பவர் என்னும் உயரிய நோக்குடன் வாழ்ந்துவந்தார்.[182] இயற்பகையார் மிக்க சீரடியார் யாரெனினும் இல்லை என்னாது ஈத்துவக்கும் பண்பு நிறைந்தவராகக் காட்டப்பெறுகின்றார். [183] சிவபெருமானிடத்து எல்லையற்ற அன்பு கொண்டிருந்த சேரர் பெருமான் தன் எதிரில் ஆடைகளின் அழுக்கை நீக்கிச் சுத்தம் செய்யும் தொழிலை மேற்கொண்ட வண்ணார் வருவதைப் பார்த்து, அவர் உடம்பில் உள்ள உவர்நீரைத் திருநீறு என எண்ணி, அவர்முன் சென்று வணங்கி மகிழ்கின்றார். [184] குலச்சிறை நாயனார் குறியில் நான்கு குலத்தினராயினும், நெறியில் அக்குலம் நீங்கினாராயினும், உலகங்கொள்ளும் நலத்தினராயினும், அலகில் தீயராயினும் இறையடியார் என்றால் பணிந்து ஏத்துவதில் வல்லவராய்க் காணப்பெறுகின்றார்.[185] இவை இறையடியார்கள் இறை அன்பின் அடிப்படையில் சாதிவேறுபாடுகளற்ற சமத்துவச் சிந்தனையை

மக்களிடையே வளர்க்க முயன்ற முனைப்பை வெளிப்படுத்தும் சான்றுகளாக அமைகின்றன. இந்நிகழ்ச்சிகளைக் குறிக்கும் இடங்களில் இடம்பெறும் எத்தன்மையரெனினும், யாவராயினும் என்று வரும் தொடர்கள் உயர்ந்த சாதியினர், தாழ்ந்த சாதியினர், புறச்சாதியினர், இவர்களுள் யாவராயினும் அன்பு செலுத்தத் தக்கவர்களே என்ற சமத்துவ எண்ணத்தின் வெளிப்பாடுகளே என்று கூறலாம்.

### 3. 4. 5. 2. அடியரார் அறிவுரைகளில் சமத்துவச் சிந்தனைகள்

இறைப்பற்றை மக்கள் மனத்தில் பதியச் செய்யும் நோக்குடனேயே அடியார்கள் பக்திப் பாடல்களைப் பாடினும், சமுதாயத்தில் புரையோடிக்கிடக்கும் சாதிவேறுபாடுகளை அகற்றுவதற்குரிய சமத்துவச் சிந்தனைகளையும் அறிவுரைகள் கூறும் போக்கில் ஏற்ற இடங்களில் எல்லாம் இடம்பெறச் செய்துள்ள பாங்கும் இவண் குறிப்பிடுதற்குரியது ஆகும். இறைவனை வழிபட்டு இவ்வுலகக் கட்டுக்களாகிய துன்பங்களிலிருந்து விடுதலை பெற்றுய்யுமாறு மக்களிடம் அறிவுரை கூறுமிடங்களில் அப்பர்பெருமான் இறைவன் அன்பர் உள்ளத்தில் குடிகொள்ளுமியல் பினனாதலின் அன்பர் உள்ளத்தில் இறைவனைக் காணமுடியும் என்கின்றார். நெற்றியிலிட்ட திருநீற்றையும் கழுத்திலிட்ட உருத்திராக்க மாலையையும் கண்டால், அவற்றை அணிந்துள்ளவர்கள் எவரேனும் - உயர்ந்த சாதியினராயினும், தாழ்ந்த சாதியினராயினும் - அவரைப் போற்றித் தொழுபவரே உண்மை அன்புடையவர் என்ற விளக்கமும் தருகின்றார்.[186]

இறைவன் - அடியார் உறவைத் தலைவன் - தலைவி உறவாகக் கற்பித்து விளக்கும் மாணிக்கவாசகர் இறை அடியார்களுடைய தாள்களையே பணிவோம் என்றும், அவர்களே எம் கணவராவர் என்றும், அவர் உவந்த பரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம் என்றும் தலைவி கூற்றாகக் கூறுதல் இவண் சுட்டுதற்குரியது ஆகும்.[187] இறையடியார் யாராயினும் அவர் பிறந்த சாதியைப் பற்றிக் கவலையின்றி அவரையே கணவராகக் கொண்டு பணிசெய்வோம் என்ற சமத்துவ எண்ணத்தையே இவ்வடிகள் வெளிப்படுத்துகின்றன எனலாம். சாதி வேற்றுமைகளும், சாதிப் பிரிவிகளும் பெருகிய சமுதாயத்தில் சமத்துவ நிலையை உருவாக்கிப் புதியதோர் உலகம் படைக்க எண்ணிய திருமூலர் ஒன்றே குலமும், ஒருவனே தேவனும் என்ற அரிய சிந்தனையை வெளிப்படுத்துகின்றார்.[188] கொல்லாமை என்ற அறநெறியின் செல்வாக்கினாலும் உருவானதெனக் கருதப்பெறும் சாதிமுறையின் கீழ், பிற உயிர்களைக் கொன்று வாழ்க்கை நடத்திய பிரிவினர் தாழ்ந்த சாதியினராக எள்ளி நகையாடப்பெற்ற நிலையில் அவர்களும் இறை அன்பின் மூலம் உயர் நிலையை அடையமுடியும் என்று அவர்களுடைய புண்பட்டுப்புரையோடிய மனத்தில் புது நம்பிக்கையும், புத்துணர்ச்சியும் ஊட்டப்பெற்றன. படையால் உயிர்கொன்று நகுங்குலத்தில் பிறந்தவர் ஆயினும் இறைவன் கழற்கு அன்பராகில் அவர் யாவர்க்கும் உத்தமேரே ஆவர் என்ற கருத்தைச் [189] சான்றாகக் கொள்ளலாம்.

நாயன்மார்களைப் போன்று வைணவ ஆழ்வார்களுடைய வாழ்க்கை மூலமும், அறிவுரைகள் மூலமும் சமத்துவச் சிந்தனைகள் வெளிப்படும் போக்கை

உணரமுடிகின்றது. தீண்டத்தகாதவர் எனக் கருதப்பெற்ற மக்கட் கூட்டத்தின் பிரதிநிதியாகத் திருப்பாணாழ்வார் பக்தி இயக்கத்தினுள் இடம்பெறுகின்றார். அந்தணராகிய மதுரகவி ஆழ்வார் வேளாளராகிய நம்மாழ்வாரைத் தம் குருவாகக் கொண்டு போற்றியுள்ளார். இச்செயல்கள் வைணவச் சமயத்தைச் சாதாரண மக்களும் விரும்பி ஏற்கும் இயக்கமாக மாற்றப் பெரிதும் துணைநின்றன எனலாம். மதுரகவி ஆழ்வார் உயர்ந்த அந்தணர் குலத்தில் பிறந்த போதிலும் நம்மாழ்வாரைப் புகழ்ந்து பாடியுள்ளார். திருமழிசை ஆழ்வார் திருவலன் என அழைக்கப்பெறும் பிரம்பன் குலத்தில் தோன்றியவராகக் கருதப்பெறுகின்றார். ஆனால், அவர் பெரும்புலியூர் அடிகள் என்ற உயர்சாதி அடியவரால் நன்கு மதிக்கப்பெற்ற வரலாறும் உள்ளது. இவை இறையன்பர் என்ற பொதுவான உணர்வின் இடையே உயர்ந்த சாதிகள், தாழ்ந்த சாதிகள் என்ற வேறுபாடுகள் குறுக்கிடவில்லை என்பதை உறுதிசெய்கின்றன.

வைணவ ஆழ்வார்களும் அறிவுரைகள் கூறும் போக்கில் சமத்துவ எண்ணங்கள் மக்கள் மனத்தில் ஆழமாகப் பதியும்வண்ணம் செய்துள்ளனர். திருமாலை மனத்துள் இடையறாது எண்ணிப்போற்றுவோர் யாவராயினும் அவர்களே எம்மை ஆள்பவர் ஆவர் எனத் திருமங்கையாழ்வாரும்.[190] இழிந்த தொழில்களைச் செய்யும் ஊனகாரர்களாயினும் போனகம் செய்த சேடம் தருவரேல் அவரும் புனிதராவர்: இழிந்த குலத்தவராயினும் இறைவனுக்கு ஆளாயினவர்கள் நம்மால் வணங்கத்தக்கவர்களே என்று தொண்டரடிப் பொடியாழ்வாரும்.[191] நலந்தாங்கு சாதிகளின் கீழ் இழிந்த சண்டாள சண்டாளரேனும், சக்கரத்தானாகிய திருமாலுக்கு அடியவர் என்றால் அவர்களும் நம் அன்பர்களே என்று நம்மாழ்வாரும்[192] உரைக்கும் அறிவுரைகளை அவர்களின் சமத்துவச்சிந்தனைகிளின் உரைகற்களாகக் கொள்ளமுடிகின்றது.

### 3. 4. 5. 3. இறைவன் அருட்செயல்களில் சமத்துவச் சிந்தனைகள்

இறைவன் பெருமைகளைப் போற்றியுரைக்கும் நாயன்மார்களும் ஆழ்வார்களும் இறைவன் தம்மிடத்து உண்மை அன்பு செலுத்துவோர் யாவராயினும் வேற்றுமை பாராட்டாது அருளும் அருங்குணத்தினன் என்ற கருத்தை ஏற்ற இடங்களில் எல்லாம் எடுத்துரைக்கின்றனர். இறைவன் எங்கேனும் யாதாகிப் பிறந்திடினும் உண்மை அன்பு கொள்வாரிடத்து இங்கே என்று அருள்புரிவபன்:[193] குலவர் ஆயினும் குலமிலர் ஆயினும் அவன் திருவடிகளைப் பற்றி நின்று அனுதினமும் தொழுவோர்க்கு எவ்விதக் குறையுமின்றி அருள்புரிவான்:[194] மண்பொருந்தி வாழ்பவர்க்கும், மாதீர்த்த வேதியர்க்கும், விண்பொருந்திய தேவர்க்கும் வீடு பேறாய் நிற்பவன்:[195] ஆரேனும் அடியார்கள் என்றால் அணித்துவந்து அருள் புரிபவன்:[196] எத்தமராயும் பணிகொள்ள வல்லவன்:[197] யாரென்பேனும் அணிந்து கொள்பவன்:[198] யாவர்க்கும் அருள் புரிபவன்:[199] சாதி. குலம் என்னும் துன்பச் சுழிகளுள் அகப்பட்டு அல்லல் உறுவோர்களைத் தடுமாற்றம் தவிர்த்து ஆட்கொள்பவன்:[200] குக்கரில் பிறப்பரேனும் அடியாரை உவப்பவன்[201] என்றெல்லாம் விதந்தோதப்பெறுகின்றமையைக் காண்கின்றோம். இவண் சுட்டப்பெறும்

இறைவனின் பண்புகள் சமத்துவச் சமுதாயத்தை ஊக்கப்படுத்துவனவாகவே அமைகின்றன. அப்பர் பெருமான் சிவபெருமான் மட்டுமன்றி 'நமசிவாய' என்ற அவனுடைய திருவைந்தெழுத்தும்கூடக் குலம் இலர் ஆகிலும் குலத்திற்கேற்ற நலமிகக் கொடுக்கும் தன்மை வாய்ந்ததாகத் திகழ்கின்றமையைச் சுட்டுகின்றார்.[202] சிவபெருமானை மனத்துள் இடையறாது சிந்திப்பவர்களுக்கு ஒத்தகுலம், ஒவ்வாக்குலம் என்ற வேறுபாடுகள் அறவே கிடையா என்றும்[203] கூறப்பெறுகின்றது. பக்தி இலக்கியத்துள் சாதிவேறுபாடுகளை அகற்றிச் சமுதாயத்தை ஒன்றுபடச் செய்யவேண்டும் என்பதே இறைவனின் திருவுளக் குறிப்பு என்ற சிந்தனையை மக்கள் மனத்தகத்துப் பதியச் செய்யும் முயற்சி மிகுந்து காணப்பெறுகின்றது. இதனால்தான் இறைவனே முன்நின்று சுந்தரரை முதன்முதலில் ஆதி சைவக்குலத்தில் பிறக்க வைத்தும், ஆதிசைவரல்லாத குலத்தில் வளரச் செய்தும், வேளாளர் குலத்தில் பிறந்த மங்கையை மனக்கச்செய்தும் திருவிளையாடல்கள் புரிந்தமையைக் காண்கின்றோம். மேலும், பிறப்பின் அடிப்படையில் நிகழலிருந்த சுந்தரரின் திருமணத்தை அது நிகழும் காலம்வரையிலும் வாளாவிருந்து, தக்க தருணம் வந்ததும் தடுத்து நிறுத்திச் சாதிவேறுபாடுகளை அகற்றும் அரிய செயலுக்கு இறைவன் அடி எடுத்தும் கொடுக்கின்றார். புலையர் சாதியிற் பிறந்த நந்தனாருக்குச் சமுதாய நலிவை நீக்கி மேன்மை அளிக்கும் வகையில் திருப்புன்கூரில் தம் உருவை மறைத்துநின்ற நந்தியை விலகச்செய்து காட்சி கொடுத்து அருள்கின்றார்.

நடுமிநந்தியடிகள் திருவாரூரிலுள்ள கோயிலில் நிகழ்ந்த இறைவனின் திருவீதி எழுச்சித் திருவிழாவைக் கண்டு திரும்பி வந்து, எல்லோரும் போதர இளிவரவு வந்துற்றதாக எண்ணி, நீராடிய பின்னரே வீட்டிற்குள் செல்லவேண்டும் என்று மனைவிடம் நீராடுதற்குரிய ஏற்பாடுகளைச் செய்யுமாறு கூறிவிட்டு இடைப்பட்ட நேரத்தில் கண்ணயர்ந்துவிடுகின்றார். அவ்வமயம் சிவபெருமான் அவருடைய கனவில் தோன்றி மக்கட் பிறவியில் தீண்டத்தகாதவர் என்றும், தூய்மையற்றவர் என்றும் வேறுபாடுகள் கிடையா: இவை சமுதாயத்தில் ஒரு சில பிரிவினர் கொண்டுவந்து புகுத்திய கற்பனையானவையே: இறைவன் படைப்பில் அனைவரும் சமமாகவே மதிக்கப்பெறுவர் என்ற சமத்துவச் சிந்தனைகளைப் புகுத்தி உயர்சாதி மக்களின் சமுதாயத்தைப் பிழவுபடுத்தும் மனப்பான்மையை முறியடிக்கும் வகையில் ஆரூரிற்பிறந்தவர்கள் அனைவரும் நம் கணங்களே என மொழிந்தருள்கின்றார்.[204] மதுரையம்பதியில் சென்று சொக்கநாதப்பெருமானை வணங்க முடியாது வெளியே நின்று யாழிசைத்துப் போற்றிப் புகழ்ந்துகொண்டிருந்த நீலகண்ட யாழ்ப்பாணரைக் கோயிலுக்குள் நுழைய அனுமதிக்குமாறும், அவருடைய யாழினை வைப்பதற்குத் தங்கத்திடல் ஒன்று அமைத்துக் கொடுக்குமாறும் இறைவன் அந்தணர்கள் கனவில் தோன்றி ஆணையிடுகின்றான். நிலகண்டயாழ்ப்பாணர் திருக்கோவிலின் உள்ளே செல்லும்பொருட்டு அக்கோவிலின் வடக்குக் கதவையும் திறப்பித்தருள்கின்றான்.

திருப்பாணாழ்வார் சீரங்கத்தில் எழுந்தருளியுள்ள திருமாலைக் கண்டு வணங்கி வழிபட விரும்பியபோது அந்தணர்கள் அவரைக் கோவிலுக்குள் நுழையவிடாது மறுத்துவிட்டனர். எனவே கோவிலுக்கு வெளியே நின்று யாழிசைத்துத் திருமாலைப் புகழ்ந்து பாடிக்கொண்டிருந்தார். அவர் அன்பினைக்

கண்டு உளம் நெகிழ்ந்த இறைவன் உலோகசாரங்கமுனிவர் கனவில் தோன்றித் தோளில் சுமந்துகொண்டு கோயிலுக்குள் அழைத்துவர ஆணையிட்டார். ஆழ்வார் மறுத்தும்கூட முனிவர் இறைவனின் அருளாணையின்படி அவரைத் தோளில் சுமந்துகொண்டு கோவிலுள் சென்றார். இக்காரணம் பற்றியே திருப்பாணாழ்வாருக்கு முனிவாகனளார் (Rider of the sage) என்றதொரு பெயரும் ஏற்பட்டது என்ற வரலாற்றுச் செய்திகாணப்பெறுகின்றது.205 மேலும் திருப்பாணாழ்வார் தாழ்ந்த சாதியினர் எனக் கருதப்பெற்றமையால், அவர் தாழ்வினை எண்ணி அத்வர்யூ முதலான சடங்கவிகள் பெரும்புலியூரில் நிகழ்திய யாகம் ஒன்றில் அவரை இகழ்ந்தமையால், அவ்விகழ்வினைப் பொறுக்கலாற்றாது திருமாலை நினைந்து மனம் உருகிப் பாடத் திருமால் அவர் மேனியிடைத் தோன்றியருளியதாகக் கூறப்பெறும் மரபுவழிச் செய்தியும் உள்ளது.[206]

முற்கூறிய செய்திகள் புனைந்துரைகளாயினும், உண்மையுரைகளாயினும், இறைவன் புகழ் பரப்ப எழுந்தனவாயினும் அக்காலச் சமுதாயத்தில் சாதிமுறையின் கொடுமைகள் காணப்பெற்றன என்பதையும், அவற்றை அகற்றும்வகையில் இறைவனின் திருவருட் செயல்களை எடுத்துக்கூறி மக்கள் மனத்தில் சமத்துவச் சிந்தனைகளை வளர்க்கும் உயர்வான முயற்சிகளின் பிரதிபலிப்புக்களே இவை என்பதையும் உணரமுடிகின்றது.

## 3. 4. 5. 4. மக்களிடையே சமத்துவச் சிந்தனைகள் – நெகிழும் தன்மை

மக்களிடையே இறைப்பற்றை ஊட்டப்பெரிதும் முயன்ற பக்தி நெறியிலும், நாயன்மார், ஆழ்வார்களின் அரிய தொண்டு நெறியிலும் மனத்தைப் பறிகொடுத்த மக்கள், சமுதாயத்தில் சாதியடிப்படையில் காணப்பெற்ற ஏற்றத்தாழ்வுகளை அகற்றும் மனப்பான்மையைத் தம் உள்ளத்தில் வளர்க்கமுயன்ற நிலையையும் பக்தி இலக்கியம் காட்டுகின்றது. நமிநந்தியடிகள் வரலாறு மூலம் திருவாரூரில் நடந்த இறைவனின் திருவீதி எழுச்சித் திருவிழாவில் உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்ற பாகுபாடின்றி அனைத்துப் பிரிவினரும் கலந்துகொண்டனர் என்பது தெரிகின்றது. சாளக்கிராமம் என்ற இடத்திலுள்ள இறைவன் எழுந்தருவியுள்ள திருக்கோவிலை வருணிக்கும் திருமங்கையாழ்வார் தொண்டர்களும், அந்தணர்களும் அண்டா எமக்கருள்க என்று வேண்டி அணையும் கோவில் எனக் குறிப்பிடுகின்றார். 207 இதனைப் போன்றே மக்களும் இறை அடியார்கள் என்ற நிலையில் வேறுபாடுகள் கருதாது செழுமறையோர்க்கும், மற்றவர்க்கும் திருவமுது செய்கின்றனர்.[208] இவற்றால் இறை அன்பு செலுத்துதல், இறைத்தொண்டு புரிதல், இறை அடியார்களைப் போற்றுதல் போன்ற உயர்ந்த குறிக்கோள்களை மனதிற்கொண்டு, மக்களிடையே சாதிவேறுபாடுகள் காணப்பெறினும் அவற்றைப் பொருட்படுத்தாத நிலையில் மக்களிடையே சமத்துவ எண்ணங்கள் அரும்பி நின்றன என்பது புலனாகின்றது. இறைவன் எழுந்தருளிய கோவில்களும், சமயத் தொடர்பான நிகழ்ச்சிகளும் இவ்வெண்ணங்களை வளர்க்கும் கேந்திரங்களாகச் செயலாற்றியமையும் உணரத்தக்கது ஆகும். இவற்றால் அக்காலச் சமுதாயத்தில் சாதிமுறை காணப்பெறினும் சில நிலைகளில் அது நெகிழும் தன்மையுடன் விளங்கியமையும் (flexible) புலனாகின்றது.

பல்லவர், சோழ மன்னர்கள் காலச் சமுதாயத்தில் சாதிமுறையில் ஓர் இயக்கம் (mobility) காணப்பெற்றமையையும் வரலாற்றறிஞர்கள் குறிப்பிடுவர். அக்காலச் சமுதாயத்தில் காணப்பெற்ற சாதிமுறை பெரும்பாலும் சமுதாய ஒற்றுமைக்கு ஊறுவிளைவிக்காத நிலையிலேயே செயலாற்றியுள்ளது. சான்றாகத் தலைச்செங்காட்டுப் பகுதியில் வாழ்ந்த அனைத்துப் பிரிவினரும் கோயிலை மேற்பார்வை செய்யும் பணியையும், நாள்தோறும் பத்து அந்தணர்களுக்கு உணவு படைக்கும் பொறுப்பையும் தங்களுக்குள் கூட்டாகப் பகிர்ந்து கொண்டமையையும் சான்றுகளாகக் கொள்ளலாம்.[209] இவை பொது நன்மையை மனத்திற்கொண்டு செயலாற்றிய சமுதாய ஒற்றுமை உணர்வை வெளிப்படுத்துவனவாகக் கொள்ளலாம். பிற்காலச் சமுதாயத்தில் காணப்பெற்றமையைப் போன்று சாதியடிப்படையிலான பொறாமை உணர்வினையோ, இழிவான சமூக உணர்வுகளையோ அக்காலச் சமுதாயத்தில் பெரும்பாலும் காணமுடியாமைக்குப் பக்தி இயக்கக் கருத்துக்களே அடிப்படைக் காரணம் என்பதைத் துணிந்து கூறலாம்.

## 3. 4. 6. பக்தி இலக்கியம் படைத்த புதிய சமுதாயத் தரப்பிரிவுகள்

ஏதேனும் சில காரணிகளை அடிப்படையாகக் கொண்டு ஒவ்வொரு சமுதாயமும் ஒவ்வொரு வகையான தரப்பிரிவினைக் கொண்டிருக்கின்றது என்றும், தரப்பிரிவு (stratification) என்பது உலகச் சமுதாயங்கள் அனைத்திலும் காணப்பெறும் பொதுப்பண்பு என்றும், தரப்பிரிவைத் தீர்மானிக்கும் காரணிகளும், அதன் தன்மைகளும் சமுதாயத்துக்குச் சமுதாயம் மாறுபட்டுக் காணப்பெறும் என்றும், தரப்பிரிவு சமுதாயம் சீராக இயங்கக் துணைசெய்கின்றது என்றும் சமூகவியலாளர்களால் விளக்கங்கள் அளிக்கப்பெறுகின்றன. இவற்றின் அடிப்படையில் நாயன்மார்களும், ஆழ்வார்களும் சாதிமுறையின் அடிப்படையில் சமுதாயத்தில் நிலவிய தரப்பிரிவை மாற்றியமைத்துச் சமத்துவச் சமுதாயத்தை உருவாக்க முற்பட்ட நிலையில் இறை அன்பு என்பதை அளவீடாகக் கொண்ட புதியதொரு சமுதாயத் தரப்பிரிவை அமைத்துப் புதுமை படைத்துள்ளனர். இனி, பக்தி இலக்கியம் படைக்கும் சமுதாயத்தரப்பிரிவை விளக்கலாம்.

### 3. 4. 6. 1. தாழ்நிலையுற்றோர் – இறையுணர்வற்றோர்

இறைவன் ஒருவன் உண்மையை அறிந்து அவனை உள்ளன்புடன் வணங்கி ஏத்தாதவர்களே புலையராவர் என்றும் கடையராவர் என்றும் கூறப்பெறுகின்றது.[210] மேலும், உண்மை அன்பு இல்லாது பொய் வேடம் பூண்டொழுகுபவரே இழிகுலத்தவர், கீழோர் என்று கருதத்தக்கவராவர்.[211] இறைவனாகிய காளத்தியான்வாரைப் பேணாதவர் உண்மையில் உயர்பிறப்பினராகச் சமுதாயத்தினரால் கருதப்பெறினும் அவர்கள் சீ சீ என்று இகழத்தக்க கடையவர் ஆவார்.[212] பட்டராயினும், சாத்திரங்கள் பேசுவோராயினும், வேதங்கள் ஓதுவோராயினும் வேள்விகள் செய்வோராயினும் ஈசனை உணராதவர்களாகக் காணப்பெறின் முற்கூறிய நிலைகளில் எவ்விதப்பயனும் இல்லை.[213] மாயவனை மனத்துள் எண்ணி ஏத்தாதவரே ஈனர்.[214] சாதி

அந்தணரேயாயினும் திருமாலின் அடியார்களைப் பழிப்பவர்கள் புலையர்களேயாவர் 215 என்றெல்லாம் கூறுவதன் மூலம் சமுதாயத்தில் சாதிமுறையின் அடிப்படையில் கீழ்நிலையுற்றவர் என்ற எண்ணத்தை மாற்றி, இறைவனை உணராதவர்களும், இறையடியார்களைப் போற்றாதவர்களுமே கீழ்நிலையுற்றவர்கள், ஈனர்கள், புலையர்கள். இழிகுலத்தவர்கள் ஆவர் என்று புதியதோர் நிலையைத் தோற்றுவிக்கின்றமை உணரற்பாலது ஆகும்.

### 3. 4. 6. 2. உயர்ந்தோர் – இறையுணர்வுடையோர்

அந்தணர் ஒழுக்கங்களை எடுத்து விளக்கும் திருமூலர் உண்மை அந்தணர்கள் எனக் கருதத்தக்கவர் யாவர் என்றும், உண்மையில் சமுதாய உயர்நிலையினர் எனச் சமுதாயத்தினரால் கருதப்பெறும் அந்தணர்களின் நிலை எவ்வாறு உள்ளது என்றும் காட்டுகின்றார். சமுதாயத்தில் ஒழுக்கமுடையவர்கள், அறம் உடையவர்கள், அறிவுடையவர்கள் என்றெல்லாம் கூறிப் பிதற்றிக் கொண்டு பொய்வேடம் பூண்டுத் திரியும் பொய்யர்களை என்ன செய்யவேண்டும் என்று கூறி உண்மையான சமத்துவச் சமுதாயம் மலரவும் வழிவகை செய்கின்றார்.216 காயத்திரி, சாவித்திரி போன்றவற்றைக் காப்பவர்களும், தூய நெஞ்சுடன் இறைவனை உவந்து ஏத்துபவர்களும், பிறமாயாகாரியச் செயல்களைப் பற்றிய சிந்தனைகள் சிறிதும் இல்லாதவர்களும் ஆகிய அந்தணர்களே உண்மையான அந்தணர்கள் என்று கருதத்தக்கவர்கள். பிரணவம் ஓர்ந்து சிவகுருவின் திருவருளால் திருமறைகளைக் கேட்டும், அகவேள்வி உபதேசித்தும், திருவருளைக் கையேற்றும் உயர்ந்த செயல்களைச் செய்வதே உண்மை அந்தணர்களின் இயல்புகள் ஆகும். இறைவன் பால் உண்மை அன்புகொண்டு அவன் புகழ் பேசியும், அவனுக்கே தொண்டு செய்தும் வாழ்பவர்களே உயர்ந்த சாதியினராக மதிக்கத்தக்கவராவர். இவ்வாறு இறைஅன்பு கொண்டவர்களையே சமுதாயத்தில் உயர்வினராக மதிக்கப்பட வேண்டும் என்ற உயரிய சிந்தனை மொழியப் பெறுகின்றது.

### 3. 4. 7. சாதி வேறுபாடுகளைச் சாடுதல்

சாதிமுறையின் கொடிய விளைவுகளைக் கண்கூடாகக் கண்ட பக்தி இலக்கியச் சான்றோர்கள் மனம் பொறுக்கலாற்றாத நிலையில் சாதிவேறுபாடுகளையும், சாதி வேறுபாடுகளைப் போற்றிச் சமுதாய ஒற்றுமையைத் துண்டாடுவோர்களையும் கடுமையாகச் சாடுகின்றனர்.

சிவஞானத்தில் தலைநின்று, இறைவன் திருவருளைக் கையேற்று நடத்துவோர்கள் யாவராயினும், அவர்கள் அனைவரும் உயர்ந்தவர்களே என்றும் அந்தணர்களே என்றும் கருதத்தக்கவராவர் எனக்கூறும் திருமூலர் இவற்றை மேற்கொள்ளாது. உச்சிக்குடுமியும். பூணூலும் மட்டும் வைத்துக் கொண்டிருப்பவர்கள் அந்தணர் ஆகார் என அறுதியிட்டுக் கூறுகின்றார். இவர்கள் கொண்டுள்ள உச்சிக்குடுமி என்பது வெறும் மயிரே என்றும் பூணூல் என்பது வெறும் கயிறே என்றும் எள்ளி நகையாடுகின்றார். உண்மையில் இவற்றின்

அக அடையாளங்கள் என்னவென்றால் மறைமுடியும், அம்முடிபால் பெறப்பெற்ற முப்பொருள் உண்மையான திருவடிப்பேறுமே ஆகும். ஆனால், சமுதாயத்தில் தம்மை உயர்வானவர்களாய்க் காட்டி மக்களை நம்பச்செய்து, அவர்களின் உயர் மதிப்பைப் பெற்று வாழும் அந்தணர்களே பெரும்பான்மையும் காணப்பெறுகின்றனர். இவர்கள் ஒழுக்க உண்மை, முப்பொருள் உண்மை ஆகியவற்றைச் சிறிதும் பெற்றிருக்கவில்லை. சிவபெருமானே முழுமுதல் என்ற சிந்தனை சிறிதும் இன்றி மனம் போனவாறு நடக்கின்றனர். இறைவனிடம் உண்மை அன்பு இன்றியும், இறைவன் உண்மைக்கோள் இன்றியும், ஐம்புலன்களின் நுகர்வின் பொருட்டு மெய்பொருளின்மீது நாட்டம் இன்றியும் வாழ்ந்து திரிகின்றர். இவர்களா உண்மைப் பிராமணர்கள் என உளம் கொதித்து வினவும் திருமூலர் இவர்கள் மூடர்களே எனக் கடிந்தும் உரைக்கின்றார். இவர்கள் ஆணவத்தைக் கைவிடாது உச்சிக் குடுமியையும், பூணூலையும் மட்டும் பூண்டு உலகை ஏமாற்றுகின்றனர். இவர்களால் சமுதாயத்திற்கு எவ்வித நன்மைகளும் கிடைக்கப்போவதில்லை. ஆனால் இவர்கள் விளைவிக்கும் கொடுமைகள் எல்லையற்றுக் காணப்பெறுகின்றன. இவர்களால் உலகில் உயிர்கள் வாடி வதங்கும். நாடாளும் மன்னனும் பெருமை குன்றுவான். இவ்வாறு அடுக்கிக்கொண்டே செல்லும் திருமூலர் இறுதியில் இவர்கள் ஆடம்பரமாகக் கொண்டுள்ள உச்சிக் குடுமியையும், பூணூலையும் மன்னன் அறுப்பித்து எறிய வேண்டும் என்ற புரட்சிக் குரலையும் எழுப்புகின்றார்.[217] உண்மை அன்பு கொள்ளாது, பொய்வேடம் புனைந்து, சாத்திரங்களைப் பேசி, மக்களிடையே சாதி வேறுபாடுகளை உருவாக்கி, சமுதாய ஒற்றுமையைக் குலைப்போர்களைத் திருநாவுக்கரசர் பெருமானும் சழக்கர்கள் எனச் சாடுகின்றார்.[218]

இக்காலத்தில் சாதிமுறையின் கொடுமைகளுக் கெதிராகப் பலரும் அறிவுரைகள் கூறுவதனை விடவும் பல நிலைகளில் மேலாகச் சென்று பக்தி இலக்கியச் சான்றோர்கள் பல அறிவுரைகளை வன்மையாகவும், மென்மையாகவும் கூறிச் சமுதாயத்தைச் சிந்திக்கச் செய்து, சமத்துவ நிலையை உருவாக்க முயற்றுள்ளமை எண்ணியெண்ணி வியத்தற்குரியது ஆகும்.

## 3. 4. 8. சாதிமுறையை அகற்றுதற்குரிய வழிகள்

சாதிமுறையைச் சாடி, அதனைச் சமுதாயத்திலிருந்து அகற்றுதற்குரிய தேவையை வெளிப்படுத்திய அடியவர்கள் பக்தி இலக்கியத்துள் சாதிமுறையை அகற்றுதற்கான வழிமுறைகளையும் சுட்டிக் காட்டுகின்றமை அறியத்தக்கது ஆகும். சமுதாயத்தில் வாழ்கின்ற மக்கள் தம்மிடையே உயர்ந்த சாதியினர், தாழ்ந்த சாதியினர் என்ற பாகுபாடுகளை வளர்க்காது அனைவரையும் சமமானவர்களாகக் கருதி இணைந்து வாழவேண்டும். ஏனெனில், வேற்றுமை பாராட்டிக் கொண்டாடப்பெறுகின்ற இக்குலப்பெருமை நம் உயிர் உடம்பை விட்டுப் பிரிந்து செல்லும்போது உடன்வராது.[219] மேலும், குலவேறுபாடுகள் உலகைக் கெடுக்கும் தீமை நிறைந்தவையாகக் காணப்பெறுகின்றன.[220] குலம், கோத்திரம் என்ற வேறுபாடுகளைக் கூறிக் கொண்டிருப்பதில் பயனில்லை. பாத்திரம் சிவனேயாவான் என்ற ஒரே சிந்தனையை மட்டும் மனதில் உறுதியாகக் கொண்டு

அவ்விறைவனைப் பணியவேண்டும்.[221] நாட்கள் நிலைத்து நிற்கும் தன்மையன அல்ல, அவை விரைவாகச் சென்றுகொண்டிருக்கும், அதனை உணராது, சாதி வேறுபாடுகளைப் பாராட்டிக்கொண்டிருப்பதில் பொருள் ஒன்றும் இல்லை.[222] இவ்வாறு யாக்கை நிலையாமையை எடுத்துக் காட்டியும், இறையருட் சிந்தனையை ஊட்டியும், அறிவுரைகள் கூறியும் சிந்தனையைத் தூண்டிச் சமத்துவச் சமுதாயம் அமைய வழி கோலுகின்றனர்.

### 3. 4. 9. மாறுபட்ட நோக்கு

சாதிமுறை என்ற சமூக நிறுவனத்தின் தோற்றத்திற்கும், வளர்ச்சி நிலைக்கும் உரிய பல்வேறு காரணிகளுள் ஒன்றாகச் சமயம் (religion) என்ற நிறுவனமும் அமையுமாற்றைச் சமூகவியலாளர்கள் விளக்கிக் காட்டுவர். இச்சமயங்களுள்ளும் இந்து சமயமே சமூகவியலாளர்களால் பெரிதும் வலியுறுத்திக் கூறப்பெறுகின்றது. சாதி முறை ஒரு சமய நிறுவனம் (religious institution) என்று ஏற்றுக் கொள்ளாவிடில் சாதிமுறையைப் பற்றிய தெளிவான அறிவைப் பெறமுடியாது என்பதும் அவர்தம் கருத்தாகும். எனவே சாதிமுறை இந்து சமயத்தின் அடிப்படை நிறுவனம் என்ற நிலையில் அணுகப்பெறுவதாக வெபர் கருதுகின்றார்.[223] ஆனால், இந்து சமயமும், சாதிமுறையும் இணைந்து செயல்படவில்லை என்றும், இரண்டும் ஒரே சமூகநிகழ்வின் (social phinomena) இரண்டு கூறுகள் என்றும் சிலர் கருதுகின்றனர். இந்து சமயம் தவிர வேறு சமயங்களும் சாதி முறையை வளர்த்துள்ளன என்றும் கூறுகின்றனர்.[229] பொதுவாகச் சமயம் சாதிமுறையை வளர்க்கும் காரணிகளுள் ஒன்றாகக் கருதப்பெறுகின்றது.

இந்நிலையில் நாயன்மார்களும், ஆழ்வார்களும் சமுதாயத்தில் சாதிமுறையின் அடிப்படையில் நிலவிய சமுதாய ஏற்றத்தாழ்வுகளைக் களைந்து, இறையுணர்வு என்ற பொதுவான ஓர் அடிப்படையில் மக்களை ஒன்றுபடுத்திச் சாதி வேறுபாடுகளற்ற சமநிலையான சமுதாயம் அமைவதற்குரிய அறிவுரைகளைக் கூறியும், சாதி வேறுபாடுகளைக் கடிந்தும், தம் வாழ்க்கையில் சமத்துவ எண்ணத்தைப் போற்றி நடந்து காட்டியும் முயன்று மேற்கொண்டுள்ள செயல்கள் எண்ணி வியத்தற்குரியவை ஆகும். சமுதாயத்தை ஒருங்கிணைக்கும் சக்தியாகச் சமயம் செயல்படுகின்றது என்ற கருத்தை நிறைவு செய்யும் வகையில் பக்தி இலக்கியம் மாறுபட்ட உயர்ந்த நோக்கைக் கொண்டு திகழ்கின்றது எனலாம்.

### 3. 4. 10. முடிபுகள்

1. சமுதாயத்தில் காணப்பெறும் பல்வேறு நிறுவனங்களுள் ஒன்றாகச் சாதிமுறையும் சமூகவியலாளர்களால் கருதப்பெறுகின்றது.

2. இச்சாதிமுறை என்ற சமூக நிறுவனம் உலகச் சமுதாயங்கள் அனைத்திலும் வெவ்வேறு வடிவங்களில் காணப்பெறுகின்றது என்பதும், இந்தியச் சமுதாய அமைப்பில் இது மிக நீண்டகாலமாகத் தொடர்ந்துவரக்கூடியதும்,

தனித்தன்மைகளைக் கொண்டதுமாகிய நிறுவனமாகச் செயல்படுகின்றது என்பதும் சமூகவியலாளர்களின் கருத்துக்கள் ஆகும்.

3. சாதிமுறையின் தோற்றத்திற்கும், வளர்ச்சிக்கும் உரிய காரணிகளாகச் சமூகவியலாளர்கள் கூறுவனவற்றுள் பிறப்பு, தொழில்கள், கொல்லாமை என்ற அறநெறியின் செல்வாக்கு, முற்பிறப்பு வினை அல்லது விதி என்ற நம்பிக்கை, பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் என்பன பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் இடம்பெற்றிருந்தமையை அறியமுடிகின்றது.

4. சமூகவியலறிஞர்கள் குறிப்பிடும் சாதிமுறையின் தன்மைகளுள் அகமணமுறை, தொழில்களைத் தீர்மானித்தல், உணவுத்தடை, உறுப்பினர்கள் மீது கட்டுப்பாடுகள் விதித்தல் என்பன பற்றிய குறிப்புகள் காணக்கிடைக்கின்றன.

5. பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் பல்வேறு சாதிப்பிரிவுகளும், அவற்றின் உட்பிரிவுகளும் காணப்பெற்றன எனக் கருதலாம்.

6. சமுதாயத்தில் நிலவிய சாதிமுறையின் அடிப்படையில் உருவான தரப்பிரிவுகளில் சில பிரிவினர் உயர்நிலையும், வேறுசில பிரிவினர் தாழ்நிலையும் அடைந்துள்ளனர் எனக் கருதத்தோன்றுகின்றது.

7. சாதிமுறையின் அடிப்படையில் அமைந்த சமுதாயத் தரப்பிரிவுகளல் வைதீக அந்ணர்கள் சமூக, அரசியல், சமயச் செல்வாக்குகளைப் பெற்று உயர் சாதியினராகக் கருதப்பெற்றிருந்தனர் என்பதற்குக் கல்வெட்டுச் செய்திகளுடன் பொருந்திய நிலையில் பக்தி இலக்கியச் செய்திகளும் அமைந்து காணப்பெறுகின்றன.

8. சமுதாயத்தரப் பிரிவில் புலையர், சண்டாளர், குக்கர், யாணர் போன்றவர்கள் தாழ்ந்த சாதியினராகக் கருதப்பெற்று, இழிந்த வாழ்க்கை வாழ்ந்துள்ளனர் என்று எண்ணத் தோன்றுகின்றது.

9. சாதிமுறையின் கொடுமைகளாகச் சமூகவியலாளர்கள் கூறுதற்கேற்பப் பக்தி இலக்கியமும் தாழ்ந்த சாதியினராகக் கருதப்பெற்றோர் தீண்டத்தகாத நிலையிலும், அரசியல், சமூக, பொருளாதார, சமய இயலாமை நிலையிலும் வாழ்ந்துள்ளமையைச் சுட்டுகின்றது.

10. சாதிமுறையின் அடிப்படையில் அமைந்த சமுதாய ஏற்றத்தாழ்வு நிலைகளில் கீழ்நிலையுற்றிருந்த பிரிவினரின் வாழ்க்கை நிலைகளைக் கண்டு இறை அடியவர்கள் இறைஅன்பு என்ற குளிர்மர நிழலில் மக்கள் அனைவரையும் சாதிவேறுபாடுகளை மறந்து ஒன்றுபட்டு நிற்கச் செய்து சாதிவேறுபாடுகள் அற்ற சமநிலையான சமுதாயம் அமைய மேற்கொண்ட முயற்சிகள் தெளிவாகக் காட்டப்பெறுகின்றன.

11. அடியார்களின் வாழ்க்கை வரலாறு மூலம் அவர்கள் உயர்ந்த சாதியினர், தாழ்ந்த சாதியினர் என்ற வேற்றுமை பாராட்டாது, அனைவரையும் சமமாகப் போற்றிச் சமநிலையான சமுதாயம் அமைய வழிகாட்டியாக வாழ்ந்துகாட்டியமை புலனாகின்றது.

12. அடியார்கள் மக்களுக்கு அறிவுரை கூறுவதாக அமைந்த பகுதிகளில் சாதியடிப்படையிலான ஏற்றத்தாழ்வுகளைக் கண்டிப்பதுடன், அவற்றை அகற்ற வேண்டியதன் இன்றியமையாமையும் உரைக்கப்பெறுகின்றன.

13. இறைவன் திருவருட்செயல்களை வியந்தோதுமிடத்து இறைவன் சாதி வேறுபாடுகள் கருதாது உண்மையான அன்பு செலுத்துவோர்க்கு அருளும் பெருங்குணத்தினன் என்ற கருத்து அழுத்தமாக வலியுறுத்தப்பெறுகின்றது.

14. பக்தி இலக்கியம் மூலம் சமுதாயத்தில் சாதிமுறை காணப் பெற்றபோதிலும் இறைவனிடம் அன்பு செலுத்துதல் என்ற நிலையில் அது நெகிழும் தன்மையுடனேயே காணப்பெற்றிருந்தது என்பதை அறியலாம்.

15. சாதிமுறையின் அடிப்படையில் அமைந்த தரப்பிரிவுகளை வன்மையாகக் கண்டித்து அகற்ற முனைந்த பக்தி இலக்கியச் சான்றோர்கள் இறைவனிடம் அன்பு செலுத்தாதவரே தாழ்ந்தவர்கள் என்றும், அன்பு செலுத்துவோரே உயர்ந்தவர்கள் என்றும் புதியதொரு சமுதாயத் தரப்பிரிவை அமைத்துக் காட்டுகின்றனர்.

16. சமுதாயத்தில் நிலவிய சாதிமுறைக்கு எதிராக நாயன்மார்களும், ஆழ்வார்களும் எழுப்பிய புரட்சிக் குரல்களைப் பக்தி இலக்கியத்தில் கேட்க முடிகின்றது.

17. சாதிமுறையை அமைதியான முறையில் அகற்றுவதற்கு உரிய அறிவுரைகளையும் இறையடியார்கள் தருகின்றனர்.

18. சாதிமுறையின் தோற்றத்திற்கும், வளர்ச்சிக்கும் உரிய காரணிகளுள் ஒன்றாகச் சமூகவியலாளர்கள் சமயத்தைக் குறிப்பிடும் நிலையில், பக்தி இலக்கியச் சான்றோர்கள் சமுதாயத்தில் நிலவிய சாதி வேறுபாடுகளை அகற்றிச் சமத்துவச் சமுதாயததை உருவாக்க முயன்று, சமயம் சமுதாயத்தை ஒருங்கிணைக்கும் கருவியாகவும் திகழ்கின்றது என்ற மாறுபட்ட நோக்கைப் பக்தி இலக்கியம் மூலம் நிறுவியுள்ளமை எண்ணிப் போற்றுதற்குரியது ஆகும்.

19. இக்காலத்தில் சாதிமுறையை அகற்றுதற்குச் சமூகநலச் சிந்தனையாளர் மேற்கொள்ளும் முயற்சிகளையும் விஞ்சிய நிலையில் பக்தி இலக்கியச் சான்றோர்கள் முயன்றுள்ளமை சுட்டுதற்குரியதாகும்.

<u>மேற்கோள்சான்றுகள்</u>

1. G.H. Sasaki, **Social and Humanistic Life in India,** P. 87.

2. S. Radharkrishnan, **The Hindu View of Life,** P. 93.

3. **அ. மாரியப்பன், தமிழக வரலாறு, சமுதாய, பொருளாதாரக் கண்ணோட்டம். ப. 87.**

4. Yogyendra Bhagadur Singh, **Social Life in Ancient Indian,** P. VIII.

5. G.H. Sasaki, op.cit., P. 117.

6. G.H. Sasaki, op.cit., P. 37.

7. S. K. Ramachandra Rao, **Social Institution Among the Hindus,** P. 32.

8. Walters, **Yuwan Chuang's Travel in India,** PP. 147-168

9. Rajendra Pande, **The Caste System in India,** P. 1.

10. S. K. Ramachandra Rao, op.cit., P. 1.

11. **புறம். 170:5. 360:16-19, 363: 10-14, கலித். 68:18 -19, 72:14, 85:22, 95:10-11, நற். 347: 5-6, அகம். 34:11, 387: 5 -7. குறுந். 330:1.**

12. புறம். 82: 3, 170: 1-5, 287: 2, 288: 10, 363: 12-14.

13. புறம். 183: 8-10.

14. K.N. Datta, **Origin and Growth of Caste System in India,** P. 15

15. R. N. Sharma, **Indian Society,** PP.27-28.
Kosambi, **Bhagavan Buddha,** PP. 351-353.

16. **கண்ணப்பர். 8: 1-2.**

17. **திருக்குறிப்பு. 11.**

18. **திருக்குறிப்பு. 103.**

19. K.R. Hanumanthan, **Untouchability,** PP. 175-176.

20. Eph. Rep. 479/1908, கே.கே. பிள்ளை, தமிழக வரலாறு, மக்களும் பண்பாடும், ப.313.

21. 189 of 1925, 508 of 1922. 208 of 1929. [illegible] "கல்வெட்டுக்களும் அரசியல் வரலாறும்", **Journal of the Annamalai University,** P. 36.

22. Yogyendra Bhagadur Singh, op. cit.. PP. 20-21.

23. திருநாளைப். 13 : 1-2.

24. 6 : தனி. திருத்தாண்டகம் : 10 : 3.

25. திருமங்கை : திருமொழி : 242 : 1.

26. திருநாளைப். 13,14.

27. திருமந்திரம். 79 : 1-2.

28. திருமந்திரம். 67,79.

29. 7 : 6 : 2 : 2 : 1-3.

30. திருமந்திரம். 1633 : 2.

31. கண்ணப்பர் 8 : 1-2.

32. 11 : 29 : 32.

33. திருமந்திரம் 516 : 4.

34. 11 : 32 : 17 : 2-3.

35. S. D. Deo, **History of Jaina Monarchism,** P. 575.

36. Jani. D. Motoe, **Sociology-Study of Society,** PP. 29-30.

37. R. N. Sharma, op.cit., P.8.

38. Rajendra Pande, op. cit., P.8.

39. Roy, " Social Mobility", **Social Life in Ancient India,** PP 10-20.

40. பார்க்க. இயல் 3 : பொருளாதார ஏற்றத்தாழ்வுகள்.

41. Ronald W. Smith, **Sociology, An Introduction**, P. 144.

42. மனு. 3 : 4, 3 : 15, 3 : 63, 8 : 365, 8 : 366.

43. G. H. Ghurye, **Caste and Race in India**, P. 83.

44. R. N. Sharma. **Sudras in Ancient India**, P. 276.

45. சண்டேசுர. 11 : 1.

46. தடுத்தாட். 8 : 1.

47. திருஞான. 16 : 1-2.

48. திருஞான. 1161.

49. காரைக்கால் 6,7.

50. திருநாவுக். 1161.

51. திருநாவுக். 17.

52. மானக்கஞ்சாற. 16.

53. மானக்கஞ்சாற. 17.

54. திருக்குறிப்பு. 103.

55. திருநாளைப். 11 - 13.

56. திருநீலகண்டர். 3 : 1.

57. K. N. Datta, op. cit., 9 P. 15

58. மனு. 4 : 211 - 216.

59. G. H. Ghurye. op. cit., P. 79.

60. அமர்நீதி 12.

61. மனு. 8 : 221.

62. திருநாட்டு. 3 34 : 2.

63. Thirty Pallava Copper Plates, kuram Copper Plates. line 18. P. 47.
கே.கே. பிள்ளை, மு.கூ. நூல், ப. 184.
வி.டி. செல்வம், தமிழக வரலாறும் பண்பாடும், ப. 181.

64. அமர்நீதி. 12, உருத்திர. 3. கண்ணப்பர்.109, காரிநாயனார். 1:1, குங்கிலிய :3: 3-4, சண்டேசுவர.12, 94:1, சிறைப்புலி. 3:2, 6:1. தடுத்தாட், 3:2. சோமாசி. 1:2. நமிநந்தி. 4:2, பூசலார். 13:3, முருக. 5:2.

65. ஏகாலி 11:3, 21:3 - 4.

66. தொண்டரடி. திருமாலை. 39.

67. திருநீலகண்டர். 2:4, 3:1, 11:3.

68. 3: திருக்கோகரணம்: 9:3-4, 11:10: 8:1-3, 11:10:27:1-3.

69. நம்மாழ். திருவாய். 3:7:9.

70. நேசநாயனார். 2:1.

71 வாயிலார். 6:2-3.

72. கலிய. 5:2.

73. அதிபத்தர். 9:1-2, திருமந்திரம்.1933:3-4, 3: திருவேதவனம்:9,10.

74. 6:தனி. திருத்தாண்டகம்:10:3, திருமந்திரம்: 242:1, 516:4, திருநாளைப்.11:3.

75. சிறுத்தொண்டர். 2: 2-3.

76. திருக்குறிப்பு. 113:2.

77. அமர்நீதி.2:1, கலிகம்பர். 2:1, மூர்த்தி 8:1.

78. 3. திருக்கோகரணம்: 5:3-4, 7:6:2:2:1-3, 7:6:2:4:1-3, திருமந்திரம். 1633:2.

79. விறன்மிண்டர். 4:1, சக்தி. 2:1. சாக்கிய.2:2. செருத்துணை.2:1 மானக்கஞ்சாற 7:2. திருநாவுக். 15:3-4.

80. கழற்றறிவார். 4:1-2.

81. திருக்குறிப்பு.103.

82. திருமங்கை. திருவெழு.29.

83. திருமழிசை. திருச்சந்த. 90:1.

84. குலச்சிறை. 4.

85. நம்மாழ். திருமொழி.3:7:9.

86. 5:314.

87. திருவா. 31:5:1-2.

88. திருமங்கை. பெரிய.1:9:4:1.

89. ஏ. சுவாமிநாதன், தமிழக வரலாறும் பண்பாடும், ப.151

90. கே.கே. பிள்ளை, மு.கூ. நூல், ப.303.

91. கா. சிவத்தம்பி, தமிழ் இலக்கியத்தில் மதமும் மானுடமும், ப.122 123.

92. S. Jayaprakasau, "Aspects of Caste System in Tamil Nadu During the Imperial Chola Times" **Indian History Congress, 41st Session,** PP. 195-196.

93. திருக்குறிப்பு. 103.

94. 2:251:6.

95. 3: திருச்சாத்தமங்கை: 6:3-4, 7:திருத்தொண்டர்தொகை:6:1-2, 11:2, 8:7:7, 11:33:22:1, நமிநந்தி 4:2.

96. தொண்டரடி. திருமாலை.42, 2:251:6, 4:நமசிவாய:6:3-4 திருமங்கை. பெரிய 5:8:1:1. நம்மாழ், திருவாய் 4:6:9, 6: தனி. திருத்தாண்டகம், 9:1. திருமந்திரம். 2917:1- 2, 11:29:32, 11:32:17, 17:2-2.

97. K. Minakshi, **Administrative and Social life under the Pallavas,** P. 177.

98. 2:147:2:3, 2:192:10:3, 7:2:6:7: 1-2. குங்கிலிய. 5:2, திருஞான. 5:39:1. தடுத்தாட்.40. 3-4 திருமங்கை. பெரிய. 3:2:6:3-4, 3:5:6:3-4.

99. திருமந்திரம் 182:4:1.

100. திருமழிசை. திருச்சந்த. 109:4.

101. தொண்டரடி. திருமாலை. 42.

102. 1:81:1:1-2.

103. 5:398:1.

104. திருமந்திரம்.77, கண்ணப்பர்.109.

105. 1:139:7:3.

106. 1:75:6:3-4, 1:97:4, 3: திருப்பூந்தராய் : 4:1.

107. 1:83:9:2. திருமங்கை, பெரிய, 3:2:2:3 - 4. 11:33:5:1. சண்டேசுர:12.

108. நம்மாழ், திருமொழி, 8:9:8:1 - 3.

109. திருமழிசை, திருச்சந்த, 9:3 - 4.

110. நாச்சியார். திருமொழி, 2:10:3.

111. 1:41:5:3 - 4, 3: திருவீழமிழலை. 1 - 2, 11:26:20:19 - 20.

112. 1:6:2:1 1:6:3:1, 1:97:4:4, 2:191:2:3, 2:191:3:3, குங்கிலிய. 3:3 -4, 5:2, சண்டேசுர:3, திருஞான, 120 - 121, தடுத்தாட்.14:3, 31, திருநாளைப். 26.

113. 1:6:2:1, 1:6:3:1, 2:193:9:3, திருமந்திரம். 75.

114. 1:6:2:1, 1:81:1:1 - 2, 1:104:6:3 - - 4, 1:111:10:3 - 4 2:178:7:3 - 4, திருவா. 4:50 - 51, 11:12:25:3 4, சண்டேசுர:2, தடுத்தாட். 62:1, 77:1, தி.வா.அ.பு.45, திருமங்கை.பெரிய. 2:5:9:3 - 4, 6:7:7:3 - 4, 3:5:6:3 - 4, 3:8:4:3 - 4, 6:7:7:3 - 4, 7:6:2 - 3, தொண்டரடி, திருமாலை. 39:1.

115. 1:39:3 4, 1:75:6:3 - 4, 1:80:2:1 - 2, 1:132:9:3 - 4, 2:170:3 - 4, 2:197:3:9, 219:5:3, 2:225:1:3 - 4, 2:170:3 - 4, 2:197:3,4. 2:219:5:3 2:திருப்புகலி: 3:2-3, திருவீழி:5:3 - 4, 4:கோயில் திருநேரிசை:4:3-4, 5:123:3 - 4 திருமந்திரம்:86:1 - 2, 11:36:4 - 7, தடுத்தாட்.100:2 - 3, திருமங்கை.பெரிய. 3:2:2:3, 3:6:1:3, 3:8:4:3.4, 5:4:7:3 - 4, 6:7:7:3 - 4, நம்மாழ். திருமொழி 5:8:7:3, திருநாட்டு.31:2.

116. 1:48:5:4, 2:171:7:3.4, 3:திருச்சாத்தமங்கை, 5:3 - 4, தி.வா.அ.பு. 4 - 5, திருமங்கை.பெரிய.3:8:4:3 - 4.

117. திருமந்திரம். 75, 11:12:25:3 - 4, 11:36:4.7, குங்கிலிய. 2:4 சண்டேசுர.2, தி.வா.அ.பு.4 - 6.

118. திருமங்கை:பெரிய. 3:8: 10:3 - 4 6:7:7:3 - 4.

119. 1:6:1:1, 1:6:9:2, 1:39:3 4, 1:39:6:3 - 4, 1:41:5:3 - 4, 1:47:9:3, 1:48:5:4, 1:82:2 - 4, 2:140:6:2, 2:144:2:2, 2:161:7:3 - 4, 2:176:2:3, 3:திருச்சாத்தமங்கை.5:3:4. திருவா.31:9:3 - 4 9:3 - 4, தடுத்தாட் 13:2 91:3 - 4 திருவா.31:9:3 - 4, சாண்டேசுர:3 திருநகர.2:1, 18:1, திருநாட்டு:31:1.

120. சண்டேசுர:4.

121. திருநகர:11.

122. 7:1:15:5:3, சுந்தரர்.94:3, திருமங்கை.பெரிய.6:4;7:1 - 4, திருமழிசை, திருச்சந்த.109:4, பெரியாழ்.2:2:9:1, திருஞான.9, திருமந்திரம் 97:1.

123. 4:நமசிவாய.2.

124. சண்டேசுர.3, திருஞான.3:1 - 2, திருமூலர் 120 2:1, திருநாட்டு.31:1, நாச்சியார்.திருமொழி.6:4:2

125. 2:197:2:4, 3:திருவீழி.8:3 - 4, திருமங்கை.பெரிய.3:2:8 3 - 4, 3:8:8:4.

126. 2:209:5:3 - 4.

127. 1:6:3:1, சண்டேசுர.3, திருஞான.12:2:1. தடுத்தாட்.31.

128. 2:178:7:3 - 4, 2:219:6:3, 2:258:8:3 - 4.

129. திருஞான. 60

130. திருஞான. 1043, 1235 - 1242, தடுத்தாட் 13:1.29

131. மனு, 1:88, 4:2, 8:227.

132. 3:398:1.

133. தடுத்தாட் 14:3, 54, 11:12:25:3 - 4, சிறைப்புலி, 6:1, தி.வா.அ.பு.5.7, 2:140:6:2 2:193:9:2, 2:225:1:3 - 4, திருமந்திரம்77, தடுத்தாட்40[illegible]3 - 4, பூசலார் 13:3, தொண்டரடி திருமாலை 42, 1:41:5:3 - 4, 2:151:2:2 2:194:10:3, திருமந்திரம் 1637:2 - 3 1:41:5:4, 3:திருவீழி.5:3 - 4, திருநாளைப் 29:1, 1:72:5:2, 1:81:1:2,

1:85:11:1, 3,கோயில் 2:2 - 3, தடுத்தாட் 50:4, நம்மாழ்.திருமொழி.10:1:2:3. மதுரகவி. கண்ணிநுண்சிறுதாம்பு, 4:1 1:80:2:1 2 1:107:4:3, திருமங்கை.பெரிய.2:10:8:4 3.ப:2:2:3 - 4, 4ப:9:2:3 - 4, 2:10:8:4 3.ப:2:2:3 - 4, 4ப:9:2:3 - 4, 2:191:3:3 திவா.அ.பு.7. 7. திருப்புகலி.1:3, 7:2:16:1:3 தடுத்தாட்.49:2 11:33:1:1 திருமங்கை.பெரிய.3:6:1:3, 5ப.1:8:3 - 4 நம்மாழ்.திருமொழி 8:6:10:3.4, 1:42:48:5:4, 3.திருப்பஞ்சாக்கர:2:3 - 4, திருஞான.250:3, தடுத்தாட்.55:2, 1:97:1:4, 3.திருப்பூந்தாராய்3:4, திருஞான.250:3, தடுத்தாட்.55:2, 1:97:1:4 197:10:4, 3.திருப்பூந்தாராய் 3:4, திருஞான.539:1, திருமங்கை. பெரிய.6:5:1:4.

134. 2:191:2:3 திருஞான.123, 7:2:16:6:3, திருமங்கை.பெரிய.3:9:2:3 - 4, 5:1:8:3 - 4, 11:26:20:19 - 20

135. 11:36:4 - 7.

136. திருமங்கை.பெரிய. 3:5:6:3 - 4, 11:36:4:7, சண்டேசுர:2.

137. 2:209:5:1.

138. மனு.11:89.

139. R. Rajalakshmi, **Tamil Polity,** P.170.

140. திவா.அ.பு.8:4, தொண்டரடி, திருமாலை. 43, திருமங்கை.பெரிய.4:9.8:2-3, சண்டேசுர.2.

141. திருமந்திரம் 85,90, உருத்திர.2:1. 11:26:20:19:20.

142. G. H. Ghurye, **Caste and Race in India,** P.90.

143. திவா.அ.பு.6, திருஞான.237:1, தடுத்தாட்.77:1, திருமங்கை.பெரிய.3:9:2:3-4.

144. K.R. Hanumanthan, op.cit., P.136-137.

145. மனு.7:27.

146. ஆ. பாண்டுரங்கன், ''ஆழ்வார் காலப் பாண்டிநாட்டுச்சமுதாயம்'' *ஆராய்ச்சி, மலர்.4. இதழ்.2, சனவரி.74. ப. 165.*

147. தடுத்தாட். 40,45,52,54,62, தொண்டரடி திருமாலை 39.

148. தடுத்தாட். 52.

149. திருநீலகண்டர். 10,11.

150. 1:4:2:4. 1:6:1:1. 3.திருகோட்டாறு 1:1:3, திருவிசயமங்கை.2:3 - 4, 3:திருவீழி 11:1, 3:திருப்பூந்தாராய்:4:1, குலசேகரர்:10 ஆம் திருமொழி. 13 -15, திருமழிசை.திருச்சந்த.9:2 -4, பெரியாழ்.திருமொழி 1:1:3 - 4.

151. திருவா. 5:23:1 - 2, திருமங்கை.பெரிய. 9:9:7:2 - 4, 6:1:7:4, 8:4:2:1, 8:6:5:1 - 2, 2:5:4:2, 7:10:6:3, 11:12, 25:3 - 4.

152. திருநாளைப். 32,33

153. பார்க்க. இயல். 3

154. K. R. Hanumanthan. **Untouchability**, P 41

155. இரா. பூங்குன்றன, "வரலாற்றில் பறையர்". தமிழ்நாட்டு வரலாற்றுக் கருத்தரங்கு. ப. 14.

156. திருநாளைப். 13:1-2

157. Sharma, **Sudras in Ancient India**, P. 139

158. G.H. Ghurye, op.cit., P.79

159. மனு:4:51, 5:52

160. G.H. Ghurye, op.cit., P.79

161. பார்க்க: இதே இயலில் உள்ள "தாழ்ந்த சாதியினரின் சமுதாய இழிநிலைகள்" என்ற தலைப்பு

162. நா. சுப்பிரமணியன், சங்ககாலச் சமுதாயம், ப.95

163. தெ.பொ. மீனாட்சிசுந்தரம், இலக்கிய வரலாறு, ப.

164. Egon Ernest Bergal, **Social Stratification**, P.35

165. K.R. Hanumanthan, op.cit., pp. 7-8

166. Stephen Fucks, **At the Bottom of the Indian Society**, p.6

167. N. Subramanian, **Sangam Polity**, P.258

168. நமிநந்தி 24, 25

169. திருநாளைப். 23- 27

170. 11:38: 43:6

171. S.I.I. Vo.II, No.5. Vol.II. No.63. Vol. IV. 529 K. R. Hanumanthan, op,cit.,P.206.

கே.கே. பிள்ளை, தமிழகவரலாறு, மக்களும் பண்பாடும், ப. 313.

172. திருஞான. 134

173. 5:776:1- 2.

174 K. R. Hanumanthan, op. cit., p. 205.

175. 311 of. 1911. மேது. ராசுகுமார். "பிற்காலச் சோழர் காலத்தில் கோயில் பொருளாதாரமும் அதன் மேலாதிக்கமும்", தமிழ் ஆராய்ச்சியின் புதிய எல்லைகள், ப. 134.

176. மா. சுப்பிரமணியன், சோழர்கால அரசியல் கலாச்சார வரலாறு ப. 297.

177. 205 ப்தீ. திவை.சதாசிவப்பண்டாரத்தார், பிற்காலச்சோழர் வரலாறு, ப.575,

178. A.R.F 538 of 1918.

179 George W. Spencer, **Religious Networks and Royal Influence in Eleventh Century,** P.12.

180. திருஞான. 131, 132.

181. திருஞான. 134:2.

182. சோமாசி. 3:1-2.

183. இயற்பகை. 2:3-4.

184. சுழற்றறிவார். 17:4.

185. குலச்சிறை. 4.5.

186. 5: திருக்கருகாவூர், தனி, திருத்தாண்டகம்.2.

187. திருவா. 7:9:4-6.

188. திருமந்திரம். 2066:1.

189. 1:29:32.

190. திருமங்கை.பெரிய. 2:6:2:3-4.

191. தொண்டரடி. திருமாலை. 41, 42.

192. நம்மாழ். திருமொழி. 3:7:9.

193 2:177.6:1-2.

194. 2:251:6.

195. 4: திருப்புவனம்: 5:1- 2.

196. ம. கோயில் பெரியதாண்டகம், 8:2, 6: திருமழபாடி. திருத்தாண்டகம்,7:38, 6:நினைவு திருத்தாண்டகம், 9:7.

197. 11:6:8:3.

198. 11:4:3:3.

199. 11:9:43:1- 2.

200. 31:5:1- 2.

201. தொண்டரடி, திருமாலை 39.

202. 4: நமசிவயா:6:3-4.

203. திருமந்திரம்:2917:2.

204. நமிநந்தி 27.

205. மு. இராகவையங்கார், ஆழ்வார்கள் காலநிலை. ப. 244-245.

206. மு. இராகவையங்கார். மு.கூ.நூல், ப.71

207. திருமங்கை. பெரிய. 1:5:9:1- 2.

208. திருஞான. 111:1- 2.

209. 198 of 1925. K.A. Nilakanda Sastri, **The Imperial Cholas, Part.** Vol.II.P.353.

210. 5:96:2-2, 5:23:3:11, திருவா. 5:23:1- 2.

211. திருமந்திரம், 1628, 1830.

212. 11:9:10.

213. 5:3:98:1, 5:999:1.

214. திருமழிசை. நான்முகன்:6.

215. தொண்டரடி, திருமாலை. 43.

216. திருமந்திரம் 76, 77.

217. திருமந்திரம் 80- 83, 98.

218. 5:604.

219. நம்மாழ், திருமொழி:4:9:3.

220. 5:314.

221. 5:604.

222. திருமந்திரம் : 2074.

223 EGon Ernest Bergal, **Social Stratification,** P.49.

224 Rajendra Pande, op.cit.,P.8.

# இயல் – 4

# பொருளாதார ஏற்றத்தாழ்வுகள்

சமுதாயத்தில் மக்களிடையே தரப்பிரிவுகளைத் தோற்றுவிப்பதில் வகுப்புப் பிரிவுகளும் இன்றியமையாத பங்கு வகிக்கின்றன என்பதில் சமூகவியலாளர்களிடையே கருத்தொற்றுமை நிலவக் காணலாம். சமூக வகுப்பின் விளக்கங்கள், சமூக வகுப்புகளைத் தோற்றுவிப்பதில் பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் ஆற்றும் பங்கு, பக்தி இலக்கியம் காட்டும் சமதாயத்தில் காணப்பெற்ற பொருளாதார ஏற்றத் தாழ்வு நிலைகள், பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் தோன்றுதற்குரிய சூழல்கள், பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் அடிப்படையில் உயர்நிலையுற்றிருந்த பிரிவினர், தாழ்நிலையுற்றிருந்த பிரிவினர், அவர்களுடைய வாழ்க்கை நிலைகள், சமுதாயத்தில் காணப்பெற்ற பொருளாதார ஏற்றத்தாழ்வுகளை அகற்றிச் சமத்துவச் சமுதாயத்தை உருவாக்குவதற்கு முனைந்த நாயன்மார், ஆழ்வார்களின் சீர்த [illegible] பலவற்றை அறியும் நிலையில் இவ்வியல் அமைகின்றது.

## 4. 1. சமூக வகுப்புக்கள் – விளக்கம்

சமூக வகுப்புகள் என்றால் என்ன என்பது பற்றிச் சமூகவியலாளர்கள் அளிக்கும் விளக்கங்கள் சிலவற்றை முதற்கண் காணுதல் தகும். சமூக வகுப்புகள் (social classes) என்பன சமுதாயத்தில் சிறுபகுதி மக்கள் உயர்நிலை வகித்துக்கொண்டு முழு நன்மைகளைப் பெறுவதையும், பெரும்பகுதி மக்கள் தாழ்நிலை வகித்துக்கொண்டு மிகக் குறைந்த அளவு நன்மைகள் பெறுவதையும், இவ்விருநிலைகளுக்கும் இடைப்பட்ட நிலையில் வாழ்பவர்கள் இடைப்பட்ட அளவு நன்மைகள் பெறுவதையும் குறிப்பனவாய் அமைகின்றன.[1] சொத்துரிமை, பொருள்கள் வரும் வருவாய் போன்றனவற்றால் கிடைக்கப்பெறும் வாழ்க்கை வாய்ப்புக்களைப் (life chances) பகிர்ந்துகொள்ளும் மக்கட் கூட்டமே சமூக வகுப்பு எனப்படும்.[2] சமுதாயக் கொடைகளின் (social rewards) சமனற்ற பகிர்வின் வெளிப்பாடுகளாகச் சமூகவகுப்புக்கள் அமைகின்றன. மார்க்சு சமூகவகுப்புக்கள் வறுமை மற்றும் கருவிகள், இயந்திரங்கள், நிலங்கள் போன்ற உற்பத்திக்காரணிகள் ஆகியனவற்றால் சமூக வகுப்புக்கள் தீர்மானிக்கப்பெறும் என்ற கருத்தைக் கூறுகின்றார். மேலும் அவர் உற்பத்திக்காரணிகளை உரிமைகளாவும், தம் கட்டுப்பாட்டின் கீழும் கொண்டுள்ள பிரிவினர், அவற்றைப் பெற்றிராத வகுப்பினர் எனச் சமூகவகுப்புக்களை இரு நிலைகளில் பாகுபாடுகள் செய்தும் காட்டுகின்றார்.[3] மேக்ஸ்வெபர் என்ற சமூகவியல் அறிஞர் வகுப்புச் சமுதாயம் (class society) பொருளாதார வரிசைகளை அடிப்படையாகக்

கொண்டுள்ளது என்றும், வருவாயின் அளவிற்கேற்பவும், செல்வத்தின் அளவிற்கேற்பவும் மக்கள் தரப்படுத்தப்பெறுகின்றனர் என்றும் விரிவான விளக்கம் அளிக்கின்றார்.[4] சமுதாயத்திலுள்ள பொருளாதாரச் சலுகைகளை (economic privileges) அதிகமாகவோ, குறைவாகவோ பகிர்ந்து கொள்ளும் மக்களின் வரிசைகளைக் குறிப்பனவாகவும் சமூகவகுப்புக்களைக் கருதலாம்.[5] இவ்விளக்கங்களை நோக்கும்போது சமூகவகுப்புக்கள் பொருளாதார நிலையை அடிப்படையாகக் கொண்ட மக்கட் பிரிவினை எனப் பொதுவாகக் கூறலாம். அதாவது, உற்பத்தி அமைப்பில் மக்கள் வகிக்கும் இடம், உற்பத்திக் கருவிகள்பால் அவர்கள் கொண்டுள்ள உறவுமுறைகள், உழைப்பில் அவர்கள் செலுத்தும் பங்கு, வருமானத்தை அவர்கள் பெறும் முறை போன்றனவற்றால் ஒவ்வொரு மனிதனும் ஒவ்வொரு வர்க்கத் தட்டைச் சார்ந்தவனாகின்றான் எனக் கூறலாம். எனவேதான் வகுப்புக்களின் தோற்றத்திற்குப் பொருளாதாரக் காரணிகளைச் சமூகவியலாளர்கள் வலியுறுத்திக்காட்டுகின்றனர் எனலாம். சான்றாகச் சமூக அமைப்பு (social structure) மக்களின் பல்வேறு உறவுகளால் வரலாற்றுமுறையில் அமைகின்றது எனினும், அவ்வுறவுகளில் பொருளாதார உறவே சுட்டுதற்குரியது எனவும் [6] மக்களின் வாழ்க்கையைத் தீர்மானிப்பதில் பொருளாதாரக் காரணிகளும், சுற்றுப்புறச் சூழல்களும் பெரும்பங்காற்றுகின்றன எனவும் [7] கூறப்பெறும் கருத்துக்களைக் காட்டலாம். இனி, வகுப்புக்களின் தோற்றத்திற்கு மிக அடிப்படைக் காரணியாக அமைகின்ற பொருளாதார ஏற்றத்தாழ்வுகளின் தோற்ற நிலையைக் காண்போம்.

## 4. 2. பொருளாதார ஏற்றத்தாழ்வுகளின் தோற்றம்

வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் வாழ்ந்த மக்களின் வாழ்க்கை நிலையைப் புதைபொருள் ஆய்வாளர்களும், இனப்புவியியல் ஆய்வாளர்களும் ஆராய்ந்து கண்டுள்ளனர். வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் மக்கள் சிறுசிறு கூட்டங்களாக வாழ்ந்து வந்தனர். இயற்கையின் சீற்றம், கொடிய விலங்குகள், கொடிய நோய்கள் போன்றவற்றை எதிர்த்துப் போராடியே வாழவேண்டிய கட்டாய நிலையில் காணப்பெற்றனர். இதனால் அவர்கள் கூட்டாகச் சென்று, கூட்டாக உணவைப் பெற்று, கட்டாகப் பகிரிந்து உண்டனர். இம்முறையைக் கூட்டு உற்பத்திமுறை (Yajna Mode of Production) என்பர். இவ்வுற்பத்திமுறையைக் கொண்ட சமுதாயத்தில் மக்களிடையே ஏழை - பணக்காரன் என்ற வகுப்பு வேறுபாடுகள் காணப்பெறவில்லை. அனைவரும் சமமாகவே மதிக்கப்பெற்றனர். காலம் செல்லச்செல்ல அவர்கள் நெருப்பின் உபயோகத்தை அறிந்துகொண்டமையுடன், உலோகங்களாலான கருவிகளையும் செய்யக் கற்றுக்கொண்டனர். இந்நிலையிலும் உற்பத்தி செய்யப்பெற்றவை அனைத்தையும் தம் நேரடி நுகர்வுக்கே பயன்படுத்தினர். இதனால் அச்சமுதாயத்தில் தனியுரிமை (individual ownership), சுரண்டல் (exploitation) போன்றவை காணப்பெறவில்லை.

மக்களின் அறிவுத்திறமை காரணமாக உற்பத்திக் கருவிகளில் வளர்ச்சி ஏற்படவே உணவின்பொருட்டு அலைந்து நாடோடியாகத் திரிந்த மக்கள் ஓரிடத்தில்

நிலையாகத் தங்கி வாழ முற்பட்டனர். வேட்டையாடிய விலங்குகளின் கன்றுகளை வளர்க்க முற்பட்டனர். நாளடைவில் அவை பெருகிக் கன்றுகாலிகளின் கூட்டங்களாயின. அவற்றிற்காக முதலில் பயிர் செய்ய ஆரம்பித்தனர். பின்னர், விவசாய உற்பத்திப் பொருட்கள் மக்கட்கும் பயன்படலாயின. பயிர்செய்வதற்கும், கன்றுகாலிகளை மேய்ப்பதற்கும் நீர்வளமுள்ள இடங்களைத் தெரிவு செய்து நிலையாக வாழ ஆரம்பித்தனர். இச்சூழலிலும் கன்றுகாலிகள், மேய்ச்சல் நிலங்கள், விவசாய நிலங்கள் அனைத்தும் பொதுச்சொத்துக்களாகவே கருதப்பெற்றன.

உற்பத்திச்சக்திகளின் முன்னோக்கிய வளர்ச்சி சொத்துரிமைக்கு (ownership of property) வழி வகுத்துவிட்டது எனக் கருதுவர்.[8] உற்பத்திச் சக்திகளின் வளர்ச்சியினால் விவசாய உற்பத்தியிலிருந்து கால்நடை வளர்க்கும் பிரிவினரும், கைத்தொழில்களை மேற்கொண்ட பிரிவினரும் பிரிந்து சென்ற உழைப்புப்பிரிவினைகள் (divisions of labour) தோன்றின. விவசாய உற்பத்தி, கால்நடை வளர்ப்பு போன்றனவற்றில் உபரி உற்பத்தி அதிகரித்தது, இவ்வுபரி உற்பத்தியின் காரணமாகத் தனியார் உரிமை, தனியார் உழைப்பு, தனியார் மாற்று என்பன மதிக்கப்பெற்றன. தனியார் உரிமையினால் நாளடைவில் ஏற்றத்தாழ்வுகள் உருவாயின. புராதனச் சமுதாய அமைப்பு (primitive society) சிதைவுற்று நாகரிகச் சமுதாய அமைப்பு தோற்றம்பெற்றது. நாகரிகச் சமுதாய அமைப்பில் ஏழை பணக்காரன், ஆளுவோன்- ஆளப்பெறுவோன், ஆண்டான்- அடிமை, சுரண்டுவோன் சுரண்டப்பெறுவோன் என்ற பிரிவுகள் தோன்றலாயின. சமுதாய வளர்ச்சியின் பல்வேறு காலகட்டங்களில் அடிமையுடைமை அமைப்பு, நிலவுரிமை அமைப்பு, முதலாளித்துவ அமைப்பு போன்ற பல்வேறு சமுதாய அமைப்புக்கள் உருவாகவே பொருளாதார ஏற்றத்தாழ்வுகளும் வளர்ச்சியுற்றன. இவற்றால் புராதனச் சமுதாய அமைப்பின் சிதைவில் எழுந்த நாகரிகச் சமுதாய அமைப்பின் தோற்ற நிலையில்தான் சமுதாயத்தில் பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் தோற்றம் பெற்றன என்பது புலனாகின்றது.

## 4. 3. பக்தி இலக்கியத்தில் நாகரிகச் சமுதாய அமைப்பின் கூறுகள்

உலகச் சமுதாயங்களைப் போலவே பண்டைத் தமிழ்ச் சமுதாயமும் முதன்முதலில் புராதனச் சமுதாய அமைப்பைப் பெற்றிருந்து, பின்னர் நாகரிகச் சமுதாய அமைப்பின் கூறுகளைப் பெற்றுள்ளது எனக் கருதுவதற்கு வாய்ப்புகள் உள்ளன. பண்டைத் தமிழ்ச் சமுதாயத்தைப் பற்றி அறியத் துணைசெய்யும் கருத்துக் கருவூலமாகத் திகழும் சங்க இலக்கியத்திலேயே புராதனச் சமுதாய அமைப்பாகிய இனக்குழுச் சமுதாய அமைப்பின் எச்சக்கூறுகளையும், நாகரிகச் சமுதாய அமைப்பின் தோற்றக்கூறுகளையும் நாம் காண்கின்றோம். இவற்றின் அடிப்படையில் சங்ககாலச் சமுதாயம் புராதனச் சமுதாய அமைப்பு சிதைவுற்று, நாகரிகச் சமுதாய அமைப்புக்கு மாறுகின்ற காலகட்டத்தில் இருந்தது எனக் கருதுவர்.[9] மேலும், தமிழகம் சமனற்ற நிலப்பரப்புக்களைக் கொண்டுள்ளமையையும், அதனால் சமனற்ற வளர்ச்சி நிலைகளையும் (uneven development) சமனற்ற பகிர்வினையும் (unequal distribution) கொண்டுள்ளனவையும் சங்க இலக்கியம்

காட்டுகின்றது. இக்காரணங்களால் சங்காலம் முதலாகவே காணப்பெற்ற பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்திலும் இடம்பெற்றுள்ளமையை அறியமுடிகின்றது.

பக்தி இலக்கியத்துள் இடம்பெறும் இறைவன் எழுந்தருளியுள்ள இடங்களின் வருணனைகள், இறையடியார்கள் புனிதப்பயணம் மேற்கொண்ட இடங்களைப் பற்றிய வருணனைகள், உலகியல் நிலைகள், உலகியல் கட்டுக்களில் சிக்குண்டு தவிக்கும் உயிர்களின் நிலைகள், இறைவனின் போற்றற்கரிய பெருமைகள், இறைவனை உண்மை அன்புடன் வழிபடுவோர் அடையும் நன்மைகள், வணங்காதார் உறும் அல்லல்கள், அடியார்களின் வாழ்க்கை வரலாறுகள் போன்றனவற்றை விளக்குமிடங்களில் நாகரிகச் சமுதாய அமைப்பின் கூறுகளையும் அவற்றின் விளைவாகத் தோன்றிய பொருளாதார ஏற்றத்தாழ்வு நிலைகளையும் குறிப்பாகவும், வெளிப்படையாகவும் காட்டப்பெறுகின்றமையை உணரலாம்.

### 4. 5. 1. செல்வ வளம்

பக்தி இலக்கியத்துள் சீர் அமைந்த செல்வம் ஓங்கு ஊர், திருமகள் பரவும் ஊர், பூமியெல்லாம் புகழ் செல்வம் மல்கும் ஊர், சீர்மல்கும் செல்வம் நிறைந்த ஊர், செல்வர்கள் நிறைந்த ஊர் என ஊர்களைப் பல நிலைகளில் அவற்றின் செல்வவளம் வெளிப்படும் வண்ணம் அடைகள் கொடுத்துச் வருணிக்கின்றனர்.[10] மேலும், இவ்வூர்கள் விழாக்கள் நீங்காத சிறப்புடையனவாகவும்.[11] ஆடல் பாடல்கள் நீங்காத பெருமையுடையன வாகவும்.[12] காலைப்பொழுதில் காதற்பாடல்கள் நீங்காத களிப்பு நிறைந்தன வாகவும்.[13] பெண்கள் மகப்பாராட்டும் நிலையைக்கண்டு தேவர்கள் மனம் மகிழும் பேறு பெற்றனவாகவும்[14] காட்டப்பெறுகின்றன. இவை இவ்வூர்களின் செல்வ வளத்தையும், இவ்வூர்களில் வாழும் மக்களின் இன்ப வாழ்க்கையையும் வெளிப்படுத்துவனவாய் அமைகின்றன. இவ்வூர்களில் வானளாவ உயர்ந்த மாடங்கள் உள்ளன. அவை அணிமாடம், இரவைப் பகலாக்கிக் காட்டும் மணிகள் பதிக்கப்பெற்ற தூண்கள் நிறைந்த மாடம், கனகமாடம், காண்பினிய மாடம், கொடிநெடு மாடம், செல்வ நெடுமாடம், நிலையுயர் மாடம், பொன்மாடம், மச்சுக்களைக்கொண்ட மாடம், வண்ணச் சுதை மாடம் என்று அம்மாடங்களின் செல்வ வளம், உயரம், அழகு, காண்பாரைக் கவரும் ஆற்றல் போன்றவை வெளிப்படும் வண்ணம் வருணிக்கப்பெறுகின்றன.[15]

ஊரைச் சுற்றிலும் வளமிக்க சோலைகள் அமைந்து காணப்பெறுகின்றன. இச்சோலைகள் மணங்கமழ் சோலை, தெங்குசூழ் சோலை, தேன்நிறை சோலை, பூக்கள் நிறை சோலை எனச் சுட்டப்பெறுகின்றன.[16] ஊர்களில் ஆழமான, வளம் நிறைந்த, முத்து, பொன் முதலான விலை மதிப்பற்ற பொருட்களைச் சுமந்து வருகின்ற தண்புனல் நிறைந்த பாசித் தடாகங்கள் காட்சியளிக்கின்றன.[17]

ஊர் வளங்களின்போது வயல்வருணனைகளும் இடம் பெறுகின்றன. இவ்வயல்கள் எறிநீர்வயல், கருக்கொண்ட செந்நெல் நிறை வயல், கழுநீர் வயல்,

கொளுநீர்வயல், சீருறு வயல், செங்கயல்பாய்வயல், சேல் நிறை வயல், சேறடைந்த தண்வயல், திரையுலாவு வயல் என்றெல்லாம் புகழப்பெறுகின்றன.[18] இவ்வருணனைகள் சற்று மிகையாகவே அமைகின்றன எனத் தோன்றினும் அக்காலச் சமுதாயத்தின் இயற்கை வளத்தையும், செல்வச் செழிப்பையும் பறைசாற்றுவனவாகவும் காணப்பெறுகின்றன. இத்தகைய வளமிக்க, களனிவள மிகுதியே நகரம், அரசு, தனியுரிமை, உபரி உற்பத்தி போன்றனவற்றைக் கொண்ட நாகரிகச் சமுதாய அமைப்பின் தோற்றத்திற்குக் காரணமாக அமைந்தது என்பதைச் சமுதாய வரலாறுகள் காட்டுகின்றன. மேலும், மருதநில வேளாண்மை வளர்ச்சியே மக்களில் சிலர் பொருளாதார ஆதிக்கம் செலுத்தவும், பிறரைச் சுரண்டவும் வழிவகுத்துக் கொடுத்தது என்ற சிந்தனையும் இவண் சுட்டுதற்குரியது ஆகும்.

## 4. 3. 2. தனியார் உரிமை

பக்தி இலக்கியக் காலச் சமுதாயத்தில் தனியார் உரிமை நிலவியிருந்தது எனக் கருதமுடிகின்றது. பல்லவ மன்னர்கள் ஆட்சிக்காலத்தில் தரிசாகக் கிடந்த நிலங்கள் பண்படுத்தப்பெற்று விளைநிலங்களாக மாற்றப்பெற்றன. பல பகுதிகளில் ஏரிகளை வெட்டி நீர்ப்பாசன வசதிகள் செய்துகொடுத்தனர். இந்நிலங்களைத் தனிநபர்களும் உரிமையாகக் கொண்டிருந்தனர். நிலங்கள் தானமாகக் கொடுக்கபபெறும் முன்னால் அவற்றின் மீதுள்ள தனிநபர் உரிமைகள் மாற்றப்பெற்றமையை நரகுணம் செப்பேடுகள் செப்புகின்றன.[19] பாண்டிய மன்னரின் ஆட்சியிலும் நிலங்கள் நீர்நிலம், புன்செய்நிலம், நத்தம், தோட்டங்கள் என வகுக்கப்பெற்றிருந்தன. நீர்நிலம் என்பது நன்செய் நிலத்தைக்குறிக்கும். ஒவ்வொருவருக்கும் உரிமையான நிலங்கள் அளக்கப்பெற்று எல்லைக் கற்களும் இடப்பெற்றிருந்ன. நிலங்களை அளவுசெய்யும் அதிகாரிகள் நாடுவகை செய்வோர் என அழைக்கப்பெற்றனர். நிலங்களை அளக்கப்பயன்படுத்தப்பெற்ற கோல் சுந்தர பாண்டியன் கோல் எனப்பெற்றது. நிலங்களின் அளவைக் குறிப்பனவாக மா, குழி, வேலி போன்றவை அமைந்தன. ஒவ்வொரு நிலத்துக்கும் புள்ளடிக் கற்கள் என்ற எல்லைக் கற்கள் இடம்பெற்றன. பாண்டியர் காலத்தில் கிராமச்சபைகளில் உறுப்பினராவதற்கு உரிய தகுதிகளில் ஒன்றாக நிலவுரிமையும் அமைந்திருந்தது.[20] சோழப் பேரரசர்கள் காலத்திலும் நிலங்கள் தானமாகக் கொடுக்கும் முன்பு அவற்றின் மீதுள்ள தனிநபர் உரிமையாகிய குடி, மன்னனின் வரிவிதிப்பு உரிமையாகிய கோ, காணிக்கல் போன்ற அடையாளங்கள் ஆகியவை மாற்றப்பெற்றன. விவசாயத்தை அடிப்படைத் தொழிலாகக் கொண்டிருந்த கிராமங்களில் விலைக்கு வாங்குவதன் மூலமும் தனிநபர்கள் நிலவுரிமை பெற்றிருந்தனர். தனிநபர்கள் நிலத்தைப் பிறருக்குத் தானமாகக் கொடுக்கவோ, உரிமை மாற்றம்செய்யவோ உரிமைகள் பெற்றிருந்தனர் என்பதை வேலூர்ப்பாளையச் செப்பேடுகள் பகர்கின்றன. இராசேந்திர சோழனின் ஐந்தாம் ஆட்சியாண்டுத் திருவெற்றியூர்க் கல்வெட்டொன்று திருப்புவனம் பேரேரியிலிருந்து வாய்க்கால்கள் அமைக்கக் கூவம் என்ற இடத்தில் நிலங்கள் விற்கப்பெற்றமையைக் காட்டுகின்றன.[21]

பக்தி இலக்கியத்திலும் தனியார் உரிமை நிலவியமையைக் காட்டும் குறிப்புக்கள் உள்ளன. துறவிகள் நீக்கப்பெற வேண்டியனவற்றுள் ஒன்றாக உடைமைப்பொருட்கள் சுட்டப்பெறுகின்றன.[22] தனிமனிதனின் உடைமைகள் காவல்செய்து போற்றப்பெற்றன எனக் கருதமுடிகின்றது.[23] பெரியாழ்வார் தோட்டம், ஆத்தொழு, ஓடை, துடவை, கிணறு முதலியவற்றைக் திருமாலின் பொன்னடிகளின் கீழ் வளைப்பமாக வகுத்துக் கொண்டமையையும்.[24] தன்னையும் தன் உடைமைகளையும் சக்கரப் பொறி ஒற்றி ஆண்டுகொள்ளுமாறு இறைவனிடம் வேண்டுகின்றமையையும் [25] காண்கின்றோம். வீடுகளின் பின்னால் புழக்கடை. தோட்டம், வாவி முதலியன இடம்பெற்றிருந்தன.[26] வீட்டுத் தோட்டம், கிணறு, ஓடை, கன்றுமேய்ப்பல், உடைப்பு, உவரி, பொதுநிலங்கள், சிறுகாடுகள் போன்றவை கிராமங்களில் உள்ள வீடுகளின் பின்னால் காணப்பெற்றன என்பதைக் கூரம் செப்பேடுகளும் கூறுகின்றன.[27] ஊர் வருணனைகளில் காணியுடையோர் பற்றிய குறிப்பு உள்ளது.[28] ஏயர்கோன்கலிக்காமர் ஒடு நன்னீர் ஈராறுவேலி நிலங்களை உரிமையாகக் கொண்டிருந்தார்.[29] மூர்க்கநாயனாரும், குங்கிலியக்காலயநாயனாரும் காணியான நிலங்களை உடைமையாகப் பெற்றிருந்தனர்.[30] இவற்றால் தனியார் நில உரிமை சமுதாயத்தில் காணப்பெற்றமை புலனாகும்.

தனியார் உரிமை என்பது உலகம் முழுவதும் காணப்பெற்ற ஒரு சமூக, பொருளாதார முறை என்றும் இதன் தன்மைகள் நாட்டுக்குநாடு, சமுதாயத்திற்குச் சமுதாயம் வேறுபட்டுக் காணப்பெறும் என்றும் கருதப்பெறுகின்றது.[31] சொத்தும், தனியார் உரிமையும் மக்களை அடக்கி ஆள்வதற்கு உதவுகின்றன எனவும், பெரும்பாலான நகரங்களில் சொத்துரிமை சமத்துவமின்மையின் (inequality) அடையாளமாகத் திகழ்கின்றது எனவும் கூறப்பெறும் கருத்துக்கள்[32] இவண் எண்ணுதற்குரியன ஆகும். சமூக வகுப்புக்கள் வேலைப்பங்கீட்டின் காரணமாகவும், தனியார் சொத்துரிமையின் மூலமாகவும் தோற்றுவிக்கப்பெறும் வரலாற்று நிகழ்ச்சி என்றும், தனியார் உரிமையே சமூகத்தில் நிகழ்வுறும் அனைத்துக் கொடுமைகளுக்கும் காரணம் எனவும் மார்க்சு கருதுவார். ஜீன் ஜேக்குயிஸ் ரௌசியன் என்பார் எல்லா மனிதர்களும் சுதந்திரமாகவும், சமஉரிமையுடனும்தான் பிறக்கின்றனர். ஆனால் சமூகத் சமத்துவமின்மை (social inequality) சமுதாயத்தால்தான் தீர்மானிக்கப்பெறுகின்றது: அதன் அடிப்படைக் காரணங்களாக வேலைப்பங்கீடும் சொத்து உரிமையும் அமைகின்றன எனக் குறிப்பிடுகின்றார்.[33]

இவற்றால் பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் தோன்றுதற்குரிய நாகரிகச் சமுதாய அமைப்பின் கூறுகளாகிய செல்வ வளம் மிகுதியும் தனியார் உரிமையும் காணப்பெற்றமை விளங்குகின்றது. இவற்றின் அடிப்படையில் உருவான ஏற்றத்தாழ்வுகளில் பொருளாதார நிலையில் மேம்பட்ட மேட்டுக்குடியினர் என்றும். நலிவுற்ற பிரிவினர் என்றும் சமூகவகுப்புக்கள் நிலவியமையைப் பக்தி இலக்கியத்தின் வழிநின்று காண்போம்.

## 4. 4 பொருளாதார நிலையில் மேம்பட்டவர்கள்

### 4. 4. 1. அந்தணர்களின் பொருளாதார மேம்பாடு

பல்லவ மன்னர்கள் வடக்கிலிருந்து பெருமளவில் அந்தணர்களை வரவழைத்துக் குடியமர்த்தி. அவர்களுக்குப் பெருமளவில் நிலங்களையும், ஊர்களையும் பிரம்மதேயங்களாக அளித்துள்ளனர். கிராமநிலங்கள் இருபது சதுர்வேதி அந்தணர்களுக்குத் தேவகர்மா, நவகர்மா தொழில்களுக்காகத் தானமாக வழங்கப் பெற்றமையைக் கூரம் செப்பேடு பதிவுசெய்துள்ளது. [34] அந்தணர்களுக்குக் கொடையாகக் கொடுக்கப்பெற்ற நிலங்களுடன் கொடைகொடுத்த மன்னர்களின் பெயர்களும் இணைக்கப்பெற்றுச் சிம்மவிஷ்ணு சதுர்வேதிமங்கலம் என்றும் பரமேசுவர சதுர்வேதி மங்கலம் என்றும் அழைக்கப்பெற்றன. பொருளாதார வளமிக்க கிராமங்களையும், நிலங்களையும் தானமாகப் பெற்ற அந்தணர்கள் நிலக்கிழார்களாகத் திகழ்ந்தனர். [35] கிராமங்களின் பெரும்பகுதி நிலங்களும், அவற்றின் நிர்வாக உரிமையும் அந்தணர்களிடமே இருந்தன. பாண்டிய மன்னர்களும் அந்தணர்களுக்குக் கொடை கொடுத்துள்ளனர். மூன்றாம் இராசசிம்மப்பாண்டியன் தற்போது *சின்னமானூர் என்று வழங்கும் நற்செய்கைப் புத்தூர் என்ற ஊரைத் தானமாகக்* கொடுத்துள்ளான். நெடுஞ்சடையன் பராந்தகன் அரசியல் தலைவருள் ஒருவராகிய காரி என்பவன் தான் அமைத்த திருமால் கற்றளிக்கு அருகிலுள்ள ஓர் அந்தணனுக்கு அக்கிரகாரம் அமைத்துக் கொடுத்துள்ளான். [36] பாண்டிய மன்னர்கள் அளித்த பிரம்மதேயங்கள் பட்டவிருத்தி எனப்பட்டன. சோழப்பேரரசர்களும் அந்தணர்களை வரவழைத்து ஆதரித்துள்ளனர். எண்ணாயிரம், திருப்புவனி, திருமுக்கூடல், திருவொற்றியூர் போன்ற இடங்களில் வடமொழிக் கல்லூரிகளை நிறுவி, அவண் பயில்வோருக்கு உணவு, உடை, உறையுள் முதலியன அளிக்கப்பெற்றன. [37] பராந்தகசோழன் பிரம்மதேயத் தானங்கள் அளித்துள்ளமையைச் சின்னமானூர்ச் செப்பேடுகள் உணர்த்துகின்றன. [38] அந்தணர்களுக்கு அளிக்கப்பெற்ற நிலங்களுக்கு வரிவிலக்கும் அளிக்கப்பெற்றது. மக்களும் அந்தணர்களுக்குப் பொன்னையும், பொருளையும், நிலங்களையும் தானமாகக் கொடுத்தனர். இவ்வாறு மன்னர்களாலும், மன்னர்களின் அரசியல் அதிகாரிகளாலும், மக்களாலும் அளிக்கப்பெற்ற கொடைகளால் வைதிக அந்தணர்கள் பொருளாதார நிலையில் மேம்பட்ட மேட்டுக்குடியினராகப் பெரும்பாலும் விளங்கினர்.

திருமூலர் சிவகுருவின் பெருமைகளை விதந்தோதுமிடத்து, ஆரியர்க்கு ஆயிரம் அகரங்கள் அமைத்துக் கொடுப்பதைவிடச் சிவனடியார்க்குப் பகலுணவு கொடுத்தல் மேலான பலனைத் தரும் எனவும், கோடி அந்தணர்க்கு உணவு கொடுப்பதைவிடச் சிவனடியாருக்கு ஒரு பிடி சோறு கொடுப்பது சிறப்பானது எனவும் அறிவுரை கூறுகின்றார். [40] சமுதாயத்தில் மன்னர்களும் பிறரும் அந்தணர்களுக்குத் தங்கும் இடங்களையும், உணவையும் கொடையாகக் கொடுத்துள்ள நிலையைச் சுட்டுவனவாய் இவை அமைகின்றன எனலாம். அந்தணர்கள் மேகங்கள் தவழும், வானளாவ உயர்ந்த மாளிகைகளிலும்

வாழ்ந்துள்ளனர் எனக் கருதமுடிகின்றது.[41] திருச்செங்குன்றூரில் உழவுத் தொழிலால் அமையும் நிறைந்த வாழ்க்கை வளங்களைக்கொண்டு மறைவழி நடந்துவரும் தூய குடிமைத்திறத்தில் தலைசிறந்து விளங்கிய மறையோதும் மரபில் வந்த மறையோர்களின் சிறப்புக்களைச் சேக்கிழார் பெருமான் வருணிக்கின்றார்.[42] அந்தணர்களின் பொருளாதார மேம்பாட்டு நிலையை வெளிப்படுத்தும்வகையில் அவர்கள் செல்வமுடையார், எண்ணில் மிகு செல்வத்து மறையோர், வறுமை முதலான பகைகளை வென்ற மறையாளர், செல்வ நான்மறையோர், சேடடைந்தசெல்வர், செல்வம் மல்கும் மறையோர், திருவமர்ந்தசேடர், திருமேவும் செல்வர், பசியால் இடுக்கண் உறார், வறுமைகெடவந்த மறையாளர் என்றெல்லாம் அடைகள் கொடுத்துச் சிறப்பிக்கப்பெறுகின்றனர் எனக் கொள்ளலாம்.[43] பொருளாதார நிலையில் மேம்பாடுற்றிருந்த அந்தணர்கள் ஏனையோர்க்கும் தானங்கள் கொடுத்துள்ளனர். இதனால் இவர்கள் நந்தாவண்கை நான்மறையாளர், வருவிருந்து ஓம்புவோர் என்றெல்லாம் புகழப்பெறுகின்றனர்.[44]

## 4. 4. 2. வணிகர்களின் பொருளாதார மேம்பாடு

சிலப்பதிகாரச் சமுதாயத்தில பெருவணிகர்கள பொருளாதாரநிலையில் மேம்பட்டுக் காணப்பெற்றமையைப் போன்றே பக்தி இலக்கியக் காலச் சமுதாயத்திலும் பெருவணிகர்கள் உயர்வகுப்பினராக வாழ்ந்துள்ளனர். இயற்பகை நாயனார் பெருங்குடிவணிகர் வகுப்பில் தோன்றியவராக அவர் வரலாறு காட்டுகின்றது.[45] வணிகர் குலத்தில் பிறந்த காரைக்கால் அம்மையாரின் திருமணத்தின்போது அவர் பெற்றோர்கள் மணமகனுக்கு வரம்பில்தனம் கொடுத்துள்ளனர். அம்மையாருக்குக் கணவராக வாய்ந்தவரும் செல்வ நிலையில் மேம்பாடுற்றவராகவே உள்ளார்.[46] காரைக்கால் அம்மையாரைக்காண அவர் சிவிகைமேல் ஏறிவரும் உயர் செல்வநிலையில் வாழ்ந்துள்ளார். சிவநேசர் என்ற வணிகர் பெருநிதி முதலான பெரும்செல்வங்களின் எல்லையற்ற வளத்தைப் பெற்றவராகவும், குபேரனைவிட மேம்பட்ட செல்வம் படைத்தவராகவும் காட்டப்பெறுகின்றுகின்றார்.[49] இவற்றால் பெருங்குடிவணிகர்கள் வரம்பற்ற வளங்களைப் பெற்றிருந்த உயர் வகுப்பினராகத் திகழ்ந்தமை தெரிகின்றது.

## 4. 4. 3. வேளாளர்களின் பொருளாதார மேம்பாடு

அக்காலச் சமுதாயத்தில் வேளாளர்களிலும் விவசாய நிலங்களை உரிமையாகக் கொண்டிருந்த மேட்டுக்குடி வேளாளர்கள் என்றும், நிலவுரிமையற்ற, விவசாயத் தொழில்களைச் செய்துவந்த வேளார்கள் என்றும் இரு பிரிவினர் காணப்பெற்றனர் என்று கருதுவதற்குரிய குறிப்புக்கள் பக்தி இலக்கியத்துள் இடம் பெறுகின்றன. வேளாண்மையில் தலையாயவர் என்று அரிவாட்டாய நாயனாரும், நீடுறும் பெரும் செல்வப்பரப்பும், நெருங்கு செல்வமும் நீடித்துப் பெருக்கெடுத்துக் குபேரன் எனக் கொள்ளும் அளவுக்கு வாழ்பவர் என இளையான்குடிமாற நாயனாரும், ஏர்த்தொழிலால் நிறைந்த பெரும் உழவுத் தொழிலால் வரும் உணவைப் பெற்றுச் செந்நெல் மலைக்குவட்டால்

கோயில்தோறும் அடியார்க்கு அழுதுசெய்துவரும் வளம்பெற்றவர் எனக் கோட்புலி நாயனாரும், விளங்கும் வண்மையின் மிக்க வேளாண் தலைமைக்குடி முதல்வர் என முனையடுவார் நாயனாரும் அறிமுகப்படுத்தப் பெறுகின்றனர்.[50] இவற்றைப் பார்க்கும்போது இவ்வேளாண்பெருமக்கள் பெருமளவு நிலங்களை உரிமையாகக் கொண்டிருந்த உழுவித்துண்ணும் வேளாளர்களே என்பது தெளிவாகின்றது. ஊர் வருணனைகளின் போதும் வேளாளர்களின் பொருளாதார மேம்பாட்டுநிலை வெளிப்படுத்தப்பெறுகின்றது.

சூடு அடிக்கும் நெல்லரிகள் பரப்பிய பண்ணைகளில் காணப்பெறும் வைக்கோல் போர்களின் மீது மேகங்கள் ஏறிநிற்கின்றமையும்,[51] திருமுனைப்பாடி நகரிலுள்ள வட ல்களின் பக்கங்களில் அமைந்த நெற்கூடுகளின்மேல் மேகங்கள் தவழ்ந்து செல்கின்றமையும்,[52] வயல்களிலிருந்தும் பசிய தோட்டநிலங்களிலிருந்தும் வரும் வளங்கள் நீடியமையால் மிகுந்த செல்வங்களை உடையனவாகி, மாடங்கள் நிறைந்த மருதநிலப்பகுதிகளில் மேகங்கள் நெருங்கி நிற்கின்றமையும்,[53] வயல்கள் சூழப்பெற்ற நெற்கூடுகள் நிறைந்த வீடுகள் காணப்பெற்றமையும்[54] வருணிக்கப்பெறுகின்றன. இவ்வருணனைப் பகுதிகள் வேளாளர்களில் ஒரு பிரிவினர் பெரும் நிலப்பரப்புக்களைக் கொண்ட வளமிக்க வயல்களை உடையவர்களாகவும், அவர்கள் இவ்வயல்களில் உழைக்கும் நிலமற்ற விவசாய உழைப்பாளர்களின் உபரி உழைப்பில் கிடைத்த உபரிப் பொருள்களாகிய நெல்லைச் சேமித்துவைப்பதற்குரிய நெற்கூடுகள் நிறைந்த பெரிய இல்லங்களைக் கொண்டிருந்தமையையும் காட்டுகின்றன. இத்தகைய பொருளாதார மேம்பாட்டினால் நிலவுரிமை உடைய இவ்வேளாளர்கள் உயர்வகுப்பினராகக் கருதப்பெற்று, உயர்சமுதாய நிலையையும் அடைந்திருந்தனர் எனலாம். இரண்டாம் குலோத்துங்க சோழனின் ஆட்சிக்காலத்தில் வேளாளர் ஒருவர் மரணதண்டனை விதிக்கத்தக்க கொடிய செயல் ஒன்றினைச் செய்தபிறகும் மன்னன் வேளாளருக்கு மரணதண்டனை விதித்தல் தகாதென ஆணையிட்ட கல்வெட்டுச்செய்தி [55] பொருளாதார மேம்பாடுற்றிருந்த வேளாளர்களின் செல்வாக்கைக் காட்டுவதாக அமைகிறது. இதனால்தான் சமூகத்தின் முதுகெலும்பாகத் திகழ்ந்த நிலவுரிமையுடைய வேளாளர்கள் பெருங்குடியினர் எனக் கருதப்பெற்றனர்.[56] இவர்களை இடைக்கால ஐரோப்பிய நிலப்பிரபுக்களுடன் ஒப்பிட்டுக் காண்பர். சோழ மன்னர்கள் காலத்தில் நிலவுரிமையுடைய வேளாளர்கள் திருவாய்க் கேள்வியாகவும், அமைச்சராகவும், கோயில் நிருவாகத்தினராகவும் பணியாற்றியுள்ளனர். [57]

## 4. 5. பொருளாதார மேம்பாடுற்ற உயர்வகுப்பினரின் வாழ்க்கைநிலை

பொருளாதார நிலையில் மேம்பாடுற்றிருந்த மேட்டுக்குடியினரின் வாழ்க்கைநிலையையும் பக்தி இலக்கியம் பல நிலைகளில் காட்டுகின்றது. இவர்கள் நிதிகள் பலவற்றையுடைய சேமவைப்புக்களைப் பெற்றிருந்தனர்.[58] செல்வம் நிறைந்த இருக்கைகளில் களித்து வாழ்ந்தனர்.[59] மலர்பரப்பிய படுக்கைகளைப் பயன்படுத்தினர்.[60] சிலர் பல அடுக்குகளைக் கொண்ட மாளிகைகளின் நிலாமுற்றத்திலும். ஒளிமண்டபத்திலும். யானைக்கொம்புகளால் செய்யப்பெற்ற

அரியாக் கட்டிலின்மேல் ஐவகைப் படுக்கைகளை விரித்து, அவற்றின்மேல் மெல்லிய ஆடைகளைப் போர்த்தி, பெண்களின் செம்மையான உடம்பைக் கால்களால், தடவி, பெற்கலசங்களில் மங்கையர் ஊற்றிக் கொடுக்கும் மதுவை மகிழ்வுடன் அருந்தி, நறுமணப்பொருட்களைப் பூசி, உயர்வகை அணிகலன்களை அணிந்து இன்ப வாழ்க்கை வாழ்ந்துள்ளனர்.[61] தாம் ஈட்டிய பொருள்களைச் சிற்றின்ப நாட்டங்களுக்காகவும் சிலர் செலவிட்டுள்ளனர்.[62] சமையல் செய்வோரிடம் பலவகையான உணவுகளைச் சமைக்குமாறு கட்டளையிட்டு, வேண்டியவண்ணம் உண்டு சிலர் மகிழ்ந்துள்ளனர்.[63]

பெண்கள் ஆடல்பாடல்களிலும், விளையாட்டுக்களிலும் ஈடுபட்டுக் பொழுதுபோக்கியுள்ளனர்.[64] வாசமிக்க, மென்மையான கூந்தலையுடைய மகளிர் ஊசலின்மேல் இனிதமர்ந்து இசைபாடிக் களித்துள்ளனர்.[65] செல்வர்களில் சிலர் பல்வேறு விருதுகளைப் பெற்று உயர்வடைந்துள்ளனர்.[66] சமூகமதிப்பை கருதிப்பலர் தம்மைச் சூழ்ந்துவர வெளியில் சென்றுள்ளனர்.[67] பிறரால் புகழ்ந்து பாராட்டப்பெறும் நிலையிலும், சிறப்புச் செய்யப்பெறும் நிலையிலும் வாழ்ந்துள்ளனர்.[68] செல்வர்களின் பொருளாதார மேம்பாட்டைக் கண்ணுற்ற வறியவர்கள் அவர்களை அட்டைகள் போல் ஒட்டி வாழ்ந்துள்ளனர்.[69]

செல்வர்கள் தாம்பெற்ற செல்வத்தின் பயனைப் பிறருக்குக் கொடைகொடுத்துத் துய்த்துவந்துள்ளனர். பக்தி இலக்கியம் கொடைகொடுத்து மகிழ்ந்த பண்பாளர்களை அறவாளர்கள், ஈத்துவக்கும் இன்பம் நிறைந்தவர்கள், கரவில் வண்கையாளர்கள், கற்றவர்க்கும், சுவிவாணர்க்கும் கரவாது வழங்குவோர், கொடையில் ஓவார். கொடையுறு வண்கையாளர், புலவர் வறுமை நீக்குவோர் எனக் குறிப்பிடுகின்றது.[70] பொருளாதார நிலையில் தாழ்வுற்றிருந்த வகுப்பினரைக் களிப்புடன் வரவேற்றுள்ளனர்.[71] சமுதாயத்தில் ஒவ்வோர் ஊரிலும் உணவின் பொருட்டு ஆக்கும் உலைகளும், ஊட்டுப்புரைகளும், இடம்பெற்றிருந்தன.[72] இவற்றால் பொருளாதார மேம்பாடுற்றிருந்த உயர்வகுப்பினர் இன்பம் நிறைந்த, பொழுதுபோக்குமிக்க, சமூக மதிப்புமிகுந்த, பலராலும் போற்றிப் புகழத்தக்க வாழ்க்கை வாழ்ந்துள்ளனர் எனத் தோன்றுகின்றது.

எனினும், உயர்வகுப்பினராகிய செல்வர்களில் சிலர் தாம்பெற்றிருந்த செல்வ வளத்தின் காரணமாக இறுமாப்புக்கொண்டு சமூகவகுப்பில் தாழ்நிலையுற்றிருந்த வறியவர்களை மதிக்காமலும், அவர்களுடைய நிலைக்கு இரங்காமலும் கொடை கொடுத்துப் பாதுகாக்காமலும் வாழ்ந்துள்ளனர் எனக் கருதுவதற்குரிய குறிப்புக்களையும் காணமுடிகின்றது. இத்தகைய செல்வர்கள் சமுதாயத்தில் வாழ்ந்துள்ளமையைக் கண்ணுற்றதால்தான் நம்மாழ்வார் இம் மண்ணுலகில் செல்வர் இப்போது இல்லை எனக் கூறினாரோ[73] என்று எண்ணத்தோன்றுகின்றது. இவர்கள் வறியவர்க்குச் சிறிதும் ஈயாது வாழ்ந்துள்ளனர்.[74] செல்வர்கள் மனம் மகிழும்வண்ணம் பலவாறு புகழ்ந்துபாடினும் அவர்களைப் பாதுகாக்கத் தயங்கினர்.[75] எள்விழுந்த இடத்தைத்தேடிப் பார்க்கும் இயல்பினராகவும், ஈயின் தலையளவு கூட ஈயாத தன்மையராகவும் விளங்கினர்.[76] மனத்துள் இரக்க உணர்வு என்பது சிறிதும் இல்லாதவர்களாக

வாழ்ந்துள்ளனர்.[77] வறுமைக் கொடுமையினால் தம்மை நாடிவந்த கற்றோரையும் பெரியோரையும் அவர்களுடைய உயர்வுகளைச் சிறிதும் எண்ணிப்பாராது கால்கடுக்க நிற்கவைத்துக் கால்களின் வலிமையைக் கெடுத்துள்ளனர். வள்ளல்களைப் போல நடிக்கும் இவர்களைப் புகழ்ந்து எவ்வளவுதான் போற்றினும் ஒருசிறிதும் கொடுக்காது வாழ்நாட்களை வீணாகக் கழித்துள்ளனர்.[78] கொடுத்தற்குரிய காலம் அறிந்து கொடுக்கும் இயல்பு இவர்களிடம் காணப்பெறவில்லை.[79] அயலவர் பொருள்களைத் தமதாக்கிக் கொண்டு இன்ப வாழ்க்கை வாழ்ந்துள்ளனர்.[80] பெரியோர்களையும், சான்றோர்களையும் ஆணையிட்டு அழைத்துள்ளனர். பிறமக்கள் பசியால் துடித்துக்கொண்டிருக்கும் வேளையில் தாம் மட்டும் அளவிலாது உண்டுகொண்டிருந்தனர். பிறரிடம் இல்லாத செல்வவளம் தம்மிடம் உள்ளது என ஆணவம் கொண்டிருந்தனர்.[81]

இவ்வாறு உலகியல் நிலைகளை உரைக்கும் போக்கில் பக்தி இலக்கியம் வறியவர்களிடம் அன்பு பாராட்டாது, பொருள் ஒன்றை மட்டுமே குறிக்கோளாகக் கொண்டு வாழும் செல்வர்களின் கொடைப்பண்பின்மையையும் பொருளாதார ஆதிக்கநிலையையும் வறிவர்களைச் சுரண்டும் நிலையையும் கழிவிரக்கம் தோன்றப் புலப்படுத்தும் போக்கைக் காண்கின்றோம். இக்கொடிய நிலைகளைக் கண்டு மனம் புழுங்கிய பக்தி இலக்கியச் சான்றோர்கள் வறியவர்களிடத்து இரக்கம் கொள்ளாது செல்வத்தை ஈட்டிவைத்துக்கொண்டு ஈயாத செல்வர்களைப் பார்த்துக் கரவலாளர்கள், நாணம் அற்றவர்கள், மங்குவார், கொடுக்காத பொய்மையாளர், இறப்பில் கடியர், ஈவு இரக்கமற்ற கன்மனக்கயவர், உள்ளம் பெரியரல்லாச் சிறுமானுடர், நீசர், செல்வத்தை மதிக்கும் மானுடர் எனச் சாடியும் இகழ்ந்தும் தம் வெறுப்புணர்ச்சியை உமிழ்கின்றனர் 82 எனலாம்.

## 4. 6. பொருளாதாரநிலையில் நலிவடைந்த பிரிவினர்

நாகரிகச் சமுதாய அமைப்பின் தோற்றம், தமிழகத்தின் சமனற்ற வளர்ச்சி வாய்ப்பு, மன்னர்களிடையே நிகழ்ந்த போர்கள் போன்றவற்றால் சமுதாயத்தில் பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் பெருகின. இவையெல்லாம் போதாதென இயற்கையின் சீற்றத்தால் மழையின்றிப் பஞ்சங்கள் ஏற்பட நாடு பெரும் வறட்சிநிலைக்குள்ளானது. பல்லவர், பாண்டியர், சோழ மன்னர்களின் ஆட்சிக் காலங்களின்போது பஞ்சங்கள் தோன்றியமையை வரலாறுகளும் கல்வெட்டுக்களும் காட்டுகின்றன. இராசசிம்மப் பல்லவமன்னனின் அரசவைப் புலவர் அக்காலச் சமுதாயத்தில் உருவான கொடும்பஞ்சத்தின் விளைவாகக் குடும்பப்பெண்கள் துன்புறுத்தப்பெற்றமையையும், கருவூலங்கள் காலியாயினமையையும், வீட்டுரிமையாளர்கள் வீடுகளைவிட்டுத் துரத்தப்பெற்றமையையும், வேள்விகளும், வேள்விச்சாலைகளும், தோட்டங்களும் அழிக்கப்பெற்றமையையும் .விளக்கிச் செல்கின்றார்.[83] இக்கொடிய பஞ்சமானது தொடர்ந்து மூன்று ஆண்டுகள் நிலவியது என வரலாற்றறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். கி.பி.689 இல் காஞ்சிமாநகருக்கு வருகைதந்த வஜ்ரபோதி என்ற, பௌத்தத்துறவியிடம் இரண்டாம் நரசிம்மபோதவர்மன் இப்பஞ்சத்தைப் போக்கியருளுமாறு

வேண்டியதாகவும், அவர் மன்னனின் வேண்டுகோளுக்கிணங்கிப் பெருமழையைப் பெய்வித்துப் பஞ்சத்தைப் போக்கியதாகவும் ஒரு மரபுவழிச்செய்தி உள்ளது.[84] பல்லவ மன்னர்கள் தம் ஆட்சிக்காலத்தில் நாட்டில் ஏற்படும் பஞ்சங்களின் கோரப்பிடியிலிருந்து மக்களைக் காக்கும்பொருட்டு அறுவடைக் காலங்களில் தானியங்களைப் பெருமளவில் சேகரித்து, பஞ்சவாரியம் ஒன்றை நிறுவியும் உள்ளனர்.

*செழியன்வேந்தனின் ஆட்சிக்காலத்தில் சீன நாட்டிலிருந்து* இந்தியாவிற்குப் பயணம் மேற்கொண்ட யுவான்சுவாங் என்பவர் புல்லவருடைய தலைநகரமாகிய காஞ்சிக்கும் வருகைபுரிந்துள்ளார். அவர் அங்கிருந்து பாண்டிய நாட்டிற்குப் புறப்படுங்கால் அங்குள்ளவர்கள் அவரிடம் பாண்டிய நாட்டில் பஞ்சம் மிகுந்துள்ளது என அறிவித்துள்ளமையைத் தன் பயணக் குறிப்பில் குறித்துள்ளார்.[85] சோழமன்னர்கள் ஆட்சிக்காலத்திலும் தமிழகத்தில் பஞ்சங்கள் நிகழ்ந்துள்ளமையைக் கல்வெட்டுக்கள் காட்டுகின்றன.[86] இவற்றால் இப்பஞ்சங்கள் காரணமாகவும் மக்களிடையே வறுமை நிலை காணப்பெற்றிருக்கலாம் என எண்ணத் தோன்றுகின்றது.

பக்தி இலக்கியமும் மழை மறந்தமையால் தமிழகத்தில் ஏற்பட்டுள்ள பஞ்சங்களை எடுத்து இயம்புகின்றது. அப்பர்பெருமான் மனமே, பன்னெடுங்காலம் வெதும்பி, கடல்நீர் சுருங்கி, மழைதான் மறுக்கினும் பஞ்சம் உண்டு என்று கலங்குகின்றாய்: இறைவன் நம்மைக் காப்பான்: எனவே அஞ்சவேண்டியதில்லை என மனத்தைப்பார்த்து ஆறுதல் கூறுகின்றார்.[87] சுந்தரர் வையம் முழுவதும் மழை மறந்து வயல்கள் நீரின்றி வறண்டுகிடக்கும் காட்சியைக் காட்டுகின்றார்.[88] *ஏயர்கோன்கலிக்காமர் காலத்தில்* திருப்பெருமங்கலத்தில் மழை பொய்த்தமையால் உருவான பஞ்சத்தையும்.[89] கோட்புலி நாயனார் காலத்தில் சோழநாட்டில் ஏற்பட்டபஞ்சத்தையும் [90] பெரியபுராணம் சுட்டுகின்றது. அப்பர் வரலாற்றைக் காணும்போது சுந்தரர் திருவீழிமிழலைக்கு வந்தக்கால் மழையின்றி, அங்குள்ள ஆறுகளில் வெள்ளம் வற்றி, உயிர்கள் வருந்தியமையும், கோயில்களில் வழிபாடுகள் தடைபட்டமையும் புலனாகின்றன.[91] புகழ்த்துணைநாயனார் வரலாறு செருவில்லிப்புத்தூரில் பஞ்சமும், பசியும் தலைவிரித்தாடியமையைச் சுட்டுகின்றது.[92] இக்கொடிய பஞ்சங்களில் சிக்குண்டு தவிக்கும் வறியவர்களைக் காக்க வேண்டி இறையருளாளர்கள் இறைவனிடம் உள்ளம் கசிந்துருகிநின்று பாடிக்காசு பெற்றமையைக் காண்கின்றோம்.[93] மேலும், இறைவன் உண்மை அன்புடைய அருளாளர்களின் வேண்டுதல்களுக்கு இணங்கி அவர்கள் வேண்டியவாறே மழைபெய்வித்தும், நெற்குவியல்களைக் கொடுத்தும் அருள்புரிந்துள்ளான் என்ற வரலாறுகளும் [94] இவண் சுட்டுதற்குரியன ஆகும். இத்தகைய சூழல்களில் பொருளாதார வளம் நிறைந்தவர்கள் எவ்விதப் பாதிப்பும் இன்றி வாழ்தலும், வறுமையுற்ற வறியவர்கள் அல்லல் நிறைந்த அவல வாழ்க்கை வாழ்தலும் உலகியல் நிகழ்வே ஆகும். இவ்வியற்கை நிலையையும் பக்தி இலக்கியம் காட்டுகின்றது.

## 1. 7. வறியவர்களின் வாழ்க்கை நிலை

இனி, பொருளாதார நிலையில் நலிவுற்றிருந்த வறியவர்களின் வாழ்க்கைநிலையைப் பக்தி இலக்கியம் சுட்டுமாற்றைக் காணலாம்.

### 1. 7. 1. வறுமை நிலை

பக்தி இலக்கியத்துள் அறிவுரைகள் கூறப்பெறுமிடத்தும், உலகியில் துன்பங்களை மொழியுமிடத்தும், அடியார்களின் வரலாறுகள் விளக்கப்பெறுமிடத்தும் சமுதாயத்தில் வறியவர்கள் அடைந்திருந்த வறுமைநிலை இயம்பப்பெறுகின்றது. பூசலார் நாயனார் இறைவனுக்குக் கோயில் எடுக்க உள்ளத்தில் பெருவேட்கைக் கொண்டிருந்தபோதிலும் தம் எண்ணத்தை நிறைவேற்றக் கையில் பொருள் இல்லாத வறுமை நிலையால் மிகவும் வருந்துகின்றார்.[95] உலகியல் துன்பங்களில் ஒன்றாகக் கையில் காணம் ஏதுமின்றி வருந்தும் வறுமைநிலையும் சுட்டப்பெறுகின்றது.[96] வறுமையின் காரணமாக வறியவர்கள் உண்ண உணவின்றிப் பசியால் வாடியுள்ளனர்.[97] ஒரு வேளை உணவுக்காக ஒவ்வொரு இடமாக அலைந்துதிரிந்தனர்.[98] அரிவாட்டாய நாயனாரின் மனைவி உணவுசமைக்கத் தானியம் இல்லாத நிலையில் அடகுக்கீரையை வேகவைத்து உணவு படைக்கின்றார்.[99] உலகியல் இன்பங்களில் நாட்டம்கொண்டு, பொறிகளின் வழி மனத்தைச் செலுத்தி, இறைவனை உள்ளாது அல்லலுறும் மக்களுடைய நிலையைப் பெருவிளைச்சலைத் தருதற்கு ஏதுவாகிய வித்தினையே உணவாக்கி உண்பவரின் நிலையுடன் ஒப்புமைப்படுத்திக் கூறுமாற்றால் [100] சமுதாயத்தில் சிலர் வறுமைகாரணமாகவும் வித்தினை உணவாக்கி உண்ணும் அவல நிலைக்கு உள்ளாயிருந்தமை புலப்படுகின்றது. இதற்கேற்ப இறை அன்பருக்கு அமுது படைக்க வேறு வழியின்றி விதைத்த விதையைக் கொட்டும் மழையில் சென்று அரித்துக்கொண்டுவந்து உணவாக்கிய நாயனாரையும் நாம் காண்கின்றோம்.

வறியயவர்கள் உடுக்க நல்ல ஆடையின்றி அல்லலுற்றனர் எனக் கருதமுடிகின்றது.[101] திருக்குறிப்புத் தொண்டரிடத்து இறைவன் மாற்றுருவம்கொண்டு வறியவர் வடிவில் வந்ததாகக் கூறுமிடத்து அவர் கந்தல் ஆடை அணிந்துவருகின்றமை காட்டப்பெறுவதைச் சான்றாகக் கொள்ளலாம் மக்கள் பசி, பட்டினி ஆகியவற்றைக் கண்டு அஞ்சினர்.[102] வறுமை நிறைந்த அவல வாழ்க்கை நடத்தினர்.[103] இவ்வறியவர்களின் வாழ்க்கை கிழிந்த புடவையைப் போன்றது என்றும், இவர்கள் சமுதாயத்தில் மக்கள் என்ற பெயரில் வாழ்ந்தாலும் உண்மையில் எலும்பினைத் தோலால் மூடிய உடம்பைக் கொண்டவர்களே என்றும் திருமூலர் வறியவர்களின் உண்மை வாழக்கை நிலையைப் படம்பிடித்துக் காட்டுகின்றார்.[104] வறியவர்கள் தம் வறுமைக் கொடுமையினால் பிறப்பையே வெறுத்தனர்.[105] புகழ்த்துணைநாயனார் வறுமைக்கொடுமையினால் உடம்பு உணங்கிக் காட்சியளித்துள்ளார்[106]

வறியவர்கள் வறுமை நிலையின் காரணமாகக் கொடை கொடுத்து மகிழ முடியாத இயலாமை நிறைந்த வாழ்க்கை வாழ்ந்துள்ளனர். இறைவனிடம் கொடை கொடுக்க இயலாத நிலைமையை நினைத்து இறையடியார்கள் வருந்துமாற்றையும் காண்கின்றோம்.[107]

### 4. 7. 2. இழிந்த வாழ்க்கை நிலை

வறியவர்கள் தம் வறுமைநிலையைப் போக்க வேண்டிச் செல்வவளம் படைத்த உயர்வகுப்பினரின் கடைவாயிலின்கண் நின்று பொருள்வேண்டி இரந்துள்ளனர். உலக இன்பங்களை விட்டுவிட வேண்டும் என்றும், இறைவனை உண்மை அன்புடன் வழிபட்டுப் பேரின்பப் பெருநிலையை எய்த வேண்டும் என்றும் அறிவுரைகூறுமிடங்களில் இந்நிலை வெளிப்படுத்தப்பெறுகின்றது.[108] செல்வர்களைக் கண்டு பொருள்பெற வறியர்கள் மிக நீண்ட தூரம் நடந்துசென்றுள்ளனர்.[109] பொருளாதார வளம் படைத்தவர்கள் என்ற காரணத்தினால் செல்வர்கள் மிடுக்கற்றவர்களாயினும் அவர்களை வீமனே, விறல் விசயனே என்றும், கொடுக்காதவர்களாயினும் பாரிவள்ளலே என்றும், நரைவிழுந்து முதிர்ந்த முதியவராயினும், வரைபோன்ற பருத்த தோள்களையுடையவரே என்றும், வஞ்சக மனம் உடையவராயினும், குற்றங்கள் மிகுந்தவராயினும், பாவச்செயல்கள் புரிபவராயினும் சாதுவே என்றும், நலமிலாதவராயினும் நல்லவரே என்றும், குலமில்லாதவரேயாயினும் குலவரே என்றும், நோய்களால் துன்புற்று மெலிந்தவராயினும் தடந்தோளரே என்றும், கல்வி அறிவு இல்லாதவராயினும் அறிவில் மிகுந்தவர்களே என்றும், முயன்று எச்செயலையும் செய்யும் வல்லமை அற்றவராயினும் முயன்று செய்வதில் வல்லவரே என்றும் உண்மைகளை மறைத்துப் பொய்யாகப் புகழ்ந்து அவர்கள் மனம் மகிழும்வண்ணம் போற்றியுள்ளனர்.[110] இவை புலவர்களின் இழிநிலையைக் காட்டுவனவாக அமைகின்றனவாயினும், அக்காலச் சமுதாயத்தில் வாழ்ந்த வறியவர்களின் இழிநிலையையும் காட்டுவனவாகவே அமைகின்றன எனக் கருதலாம். செல்வர்களைப் பணிந்தும், புகழ்ந்தும், இரந்தும் வறியவர்கள் வேண்டியபோதிலும்கூட அவர்கள் வறியவர்களை நீண்டநேரம் காத்திருக்கச் செய்து இறுதியில் நாளை வம்மின் என்று பொருள்கொடாது இழிவுபடுத்தி அனுப்பியுள்ளனர்.[111] வறியவர்கள் செல்வர்களால் எள்ளி நகையாடப்பெறும் இழிநிலைக்கும் ஆளாயிருந்தனர்.[112] வறியவர்களாயின் உறவினர்களும் அன்பு மாறி அயலவர்களைப் போல் மதித்துள்ளனர்.[113] வறிவயர்களுடன் இணங்குவதற்கு மறுத்துள்ளனர்.[114] இடுப்பில் ஆடையை உடுக்கும் சாதாரண ஆசையின்பாற்பட்டு இறைவன் பெயரை மறந்து மானுடரின் பெயரை இடுகின்றனரே எனத் திருமங்கையாழ்வார் மனம் புழுங்குதலும் வறியவர் நிலையையே காட்டுகின்றது.[115]

### 4. 7. 3. வட்டிக்குக் கடன்வாங்கும் நிலை

பொருளாதார மேம்பாடுற்ற செல்வர்களாகிய உயர்வகுப்பினருள் சிலர் இறையுணர்வு இன்றி வறியவர்கள் வறுமையின் காரணமாகத் தம்மிடம் கடன்வாங்கும்போது சிறிது பொருளைக் கொடுத்துவிட்டு அதற்குப் பதிலாகக்

கடும் வட்டி வாங்கி, வஞ்சனையால் வறியவர்களைச் சுரண்டி வாழ்ந்துள்ளனர் இவ்வாறு கடும் வட்டி வாங்குவோர்களைத் திருமூலர் பாதகர் என்றும், அழகுபெறாதவர் என்றும், பயன் உணராதவர் என்றும் வன்மையாகக் கண்டிக்கின்றார். மனிதர்கள் குறிப்பாக வறியவர்கள் அனைத்து வல்லமைகளையும் படைத்த இறைவனை மனதார எண்ணி வணங்கி இவ்வுலகத் துன்பங்களிலிருந்து விடுதலை பெற்று உய்வதற்குப் பதிலாக அழிந்துபோகின்ற நிலையற்ற யாக்கையைப் பேணும் சிற்றவாவினால் பிறரிடம் சென்று கடனுக்காக நெல்லைப்பெற்று உணவாக்கி, உண்டு மகிழ்வதிலேயே தம் மனத்தைச் செலுத்துகின்றனரே என்று அவர் கழிவிரக்கம் கொள்கின்றார்.[116] இளையான் குடிமாறநாயனாரும் வறுமையின் காரணமாகக் கடன் வாங்குகின்றார்.[117] சமுதாயத்தில் வறுமை நிலையை அடைந்தவர்கள் வாழவேண்டி வணிகர்கள், செல்வர்கள் போன்ற உயர்வகுப்பினரிடமும் கோயில்களிலும், உள்ளாட்சி மன்ற அமைப்புக்களிலும் கடன்வாங்கியமைக்குக் கல்வெட்டுச் செய்திகளும் காணப்பெறுகின்றன.[118]

### 4. 7. 4. கூலிக்காசு உழைக்கும் நிலை

ஆனாயநாயனார் செல்வம் இழந்து வறுமை நிலையை அடைந்தபோது எண்ணெய் விற்கும் தொழிலை மேற்கொண்டு, அல்வுழைப்பால் கிடைக்கும் ஊதியத்தால் வாழ்க்கை நடத்தி வந்தார். இத்தொழிலில் கிடைத்த ஊதியம் நிறைவளிக்காமையால் செக்கில் பாண்டில் வரும் எருதுய்த்து வாழ்ந்தார்.[119] கணம்புல்லநாயனார் வறுமை காரணமாகத் தம் காய முயற்சியால் புல்லை அறுத்து, அதை விலைக்கு விற்று, அதனால் கிடைத்த வருவாயைக் கொண்டு கோயில்களில் விளக்கெரிக்கும் இறைப்பணியை மேற்கொண்டார்.[120] அக்காலத்தில் ஆடவரும் பெண்டிருமாகிய இருபாலரும் வாழ்க்கை நடத்த வேண்டி நாட்கூலி பெற்றுப் பணிபுரிந்தமையையும், ஓர் ஆடவன் நாள்ஒன்றுக்குப் பெறும் ஊதியத்தில் அரைப்பகுதி ஊதியத்தை ஒரு பெண் பெற்றமையையும் கல்வெட்டுக்கள் காட்டுகின்றன.[121]

### 4. 7. 5. பொருட்களை ஒற்றிவைக்கும் நிலை

கபிலதேவநாயனார் சிவபெருமான் உறையும் திருத்தலங்களுள் ஒன்றாகிய ஒற்றியூரைப் பற்றிக் குறிப்பிடும்போது, இறைவனிடம் அடியோமைத் தாங்கவோ, ஆடை அணிவதற்கோ, ஏழ்மையில் தாழ்வடைந்த குடும்பத்தை உயர்வடையச் செய்வதற்கோ இவற்றுள் எக்காரணத்துக்காக நின் ஊரை ஒற்றியூர் ஆக்கினாய் என வினவுகின்றார். இக்கருத்தை நோக்கும்போது சமுதாயத்தில் வறுமைநிலையில் வாடியவர்கள் கையில் பொருளில்லாதபோது தம் தேவைகளை நிறைவேற்றிக்கொள்ளவும், வறுமையில் வாடும் தம் குடும்ப உறுப்பினர்களைக் காக்கவும் தம்முடைய பொருட்களை ஒற்றிவைத்துப் பணம்பெறும் நிலை இருந்துள்ளது என்ற சமுதாயச் சிந்தனை இவண் வெளிப்படுவதாகக்

கொள்ளலாம். தந்திவர்ம பல்லவ மன்னனுடைய சாசனம் ஒன்றில் திருவல்லிக்கேணிக் கோயில் அதிகாரிகள் (குலக்கிழார்) கருமாச்சேரியிலுள்ள கோயிலுக்குச் சொந்தமான நிலங்களில் ஒரு பகுதியை ஒற்றிவைத்துள்ளமையைத் "திருவல்லிக்கேணி குலங்கிழார்கள் கருமாச்சேரிப்புலம் ஒற்றியிட்ம்" என்று காணப்பெறுதலும்[122] இவன் சுட்டுதற்குரியது ஆகும்.

### 4. 7. 6. பொருட்களை விற்கும் நிலை

இளையான்குடிமாறநாயனாரின் உள்ளத்தின் அடித்தளத்தில் ஆழமாக வேரூன்றி நின்ற இறைவனுக்குத் திருக்கோயில் எடுக்கும் எண்ணம் தன் வறுமைநிலை காரணமாக நிறைவேறாது போகவே, தன் வீட்டிலுள்ள உரிமையான விற்கத்தக்க பொருட்களையெல்லாம் விற்கின்றார்.[123] கணம்புல்ல நாயனாரும் கோயிலில் விளக்கெரிக்கப் பணமின்றி வறுமையில் வாடியபோது தன்வீட்டிலுள்ள பொருட்களையெல்லாம் விற்றுவிடுகின்றார்.[124] இறைப்பணிகளிலும், அடியார்களுக்குத் தொண்டு செய்யும் பணிகளிலும் தம்மை ஈடுபடுத்திய கலிய நாயனாரும், மூர்க்கநாயனாரும் குங்கிலயக்கலய நாயனாரும் வறுமையை நீக்கவேண்டித் தம் வீட்டிலுள்ள பொருட்களையெல்லாம் விற்றமையை அவர்களுடைய வரலாறுகள் காட்டுகின்றன.[125] கணநாத நாயனார் தம் வீட்டிலுள்ள பொருட்களை எல்லாம் விற்றபின்னர், இறுதியில் வேறுவழியின்றித் தன் மனைவியையே விற்க முயன்ற அவல நிலையையும் காண்கின்றோம்.[126] குங்கிலியக்கலயநாயனார் மனைக்கு விளக்காகிய தன் மனைவியின் மங்கல நாணையே விற்றல் [127] வறுமைக் கொடுமையின் உச்சநிலையைக் காட்டுவதாகக் கொள்ளலாம். வறியவர்கள் முற்கூறிய வறுமைக் கொடுமைகளுக்கு ஆளாயினமையைக் கண்ணுற்ற பக்தி இலக்கியச் சான்றோர்கள் வறுமைக்கொடுமையை இருள்கொள்ளும் துன்பம் என்றும், அல்லல் நல்குரவு என்றும், நல்குரவாகிய தொல்விடம் என்றும் பலவாறு பழிக்கின்றனர்.[128]

### 4. 7. 7. நிலமற்ற வேளாளர்களின் நிலை

நிலவுரிமையுடைய உயர்வகுப்பினராகிய வேளாளர் பொருளாதார உயர்நிலையை அடைந்திருந்தமையைப் போன்று நிலமற்ற விவசாய உழைப்பாளர்கள் சமூகவகுப்பில் தாழ்நிலையுற்றிருந்தனர் எனக் கருதமுடிகின்றது. பக்தி இலக்கியத்துள் இவர்கள் அரிவார், உழவர், கடைஞர், களமர், கைவினை மாக்கள், மள்ளர், வினைஞர் என்று குறிப்பிடப் பெறுகின்றனர். இப்பெயர்களே இவர்கள் விவசாய வேலைகளைச் செய்யும் உழைக்கும் பிரிவினர் என்ற கருத்தை நிலைநாட்டுவனவாய் அமைகின்றன. இவர்கள் மணல்மேட்டில் கால்வாய்கள் அமைத்துக் கொண்டு வயல்களுக்கு நீர்பாய்ச்சுதல். [129] பகடுகளைக்கொண்டு சேறு தோன்றும்வண்ணம் வயல்களை உழுதல் [130], விதை விதைத்தல், [131] நாற்றுநடுதல். [132] விளைந்த நெற்கதிர்களை அறுத்தல்,[133] களை கட்டும் பருவம் வந்துற்றமையை அறிவித்தல்,[134] விளைந்த நெற்கதிர்களை நிலவுரிமையாளர்களின் களங்களுக்குச் சுமந்து சென்று போர் அடித்தல்,[135] பின்னர் வைக்கோலைப் பிரித்தெடுத்து நெல்லைத் தூற்றுதல். [136] கரும்பு

அடுதல்.[137] காவிரியின் புதுநீர்ப் பெருக்கைக் கண்டு ஆரவாரித்தல்.[138] விவசாயத்தொழில்களை மேற்கொள்ளும்போது கூலிபெறுதல் [140] போன்றவை சுட்டப்பெறுகின்றன. இவர்கள் உழைத்து உழைத்துத் தம் மணிக்கட்டின் வலிமையால் வெல்லக்கட்டிகளை உடைக்கும் அளவுக்கு வலிமைமிக்க மோட்டு உழவர்களாகக் காணப்பெறுகின்றனர்.

விவசாய வேலைகளில் ஈடுபட்ட உழைக்கும் வகுப்பினராகிய பெண்கள் உழத்தியர், கடைசியர், கடைசிமார், புலைச்சியர் எனச் சுட்டப்பெறுகின்றனர். இவர்கள் நாற்றைப் பறித்தல்,[141] நாற்றுநடுதல்,[142] களைபறித்தல் [143] முதலான விவசாய வேலைகளில் ஈடுபட்டனர். காலையில் சேவல்கள் எழுப்பிய குரலைக் கேட்டதும் எழுந்து வயல் வேலைகளைச் செய்யப் புறப்பட்டுவிடுகின்றனர்.[144] வயல்வேலைகளுக்குக் கூட்டமாகச் செல்கின்றனர்.[145] வயல்களில் வேலை செய்யும் போது உழைப்பின் கடுமையும், உடல் சோர்வும் நீங்குவதற்காக மருதப்பாடல்களைப் பாடியும், ஓய்வு நேரத்தில் விளையாடியும் களிக்கின்றனர்.[146] வயல் வரப்புக்களில் சிறுசோறு சமைத்து மகிழ்கின்றனர்.[147] நெற்கதிர்களைப் பறித்துத் தலையில் சூடுகின்றனர்.[148] இவர்கள் கொய்சுகம்வைத்து மேலாடை அணிந்துள்ளனர்.[149] மருதமர நிழல்களில் குழந்தைகளைச் சிறு தோலின்மேல் கிடத்தித் தூங்கவைக்கின்றனர்.[150] கள்ளுண்டு களியாட்டயர்கின்றனர்.[151] காஞ்சிமர நிழலில் நின்று பாடிக்கொண்டே தம் உழைப்பிற்குரிய கூலியாகப் பெற்ற நெல்லைக் குத்துகின்றனர்.[152] இவற்றால் இவர்களது தினசரி வாழ்க்கை மருத நிலத்துடனும், வயல் வேலைகளுடனும் தொடர்புடையதாகவும் எளிமை நிறைந்ததாகவும் காணப்பெற்றமை புலனாகின்றது. இவர்கள் புன்புலைமகளிர், புலைச்சியர் எனச் சுட்டப்பெறுமாற்றால் சமுதாயத்தில் தாழ்ந்த வகுப்பினராகக் கருதப்பெற்றிருந்தனர் என எண்ணமுடிகின்றது.

திருநாளைப்போவார் நாயனார் புராணத்தில் ஆதனூர் வளம் வருணிக்கப்பெறுமிடத்து விவசாய உழைப்பாளர்களாகிய வேளாளர்களின் வாழ்க்கைமுறை படம்பிடித்துக் காட்டப்பெறுகின்றது. இவர்கள் வயல்களின் பக்கங்களில் உள்ள வரப்புக்களின் ஓரத்தில் சுற்றம் தழுவுதலை விரும்பிய உரிமைத் தொழிலாளர்களாகிய உழவர் மக்களின் கிளைகளுடன் நெருங்கிவாழும் வாழ்க்கை நிலையை நாம் அறிகின்றோம்.[154] சுரைக்கொடி படர்ந்த கூரைகளையுடைய, புல்லால் வேயப்பெற்ற சிற்றில்களை உறைவிடங்களாகக் கொண்டிருந்தனர்.[155] இவர்கள் மருதநிலப்பரப்பிலுள்ள சோலைகளிலும் வாழ்க்கை நடத்தியுள்ளனர்.[156] சிறுவர்கள் இரும்பாலான காப்புக்களையும், சதங்கைகளையும் அணிந்துள்ளனர்.[157] வார்களால் இறுக்கிக் கட்டப்பெற்ற பறைகளைத் தொங்கவிட்டுள்ளனர். இப்பறைகளை முழக்கி உழவுத்தொழில்களை மேற்கொள்ளுதற்குரிய காலங்களை உணர்த்துகின்றனர்.[158] இவ்வருணனைகளால் நிலமற்ற விவசாய உழைப்பாளர்கள் நிலவுரிமை உடைய உயர்வகுப்பினராகிய வேளாளர்கள் வாழும் இடங்களுக்கு அப்பால், மருதநில வயல் வரப்புக்களின் நடுவிலும், மருதநிலச் சோலைகளிலும் பொருளாதார வளமற்ற எளிய வாழ்க்கை

வாழ்ந்துள்ளமை தெரியவருகின்றது. இவர்கள் நகரங்களுக்கு வெளியே வெகுதொலைவில் வாழ்க்கை நடத்தியமையால் நகர்ப்புற முன்னேற்றங்கள் இவர்களுடைய வாழ்க்கையில் எப்பாதிப்புக்களையும் ஏற்படுத்தவில்லை எனத் தோன்றுகின்றது.

நிலவுரிமையற்ற வேளாளர்கள் நிலவுரிமை உடைய வேளாளர்களின் நிலங்களில் குத்தகை அடிப்படையிலும் பயிர் செய்துள்ளனர். இதனால் இவர்கள் நில உரிமையாளர்களுக்கு மானியங்கள் கொடுத்ததுடன், அரசுக்கு வரியாக ஆறில் ஒரு பகுதியைச் செலுத்தியும் உள்ளனர்.[159] இவ்வாறு செலுத்தப்பெற்ற வரியைப் பல்லவர்காலப் பட்டயங்கள் "புறவுப்பொன்" எனக் குறிப்பிடுகின்றன நீலமாணிக்கம்பிள்ளை என்ற நிலவுரிமையாளருக்குத் தேவதான நிலங்களைப் பயிரிட்ட குத்தகைக்காரர்கள் குறிப்பிட்ட அளவு நெல் கொடுப்பதற்கு இசைவு அளித்துள்ளமையையும், அவ்வாறு கொடுக்க தவறினால் உடலைவருத்தி அம்மானியத்தை ஈடு செய்து கொள்ளலாம் என்று இசைவு தெரிவித்தமையையும் கல்வெட்டுச் செய்தி ஒன்று கூறுகின்றது.[160]

தனிநபருடைய நிலங்களை மட்டுமன்றிச் கோயில் நிலங்களைப் பயிரிட்டோரும் கோயில்களுக்குப் பண்டவாடகையும் தேவையான பொருட்களையும் மானியமாகக் கொடுத்துள்ளனர்.[161] இவ்வாறு உழைக்கும் விவசாய வகுப்பினர் உழைத்து உற்பத்தி செய்த பொருள்களில் ஒரு பகுதியை மானியமாக அல்லது வரியாகக் கொடுக்கவேண்டிய கட்டாய நிலையில் உற்பத்திப் பொருட்களை விற்கும் கட்டாயச் சூழல் உருவாயிற்று. இக்காரணத்தால் இயற்கைப் பொருளாதாரம் (natural economy) சீர்குலைந்து ஏழை, பணக்காரன் என்ற வகுப்புப்பிரிவுகள் மேலும் பெருகலாயின. சமூக அளவீட்டில் (social-scale) தாழ்நிலை வகுப்பினராக விவசாய உழைப்பாளர்கள் காணப்பெற்றனர். எனவேதான் இவ்வேளாளர்களை அரை அடிமைநிலையில் (semi-slavery) வாழ்ந்தவர்கள் எனக் கருதுவர்.[162]

பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் சாதிமுறையைத் தீர்மானிப்பதற்குரிய காரணிகளில் ஒன்றாகக் கருதப்பெறுவதற்கு ஏற்ப இவ்வேளாளர்கள் சாதிக்கப்பாற்பட்ட தாழ்நிலையினராகக் கருதப்பெற்றிருந்தனர் எனவும் தோன்றுகின்றது. இவ்விவசாய உழைப்பாளர்களைத் தண்டிவர்மனின் உத்தரமேரூர்க் கல்வெட்டு "அகம்படி உடையான்" எனக் குறிப்பிடுகின்றது.[164]

## 4. 7. 8. பிற உழைப்பாளர்களின் நிலை

விவசாய உழைப்பாளர்கள் மட்டுமன்றிப் பிற தொழில்களை மேற்கொண்டவர்களும் தம் வருவாயில் ஆறில் ஒரு பங்கை வரியாகச் செலுத்தியுள்ளனர். அக்காலத்தில் நூற்றுக்கும் மேற்பட்ட வரிகள் விதிக்கப்பெற்றமையை வரலாற்றறிஞர்கள் சுட்டுவர். கள் இறக்குவோர், ஆயர்கள், குயவர், தட்டார், வண்ணார், ஆடைவிற்பவர், பட்டுக்காரர், தரகுத்தொழில் செய்பவர், மீனவர் போன்ற தொழிலாளர்களுக்கும வரிகள் விதிக்கபபெற்றன பாண்டிய மன்னர் ஆட்சிக்காலத்தில் ஊர்ச்சபையார் வரியை வாங்கித்

தலைநகரிலுள்ள அரசு பொருள் நிலையத்துக்கு அனுப்பிவைத்தனர். நிலங்களுக்குரிய வரிகள் மட்டுமன்றிச் செக்கிறை, தட்டார்ப்பாட்டம், தறியிறை, இடைவரி, பாடிவரி, உல்கு போன்றனவும் காணப்பெற்றன.[165] இவை உழைக்கும் பிரிவினர் தம் உழைப்புக்குக்கூட வரிசெலுத்திய நிலையைக் காட்டுகின்றன முதலாம் குலோத்துங்க சோழனின் மூன்றாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு மாடுகளுக்கும், எருமைகளுக்கும் வரி விதிக்கப்பெற்றமையை எதிர்த்து மக்கள் ஒன்றுகூடி இவற்றிற்கு இனி வரி செலுத்துவதில்லை என முடிவெடுத்தமையைக் காட்டுகின்றது.[166]

இவற்றால் பொருளாதார ஏற்றத்தாழ்வுகளில் தாழ்நிலையுற்றிருந்த உழைக்கும் பிரிவினரும், வறியவர்களும் மேற்கொண்ட வாழ்க்கை நிலை விளங்குகின்றன.

## 4. 8. பொருளைப் பெற மக்கள் முயலுதல்

சமுதாயத்தில் பல்வேறு நிலைகளில் ஆதிக்கம் செலுத்திய பொருளைப் பெறுவதற்கு மக்கள் முயன்ற நிலையையும் பக்தி இலக்கியம் காட்டுகின்றது. உலகியல் துன்பங்களை எடுத்துக் கூறுமிடத்து மக்கள் பொருளைப் பெறுவதற்காக ஓடி எய்த்து வருந்துதல், தாழ்வெனும் தன்மையைச் சிந்தியாது மானத்தையும் கைவிட்டுப் பொருள் ஒன்றில் மட்டுமே மனத்தைச் செலுத்தல் போன்றவை சுட்டப்பெறுகின்றன.[167] சமுதாயத்தில் ஏற்றத்தாழ்வுகளை உருவாக்கி, மக்களின் ஒற்றுமை உணர்வைச் சிதைவுபடுத்தும் பொருளின் தன்மைகளைக் கண்ணுற்ற பக்தி இலக்கியச் சான்றோர்கள் இப்பொருளை "வீழ்பொருள்" என்றும் "கேடுறு பொருள்" என்றும் பழித்துரைப்பதுடன் பொருளின் மேல்கொண்டுள்ள பற்றினை விட்டுவிடுமாறும் மக்களுக்கு அறிவுரைகளும் கூறுகின்றனர்.[169]

## 4. 9. பொருளாதார ஏற்றத்தாழ்வுகளின் காரணம்

பொருளாதார ஏற்றத்தாழ்வுகளின் காரணங்களாகத் தமிழகத்தின் சமனற்ற நிலப்பரப்பு, அதன் விளைவுகளாகிய சமனற்ற வளர்ச்சி வாய்ப்பு, சமனற்ற பகிர்வு, புராதனச் சமுதாய அமைப்பின் சிதைவு, நாகரிகச் சமுதாய அமைப்பின் தோற்றம், போர்கள், இயற்கைச் சீற்றத்தின் விளைவுகளாகிய பஞ்சம், வறுமை, வெள்ளப்பெருக்கு, அரசு விதிக்கும் வரிச்சுமை முதலான புவியியல், சமுதாய, அரசியல், பொருளாதாரச் சூழல்கள் அமைகின்றமையை அறிகின்றோம். ஆனால், சமய நோக்கில் முற்பிறப்பில் செய்த வினைகளின் பயன் அல்லது ஊழ்வினைப்பயன் அல்லது விதி என்ற நம்பிக்கையே பொருளாதார ஏற்றத்தாழ்வுகளின் காரணமாகக் கற்பிக்கப்பெறுகின்றது. சங்க காலம் முதலாகவே இந்நம்பிக்கை சமுதாயத்தில் காணப்பெற்றது என்பதற்குரிய இலக்கியச் சான்றுகள் கிடைக்கின்றன. பக்தி இலக்கியத்திலும் இக்குறிப்பு உள்ளது திருமூலர் முற்பிறப்பில் ஒருவன் செய்த நல்வினைகளுக்கும் தீயவினைகளுக்கும் ஏற்ப இறைவன் இன்ப, துன்பங்களைக்கொடுக்கின்றான என்ற சிந்தனையை வெளிப்படுத்து கினறார் [169] ஆனால் சமூகவியல பொருளியல நோக்கு

மிகுந்துவரும் இக்காலத்தில் பொருளாதார ஏற்றத்தாழ்வுகளின் காரணமாக வினைப்பயன் கூறப்பெறினும், இவற்றுக்குரிய உண்மைக்காரணங்களை நாடி, அவற்றை நீக்குதற்குரிய மாற்று வழிகளைக் காணவேண்டும் என்ற "தருமகர்த்தாக் கொள்கை" தலைதூக்கியுள்ளது.[170]

இதுகாறும் கண்டனவற்றால் பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் காணப்பெற்றன என்பதும், இவற்றின் அடிப்படையில் பொருளாதார மேம்பாடுற்ற உயர்வகுப்பினர், பொருளாதார நிலையில் நலிவுற்ற தாழ்நிலையினர் என்ற வகுப்புப்பிரிவுகள் இடம் பெற்றிருந்தன என்பதும், உயர் வகுப்பினர் மேம்பட்ட வாழ்க்கையும் தாழ்ந்த வகுப்பினர் துன்பம் நிறைந்த, இழிந்த வாழ்க்கை வாழ்ந்துள்ளனர் என்பதும் புலனாகின்றன. பக்தி இயக்கச் சான்றோர்கள் சமுதாயத்தரப்பிரிவுகளைத் தோற்றுவித்த, பொருளாதார ஏற்றத்தாழ்வுகளின் அடிப்படையில் உருவாகிய இவ்வகுப்புப் பிரிவுகளை இறைவனிடம் அன்பு செலுத்தல் என்ற உயர்ந்த கொள்கையின் அடிப்படையில் மாற்றி, வகுப்பு வேறுபாடுகளற்ற சமதர்மச் சமுதாயத்தை உருவாக்க முயன்றுள்ள நிலையையும் நம்மால் உணரமுடிகின்றது. இனி, பக்தி இலக்கியம் காட்டும் பொருளாதாரச் சமத்துவச் சிந்தனைகளைக் காணுதல் தகும்.

### *4. 10. சமத்துவச் சிந்தனைகள்*

பக்தி இயக்கச் சான்றோர்கள் இறைவன் பெருமைகளை எடுத்துக் கூறுமிடங்களிலும், உலகியல் வெம்மையிலிருந்து விடுபட்டு இறைவன் திருவடி நீழலாகிய தண்மைக்குச் சென்று உயர்நிலையை அடைய ஆற்றுப்படுத்தும் நிலையிலும், உலக வாழ்க்கையில் சிக்குண்டு அல்லலுறும் மக்களின் நிலையை எடுத்துக்கூறி நல்வழிப்படுத்தும் போக்கிலும், இறையன்பு செலுத்துவதன் தேவையை வலியுறுத்தும் நிலையிலும் பொருளாதார ஏற்றத்தாழ்வுகளினால் உருவாகும் வகுப்பு வேறுபாடுகளை அகற்றுதற்குரிய சமுதாயச் சிந்தனைகளை வெளிப்படுத்துகின்றனர். கருத்துமுதல்வாதத்தில் ஊன்றியதெனக் கருதப்பெறுகின்ற பாரதிய நாகரிகத்தின் பாதுகாவலர்கள் எனக் கூறிக்கொள்ளும் உயர்ந்த வகுப்பைச் சார்ந்த சிலருக்கு எதிராக வெளிப்படுத்திய வெறுப்புணர்ச்சியே சமண, பௌத்த சமயங்களின் மூலமாக வெளிப்பட்டது என்றும், சமண, பௌத்த சமயங்களின் கொள்கைகளால் கவரப்பட்ட சாதாரண, கீழ்வகுப்பிலுள்ள மக்கள் அவர்களை வரவேற்று ஆதரித்தனர் என்றும் கருதுவர்.[171] சமுதாயத்தில் நிலவிய பொருளாதார ஏற்றத்தாழ்வுகளில் உயர் நிலையுற்றோரால் தாழ்நிலையுற்றவர்கள் துன்புறுத்தப்பெறல், இழிவுபடுத்தப்பெறல் போன்ற நிலைகளுக்கு ஆளாயினமையைக் கண்ணுற்ற பக்தி இலக்கியச் சான்றோர்கள் உலகத் துன்பங்களிலிருந்து விடுதலை பெற இறைவனின் இன்னருள் துணை நிற்கும் என்ற நம்பிக்கை மக்கள் மனத்துள் ஆழமாகப் பதியும் வண்ணம் வலியுறுத்திக் கூறினர். இதனால் தாழ்ந்த வகுப்பினரின் முழுமையான ஆதரவும் ஈடுபாடும் பக்தி இயக்கத்திற்குக் கிட்டின

மக்களிடையே வகுப்பு வேறுபாடுகளை உருவாக்குவதில் இன்றியமையாத பங்காற்றும் பொருளாதார ஏற்றத்தாழ்வுகளை அகற்றும் நோக்கில் முதற்கண் பொருளின் நிலையற்ற தன்மை பல நிலைகளில் எடுத்துமொழியப்பெறுகின்றது. செல்வம் நிறையற்றது.[172] செல்வம் அதனை உடைமையாகக் கொண்டவன் இறக்கும்போது உடன்வராது.[173] செல்வம் நிறைந்த உயர்குடியிற் பிறந்தவனாயினும் அவனும் ஒருநாள் இறத்தல் திண்ணம்.[174] எனவே அவனுடைய உயிர்பிரியுங்கால் ஒன்றும் செய்ய இயலாது.[175] எனவே நாம் மிகுந்த செல்வம் உடையவர்கள் என இறுமாந்திருத்தல் கூடாது.[176] செல்வச் செழிப்பைக் கண்டு மகிழ்தல் கூடாது.[177] செல்வத்தின்மேல் மக்கள் கொண்டுள்ள பற்றை அறவே துறக்க வேண்டும்.[178] செல்வத்தின்மேல் கொண்டுள்ள பற்றை விட்டுவிட்டால் இறைவனை எளிதில் அடையலாம்.[179] செல்வத்தின் மேல்கொண்டுள்ள பற்றை விடாதும் *இறைவனை எண்ணி வணங்காதும் வாழ்பவர்கள் சீசீ என்றிகழப் பெறுவர்.*[180] இயமன் உயிரைக் கொள்ள வரும்போது இவர் செல்வர் என்றும், இவர் வறியவர் என்றும் வேறுபாடு பார்க்கமாட்டான்; எவ்வளவு செல்வத்தைப் பெற்றிருந்தாலும் அருள்வாழ்வு வாழவில்லையென்றால் அழியாத இன்பப்பேற்றை அடையமுடியாது.[181] அருள் உணர்வு இல்லாது பெரும் செல்வத்தைச் சேர்த்து வைத்து வாழ்வோருடைய வாழ்க்கை கேடுதரும் துன்ப வாழ்க்கையாகவே அமையும்.[182] அவர்கள் பெற்ற செல்வத்தால் எவ்விதப் பயனும் கிட்டப்போவதில்லை.[183] எனவே, செல்வத்தின் மீதுள்ள பற்றை விட்டுவிட்டு மெய்ப்பொருளை உள்ளன்புடன் எண்ணினால் *உயிர்களின் மயக்கம் நீங்கும்* [184] *என்றெல்லாம் பொருளாதார* நிலையில் மேம்பாடுற்ற உயர்வகுப்பினரைப் பார்த்துச் செல்வத்தின் நிலையாமையையும், யாக்கையின் நிலையாமையையும், பொருட்பற்றை நீக்கவேண்டியமையின் தேவையையும் உலகியல் நெறிநின்று எடுத்துக் கூறியும், அச்சுறுத்தியும், அறிவுரைகள் கூறியும் பொருள்மேல் மக்கள் கொண்டுள்ள பற்றினை நீக்குவதற்கு வழிவகுக்கின்றமையை அறிகின்றோம்.

அடுத்து, பொருளாதார நிலையில் தாழ்வுற்ற வறியவர்களைப் பார்த்துச் சோற்றுக்காகப் பிறரிடம் சென்று இரக்காதீர்கள் [185] பொய்களைக் கூறிச் செல்வர்களைப் போற்றிப் புகழ்ந்து செல்வரிடம் பொருள் பெற்று உயிர்வாழும் ஆசையை விட்டு மெய்வருத்திக் கைசெய்து உண்டு வாழுங்கள்.[186] பொருள் ஆசை உருவாகுவதற்குக் காரணமான மனை வாழ்க்கை பற்றிய நினைப்பை ஒழித்து *இறையுணர்வுடன் வாழுங்கள்* [187] என்று கூறுமாற்றால் வறியவர்கள் தம் ஊழ்வினையே இந்நிலைக்குக் காரணம் என எண்ணி மனம் சோம்பிக் கிடக்காது, உழைப்பை மேற்கொண்டு ஊழையும் உப்பக்கம் காணும் வழியையும், இறை அன்பை மேற்கொண்டு பொருளாசையை வெறுக்கும் வழியையும் காட்டுகின்றனர்.

பணத்தைப் பரவலாக்குதல் என்ற பொருளியல் அறிஞர்களின் கருத்துக்கு ஏற்ப, உயர் வகுப்பினரிடம் குவிந்து கிடக்கும் பொருள் வளத்தைப் பிறருக்குக் கொடுப்பதன் மூலம் பொருளாதார நிலையில் சமத்துவத்தைக் கொண்டுவர முடியும் என்ற சிந்தனையைக் கொண்ட பக்தி இலக்கியப்

பெரியோர்கள் கொடைப் பண்பை வலியுறுத்துகின்றனர். செல்வத்தை அளவுக்கு அதிகமாகச் சேமித்துவைத்துப் பிறருக்குக் கொடாதிருக்கும் செல்வர்களைப் பார்த்துக் கொடைகொடுக்க வேண்டும் என அறிவுரைகள் கூறுகின்றனர். படைப்பு பல படைத்த செல்வர்கள் தம்மிடம் ஈயென இரந்தவர்க்குக் கொடுக்கவில்லையெனில் அவர்கள் இறுதியில் பெறுவது இருளுலகத்துன்பமே என்றும், அவர்களை இருமல், சோகை, ஈளை, வெப்பு முதலான கொடிய நோய்கள் அண்டித் துன்புறுத்தும் என்றும் கூறுகின்றனர்.[188] உண்ணும்போது யாவராயினும் ஒரு கைப்பிடி உணவு கொடுக்க வேண்டும்:[189] ஆர்க்கும் வேற்றுமை பாராட்டாது கொடை கொடுக்க வேண்டும்:[190] அவரிவர் என்னாது கொடுக்க வேண்டும்[191] என்று அறிவுரைகள் கூறும் போக்கையும் காண்கின்றோம். இவ்வாறு பிறருக்குக் கொடை கொடுத்து மகிழ்வோர் பிறரால் மதிக்கப்பெறுவர்: அவர்களை இடி, பாம்புகள் போன்றவை கொடுமைகள் செய்யா: அவர்களுக்குப் பிளவு தொண்டைநோய் முதலிய பிணிகள் வாரா: வாழ்நாட்கள் அதிகம் இல்லாமையால் யாவர்க்கும் கொடுத்து இறைவனை உள்ளன்புடன் வணங்கினால் இறைவனைக் காணலாம்[192] எனக் கொடை கொடுக்காமையினால் ஏற்படும் தீமைகளையும் கொடை கொடுப்பதால் விளையும் நன்மைகளையும் கூறிச் சமத்துவ நிலை உருவாக முனைந்த போக்கையும் உணரலாம்.

இறைவனைச் சமுதாயத்தில் காணப்பெறும் பொருளாதார ஏற்றத்தாழ்வு நிலைகளை அகற்றிச் சமநிலையான சமுதாயத்தைப் படைக்கும் 'உயர்பண்புடையவனாகவும் காட்டுகின்றனர். இறைவன் எங்கேனும், யாதாகிப் பிறந்திடினும் தன் அடியார்க்கு அருளும் அருட்குணத்தினன் என்றும்,[193] யாவரேயாயினும் தன் அடியார்களாயின் அவர்களுக்கு அண்மையானவன் என்றும்,[194] அன்பர்கள் யாராயினும் அன்பு செய்பவர் என்றும்,[195] செல்வர் வறியவர் என்ற வேறுபாடு பாராட்டாது அனைவர்க்கும் அருள்பவன் என்றும்,[196] சமுதாயத்தில் நிலவும் வகுப்புப்பிரிவுகளுக்குக் காரணமான வறுமையை நீக்குபவன் என்றும்[197] காட்டுகின்றனர்.

இறையடியார்கள் பொருளாதார நிலையில் சமத்துவச் சமுதாயம் அமைவதற்கு வழிவகை கூறியமையுடன் நின்றுவிடாது அச்சமுதாயம் அமையத் தம் வாழ்க்கையிலும நடந்து காட்டியுள்ளனர். நெற்றியில் திருநீற்றையும, கழுத்தில் உருத்திராக்க மாலையையும் கண்டால் அவர்கள் யாவராயிலும் வேறுபாடுகருதாது வணங்கிப் போற்றியுள்ளனர். மேலும், அவர்கள் உள்ளத்தை இறைவன் உறையும் கோயிலாகக் கருதினர்.[198] இவண் எவரேனும் என்ற சொல் சமூக வகுபபுப்பிரிவுகளில் உயர்நிலையுறறவராயினும், தாழ்நிலையுற்றவராயினும் இறை அன்பு கொண்டவர் எவரேனும் என்ற பொருளையே சுட்டுகின்றது எனலாம் இவ்வாறு பக்தி இலக்கியம் பொருளாதார ஏற்றத்தாழ்வற்ற சமுதாயம் அமைய வழி வகுக்கின்றமையை அறியலாம்

## 4. 11. முடிபுகள்

1. சமுதாயத்தில் தரப்பிரிவுகளை உருவாக்கும் காரணிகளுள் ஒன்றாகச் சமூகவகுப்புக்கள் விளங்குகின்றன என்பதில் சமூகவியலாளர்களிடையே கருத்தொற்றுமை காணப்பெறுகின்றது.

2. சமூக வகுப்புக்களை உருவாக்குவதில் பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் பெரும்பங்காற்றுகின்றன.

3. வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் நிலவிய புராதனச் சமுதாய அமைப்பில் பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் காணப்பெறவில்லை

4. புராதனச் சமுதாய அமைப்பின் சிதைவில் தோன்றிய நாகரிகச் சமுதாய அமைப்பில்தான் சமூகவகுப்புக்களின் தோற்றத்தையும் காணமுடிகின்றது என்ற சிந்தனை உலகச் சமுதாயங்கள் அனைத்துக்கும் பொருந்துவதாகக் கூறப்பெறுகின்றது

5. ஏனைய சமுதாயங்களைப் போன்று பண்டைத் தமிழ்ச் சமுதாய அமைப்பிலும் இனக்குழுச் சமுதாய அமைப்பு சிதைவுற்று, நாகரிகச் சமுதாய அமைப்பு தோற்றம் கொண்டமைக்குரிய குறிப்புக்கள் சங்க இலக்கியத்துள் காணப்பெறுகின்றன.

6. நாகரிகச் சமுதாய அமைப்பின் தன்மைகளாலும், தமிழகத்தின் சமனற்ற நிலப்பரப்பினாலும், பஞ்சம் போன்ற இயற்கைச் சீற்றத்தினாலும் நிலவிய பொருளாதார ஏற்றத்தாழ்வுகளைப் பக்தி இலக்கியமும் காட்டுகின்றது.

7. பொருளாதார ஏற்றத்தாழ்வுகளின் அடிபபடையில் பொருளாதார மேம்பாடுற்ற மேட்டுக்குடியினர், நலிவுற்ற தாழ்நிலையினர் என்ற வகுப்புப் பிரிவுகள் பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் நிலவியமை விளங்குகின்றது.

8. பொன்னையும், பொருளையும், நிலங்களையும், ஊர்களையும் தானமாகப் பெற்ற அந்தணர்களும், பெருங்குடி வணிகர்களும், நிலவுரிமையுடைய வேளாளர்களும், செல்வர்களும் பொருளாதார நிலையில் மேம்பட்ட உயர்வகுப்பினராகத் திகழ்ந்துள்ளனர்.

9. இவர்கள் சமுதாய, பொருளாதார, அரசியல் செல்வாக்குடன் வாழ்ந்துள்ளமை புலனாகின்றது. இவர்கள் சமுதாயத்தில் இன்பமிக்க, பொழுதுபோக்கு நிறைந்த, ஆதிக்கம் மிக்க வாழ்க்கை வாழ்ந்துள்ளனர் எனத் தோன்றுகின்றது

10. பொருளாதார நிலையில் நலிவடைந்த வறியவாகள் வறுமை நிலை, இயலாமைநிலை, இழிநிலை, வட்டிக்குக் கடன்வாங்கும் நிலை, உடைமையை ஒற்றிவைக்கும் நிலை, விற்கும் நிலை கூலிககாக உழைக்கும நிலை போன்றனவற்றிற்கு ஆளாயினர்

11. நிலவுரிமையற்ற விவசாய உழைப்பாளர்களாகிய வேளாளர்களும், பிற உழைப்பாளர்களும் கடினமாக உழைக்க வேண்டிய நிலையிலும், பிறரால் சுரண்டப்பெறும் நிலையிலும் வாழ்ந்துள்ளனர். இவர்கள் வளமற்ற, எளிய, துன்பம் நிறைந்த வாழ்க்கை வாழ்ந்துள்ளனர் என்பது தெரிகின்றது.

12. வகுப்பு வேறுபாடுகளுக்கு ஊழ்வினைப் பயன், விதி, முற்பிறப்பு வினை போன்ற சமய நம்பிக்கைகளையே காரணங்களாகக் கருதியிருந்தனர் என்பது புலனாகின்றது.

13. பக்தி இலக்கியச் சான்றோர்கள் பொருளாதார ஏற்றத்தாழ்வு நிலைகளை அகற்றிச் சமத்துவச் சமுதாயத்தை உருவாக்கப் பல நிலைகளில் முயன்றுள்ளமையை உணரலாம்.

14. பொருளின் நிலையாமை, யாக்கையின் நிலையாமை ஆகியவற்றைக் கூறிப் பொருளின் மேல் மக்கள் கொண்டுள்ள பற்றினை நீக்க வழி செய்துள்ளனர்.

15. கொடை கொடுத்தலினால் விளையும் நன்மைகளையும், கொடை கொடுக்காமையினால் ஏற்படும் தீமைகளையும் எடுத்துக் கூறித் தற்காலத்தில் பொருளாதார வல்லுநர்கள் கூறும் பணத்தைப் பரவலாக்குதல் என்ற கொள்கையைச் சமுதாயத்தில் நிலைநாட்ட முயன்றுள்ளனர்.

16. வறியவர்கள் பிறரிடம் சென்று இரக்காது உழைத்து வாழவேண்டும் என்று அறிவுரை கூறும் போக்கையும் காணலாம்.

17. இறைவன் ஏழை, பணக்காரன் என்ற வேறுபாடுகளைப் பாராட்டாது, தம்மை உள்ளன்புடன் எண்ணி வழிபடுவோருக்கு அருளும் அருங்குணத்தினன் என்ற நிலையிலும் காட்டப்பெறுகின்றான்.

18. அடியவர்களும் இறை அன்பு என்ற உயா கொள்கையைக் கடைபிடித்து, வகுப்பு வேறுபாடுகளை மறந்து சமநிலைச் சமுதாயம் அமைய வழி காட்டியுள்ளனர்.

19. இவ்வாறு பக்தி இலக்கியம் இன்றைய சமூக நலச் சிந்தனையாளர்களால் கூறப்பெறும் கருத்துக்களை ஒத்த நிலையிலும், பொருளியலறிஞர்களால் கூறப்பெறும் கருத்துக்களை ஒத்த நிலையிலும் பொருளாதார ஏற்றத்தாழ்வுகள்ற்ற சமத்துவச் சமுதாயம் அமைய வழிகாட்டுகின்றமை எண்ணிப் போற்றற்குரியது ஆகும்.

<u>மேற்கோள்சான்றுகள்</u>

1. David C. King, Marvin Koller, **Foundation of Sociology**, P.104.

2. James B. Mcekee, **Sociology-A Study of Society**, P.196

3. George Ritzer, Kenneth R.W. Kammeyer, Norman R Yetmen, **Soiciology-Human Society**, P.226.

4. Ronald W. Smith, **Sociology-An Introduction**, P 147.

5. Melvin L.D. Fleur, William V.D. Antonio, Lois. B. De Fleur, **Sociology-Human Society**, P.

6. தா. செல்லப்பா, அரசியல் பொருளாதாரச் சுருக்கம். ப.12.

7. எஸ். இராமகிருஷ்ணன், மார்க்சியப் பொருளாதாரப் பார்வை, பக்.6-7.

8. S.A. Donge, **India-From Primitive Commune to Slavery**, P.104.

9. நா. வானமாமலை, "கலைகளின் தோற்றம்", ஆராய்ச்சி, சூன்.71. ப:285.

10. 1:47:3 4, 1:61:2, 2:140:9:1 2, 2:210:2, 2:251:9:4, 5:765:2, ஆண்டாள். திருப்பாவை 1:3, குலசேகரர்: 12:5:3, திருமங்கை.பெரிய. 2:10:6:4, 3:9:8:4, 6:9:4:2, திருமங்கை.திருவெழு. 38:44, நம்மாழ். திருவாய். 8:6:1:4.

11. 1:61:2:2-3, 2:187:1-2.

12. 1:64:8:3-4.

13. 1:64:7:3-4.

14. 1:129:4:4.

15. 1:3:3:2, 1:4:8:4, 1:6:1:2-3, 1:7:2:4, 1:9:1:3, 1:48:4:4, 1:64:10:3-4, 1:80:5:1-3, 1:84:5:2-3, 1:129:5:1, 1:53:9:3-4, 2:137:9:2, 2:139:8:2, 2:145:5:1, 1:157:9:3-4, 2:177:1:3, 3: திருப்புகலி, 3:3 3: திருத்தேவூர். 3:4, 3: திருவேதிக்குடி:9:3-4, 3: திருமாகாறல்:1:1-2, 1:8:1, 7:2:11:7:2 7:2:19:3-4, திருவா. 16:3-5, 16:4:2, குலசேகரர் 1:5:3, திருமங்கை.பெரிய. 2:2:2:3- 4, 4:10:8:3- 4, 5:3:6:4. நாச்சியார் 2:10:3, பெரியாழ்.8:2:6:3 2:7:3:1- 3.

16. 1:8:3:3-4, 1:15:7:1- 2, 1:106:1:3- 4, 2:185:8:1- 2, 2:193, 1- 3, 5:228:2:3

17. 1:5:1:1- 2, 1:5:2:1- 2, 1:6:1:2- 3, 1:9:9:2- 4, 1:15:2:1- 2, 1:15:6:3- 4, 1:15:7:1- 2, 1:17:10:3- 4, 1:46:6:3, 1:64:8:3- 4, 1:87:1:1:1- 2, 2:193:3:3 2:196:8:4

18. 1:6:3:3, 1:8:3:3- 4, 1:9:9:3- 4, 1:15:6:3- 4 1:15:7:1- 2, 1:17:6:4, 1:17:10:3- 4, 1:24:5:1- 2, 1:27:4:2, 1:17:6:4, 1:31:1:3: 1:46:6:3, 1:47:4:4 1:48:2- 3, 1:61:4:3, 1:64:2:3 4 1:85:4:4, 1:104:7:3- 4, 1:48:2:4 1:61:4:3, 1:85:4:4, 1:104:7:3- 4, 1:106:1:3- 4, 1:108:4:4, 1:104:7:3- 4, 1:112:6:3:4, 1:131:3:4, 2:139:9:2 165:5:4:3, 3:திருக்கச்சிநெறிக்கரைக்காடு:8:3 4, திருமங்கை.பெரிய.1:5:10:1, 2:10:1 4, 6:9:1-2, திருவெழு 38 -44

19. கே. கே. பிள்ளை, தமிழக வரலாறு, மக்களும் பண்பாடும்,.பக். 230- 231

20. டி. வி. சதாசிவப்பண்டாரத்தார், பாண்டியர் வரலாறு. பக். 136- 137.

21. கே. கே. பிள்ளை, மு. கூ. நூல், ப. 340

22. 11; 28:19:15- 16

23. 11:27:25- 27

24. பெரியாழ். 5:1:5:1- 2

25. பெரியாழ். 5:4:1:3- 4

26. ஆண்டாள், திருப்பாவை 14:1- 2

27. K. Minakshi, **Administrative and Social Life under the Pallavas**, P.154

28. 3: திருப்பிரம்மபுரம்:5, 7:2:18:3:1- 2

29. 7:1:8:3:1

30. மூர்க்க. 5:1 குங்கிலியர்:8

31. Radhakrishna Choudri, "Slaves and Serfs in Cambodia", **Indian History Congress, 28th Session**, P.520

32. Andre Beteille, **Inequality Among Men**, P.22.

33. D'souza Victor. S., **Inequality and its Perpetuations**, P.3

34. K. Minakshi, op.cit., P.157

35. Stein Burton. **Peasant State and Society in Medieval India**, P.83

36. டி. வி. சதாசிவப்பண்டாரத்தார், மு. கூ. நூல். பக். 60- 62

37. இறையரசன், தமிழ்நாட்டு வரலாறு, ப.237

38. டி. வி. சதாசிவப்பண்டாரத்தார், மு. கூ. நூல், பக்.206- 207

39. Rai, "Social Mobility" **Social Life in Ancient India,** P.15

40. திருமந்திரம் 1824, 1825

41. 2:144:5, 11: 138:1:40- 41, திருஞான. 156:3- 4 தடுத்தாட்.100:2- 3, திருமங்கை .பெரிய 7:8:6:3- 4

42. விறன்மிண்டர்.3

43. 1:48:6-4, 1:64:2:3-4, 1:80:1- 3, 2:165:7:4 2:177:1:1- 2, 2:211:-2 3, 2:219:6:3 7:1:15:2:1 கணம்புல்லர், 2, இயற்பகை 2, கலிய. 6:1 2, தடுத்தாட் 57:3, திருமங்கை.பெரிய

44. திருமங்கை.பெரிய. 6:7:8:4

45. இயற்பகை. 2

46. காரைக்கால். 36

47. காரைக்கால். 42

48. திருஞான. 1034- 1035

49. திருஞான. 1058

50. அறிவாட்டாயர். 4- 5, இளையான்குடி. 5. கோட்புலி 1- 2, செருத்துணை. 1, முனையடுவார். 2:1- 2.

51. ஆனாய. 1

52. திருநாவுக். 20:2

53. திருநாளைப். 5

54. திருக்குறிப்பு. 28

55. 200 0தீ 1928-29

56. தி. வை. சதாசிவப்பண்டாரத்தார், பிற்காலச் சோழர் வரலாறு. ப.542

57. ஆ. பத்மாவதி 'வடகாடுகோயில் கல்வெட்டு', தமிழ் ஆராய்ச்சியின் புதிய எல்லைகள், ப.95

58. திருநாட்டு. 33:3

59. 5:830

60. திருவா. 7:1:6, 7:2:2

61. 11:28:19:29 -73

62. திருவா. 26:1:1- 2, 41:5:1- 2

63. 11:28:7:1- 10

64. 1:129:2:4

65. 3: திருமாணிக்குழி: 5:3- 4

66. 2:215:7:1- 2

67. 5:702:1- 2

68. 11:8:136- 137

69. நம்மாழ். திருவாய். 9:1:2:1- 2

70, 7:2:11:9:2, 2;178:7:3- 4. 2:258:8:3- 4, 1:133:9:3 -4, 3: திருப்பிரம்மபுரம்:5, 2. 256:1:3- 4, 2:219:2:4- 3: திருவேதவனம்: 8:2- 4, 3: திருவேதிக்குடி 9:3- 4.

71. 7:2:11:9:2, 11:27:25- 27 -

72. 11:27:25:16 -25.

73. நம்மாழ்.திருவாய். 3:9:6.

74. 6: பலவகை. திருத்தாண்டகம், 4:1.

75. 7:2:18:1, 7:2:18:2:1- 2, 7:2:18:3:1- 2.

76. 7:2:18:8:1- 2. திருமந்திரம். 128

77. 11:28:1:1- 10.

78. 11:28:7:24 -34.

79. 11:28:22- 47.

80. 11:28:22: 41.

81. 11:28:7:1- 10.

82. 2:236:2:1- 2, 5:231:1- 2, 6: தனிதிருத்தாண்டகம் 10:2, 7:2:18:1, 11:28:22-24, 11:29:29:1, திருமங்கை.பெரிய. 1:6:6:1- 2 நம்மாழ்.திருவாய். 3:9:2.

83. C. Minakshi. op cit., p.114.

84. மா. இராசமாணிக்கம், பெரியபுராண ஆராய்ச்சி, ப. 223- 224.

85. டி. வி. சதாசிவப்பண்டாரத்தார், பாண்டியர் வரலாறு, ப. 30- 31.

86. 1189, 1260, 1287.

87. 4: தனி. திருவிருத்தம். 10.

88. 7:1:8:2:1- 2.

89. ஏயர்கோன்- 12:2.

90. கோட்புலி. 5:1- 2.

91. திருஞான. 562

92. புகழ்த்துணை. 2

93. 1:92:1:1, 7:2:111:8:3, திருநாவுக். 252-257 திருஞான. 564, புகழ்த்துணை.6

94. 11:34:41:2- 4, 7:2:1:3- 4.

95. பூசலார். 5:1- 2.

96. 7:8:3:1- 2, குங்கிலியர். 7:3- 4, தொண்டரடி.திருமாலை 29:1

97. 2:186:5:1- 2, 4: திருவீழிமிழலை:6:3- 4, திருவா. 4:28 திருமந்திரம் 1615

98. 2:257:4:3:- 4, திருமந்திரம். 1849:4

99. அரிவாட்டாயர்.12

100. திருமந்திரம் 1927:1

101. 2:233:3:1, திருமந்திரம் 2051

102. 4:நமசிவாய.4
103. 7:14:3:3- 4

104. திருமந்திரம் 252

105. கணம்புல்வர் 5

106. புகழ்த்துணை. 5

107. 4: திருக்கோயில் விரட்டானம். 7:3-4, 7:2:4:4:2 7:2:5:7:1, 7:4:6:1-2, திருமந்திரம்.252 திருமங்கை.பெரிய. 1:9:3:2

108. 1:102:1:1- 2, 2:178:9:3- 4, 2:236:2:1- 2, 3: திருவேதவனம்:8:2:4, 11:6:13:1- 2, 11:26:3:3- 4

109 11:28:7:24- 34

110. 2:223:4:1- 2, 5:505:1- 2, 7:2:18:1- 18 11:6:13:1- 2, 11:26:20:11- 12 திருமந்திரம் 126, நம்மாழ்.திருவாய்.3:9:4 3:9:5, 9:1:30:1- 2

111. 2:233:4:1- 2

112. 11:8:136- 137

113. 3: திருப்பிரம்மபுரம். 8. திருவிருத்தம்.252

114. 5:707:1- 2

115. திருமங்கை:பெரிய. 4:6:2:1- 2

116. திருமந்திரம். 117, 2048

117. இளையான்குடி.7

118. K. A. Nilakanta Sastri, **The Cholas, Part I, Vol.II,** P.377, 139 of 1912, 140 of 1912, 142 of 1912, 260 of 1910, S. I. I. Vol.I, 146, 419 of 1902

119. கலிய. 8.11

120. கணம்புல்வர். 5

121. தி.வை. சதாசிவப்பண்டாரத்தார். பிற்காலச்சோழர் வரலாறு ப. 572

122. Eph. Ind Vol. VII, No 29, pp 290-296

வா. தங்கையா நாடார், தென்னிந்தியத் தமிழ்ச் சாசனங்கள். ப.3

123. இளையான்குடி . 7

124. கணம்புல்வர் . 4

125. கலிய. 12:3- 4. மூர்க்க. 5, குங்கிலியர்.8

126. கணநாதர். 12:3- 4, 13:1- 2

127. குங்கிலியர் 9:3- 4

128. அரிவாட்டாயர். 9.1. திருவா.4:39 - 40, நம்மாழ். திருவாய். 9:1:3:1- 2

129. திருக்குறிப்பு .22:1- 2

130. 1:5:7:1- 2, 1:112:6:3- 4. திருமந்திரம் 1593, 11:26:20, 1- 5, திருநாட்டு.11, முனையடுவார்.1:3- 4, திருமங்கை.பெரிய. 2:6:8:1- 3

131. திருமந்திரம். 1593, 11:26:20:1- 5

132. 1:5:7:1- 2, 1:112:6:3 -4, 11:27:25:30- 45

133. திருநாட்டு. 13:2

134. 11:37:28 மானக்கஞ்சாறனார். 4:3

135. திருநாட்டு. 23:1. 23:1

136. திருநாட்டு. 25, 11:27:29 30

137. ஆனாயர். 3:1, திருநாட்டு, 27:1

138. திருநாட்டு. 10:2- 4. திருக்குறிப்பு. 23:4, திருநாவுக். 6:3

139. திருநாவுக். 14:3

140. 11:26:20:1- 5

141. திருநாட்டு. 11

142. 1:112:6:3- 4, 11:26:20:1- 5, 11:29:76, திருநாட்டு. 12.

143. 7:1:15:6:4, திருநாட்டு, 13:2:14, மானக்கஞ்சாறனார் 2:1, திருமங்கை.பெரிய 3:4:3:3- 4 3:10:5:3- 4, 7:4:9:2- 3

144. திருநாளைப். 9:1- 2.

145. திருநாட்டு. 15:4, மானக்கஞ்சாறனார். 3:2

146. 3: திருமாகாறல்: 11:1- 2, குங்கிலியர். 3:1- 2

147. திருநாட்டு.18

148. திருநாட்டு. 3,4

149. ஆனாயர். 2:1

150. திருநாளைப். 8:1

151. திருநாளைப். 3,4

152. திருநாளைப். 9:3 -4

153. திருநாளைப். 9:3- 4

154. திருநாளைப். 6

155. திருக்குறிப்பு. 6

156. மானக்கஞ்சாறனார். 4:3

157. திருநாளைப். 7

158. திருநாளைப். 8

159. 11:27:25:50, திருநாட்டு. 26:1

160. ஆ. பத்மாவதி, "வடகாடுகோயில் கல்வெட்டு" தமிழ் ஆராய்ச்சியின் புதிய எல்லைகள். ப. 93

161. பூ. சோமசுந்தரம், இந்தியாவின் வரலாறு, 1. பக். 81- 282

162. K. A. Nilakanda Sastri, **The Cultural History of Tamil Nadu**, P.5

163. கா. சிவத்தம்பி, "திணைக்கோட்பாட்டில் சமூகவியல் அடிப்படைகள்" ஆராய்ச்சி, மலர்.3, இதழ். 2. சூன். 71. ப. 350

164. C. Minakashi, op. cit., P 159

165. டி. வி. சதாசிவப்பண்டாரத்தார், பாண்டியர்வரலாறு. ப. 136

166. கே. கே. பிள்ளை, மு. கூ. நூல். ப. 315

167. 5:772:1- 2, 5:31:1- 2, 5:603:1, 7:2, 20:7:1- 2 திருவா.10:2, திருமங்கை.பெரிய. 1:1:4:1- 2 திருமந்திரம் 253

168. திருமங்கை. பெரிய. 1:1:4:1- 2, திருமந்திரம் 126

169. திருமந்திரம் 124

170. குன்றக்குடி அடிகளார், "சமய இலக்கியங்கள்", ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டுக் கருத்தரங்கு. 3, 1981. சனவரி. ப. 331.

171. ஆ. வேலுப்பிள்ளை, தமிழர் சமய வரலாறு. ப. 46

172. 2:233:1, 5:832:1, 5:833:1- 2. 7:7:3:5:1 -2 திருமந்திரம் 212- 220. 11:5:14:1

173. 5:720:1- 2, 6: திருவானைக்கா. திருத்தாண்டகம். 1:1- 2

174. 11:26:28:8

175. நாச்சியார் திருமொழி. 10:10:2

176. 5:762:1- 2

177. 5:761:1- 2

178. 11:5:23:1- 2

179. 7:2:2:7:3- 4

180. 11:9:10

181. 2:215:7:1- 2

182. 5:830

183. 5:775:1- 2

184. 5:811

185. 11:6:13:1- 2

186. நம்மாழ்வார், திருவாய், 3:9:6

187. 7:1:16:2:2

188. திருமந்திரம், 120

189. திருமந்திரம். 107:1

190. திருமந்திரம். 107:1

191. திருமந்திரம். 120,536

192. 6: திருக்கன்றாப்பூர்- திருத்தாண்டகம். 4

193. 2:177:6:1- 2

194. 6: கோயில். பெரியதாண்டகம். 8:2

195. 6: திருமழபாடி. திருத்தாண்டகம். 7:3

196. திருமங்கை.பெரிய. 5:8:1:1

197. 5:705:1- 2

198. 6: திருக்கன்றாப்பூர்- திருத்தாண்டகம். 3

# இயல் - 5

## அடிமை நிலை

அடிமைநிலை என்பது மிகப் பழங்காலத்திலேயே உலகச் சமுதாயங்கள் அனைத்திலும் காணப்பெற்றதொரு பொதுவான தன்மை என்பதை உலகச் சமுதாயங்களின் அரசியல், பொருளாதார, சமுதாய வரலாறுகளும், கல்வெட்டுச் செய்திகளும், பழங்கால ஓவியங்களும், தருமநூல்களும், இலக்கியங்களும் காட்டுகின்றன. அடிமைநிலை என்பதன் விளக்கம், அடிமைநிலையின் தோற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் உரிய சூழல்கள், அடிமைநிலையின் தன்மைகள், பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் நிலவிய அடிமை நிலையின் தோற்றத்திற்குரிய சூழல்கள், பக்தி இலக்கியம் காட்டும் அடிமைநிலைக்கும், பிற சமுதாயங்களில் நிலவிய அடிமைநிலைக்கும் இடையேயுள்ள ஒற்றுமை, வேற்றுமைகள், சமுதாய அடிமைநிலைக்கு எதிரான சிந்தனைகள் என்பவனவற்றை அறியும் நிலையில் இவ்வியல் அமைகின்றது.

### 5. 1. அடிமை, அடிமைநிலை – விளக்கம்

தமிழ், ஆங்கில அகராதிகள் அடிமை என்ற சொல்லுக்கு அடிமையாள், இறையடியான், ஊழியஞ்செய்பவன், ஓய்வுஒழிவு அற்றவன், தன்னாண்மை இழந்தவன், தாசன், தொண்டன், தொழும்பன், தொழும்பு, நிலத்துடன் கட்டுண்டவனும், மாற்றத்தக்கவனுமாகிய பணியாள், பழக்கங்களுக்கு அடிமைப்பட்டவன், பிறருக்குக் கட்டுப்பட்டவன், பிறருடைய சொத்தாகக் கருதத்தக்கவன், மாடாய் உழைப்பவன், முழுவதும் பிறரைச் சார்ந்தவன், முறியன் என்ற பொருள்களையும், அமைநிலை என்ற சொல்லுக்குக் கட்டாய உழைப்பு, கட்டுண்டநிலை, சுதந்திரமற்ற நிலை, மட்டற்ற கீழ்ப்படிவு, வேண்டாக்கட்டுப்பாட்டிற்கு உட்பட்டநிலை போன்ற பொருள்களையும் தருகின்றன. இப்பொருள்களையும், உலகச் சமுதாயங்களில் நிலவிய அடிமைநிலையையும் நோக்கும்போது குறிப்பிட்ட சில அரசியல், சமுதாய, பொருளாதாரச் சூழ்நிலைகளால் தாழ்நிலையுற்ற பிரிவினருட் சிலர் மேட்டுக்குடியினரைச் சார்ந்தும், அவர்களுக்குச் கட்டுப்பட்டும், ஏவல் கேட்டும், தொண்டு செய்தும் வாழ்கின்ற நிலையை அடிமை நிலை என்றும் அத்தகைய வாழ்க்கை நிலையிலுள்ளவர்களை அடிமைகள் என்றும் பொதுவாகக் கூறலாம்.

## 5. 2. சமய நோக்கில் பக்தி இலக்கியம் காட்டும் அடிமைநிலை

பக்தி இலக்கியத்தைப் பயிலும்பொழுது நம் உள்ளத்தில் காட்சியளிக்கும் இறை அடிமைநிலை என்பது மனிதனுக்கு மனிதன் அடிமையாக வாழும் சமுதாய அடிமைநிலையினின்று முற்றிலும் மாறுபட்ட தன்மைகளைக் கொண்டதாகத் திகழ்கின்றது. உலகில் பிறந்து வாழும் உயிர்கள் மக்கள் பல்வேறு கட்டுக்களில் (bondage) சிக்குண்டு அல்லலுறுகின்றனர். இவ்வுயிர்கள் எல்லா வல்லமைகளையும் படைத்த இறைவன் ஒருவன் உண்மையை உணர்ந்து, அவனிடம் தம்மை முழுமையாக ஒப்படைத்து, உலகியல் துன்பங்களாகிய கட்டுக்களிலிருந்து விடுதலை பெறத் துடிக்கின்றன. இவ்வாறு உயிர்கள் விடுதலை (liberation) அடைவதற்காகத் தம்மை இறைவனிடம் முழுமையாக ஒப்படைத்துவிடுகின்ற, கேள்வி முறையற்ற அடைக்கலநிலையை (unquestioning surrender) இறை அடிமைநிலை சுட்டுகின்றது எனலாம். இந்நிலையையே பக்தி என்பதன் சிறப்புத்தன்மையாகவும் கருதுவர். மேலும், பதி, பசு, பாசம் என்ற மூன்றும் இறைவன், ஆன்மா, கட்டு என்ற மூன்றினையும் குறிப்பிடுகின்றன என்றும். கட்டுண்ட ஆன்மாவாகிய பசு இறைவனாகிய பதியை அடைந்து, கட்டுக்களாகிய பாசத்தை நீக்கி, விடுதலையாகிய பேரின்ப நிலையை எய்துகின்றது என்றும் விளக்கங்கள் அளிக்கப்பெறுகின்றன. பக்தி இலக்கியமும் இத்தகைய இறை அடிமை நிலையைச் சுட்டுகின்றமையை இனி விளக்கலாம்.

### 5. 2. 1. கட்டுக்கள்

ஆன்மாக்கள் ஆணவம், கன்மம், மாயை என்ற கட்டுக்களில் சிக்குண்டு அல்லலுறுகின்றன. இதனால்தான் கட்டுண்டபிராணி என்று பொருள் பெறும் பசு என்ற சொல்லால் ஆன்மா சுட்டப்பெறுவதாகக் கூறுவர். பக்தி இலக்கியத்துள் நாயன்மார்களும், ஆழ்வார்களும் உலகில் மக்கள் அடையும் துன்பங்களைத் தாம்உறும் துன்பங்களாகத் தம்மேலிட்டுக் கூறுகின்றனர். ஐம்புலன்கள் தரும் எல்லையற்ற இன்னல்கள், உலகப் பற்றுக்கள், தீவினைகள் வருத்துதல், பிறப்பு, இறப்பு, காமநுகர்ச்சி, மூப்பு, நோய், வறுமை, சாதிமுறை போன்றனவற்றால் விளையும் இன்னல்கள் என்றின்னவாறு உலகில் மக்கள் பல்வேறு இன்னல்களையுற்று வருந்துமாற்றைப் பக்தி இலக்கியம் காட்டுகின்றது. இவற்றால் மக்கள் அயர்த்தல், அலமருதல், அறுகயிறு ஊசல்போல் ஆதல், ஆற்றங்கரை மரம்போல் அஞ்சுதல், இடர்க்குழியில் வீழ்ந்து மறுகுதல், உறுகயிறு ஊசல் போல் ஒன்றுவிட்டு ஒன்று பற்றிநின்று வருத்துதல், இருதலைக் கொள்ளியுள் எறும்புபோல் ஆதல், பாம்பொடு ஒரு கூரையுள் வாழ்தல்போல் புலைவாழ்வு வாழ்தல், பாம்பின் வாயகத்துப்பட்ட தேரையைப்போல் துன்புறுதல், வெள்ளத்திடை அகப்பட்ட நரிபோல் வேகனை நிறைந்த வாழ்வு வாழ்தல் என்பன விளக்கப்பெறுகின்றன.

## 5. 2. 2. இறைவன் பெருமைகள்

உலக வாழ்க்கையில் எல்லையற்ற துன்பங்களை அடைந்து வாழும் மக்கள் கருணை வள்ளலாகிய இறைவன் மீது முழு நம்பிக்கைகொண்டு உய்திபெற விழைகின்றனர். இறைவன் மக்கள் உலகில் அடையும் துன்பங்களை நீக்கிக் காக்கும் ஆற்றல் நிறைந்தவனாகத் காட்டப்பெறுகின்றான். தன்னை அடைந்த அடியார்களை ஆட்கொள்பவன், அன்பர்களுக்கு எளியவன், அற்றார்க்கும் அலந்தார்க்கும் அருள்பவன், துன்ப காலத்தில் சேமநிதி போன்று உதவிபுரிவன், உயிர்களுக்குப் பற்றுக் கோடானவன், ஐம்புலன்களின் வழியை அடைப்பவன், கருணைக் கடலானவன், குற்றங்களை நற்றமாகக் கொள்பவன், சிறுமை கண்டு அருள்பவன், ஞானப் பெருங்கடற்கு நங்கூரமானவன், தஞ்சம் என வந்தவரை ஆழாமற் காப்பவன், நடுக்கம் கெடுப்பவன், நரகம் தீர்ப்பவன், பிணிகளுக்கு மருந்தானவன், வருந்தும்போது வாடல் என வாட்டம் தீர்ப்பவன், என்று பலவாறு போற்றிப் புகழப்பெறுகின்றான்.

## 5. 2. 3. விடுதலை பெறத்துடித்தல்

சமயக்குரவர்கள் மக்கள் இறைவனைப் பற்றுக் கோடாகக் கொண்டு உலகத்துன்பங்களாகிய கட்டுக்களிலிருந்து விடுதலை பெறத் துடிக்கின்ற துடிப்பினையும் பக்தி இலக்கியத்துள் விளக்கிக் காட்டுகின்றனர். இறை அன்பில் ஈடுபாடுகொண்ட உயிர்கள் ஊசலின் கயிறு அறும்போது அவ்வூசல் நிலத்தில் வீழ்ந்து விடுதல் போன்று மாசு நீங்கி உலகக் கட்டுக்களிலிருந்து விடுதலை பெற்று இறைவனை அடையும் பேரின்பப்பேற்றைப் பெறுகின்றன. விடுதலை பெறத் துடிக்கின்ற மக்கள் இறைவனிடம் அஞ்சேல் என அருள வேண்டும் என்றும், அல்லற்படாவண்ணம் அருளவேண்டும் என்றும், உன்னையே உன்னும் உணர்வை நல்கியருளவேண்டும் என்றும், பிறவாமையாகிய பெரும்பேற்றைக் கொடுத்தருள வேண்டும் என்றும் வேண்டுகின்றபோது உள்ளத்தின் அடித்தளத்திலிருந்த எழுகின்ற துடிப்பொலியே வெளிப்படுகின்றது எனலாம். அதே நேரத்தில் இறைவனின் பெருமைகளையும், அளப்பரிய ஆற்றல்களையும் தம் அனுபவவழியாக உணர்ந்து, இந்நாள்வரையிலும் இத்தகைய அருட்கடலாகிய இறைவனை எண்ணி, அவன் புகழைப் போற்றாது, வீணாகக் காலம் கழித்தமைக்காக வருந்தும் ஏக்கக் குரலையும் கேட்க முடிகின்றது.

## 5. 2. 4. ஒப்படைத்தல்

உலகக் கட்டுக்களிலிருந்து விடுதலைபெறத் துடிக்கும் மக்கள் இறைவனிடம் தம்மை முழுமையாக ஒப்படைத்துவிடுகின்ற நிலையையும் பக்தி இலக்கியம் காட்டுகின்றது. மக்கள் தாம் உய்திபெறுவதற்குரிய ஒரே வழியாக அமைந்த இறைவனை வணங்க மறந்து, உலகியல் துன்பங்களில் ஈடுபட்டு, பொய்யான வாழ்வு வாழ்ந்த வாழ்க்கையை இனியும் தொடரவிரும்பாத நிலையில் தம்மை முழுமையாக இறைவனிடம் ஒப்படைத்துவிடும் நிலையை ஆத்ம நிவேதனம் அல்லது பரபக்தி மார்க்கம் என்பர் நாயன்மார்களும், ஆழ்வார்களும் மக்கள்

உலகியல் வட்டத்திலிருந்து இறை வட்டத்திற்குச் சென்றுயும்வண்ணம் தம்மை முழுமையாக இறைவனிடம் ஒப்படைத்துவிட்ட செயலை உணர்ச்சிவயப்பட நின்று பாடியுள்ளனர். இவ்விடங்களில் அவர்கள் இறைவன் ஒருவனையே சிக்கெனப்பிடித்துநின்ற நிலை வெளிப்படுத்தப்படுகின்றது. உலகமே கிடைப்பதாயினும், உருப்பசியின் அழகு நிறைந்த அல்குலே கிடைப்பதாயினும் அவற்றை விரும்பமாட்டோம் என்று கூறும்போது உலகியல் இன்பங்களை முற்றிலும் துறந்து இறைவனிடம் தம்மை ஒப்படைத்துவிட்ட அடைக்கல நிலையை நாம் உணர்கின்றோம். ஞாயிறு எங்கெழுந்தாலும், உலகாளும் மன்னவன் சினந்தாலும், வினைகள் அடர்த்தாலும், செல்வர்கள் சினந்தாலும், எவ்விதக் கவலையும் இல்லை என்றும், எவ்விதக் குறைகளும் நிகழப்போவதில்லை என்றும் கூறுகின்றமை இறைவனிடம் முழுமையாகத் தம்மை ஒப்படைத்துவிட்ட பின்னர் உலகியல் கட்டுக்களாகிய துன்பங்கள் வந்து அடையா என்ற உறுதியான சிந்தனையை வெளிப்படுத்துவதாக அமைகின்றது. இறைவனைக் கண்ணாரக் காணாத கண்களாலும், அவன் பெருமைகளை எடுத்து மொழிந்து போற்றாத நாவினாலும் அவன் பெருமைகளைக் கேட்காத செவிகளாலும், அவனை வணங்காத கைகளாலும், அவனை நினைக்காத மனத்தினாலும், எவ்விதப் பயனுமில்லை என்று தம்மையும், தம்வாழ்க்கையையும் ஒப்படைத்துவிட்ட உயர்நிலையை வெளிப்படுத்துமாற்றையும் உணர்கின்றோம். இந்நிலையில் மக்கள் விவரிக்கமுடியாத இன்பத்தை அடைகின்றனர். இதனைச் 'சாயுஜ்யம்' எனக் குறிப்பிடுவர்

முற்கூறியவாறு உலகியல் துன்பங்களாகிய கட்டுக்களில சிக்குண்ட மக்கள், உலகியல் வெம்மையினின்றும் விடுபட்டு இறைவனின் திருவடி நீழலாகிய தண்மையை அடைவதற்காக இறைவனிடம் தம்மை முழுமையாக ஒப்படைத்துவிடுகின்ற இறை அடிமை நிலையையே பக்தி இலக்கியம் காட்டுகின்றது என்று சமய நோக்கில் விளக்கம் கூறலாம்.

## 5. 5. சமுதாய நோக்கில் பக்தி இலக்கியம் காட்டும் அடிமைநிலை

சமுதாய நோக்கில் பக்தி இலக்கியம் காட்டும் இறை அடிமைநிலையைக் காணும்போது அது சமுதாயத்தில் மனிதனுக்கு மனிதன் அடிமையாக வாழும் அடிமைநிலையையும் பிரதிபலிப்பதாகத் தோன்றுகிறது. அடிமைநிலை என்பது பல்வேறு காலக்கட்டங்களில் உலகச் சமுதாயம் முழுவதும் காணப்பெற்ற பொதுவான தன்மை எனவும் இவ்வடிமைநிலையின் சூழல்களும் தன்மைகளும் ஒவ்வொரு சமுதாயத்தின் பண்பாட்டிற்கேற்பவும், சூழல்களுக்கேற்பவும் அமைந்து காணப்பெறும் எனவும் கருதப்பெறுகின்றது. இவ்வடிப்படையில் பக்தி இலக்கியம் காட்டும் சமுதாய அடிமை நிலையைக் குறித்துக் காண்போம்.

### 5. 5. 1. அடிமைநிலையைக் குறிக்கும் சொல்லாட்சிகள்

ஒரு சமுதாயத்தின் பண்பாட்டின் முகிழ்ப்பினை அச்சமுதாயத்தில் வழங்கும் மொழியில் காணமுடியும். மொழி அச்சமுதாயப் பண்பாட்டின் குறியீடாகத்

திகழ்கின்றது.[2] மொழியானது மனிதர்களைக் கால, இட எல்லைகளிலிருந்து விடுவித்து அவர்களுடைய பண்பாட்டை உருவாக்க அனுமதிப்பதுடன், அப்பண்பாட்டை ஒரு தலைமுறையினரிடமிருந்து மற்றொருதலைமுறையினருக்கு மாற்றும் பணியையும் செய்கிறது. இதனால், மொழியைச் சமுதாயத்தின் பண்பாட்டைக் கடத்தும் கருவியாகவும் (key to transmitting the culture) கருதுவர். இம்மொழியின் வாயிலாகவே மக்கள் தங்கள் அனுபவங்களையும், கருத்துக்களையும், அறிவினையும் பிறரிடம் பகிர்ந்துகொள்ளுகின்றனர்.[3] எனவே, ஒரு மொழியானது அது வழங்கும் சமுதாயத்தினது வரலாற்றுக் காலம் முழுவதினும், பல நூற்றாண்டுக்காலமாக அச்சமுதாயத்தில் காணப்பெறும் பொருளாதார அடித்தளங்களின் வரலாறு முழுவதினும் பேறாக விளங்குகின்றது எனக் கருதுவர். மொழி சமூகவயப்பட்ட கருத்துச் சாதனம் என்பதனால் மொழிக்கும் சமுதாயத்துக்கும் இடையே பரஸ்பரப் பாதிப்பு உண்டாகின்றது. சமூகப் பாதிப்பு என்று கூறும்போது சமுதாயத்துடன் இணைந்த அரசியல், பொருளாதார, பண்பாட்டுப் பாதிப்புக்களையும் நாம் கருத்திற்கொள்ளவேண்டும்.[4] மனிதனது உற்பத்தி நடவடிக்கைகளுடனும், அவனது தொழில் தொடர்புடைய அனைத்துத் துறைகளின் நடவடிக்கைகளுடனும் மொழி தொடர்புகொண்டுள்ளது. எனவே, மொழியானது உற்பத்தி முறையில் ஏற்படும் மாற்றங்களை அடித்தளத்தில் மாற்றம் ஏற்படுவதுவரையிலும் காத்திராமல் உடனடியாகவும், நேரடியாகவும் வெளிப்படுத்திவிடுகின்றது.[5] மேலும், மொழியைச் சமூகத்தின் அங்கம் என்ற நிலையில் நோக்கும்போது அது அச்சமூகத்தின் தொடர்பு ஊடகமாக அமைகின்றமையும் புலனாகின்றது.[6] இக்கருத்துக்களின் அடிப்படையில் பக்தி இலக்கியத்துள் இடம்பெறும் அடிமை, அடிமைநிலை என்பனவற்றைக் குறிக்கும் சொற்களைக் காணும்போது அவை அக்காலச் சமுதாயத்தில் நிலவிய உற்பத்தி முறையின் அடிப்படையில் தோன்றிய சமுதாய அடிமைநிலையைப் பற்றிய சிந்தனையின் வெளிப்பாடுகளாகவும் அமைகின்றன என எண்ணத் தோன்றுகின்றது. பக்தி இலக்கியத்துள் அடிமை,[7] அடியான்,[8] ஆள்,[9] குடி,[10] தாதன்,[11] தாதி,[12] தொழுத்தை,[13] தொழும்பர்,[14] தொழும்பு,[15] பட்டி (மீளா அடிமை),[16] வாரம்[17] என்ற சொற்கள் அடிமைகளையும், ஆட்செய்தல்,[18] ஆண்டுகொள்ளுதல்,[19] குடிமை கொள்ளல்[20] என்பன அடிமைநிலையையும் குறிப்பிடுவனவாய் அமைந்து காணப்பெறுகின்றன.

### 5. 3. 2. அடிமை நிலைக்குரிய சூழல்கள்

உலகச் சமுதாயங்களில் அடிமைநிலையின் தோற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் பல்வேறு சூழல்கள் அமைந்துள்ளமையை அறியமுடிகின்றது. அவற்றுள்.

1. நிலவுரிமை அமைப்பு
2. வறுமை
3. பஞ்சம்
4. கடன்படல்
5. அடிமை வாணிபம்

6. ஒற்றிவைத்தல்
போன்ற பொருளாதாரச் சூழல்களும்,
7. சாதிமுறை
8. வருணமுறை
9. பிறப்பு
10. திருமணம்
11. மரபு
12. கணவன் கொடுமை
போன்ற சமுதாயச் சூழல்களும்,
13. குடிமக்களாகும் உரிமையின்மை
14. போர்கள்
15. வரிக்கொடுமை
போன்ற அரசியல் சூழல்களும்
16. கடத்தல்காரர்கள் அல்லது கடற்கொள்ளையர்களால் பிடிக்கப்பெறல்
17. உழைப்பில் விருப்பமின்மை
18 ஆளைக்கும் மக்களின் பற்றாக்குறை
19. விஞ்ஞானக் கண்டுபிடிப்புகளின் அருகிய நிலை
20. இயற்கை வளக்குறைவு
21 சூதாட்டம்
22. குற்றங்களுக்கான தண்டனை

போன்ற பிற சூழல்களும் குறிப்பிடற்குரியனவாகும். இச்சூழல்களுள் சில பக்தி இலக்கியத்தில் இடம்பெறுமாற்றையும் காணலாம்.

### 5. 3. 2. 1. பொருளாதாரச் சூழல்கள்

பொருளாதாரச் சூழல்களும், காரணிகளும் மக்களுடைய வாழ்க்கையைத் தீர்மானிப்பதில் பெரும் பங்கு வகிக்கின்றன. பொருளாதார நிலையில் பிறரைச் சார்ந்திருத்தலும், வறுமை நிலையும் (Economic dependance & poverty) அவற்றால் பாதிப்பிற்குள்ளான மக்கட்பிரிவினரை அடிமைநிலைக்கு உள்ளாகுமாறு வலியுறுத்துகின்றன.[21] இக்கருத்தினை இன்றையப் பொருளாதார வல்லுநர்களும் ஏற்றுக்கொள்ளுகின்றனர். தாழ்த்தப்பெற்ற, ஒதுக்கப்பெற்ற சாதிகளை அடிப்படையாகக் கொண்டு இந்திய அளவில் நடத்தப்பெற்ற புள்ளியியல் ஆய்வுகளும் பொருளாதார நிலையில் பிறரைச் சார்ந்திருக்கும் நிலையானது ஒரு மனிதனை அல்லது சமுதாயத்தை ஊறுபடத்தக்க நிலைக்கும், இழிந்த நிலைக்கும் மாற்றிவிடுகின்றது என்ற முடிபையே தருகின்றன.[22] பழங்கால இந்தியாவிலும் பொருளாதார நிலையில் வீழ்ச்சியுற்றிருந்த தாழ்ந்த வகுப்பினர் அடிமை நிலைக்குத் தள்ளப்பெற்று விவசாய வேலைகளுக்காகப் பயன்படுத்தப்பெற்றமையை வரலாறும் காட்டுகின்றது.[23] இவர்கள் அப்புகாமா ([illegible]) என அழைக்கப்பெற்றனர். எனவே, பொருளாதாரக் காரணிகள் அடிமைநிலையின் தோற்றத்திற்குரிய சூழல்களாக அமைகின்றன எனலாம். இனி, பக்தி இலக்கியம் காட்டும் பொருளாதாரச் சூழல்களைக் காண்போம்.

5. 5. 2. 1. 1. நிலவுடைமை அமைப்பு

நிலவுடைமை அமைப்புச் சமுதாயத்தில் பெருமளவு நிலங்களை உடைமையாகக் கொண்டிருந்தவர்களை நிலவுரிமையற்ற தாழ்ந்த வகுப்பினர் அண்டி வாழ்ந்தமையுடன், அவர்கள் பலவழிகளில் நிலவுரிமையாளர்களால் சுரண்டவும் பெற்றனர். இதனால் நிலவுரிமையற்ற உழைக்கும் வகுப்பினர் உயர்வகுப்பினரின்கீழ் அடிமைநிலையில் வாழவேண்டிய சூழல் உருவானது. நிலவுடைமை அமைப்பினால் உழைக்கும் விவசாய மக்கள் அடிமைகளாகப் பெற்றமையுடன், தினசரி வாழ்க்கையில் அடிமைநிலை மிக இன்றியமையாத தேவையாகவும் அமைந்து விட்டமையைக் கிரேக்க, உரோமானிய வரலாறுகள் காட்டுகின்றன.[24] பக்தி இலக்கியத்திலும் நிலவுரிமைச் சமுதாயத்தில் காணப்பெறும் உறவுமுறைகளை ஒத்த நிலையிலான உறவுமுறைகள் சுட்டப்பெறுகின்றமையை அறியலாம்.

சமயம் என்பது வெறும் நம்பிக்கைகளின் தொகுதி மட்டும் அன்று. அது சமூக உறவுகளுடனும், உற்பத்தி உறவுகளுடனும் மிக நெருங்கிய தொடர்புடையதாகவும் விளக்குகின்றது. குறிப்பாக நிலவுரிமை அமைப்பில் இடம்பெறும் சமூக உற்பத்தி உறவின் இன்றியமையாத அங்கமாகத் திகழ்கின்றது. எனவே பக்தி இலக்கியத்தை நிலவுரிமை அமைப்புடன் தொடர்புடையதாகக் கருதுவர். தமிழகப் பக்தி இயக்கக் கருத்துக்களுக்கும், நிலமானியச் சமூக அமைப்புக்கும் இடையே இணை உள்ளது என்றும், பக்தி இயக்கம் தென்னிந்திய நிலமானிய அமைப்பைக் காட்டுகின்றது என்றும் கருதுவாருளர்.[25] நிலவுரிமை வளர்ச்சியுற்ற காலக்கட்டத்திலேயே ஆன்மீகக் கண்ணோட்டம் வளர்ச்சியுற்றது என்ற சிந்தனையும் காணப்பெறுகின்றது.[26]

பக்தி இலக்கியத்துள் சுட்டப்பெறும் தாசமார்க்கம் - அதாவது ஆண்டான் அடிமை உறவு-முறை - அக்காலச் சமுதாயத்தில் ஓரளவு இறுக்கம்பெற்றவந்த நிலவுரிமை அமைப்பில் காணப்பெற்ற நிலவுரிமையாளர் - பண்ணை அடிமைகள் (Land lords-serfs) என்ற சமுதாய உற்பத்தி உறவுமுறையை வெளிப்படுத்துவதாக எண்ண முடிகின்றது. மேலும், தெய்வங்களை மனித நிலைப்படுத்தி, அம்மனித நிலையின் இன்றியமையா உணர்ச்சிகளைத் தெய்வங்களின் மேல் ஏற்றிக்கூறி, முழு மனித அனுபவங்களையும் சமூக அனுபவங்களின் குறியீடுகளால் வெளிப்படுத்தும் முயற்சியே பக்தி நெறி என்ற விளக்கமும் அளிக்கப்பெறுகின்றது.[27] இக்கருத்திற்கிணங்கவும் பக்தி இலக்கியத்துள் இறைவன் அப்பன், அன்னை, ஆண்டான், ஐயன், மாமி, மனைவி, சுற்றம், உடன்பிறந்தான், தோழன், காதலன் என மனித நிலைப்படுத்தும் போக்கைக் காண்கின்றோம். இவ்வுறவுகளுள் ஆண்டான் - அடிமை உறவுமுறையானது அக்காலச் சமுதாயத்தில் நிலவிய நிலவுரிமை அமைப்பின் ஆண்டான் - அடிமை உறவு முறையையே பிரதிபலிப்பதாக தோன்றுகின்றது.

## 5. 3. 2. 1. 2. வறுமை, பஞ்சம், கடன்படல்

சமுதாயத்தில் காணப்பெற்ற பொருளாதார ஏற்றத்தாழ்வு நிலைகளால் பொருளாதார வளம் பெற்ற மேட்டுக் குடியினர் மேலும்மேலும் செல்வத்தைப் பெருக்கிக் கொண்டிருக்க, வறியவர்கள் வாழ்க்கை நடத்துவதற்கே இயலாத வறுமை நிலையை அடைந்தனர். இவ்வறுமை நிலையுடன் இயற்கையின் சீற்றத்தின் விளைவாகிய பஞ்சத்தால் வறியவர் வாழ்க்கை நடத்துவதற்காகச் செல்வர்களிடம் கடன் வாங்கினர். தாம் பெற்ற கடனைத் திருப்பிச் செலுத்த முடியாத நிலையில் அவர்களிடம் முதலில் கூலிக்காக உழைக்கும் நிலை உருவானது. இந்நிலையிலும் கடனைத் தீர்க்க முடியாது போகவே தம் குழந்தைகளை அடிமைகளாகக் கொடுத்து, இறுதியில் வேறு வழியின்றித் தம்மையும் அடிமைகளாக்கும் அவல நிலைக்குள்ளாயினர் என்பதை உலகச் சமுதாயத்தில் காண்கிறோம். வறுமை காரணமாக அமைநிலை அடைந்தவர்கள் தரித்திரதாசர் (daridradasas) என அழைக்கப்பெற்றனர்.[28] கடன் காரணமாக அடிமைநிலையை ஏற்றுக் கொண்டவர்கள் தண்டதாசர்கள் (dandadasas) எனப்பெற்றனர். இப்பெயர்களே இவர்கள் அடிமைகளாக மாறியமைக்கான சூழல்களைக் காட்டுவனவாக அமைகின்றன. வறுமை, பஞ்சம், கடன் காரணமாகத் தாமே அடிமைநிலையை ஏற்றுக்கொண்டவர்கள் (voluntary slaves) என்றும், பிறர் வற்புறுத்தலின் மூலம் அடிமை நிலையை அடைந்தவர்கள் (Non-voluntary slaves) என்றும் அடிமைகளில் இரு நிலையினர் காணப்பெற்றனர். கடன் வாங்கியவர்கள் தாம்பெற்ற கடனைத் திருப்பிச் செலுத்த முடியாது போனால் தத்தம் சாதிக்குத் தக்க வேலை செய்து அக்கடனைத் தீர்க்கவேண்டும் என்று மனுதருமச் சாத்திரம் அறிவுரை கூறுகின்றது.[29] இவற்றால் வறுமை, பஞ்சம், கடன் போன்றவை அடிமைநிலை தோன்றுதற்குரிய சூழல்களாக அமைகின்றமை தெரிகின்றது.

பக்தி இலக்கியத்திலும் அக்காலச் சமுதாயத்தில் நிலவிய பொருளாதார ஏற்றத்தாழ்வுகள், வறுமைநிலை, பஞ்சம், கடன்படல் போன்றனவற்றைப் பற்றிய குறிப்புக்களைக் காண்கிறோம்.[30] வறுமையின் காரணமாகச் செல்வர்களை அண்டியும், அவர்களைப் போற்றிப்புகழ்ந்தும், செல்வர்களால் இகழப்பெற்றும், இயலாமை நிலையிலும் வாழ்ந்துள்ளனர். இவ்வறுமை நிலையின் காரணமாக அடிமைநிலையை ஏற்றுக்கொண்டவர்களைப் பற்றிய செய்திகளைக் கல்வெட்டுக்களிலும் காண்கின்றோம். குலோத்துங்க சோழனின் பன்னிரண்டு, பதின்மூன்றாம் ஆட்சியாண்டுகளில் கடும் பஞ்சம் ஏற்படவே, உழவுத்தொழில் செய்துவந்த வேளாளர் ஒருவர் தன்னையும், தன் இரு குழந்தைகளையும் இருபத்தெட்டுப்படி அரிசிக்காகவும், நூற்றுப்பத்துக் காசுக்காகவும் திருப்பிரம்மபுரத்திலுள்ள மடம் ஒன்றிற்கு அடிமைகள் ஆக்கிய நிகழ்ச்சியைச் சான்றாகக் கூறலாம்.[31]

திருமங்கையாழ்வார் கூறை, சோறு இவை தந்து எனை ஆண்டுகொள் என இறைவனிடம் தம்மை அடிமையாக ஏற்றுக்கொள்ளுமாறு இறைஞ்சித் துடிக்கின்ற போதும்,[32] பெரியாழ்வார் தமக்குக் கூறை, சோறு முதலியன கொடுக்கவேண்டாம் என்றும், ஆண்டுகொண்டால் மட்டும்போதும் என்றும்

வேண்டுகின்றபோதும் [33] சமுதாயத்தில் நிலவிய வறுமையின் காரணமாக, உயிர்வாழ்வதற்கு அடிப்படைத் தேவைகளான உணவின்பொருட்டும், கூறையின்பொருட்டும் சிலர் அடிமைநிலையை ஏற்றுக்கொள்ளும் நிலை காணப்பெற்றது என்ற கருத்து வெளிப்படுவதாகத் தோன்றுகின்றது. மனுதருமச் சாத்திரத்திற்கு உரையெழுதும் மெத்காதிதி (Methatiti) என்பவர் கடனுக்காக அடிமைநிலை அடைந்தவர்களைப் பக்ததாசர் (Bhaktadasa) எனக்குறிப்பிடுகின்றார்.[34] இவ்விடத்தில் அவர் இவர்களைக் கூலி உழைப்பாளர் எனச் சுட்டுகின்றார். பின்னர் அவரே அடிமை வகைகளை விளக்கும் மனுதருமச் சூத்திரத்தின் உரைப்பகுதியில் [35] பக்த தாசர் என்ற சொல்லுக்கு உணவின்பொருட்டு அடிமைநிலையை ஏற்றுக்கொண்டவர் என்ற விளக்கமும் அளிக்கின்றார். திருமங்கையாழ்வாரும், பெரியாழ்வாரும் தரும் பக்தி இலக்கியக் குறிப்புக்கள் இச்செய்தியுடன் ஒத்துள்ளமை இவண் சுட்டுதற்குரியனவாகும்.

### 5. 3. 2. 1. 3. விலைக்கு விற்றலும், வாங்குதலும்

பிறரை அடிமைகளாக விலைக்கு விற்பதனாலும், விலைக்கு வாங்குவதாலும் அடிமைகளின் எண்ணிக்கை வளர்ச்சியுற்றமையைப் பிற சமுதாயங்களில் காண்கின்றோம். பிற சமுதாயங்களில் அடிமைகளை வாங்குதலும் விற்றலும் பெருமளவில் நடைபெற்றமையால் அடிமைச் சந்தைகளே (slave markets) காணப்பெற்றன. பழங்காலக் கிரேக்கத்தில் அடிமைவாணிபம் இலாபம் தரத்தக்கதொரு தொழிலாக விளங்கியது. சியோஸ் (Chios) மக்கள் அடிமைவாணிபத்தை (slave trade) ஓர் இன்றியமையாத தொழிலாகக் கொண்டிருந்தனர். கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் டிலாஸ் (Delos) தீவு அடிமை வாணிபத்தின் சிறப்பு மையமாகச் செயல்பட்டது. இதைப் போன்று உரோமும் சிசரோ காலத்தில் அடிமை வாணிபத்தின் வர்த்தகச் சாலையாகத் (emporium) திகழ்ந்துள்ளது.[36] ஆப்பிரிக்காவில் அடிமைகள் பண்ட மாற்றுப்பொருளாக மதிக்கப்பெற்றமைக்கும்.[37] பழங்கால இந்தியாவில் அடிமைகள் வாங்கப்பெற்றமைக்கும், விற்கப்பெற்றமைக்கும் சான்றுகள் உள்ளன. லேகபடகாத்தியில் அடிமைகளை விற்பதற்குரிய முறைகள் விளக்கப்பெறுகின்றன.[38] பாலியா (Ballia) என்பவன் துருக்கியிலிருந்து அடிமைகளைக் கொண்டுவந்து காஷ்மீர மன்னனுக்கு விற்றுள்ளான். அம்மன்னன் அவ்வடிமைகளைத் தன் அரண்மனை அந்தப்புறப்பணிகளுக்குப் பயன்படுத்தியுள்ளான்.[39] எனினும், பழங்கால இந்தியாவில் அடிமைச் சந்தைகள் இருந்துள்ளன என்பதற்குரிய சான்றுகள் கிடைக்கவில்லை.

தமிழகத்தில் சிலர் தம்மை அடிமைகளாகக் பிறரிடம் விற்றுள்ளமைக்கும், சிலர் பிறரால் அடிமைகளாக விற்கப்பெற்றுள்ளமைக்கும் கல்வெட்டுக்குறிப்புக்கள் கிடைக்கின்றன. பதினைந்து உறுப்பினர்களைக் கொண்ட குடும்பம் ஒன்றும், ஏழு உறுப்பினர்களைக் கொண்ட குடும்பம் ஒன்றும் தம்மை அடிமைகளாகத் தஞ்சை மாவட்டத்திலுள்ள மேலப் பெரும்பள்ளம் கோயிலுக்கு விற்றுள்ளன.[40] நம்பநம்பிகாடுகாண்நங்கை தம் மகளையும், பேரன் பேத்திகளையும் முப்பது காசுக்கும், அரையன்பெருங்காதி என்ற பெண் தன்னையும் தன்னுடன்

இருவரையும் முப்பது காசுக்கும், நான்கு பெண்கள் தம்மைத் திருவாலங்காடுடைய நாயனார் கோயிலுக்கு ஏழுநூறு காசுக்கும் விற்றுள்ளனர்.[41] பக்தி இலக்கியத்தில் நாயன்மார்களும் ஆழ்வார்களும் இறைவனிடம் தாம் விரும்பியாட்பட்டமையைப் பல்வேறு இடங்களில் எடுத்துமொழிகின்றனர்.[42] இக்குறிப்பைக் கல்வெட்டுச் செய்திகளுடன் ஒப்பிட்டு நோக்கும்போது சமுதாயத்தில் ஒருவரிடம் தம்மை அடிமையாக ஒப்படைக்கும் நிலையையே காட்டுவதாக எண்ணத் தோன்றுகின்றது.

தாமாக விரும்பி அடிமைநிலையை ஏற்றுக்கொள்வதற்கு மாறாகப் பிறரால் அடிமைகளாக விற்கப்பெறும் நிலையும் சமுதாயத்தில் காணப்பெற்றது எனக் கருத இடமுள்ளது. மூன்றாம் குலோத்துங்க சோழனின் திருவாலங்காட்டு வேதாரண்யேசுவரர் கோயிற் கல்வெட்டு மடத்து நிலங்களில் வேலை செய்வதற்காக ஆண், பெண் அடிமைகள் விற்கப்பெற்றமையைப் பதிவுசெய்துள்ளது.[43] தஞ்சைமாவட்டம் மேலப்பெரும்பள்ளம் கல்வெட்டு ஆறுநபர்கள் பதின்மூன்று காசுக்கும், பதினைந்து நபர்கள் முப்பது காசுக்கும், ஏழு நபர்கள் முப்பது காசுக்கும் விற்கப்பெற்றமையைக் காட்டுகின்றது. இறையடியார்கள் உலகியல் துன்பங்களிலிருந்து தம்மை உய்வித்தருள வேண்டும் என இறைவனிடம் இறைஞ்சும் போது தம்மை விலை கொடுத்து அடிமையாக ஏற்றுக்கொள்ள வேண்டும் என்றும்.[45] இறைவனுக்குத் தம்மீதுள்ள உரிமையைக் கூறுமிடத்தில் இறைவன் தம்மை அடிமைகளாக விற்கும் உரிமையுடையவன் என்றும்[46] கூறுமாற்றைக் காண்கின்றோம். இவை அக்காலச் சமுதாயத்தில் அடிமைகள் விலைகொடுத்து வாங்கப்பெறும் நிலையிலும், விலைக்கு விற்கப்பெறும் நிலையிலும் காணப்பெற்றனர் என்பதைச் சுட்டுவனவாய் அமைகின்றன எனக் கருதலாம். எனவே, அடிமைநிலை வளர்ச்சியுறுவதற்குரிய சூழல்களுள் ஒன்றாகிய அடிமைகளை விலைக்கு வாங்குதலும், விற்றலும் ஆகிய செயல்கள் அக்காலச் சமுதாயத்தில் காணப்பெற்றன என்பதற்குக் கல்வெட்டுச் செய்திகளுடன் பொருந்தும் வகையில் பக்தி இலக்கியச் செய்திகளும் அமைந்துள்ளன எனலாம். ஆனால், பிற சமுதாயங்களைப்போன்று அடிமை வாணிபம் காணப்பெற்றது என்றோ, அடிமைச் சந்தைகள் காணப்பெற்றன என்றோ கருதுவதற்குரிய குறிப்புக்கள் இல்லை.

### 5. 3. 2. 1. 4. ஒற்றிவைத்தல்

பிற சமுதாயங்களில் வறுமை காரணமாகத் தம்மை ஒற்றிவைத்ததன் மூலமும் அடிமைநிலை வளர்ச்சியுற்றமையை அறிய முடிகின்றது. கௌடில்யம் ஒற்றிவைத்தல் மூலம் அடிமையானவர்களை ஆகிதகா (ahitaka) என்றும், நாரதா ஆகிதா (ahita) அல்லது ஸ்வாமிகின் (svamikin) என்றும் குறிப்பிடுகின்றன. அப்பர் அடிகள் இறைவன் தன்னை ஐம்புலன்களுக்கும் ஒற்றிவைத்ததாகக் கூறுகின்றார்.[48] இறைவனிடம் அப்பர்பெருமான் தம்மை ஒற்றியாக ஏற்று அடிமையாக்கிக் கொள்ளவேண்டும் என் இறைஞ்சி இறைவனின் திருவடிப்பேற்றை

அடையத்துடிக்கின்றார்.[49] சுந்தரர் இறைவனின் பெருமைகளை எண்ணி வியக்குமிடத்து அற்றபோதும், அலந்த போதும் ஆபத்காலத்திலும் அடிகேள் உம்மை ஒற்றிவைத்து உண்ணலாமே என்கின்றார்.[50] இவற்றால் சமுதாயத்தில் ஒருவரைப் பிறரிடம் ஒற்றிவைக்கும் நிலை காணப்பெற்றது என்ற சமுதாயச் சிந்தனை வெளிப்படுகின்றது.

### 5. 3. 2. 2. சாதிமுறை

குறிப்பிட்ட சில சூழல்களின் காரணமாக எப்பிரிவினர்களும் அடிமைநிலையை அடைய வாய்ப்பு உள்ளதெனினும், பெரும்பாலான அடிமைகள் தாழ்ந்த சாதியினராகவே காணப்பெறுகின்றனர் [51] என்ற கருத்து சாதிமுறை அடிமைநிலைக்கு வழி அமைத்துக் கொடுக்கும் கொடிய செயலுக்கு உள்ளாக்குகின்றமையைக் காட்டுகின்றது. சாதிமுறையின் அடிப்படையில் தாழ்நிலையிலுள்ளவர்கள் உயர்நிலையுற்றவர்களின் சமுதாயச் செல்வாக்குக் காரணமாகப் பல்வேறு இயலாமை நிலைகளையுடைவர்களாக வாழ்கின்றனர். இவ்வியலாமைநிலைகள் அவர்களை அடிமைநிலைக்கு உள்ளாக்கி விடுகின்றன. இதனால்தான் சாதிமுறையானது அடிமைநிலையை ஒருதலைமுறையினரிடமிருந்து மற்றொரு தலைமுறையினரிடத்து மாற்றுகின்ற மாற்றுப்பட்டையாகச் (transmitting belt) செயலாற்றுகின்றது எனக் கருதுகின்றனர்.[52] பக்தி இலக்கியத்திலும் அடிமைநிலையின் தோற்றத்திற்குரிய காரணங்களுள் ஒன்றாகிய சாதிமுறையின் தன்மைகளும், சாதிப்பிரிவுகளும் இடம்பெற்றிருந்தன என்பதற்குரிய குறிப்புக்கள் நிரம்ப உள்ளன.

முற்கூறியவற்றால் பிறசமுதாயங்களில் அடிமைநிலையின் தோற்றத்திற்கும், வளர்ச்சிக்கும் உரிய சூழல்களாக நிலவியனவற்றுள் சில பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் இடம்பெற்றிருந்தன என்பது புலனாகின்றது.

### 5. 3. 3. அடிமைகொள்ளும் நிலைகள்

ஒருவர் பிறரை அடிமையாக்கிக் கொள்ளும் நிலையைக் காணுமிடத்துப் பக்தி இலக்கியத்துள் எழுதி அடிமைகொள்ளல், பொறியொற்றி அடிமைகொள்ளல், வழிவழியாக அடிமைகொள்ளல் என்ற மூவகை நிலைகளை உணரமுடிகின்றது.

### 5. 3. 3. 1. எழுதி அடிமைகொள்வல்

தமிழகத்திலுள்ள ஒவ்வோர் ஊரிலும் எழுதப்பெற்ற ஆவணங்களைப் பாதுகாத்து வைப்பதற்குரிய ஆவணக்காப்பகங்கள் அல்லது ஆவணக்களரிகள் நிறுவப்பெற்றிருந்தன.[53] இவண் நிலங்களையோ, பிறபொருட்களையோ வாங்கும்போதும் விற்கும்போதும் ஆவணங்கள் எழுதிப் பதிவு செய்யப்பெறுவதைப் போன்று அடிமைகளை வாங்கும்போதும், விற்கும்போது பதிவு செய்யும் வழக்கமும் காணப்பெற்றது என்று கருதுவதற்குரிய வாய்ப்பு உள்ளது. அடிமைகளை

வாங்கியமையையும், விற்றமையையும் பதிவுசெய்த ஆவணங்களை ஆள்விலைப்பிரமாண இசைவுச்சீட்டு என்று அழைத்துள்ளனர். மனுதருமச் சாத்திரம் இதனைத் தாசபத்திரம் எனக் குறிப்பிடுகின்றது. திருக்காரோணம் கணக்கர் இருவர் தம் அடிமைப்பெண்களைச் சூலமங்கலம் கோயிலுக்கு ஆள்விலைப் பிரமாண இசைவுச்சீட்டு எழுதிக்கொடுத்து விற்றுள்ளனர். [54] அக்காலத்தில் இவ்விசைவுச்சீட்டு ஓலையில் எழுதப்பெற்றுவந்தது. அவ்வாறு ஓலையில் எழுதும்போது "இவ்வோலையைப் பிடிபாடாகக்கொண்டு" என்ற தொடர் குறிக்கப்பெற்றமையையும் அறியலாம்.[55] பெரியபுராணம் அடிமைப்பத்திரத்தை ஆளோலை எனக் குறிக்கின்றது. [56]

சுந்தரரைத் தடுத்தாட்கொள்ளும் திருவுளக்குறிப்புடன் மறையவர் வடிவில் மாற்றுருவம் கொண்டு வந்த இறைவன் சுந்தரர் தமக்கு அடிமை எனத் திருமண மண்டபத்திலுள்ள அனைவரும் ஒப்புக்கொள்ளும் வண்ணம் தம்மிடம் ஆளோலை உள்ளதாகக் கூறுகின்றார். சுந்தரர் அந்தணர்கள் அடிமையாதல் வழக்கன்றாகையால் தாமும் அடிமை அல்லன் எனக் கூறி மறுக்கின்றார். இறைவன் அந்தணர்கள் கூடியுள்ள அறங்கூறவைக்குச் சென்று சுந்தரர் தமக்கு அடிமை என முறையிட்டு ஆளோலையையும் சான்றாகக் காட்டுகின்றார். இந்நிகழ்ச்சியானது அக்காலச் சமுதாயத்தில் அடிமைகள் என்பதற்கு ஆவணம் எழுதும் வழக்கம் காணப்பெற்றது எனக் கருதுவதற்கு வகை செய்கின்றது. மேலும், இந்நிகழ்ச்சி மூலம் அடிமைகொள்பவர், அடிமையாபவர் ஆகிய இருதிறத்தாரின் பெயர்களும் பிறவும் ஆளோலையில் எழுதப்பெற்றிருக்கும் என்பதையும் அறியமுடிகின்றது. இவ்வாளோலையில் இன்னாருக்கு இன்னார் அடிமையாவார் எனப் பிறர் நம்பும்படி சான்று அளிப்பவரும் கையொப்பமிட்டிருப்பர். இக்கையொப்பத்தை நேர்எழுத்து அல்லது மேல்எழுத்து எனக் குறிப்பிடுவர். திருமண மண்டபத்தில் இறைவன் காட்டிய ஆளோலையைச் சுந்தரர் கிழித்தெறிந்துவிடுகின்றார். இதனைக் கண்ட இறைவன் சுந்தரர் கிழித்தெறிந்த ஆளோலை படியோலையே அன்றி மூலவோலை அன்று என்றும், மூலவோலையை நான் பாதுகாப்பாக வைத்திருக்கிறேன் என்றும் கூறி மூலவோலையை எடுத்துக்காட்டுகின்றார்.[57] இதன் மூலம் ஆளோலை எழுதுங்கால் மூலவோலையும் அதற்குரிய படியோலையும் எழுதும் மரபு உண்டு என்பது புலனாகின்றது.

பழங்காலத்தில் சீனாவிலும் அடிமைகளை வாங்கியமைக்கும், விற்றமைக்கும் ஒப்பந்தப்பத்திரம் எழுதும் வழக்கம் காணப்பெற்றது. இப்பத்திரங்களின் அமைப்பானது வீடு, நிலம், விலங்குகள் போன்றவற்றை வாங்குவதற்கும், விற்பதற்கும் உரிய பத்திரங்களின் அமைப்பை ஒத்துக் காணப்பெற்றது. அடிமைகளை வாங்குவோரும், விற்போரும் நேருக்கு நேராகக் கலந்துபேசி, உறுதிசெய்யப்பெற்ற பின்னரே இப்பத்திரங்கள் எழுதப்பெற்றன. மேலும், அடிமைகளை வாங்கியமைக்கும், விற்றமைக்கும் அரசின் அங்காடி அலுவலருடைய (marketing officer) அலுவலக முத்திரை பதிக்கப்பெற்ற சான்றிதழும் வழங்கப்பெற்றது. இச்சான்றிதழை அடிமை உடைமையாளர்கள்

மிகவும் பாதுகாப்பானதாகக் கருதினர்.[58] எனவே, பிற சமுதாயங்களைப் போன்று எழுதி அடிமைகொள்ளும் வழக்கம் சமுதாயத்தில் காணப்பெற்றது எனக் கருதுவதற்குச் சுந்தரர் வரலாறும் துணையாக அமைகின்றது எனலாம்.

பக்தி இலக்கியத்துள் இறைவன் தம்மிடத்து உண்மை அன்புகொண்ட அடியார்கள் தமக்கு அடிமைகள் என்று விலையாக எழுதிய ஆவணத்தை உடையவன் என்றும்[59] எழுதப்பெற்ற ஆவணத்தால் அன்பர்களை அடிமைகளாக ஆள்பவன் என்றும் [60] பல இடங்களில் குறிக்கப்பெறுகின்றன. இக்குறிப்புக்களும் அக்காலத்தில் எழுதி அடிமைகொள்ளும் நிலை காணப்பெற்றமையைச் சுட்டுவனவாகத் தோன்றுகின்றது. மாணிக்கவாசகர் அடிமையோலை எழுதுவதை முறிசெய்தல் எனக் குறிப்பிடுகின்றார்.[61] பெரியாழ்வாரும் இச்சமுதாய நிலையை வெளிப்படுத்தும் வகையில் அடியேங்களாகிய நாங்கள் என்று உனக்கு அடிமைகள் என்று எழுத்துப்பட்டோமோ அன்று முதலே உய்தியடைந்துவிட்டோம் என்று இறைவனிடம் உளம் மகிழ்ந்து உரைக்கின்றார்.

## 5. 3. 3. 2. பொறியொற்றி அடிமைகொள்ளல்

பிற நாடுகளில் அடிமைகள் உடைமையாளர்களின் கொடுமைகள் பொறுக்கலாற்றாது தப்பியோடிவிட்டால் அவர்களை எளிதில் கண்டுபிடித்து கொண்டுவருவதற்காகவும், அடிமைகளின் உடைமையாளர் இன்னார் எனக் கண்டுகொள்வதற்றாகவும், அடிமைகள் இந்த நாட்டைச் சார்ந்தவர்கள் என இனம் காண்பதற்காகவும் அவர்களுடைய உடம்பில் ஏதேனும் ஒரு அடையாளத்தைப் பொறியாக ஒற்றும் நிலை காணப்பெற்றது. உரோம் நாட்டில் அடிமைகளின் முகத்தில் உரிமையாளர்களின் முத்திரையை அடையாளமாகப் பொறித்துள்ளனர்.[63] கம்போடியாவில் அடிமைகளின் உடம்பில் நீலநிற வர்ணத்தை அடையாளமாக இட்டிருந்தனர். சாதகநூல்கள் அடிமைகளின் அடையாளமாகத் தலைமயிரைச் சுற்றிலும் மொட்டையாக்கி, நடுவில் உச்சிக்கொண்டை வைத்தமையைக் காட்டுகின்றன. [64] கதாசரிதசாகராவில் அடிமைகளின் உடம்பில் இரும்பினால் நாயின் பாதங்கள் போன்று அடையாளமிடப்பெற்றமை[65] சுட்டப்பெறுகின்றது.

அப்பர்பெருமான் இறைவனிடம் தம்மை அடிமையாக ஏற்றருளவேண்டும் என இறைஞ்சும்போது சிவபெருமானின் படையாகிய ஒப்பற்ற, ஒளிமிக்க சூல முத்திரையினையும், சிவபெருமானின் ஊர்தியாகிய இடப முத்திரையையும் தம்மேல் பொறித்து ஆண்டுகொள்ள வேண்டும் என வேண்டுகின்றார்.[66] அப்பர்பெருமானின் வேண்டுகோளின்படி சிவபூதங்கள் அவருடைய தோளில் சூலமுத்திரையினைப் பொறித்த நிகழ்ச்சியையும் அவர் வரலாறு மூலம் அறிகின்றோம்.[67] திருமூலர் இறைவன் தம்மை அடிமையாகக் பொறி நல்கி ஆண்டுகொண்ட திருவருட்செயலை எண்ணி உளம் மகிழ்கின்றார்[70] பெரியாழ்வார் திருமால் தம்மேல் சக்கரப்பொறியினை ஒற்றி ஆண்டுகொண்டமையையும்[69] குறிப்பிடுகின்றார். இவண் ஆண்டவனாகிய

இறைவனின் முத்திரை அல்லது அடையாளம் அடியவரின் உடம்பில் பொறிக்கப்பெற்று அடிமை கொண்ட நிலை காட்டப்பெறுமாற்றால், அக்காலச் சமுதாயத்தில் அடிமைகளுக்கு உடைமையாளர்களின் அடையாளங்களைப் பொறிக்கும் வழக்கம் நிலவியிருந்தது என்று எண்ணத் தோன்றுகின்றது. இவ்வாறு அடிமைகளுக்கு அடையாளமிடும் வழக்கம் உண்மையைக் கல்வெட்டுச் செய்திகளும் நிறுவுகின்றன. சிவன் கோயிலில் காணப்பெற்ற தேவரடியார்களுக்கு அவர்களின் பாதங்களில் சூலச்சின்னமும்,[71] திருமால் கோயில் தேவரடியார்களுக்குச் சக்கரப்பொறியும்[72] பொறிக்கப் பெற்றமையையும், அரண்மனைகளில் தொண்டுசெய்யும் அடிமைகளுக்கு அரசர்களின் சின்னங்கள் பொறிக்கப்பெற்றமையையும்[73] கல்வெட்டுக்கள் காட்டுகின்றன. ஒருசமயம் அரண்மனையிலுள்ள அடிமைகள் சிலரைக் கோயிலுக்குக் கொடையாகக் கொடுத்தபோது அவர்களுக்குத் தவறுதலான முத்திரை பொறிக்கப்பெற்றமையால், அம்முத்திரை மாற்றப்பெற்று உரிய முத்திரை இடப்பெற்றமையையும் மற்றொரு கல்வெட்டால் அறியமுடிகின்றது.[74] இவற்றால் பொறியொற்றி அடிமைகொள்ளும் நிலை சமுதாயத்தில் நிலவியமை தெரியவருகின்றது.

### 5. 3. 3. 3. வழிவழி அடிமைகொள்வல்

உலகச் சமுதாயங்களில் அடிமைகளை மணந்தவர்களும், அடிமைப்பெற்றோர்களுக்குப் பிறந்தவர்களும் அடிமைகளாகவே கருதப்பெற்ற நிலையை அறியமுடிகின்றது. மேலும், சிலர் வறுமை, கடன் போன்ற காரணங்களால் தம்மை மட்டுமன்றித் தம் குடும்ப உறுப்பினர் அனைவரையும் அடிமைகளாகக் கொடுத்துவிட்டனர். இவற்றால் சமுதாயத்தில் வழிவ்ழியாக அடிமைநிலைக்குள்ளாகும் சூழல் உருவாகியது. பக்தி இலக்கியத்திலும் வழிவழியாக அடிமைகொள்ளும் நிலையைச் சுட்டுவனவாகச் சில சொற்களும், சொற்றொடர்களும் காணப்பெறுகின்றன. ஏழ் பிறப்பும் அடிமையாதல், [75] வழிவழி அடிமையாதல்.[76] குடிகுடி வழிவந்து ஆட்செய்தல்,[77] தந்தை, தந்தை. தாதை, அப்பால் எழுவர் அடிமைசெய்தல்,[78] பழவடிமை.[79] தந்தை, தந்தை தம் முத்தப்பன் ஏழ்படிகால் தொடங்கிவந்து வழிவழியாட்செய்தல், [80] தொல்லடிமை,[81] குடிமுழுவதும் ஆட்செய்தல்[82] போன்றவற்றைச் சான்றுகளாகக் காட்டலாம். இதற்கேற்றவாறே சுந்தரர் வரலாற்றுச் செய்தியும் அமைந்து காணப்பெறுகின்றது. சுந்தரர் தமக்கு அடிமை என அவருடைய தந்தையின் தந்தை அடிமை ஓலை எழுதிக் கொடுத்ததாக இறைவன் கூறுதல் வழி வழியாக அடிமைகொள்ளும் நிலையையே சுட்டுகின்றது. வழிவழியடிமை கொள்ளும் நிலையைக் கல்வெட்டுக்களும் குறிப்பிடுகின்றன.[83] இக்கல்வெட்டுக்களில் சந்திராதித்தியர் உள்ளவரையிலும்'' என்ற தொடர் இடம்பெறுதலும் சுட்டுதற்குரியதாகும். உலகில் சந்திரனும் சூரியனும் உள்ளவரையிலும் அடிமைகள் ஆவர் என வழிவழியாக அடிமைகொள்ளும் நிலையையே இத்தொடர் சுட்டுதல் புலனாகின்றது.

### 5. 3. 4. அடிமை வகைகள்

பிற சமுதாயங்களில் காணப்பெற்ற அடிமைகளை அவர்கள் தொண்டுசெய்த இடங்கள், அவர்கள் மேற்கொண்ட தொழில்கள் போன்றவனவற்றின் அடிப்படையில் தனியார் அடிமைகள், உற்பத்தி அடிமைகள், அரண்மனை அடிமைகள், கோயில் அடிமைகள் எனப் பலநிலைகளில் வகைப்படுத்திக் காணலாம். பக்தி இலக்கியம் காட்டும் அடிமைகளைக் கோயில் அடிமைகள், தனியார் அடிமைகள், அரண்மனை அடிமைகள் என வகைப்படுத்தலாம்.

### 5. 3. 4. 2. கோயில் அடிமைகள்

மன்னர்களாலும், செல்வர்களாலும், பொதுமக்களாலும் சமய நம்பிக்கையின் அடிப்படையில் கோயில்களுக்குக் கொடையாகக் கொடுக்கப்பெற்றவர்களும், தாமாகவே விரும்பிக் கோயில்களுக்கு அடிமையானவர்களும், வறுமை காரணமாகத் தம்மையும், தம் குடும்பத்தினரையும் அடிமையாக்கியவர்களும், விற்றல், வாங்கல் மூலமும் கோயில்களுக்கு அடிமையானவர்களும் கோயில் அடிமைகள் என்னும் பாகுபாட்டிற்குள் அடங்குவர். இவர்கள் கோயில்களில் மட்டுமன்றி, சமயத் தொண்டாற்றிய மடங்களிலும் பணிபுரிந்தமையால் இவர்களை மட அடிமைகள் என்றும் கூறலாம். பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் இத்தகைய அடிமைகளே அதிகமாகக் காணப்பெற்றனர் எனக் கருதலாம்.

### 5. 3. 4. 1. 1. பெண் அடிமைகள்

சமயத் தொடர்பான பணிகளில் ஈடுபட்டிருந்த பெண் அடிமைகள் அடிகள்மார், அலங்காரை, உருத்திரக்கணிகையர், கூத்திகள், தத்தைமார், தளிச்சேரிப்பெண்டிர், தளியிலார், தேவரடியார்கள், நாடகக்கணிகையர், பதியிலார், பிணாப்பெண்கள், பிருக்தை, மாணிக்கத்தார், விக்ருதை எனப் பலவாறு அழைக்கப்பெற்றனர். பல்லவ மன்னர்களின் சாசனங்களில் இவர்கள் அடிகள்மார், மாணிக்கத்தார், கூத்திகள், கணிகையர் எனச் சுட்டப்பெறுகின்றனர்.[84] அக்காலத்தில் கோயில்களிலும், சமயத்தொடர்பான விழாக்களிலும் ஆடல்பாடல்கள் நிகழ்த்தும் வழக்கம் காணப்பெற்றது. இதனால் ஆடல் பாடல்களில் தேர்ச்சி பெற்றிருந்த பெண்கள் கோயில்களில் அமர்த்தப் பெற்றிருந்தனர் என்பதைக் கல்வெட்டுக்களும் காட்டுகின்றன.[85] கோயில்களில் தமிழ்க்கூத்து, சாங்கைக்கூத்து, சாந்திக்கூத்து முதலிய நடனவகைகள் நடத்தப்பெற்றன.[86] இரண்டாம் நந்திவர்மபல்லவ மன்னனின் இரண்டாம் ஆட்சியாண்டில் கட்டப்பெற்ற முத்தேசுரர் கோலில் மகளிர் நாற்பத்தொன்பதின்மர் வீற்றிருந்து இசை, நடனக்கலைகளை வளர்த்துள்ளமையையும் கல்வெட்டுச் செய்திகளால் அறியலாம்.[87] வயலூர்க் கோயிலுக்குத் திருப்பதிகம் பாடவும், தொண்டுசெய்யும் கவரிப்பிணாப்பெண்கள் கொடையாகக் கொடுக்கப்பெற்றுள்ளனர்.[88] தஞ்சை இராசராசேசுவரத்தைச் சுற்றியுள்ள வீதிகளில் முதலாம் இராசராசன்

பரதக்கலையிலும், இசைக்கலையிலும் நன்கு தேர்ச்சிபெற்ற பெண்களைக் குடியமர்த்திய செய்திகளையும், அவர்களின் பெயர்களையும் அக்கோயில் கல்வெட்டுக்கள் காட்டுகின்றன.[89] இப்பெண்களின் பெயர்கள் நீறணிபவளக்குன்றம் என்றும், எடுத்தபாதம் என்றும், மழலைச்சிலம்பு என்றும் திருவிசைப்பாக்களில் இடம்பெறும் சொற்றொடர்களாலேயே கல்வெட்டுக்களிலும் குறிக்கப்பெற்றிருத்தல் சுட்டுதற்குரியதாகும்.[90]

முத்தேசுவரர் கோயில் கல்வெட்டொன்றினால் கூத்திகள் என்போர் நடனமாதர் என்பது புலனாகின்றது. பாவை நோன்பும் கூத்தாயினி விரதம் என அழைக்கப்பெறுதல் இவண் எண்ணுதற்குரியது ஆகும்.[91] தளியிலார் என்போர் ஆடல்பாடல்களில் வல்லவராய் விளங்கினர். இவர்களுள் சிவபெருமான் கோயில்களில் காணப்பெற்றவர்கள் இரஷபத்தளியிலார் என்றும், வைணவக் கோயில்களில் காணப்பெற்றவர்கள் ஸ்ரீவைணவ மாணிக்கம் என்றும் அழைக்கப்பெற்றமை கல்வெட்டுச் செய்திகளால் புலனாகின்றது.[92] சிவபெருமான் கோயில்களில் பணிபுரிவதற்காக விடப்பெற்றவர் உருத்திரக்கணிகையர் என அழைக்கப்பெற்றனர். இவர்கள் தம் வாழ்நாட்கள் முழுவதையும் சிவபெருமானுக்குப் பணிபுரிவதிலேயே கழித்தனர். தேவரடியார்கள் என்போர் திருக்கோயில்களில் மார்கழி மாதந்தொறும், திருவெம்பாவைப் பாடல்களை ஓதும்பொருட்டு நியமிக்கப்பெற்றவர்கள் ஆவர்.[93] இறைவன்மேல் கொண்டுள்ள பக்தியால் ஆடுபவள் பக்தை என்றும், கோயில் தொண்டுகளுக்கென்று தம்மை விற்றவர்கள் விற்குதை என்றும், குடும்ப உறுப்பினர்களின் நல்வாழ்விற்காகக் கோயில் தொண்டில் ஈடுபட்டவர்கள் பிருத்தை என்றும், பிறர் வலியுறுத்தலின்மூலம் வந்தவர்கள் உற்குதை என்றும் மன்னனால் அல்லது மற்றவர்களால் கோயில்களுக்குத் தேர்ந்தெடுக்கப்பெற்றவர்கள் அலங்காரை என்றும், திருமணம் செய்து இல்லற வாழ்வில் ஈடுபட்டவர்கள் பதியிலார், கோயிற்பிணாப்பிள்ளைகள் என்றும் கருதப்பெற்றிருந்தனர்.

சங்ககாலத் தமிழகத்தில் இறைவன் திருமுன்னர் அவன் அடிகளில் உறைந்து வழிபடும் மகளிர் இருந்துள்ளனர் என்பதையும் அவர்கள் அடியுறைமகளிர் என அழைக்கப்பெற்றனர் என்பதையும் அறியமுடிகின்றது. திருப்பரங்குன்றத்து மலைச் சாரல்களிலுள்ள மூங்கில்களுக்கு உவமை கூறப்புகுந்த புலவர் அவை இறைவனின் திருவடிகளில் உறைந்து வழிபடும் அடியுறை மகளிரின் தோள்களை ஒத்துள்ளன என வருணிக்கின்றார்.[94] சிலப்பதிகாரத்திலும் ஆடற்கூத்திகள், ஆடலங்கணிகையர், அரங்கக் கூத்திகள் முதலியோர்கள் சுட்டப்பெறுகின்றனர்.

பக்தி இலக்கியத்தில் ஊர்கள், மாளிகைகள், இறைவன் எழுந்தருளியுள்ள கோயில்கள், இறைத் தொடர்பான விழாக்கள், சமய ஊர்வலங்கள் போன்றவை வருணிக்கப்பெறும் இடங்களில் ஆடல்பாடல்களில் வல்ல மகளிரைப் பற்றிய குறிப்புக்களைக் காணமுடிகின்றது. இம்மகளிர் கோயில்களில் நெருங்கிக் கூட்டமாக இருந்ததையும்,[95] பக்க வாத்தியங்கள் இசைக்க நடனமாடியமையும்[96]

வீதிகளிலுள்ள அரங்குகளில் நடனமாடியமையும்.[97] இம்மகளிருள் சிலர் இசைபாடச் சிலர் நடனமாடியமையும்.[98] கூட்டமாக ஒன்றுசேர்ந்து நடனமாடியமையும்,[99] மாளிகைகளில் நடனமாடியமையும்[100] குறிப்பிடப்பெறுகின்றன. திருமூலரும் செந்தமிழ்ப் பாடல்களைப் பாடி ஏனைய இசைகளையும் இசைத்துச் சிவபெருமானுடைய முழுமுதல் தன்மையை விளக்கிக் காட்டிச் சிவகணிகையர்கள் ஆடும் சிறப்புக்களை எடுத்து மொழிகின்றார்.[101] திருவாரூரிலுள்ள கணிகையர்களில் பதியிலார் என்ற உருத்திரக் கணிகையர் குலம் பலவற்றுள் கமலினியார் தோன்றிய பிறப்பு வரலாற்றைப் பெரியபுராணம் பகர்கின்றது.[102] பக்தி இலக்கியத்துள் இவர்கள் நடனத்திலும் இசையிலும் வல்ல மகளிர், மடவார், மங்கையர், இளமாதர், அரிவையர், மொய்குழலியர், நன்மாதர், சேயிழையார், கன்னியர் என்று சிறப்புறச் சுட்டப்பெறுகின்றனர். இவ்வாறு கல்வெட்டுச் செய்திகளையும், பக்தி இலக்கியக் குறிப்புக்களையும் ஒருங்குவைத்துப் பார்க்கும்போது அக்காலச் சமுதாயத்தில் கோயில்களில் தொண்டு செய்யவும், ஆடல்பாடல்கள் நிகழ்த்தவும் கோயில் அடிமைகளாகப் பெண்கள் பலர் நியமிக்கப்பெற்றிருந்தமை புலனாகின்றது. கோயிலடிமை நிலை அக்காலச் சமுதாயத்தில் புகழ்மிக்க ஒரு சமூக, சமய நிறுவனமாகவும் (Social and Religious Institution) திகழ்ந்தது.[103]

### 5. 3. 4. 2. தனியார் அடிமைகள்

பழங்காலச் சமுதாயங்களில் சமுதாய, பொருளாதார நிலைகளில் மேம்பாடுற்றிருந்த மேட்டுக்குடியினர் தாம் இடும் ஏவல்களைக் கேட்டுத் தொண்டுசெய்யவும், தம்முடைய உயர்சமூக மதிப்பை வெளிப்படுத்தவும், அடிமைகளை உடைமையாகக் கொண்டிருந்தமையை அறியமுடிகின்றது. இவர்கள் மேட்டுக்குடியினரின் வீட்டிற்குள்ளேயும், வெளியேயும் பல வேலைகளைச் செய்வதற்காக அமர்ந்தப்பெற்றிருந்தனர். கோயில் அடிமைகளைப் பற்றிய செய்திகளைத் தரும் கல்வெட்டுக்கள் மூலம் அக்காலச் சமுதாயத்தில் தனியார் அடிமைகள் காணப்பட்டனர் என்பதையும் அறியமுடிகின்றது. தனிநபர்கள் தம்மிடம் உள்ள அடிமைகளைக் கோயில்களுக்குக் கொடுத்துள்ளனர்.[109] விக்கிரமசோழமன்னனின் ஆயிரத்து நூற்றுப்பத்தொன்பதாம் ஆண்டுக் கல்வெட்டொன்று ஒருவர் கோயிலுக்கு உரிமையான நகைகளைத் திருடிய குற்றத்திற்காக அவருடைய நிலங்களைத் தேவதானமாக மாற்றும்போது அவருடைய அடிமைகளும் சேர்த்து மாற்றப்பெற்ற செய்தியைத் தருகின்றது. நந்திவர்மமங்கலத்து நடுவர் சந்திரசேகரன் என்பவர் தன் மூன்று அடிமைப்பெண்களை வயலூரிலுள்ள திருக்கற்றளிப்பரமேசுவரர் கோயிலுக்குத் திருப்பதிகம் பாடக் கொடுத்துள்ளார்.[105] கம்மாளர் முதலிய கிராமத் தொழிலாளர்கள் அடிமைகளை உடைமையாக வைத்துக்கொள்ளத் தடைவிதிக்கப் பெற்றிருந்தனர்.[106] இவற்றால் தனியாரிடத்தும் அடிமைகளை உடைமையாகக் கொள்ளும் வழக்கம் சமுதாயத்தில் நிலவியிருந்தமை புலனாகின்றது. இக்கருத்திற்கிணங்கப் பெரியபுராணம் காட்டும் சுந்தரர் வரலாறும் அமைகின்றது.

சுந்தரரைத் தடுத்தாட்கொள்ள வந்த இறைவன் சுந்தரர் தமக்கு அடிமை என்று அவருடைய தந்தையின் தந்தை ஆளோலை எழுதிக்கொடுத்துள்ளமையால் சுந்தரரும் தமக்கு அடிமையே என வாதிடுகின்றான். அவ்வமயம் திருமண மண்டபத்தில் வீற்றிருந்தோர் அனைவரும் அந்தணர் பிறருக்கு அடிமையாதல் விந்தையே என வியந்து நிற்றல் இவண் சுட்டுதற்குரியது ஆகும்.[107] அதாவது அந்தணர்கள் பிறருக்கு அடிமையாதல் விந்தையாக உள்ளது என அவர்கள் வியந்து நிற்கின்றனரே தவிரப் பிறர் அடிமையாதல் விந்தையன்று எனத் தனியார் அடிமை நிலை பற்றிய குறிப்பு கிடைக்கின்றது.

### 5. 3. 4. 3. அரண்மனை அடிமைகள்

அரண்மனையில் தொண்டு செய்யும் நிலையில் அடிமைகளாக வாழ்ந்தவர்கள் அரண்மனை அடிமைகள் என்ற பாகுபாட்டிற்குள் அடங்குவர். எதிரிலிச்சோழகங்கைநாடாள்வான் தன் அடிமைகளில் ஐந்து ஆண்களையும், ஐந்து பெண்களையும் வழிவழி அடிமைகளாக ஐம்பது காசுக்குவிற்றுள்ளான்.[108] சிற்றரசர்கள் தம் மனைவியர் மகட்கொடையாகக் கொண்டுவந்த அடிமைகளில் சிலரை அவர்களுடைய இசைவினைப் பெற்றுக் கோயில்களுக்குக் கொடையாகக் கொடுத்துள்ளனர்.[109] இவற்றால் மன்னர்கள் போர்கள் மூலமும், மகட்கொடை மூலமும் கிடைத்த அடிமைகளைத் தம் அரண்மனைகளில் தொண்டு செய்ய அமர்த்தியுள்ளமையை அறிய முடிகின்றது. இவர்களுள் பெண் அடிமைகள் தாதிகள் என அழைக்கப்பெற்றமையைக் கல்வெட்டு காட்டுகின்றது.[110] மெய்ப்பொருள் நாயனாரின் அரண்மனையில் மன்னனுக்குக் கட்டுப்பட்டுத் தொண்டு செய்த தத்தனைத் தாதனாம் தத்தன் எனப் பெரியபுராணம் சுட்டுதல் [111] அரண்மனை அடிமைநிலையைக் காட்டுவதாகக் கொள்ளலாம்.

### 5. 3. 5. அடிமைகளின் தொழில்கள்

பக்தி இலக்கியக் குறிப்புக்களையும், கல்வெட்டுச் செய்திகளையும் துணையாகக் கொண்டு அடிமைகள் செய்து வந்த தொழில்களை உய்த்துணர முடிகின்றது. கோயில் அடிமைகள் கோயில்களுக்குச் சொந்தமான நிலங்களில் பயிர்த்தொழில் செய்தல், கோயில்களுக்குச் சொந்தமான ஆடுமாடுகளை மேய்த்தல், இறைவனுக்குரிய பூக்களைப் பெறுவதற்குரிய நந்தவனங்கள் அமைத்தல், கோயிலைச் சுற்றியுள்ள இடங்களைத் தூய்மை செய்தல், கோயில் தொண்டுகள் செய்தல், தண்ணீர் கொண்டுவருதல், தச்சுவேலைகள் செய்தல், திருவலகிடல், இறைவனின் ஆடைகளைச் சுத்தம்செய்தல், இறைவனுக்குக் கவரி வீசுதல், சீவிலி கொட்டுதல், தட்டளி கொட்டுதல், திருப்பதிகம் பாடுதல், இறைவனின் திருமுன்னர் நடனமாடுதல், இறைவன் புகழ்பாடிப் போற்றுதல், நந்தா விளக்கிடல், நெல் குற்றுதல், பாரதம் படிக்கும் மேடைகளைத் தூய்மை செய்தல், இறைவன் வழிபாட்டிற்குத் தேவையானவற்றைச் செய்து கொடுத்தல், மலர் தொடுத்தல், விளக்குகளைப் பராமரித்தல், பறை கொட்டுதல் போன்ற

பணிகளைச் செய்தனர். பக்தி இலக்கியச் சான்றோர்கள் தம் நெஞ்சிற்கு அறிவுறுத்திக் கூறுவதுபோல உரைக்குமிடங்களிலும், தாம் இதுவரையிலும் இறைவனை வணங்காமையை நினைத்து வருந்தும் இடங்களிலும், உலகியல் நிலையைத் தம்மேலிட்டுக் கூறுமிடங்களிலும் முற்கூறிய செயல்களுள் பெரும்பாலானவற்றைச் செய்யாமையைக் குறிப்பிடுதல் இவண் எண்ணுதற்குரியது ஆகும். அவர்கள் தூகேன், மெழுகேன், புகழ்ந்து ஏத்தேன், எத்தி அலறேன், மலர்புனையேன், கூத்து ஆடேன் என்றெல்லாம் கூறி இரங்குதல் அக்காலச் சமுதாயத்தில் இறைப்பணிகளில் ஈடுபட்ட கோயில் அடிமைகள் மேற்கொண்ட திருத்தொண்டுகளைப் பிரதிபலிப்பதாகத் தோன்றுகின்றது.

சுந்தரரை ஆட்கொள்ள வந்த இறைவன் முறையிட்ட வழக்கை விசாரித்த அறங்கூறவையோர் இறுதியில் சுந்தரர் அடிமையே என உறுதிசெய்து, நீர் இவர்க்கு ஏவல் செய்தலே கடன் என்று தீர்ப்பளிக்கின்றனர்.[112] இதனால் தனியார் அடிமைகள் தம் உடைமையாளர்களின் ஏவலுக்குக் கட்டுப்பட்டுத் தொண்டு செய்து வாழ்ந்துள்ளமை தெளிவாகின்றது. பிற சமுதாயங்களிலும் தனியார் அடிமைகள் வீட்டு வேலைகள் செய்தல், ஆடை பின்னுதல், நீர் கொண்டுவருதல், உண்ணும்போது உதவுதல், வீட்டு உரிமையாளர்களிடும் ஏவல்களை நிறைவேற்றுதல், எரிபொருட்கள் கொண்டுவருதல் போன்ற பல்வேறு பணிகளில் ஈடுபட்டுள்ளமையை அறிகின்றோம்.

## 5. 3. 6. அடிமைகளின் வாழ்க்கைநிலை

பிற சமுதாயங்களில் அடிமைகள் மேற்கொண்ட தொழில்களையும், உரிமையாளர்களால் நடத்தப்பெற்றமையையும் சமுதாயத்தில் அவர்கள் பெற்றிருந்த மதிப்பையும் பார்க்கும்போது அடிமைகளின் வாழ்க்கைநிலையைப் பற்றி அறியமுடிகின்றது. பிற சமுதாயங்களில் அடிமைகள் உழைப்புக் கணங்களாகவே கருதப்பெற்றிருந்தனர். போரில் பிடிக்கப்பெற்றவர்களும், விலைக்கு வாங்கப்பெற்றவர்களும் பெரும்பான்மையும் உழைப்பதற்காகவே பயன்படுத்தப்பெற்றிருந்தனர். இந்தியாவில் அடிமைகள் உழைப்பில் ஈடுபடுத்தப்பெற்றிருந்தாலும், பிற சமுதாயங்களைப் போல் உழைப்புக் கணங்களாகக் கருதப்பெறவில்லை. அடிமைகளை விலைக்கு விற்றல், பரிசாகக் கொடுத்தல், கொடையாகக் கொடுத்தல் போன்றனமைக்கு உடைமையாளர்கள் முழு உரிமை பெற்றிருந்தனர். அடிமைகள் அடிமைச் சந்தைகளுக்குக் கொண்டுவரப்பெற்றுச் சோதித்து வாங்கப்பெற்றனர். பெண் அடிமைகள் உரிமையாளர்களின் உடலின்பப் பொருளாகக் (sexual objects) கருதப்பெற்றிருந்தனர். கிளேடியேட்டர்கள் (gladiators) எனப்பெறும் விளையாட்டு அரங்கங்களில் போரிடச் செய்து வேடிக்கை பார்க்கும் பொழுதுபோக்குப் பொருள்களாக உடைமையாளர்களால் எண்ணப்பெற்றனர். ஆடுமாடுகளைப் போன்று பொது இடங்களில் ஏலம்விடப்பெறும் இழிநிலை காணப்பெற்றது. திருமணம் செய்யும் உரிமை, குழந்தைகளின் எதிர்காலத்தைத் தீர்மானிக்கும்

உரிமை போன்றவை பெரும்பாலும் காணப்பெறவில்லை. தப்பியோடியவர்களும், வேலை செய்ய மறுத்தவர்களும், சிறு குற்றங்கள் செய்தவர்களும் கொடுமையாகத் தண்டிக்கப்பெற்றனர். உடைமையாளர்களின் எச்சிலை மாற்றுதல், சிறுநீரை மாற்றுதல், கழிவறையைச் சுத்தம் செய்தல் போன்ற இழிந்த வேலைகளைச் செய்யுமாறு பணிக்கப்பெற்றனர். நாய், பன்றி போன்ற விலங்குகளுக்கு இடும் உணவும் கிழிந்த உடையும் அளிக்கப்பெற்றன. நல்ல, திறமையான, வலுவுள்ள, உயர்வகை அடிமைகளைப் (high breed slaves) பெறுவதற்கு அடிமைகளை அடிமைகளால் உற்பத்தி செய்தமையை அடிமைநிலையின் கொடுமையைக் காட்டும் சிறந்த சான்றாகக் கூறலாம். அடிமைகள் தனியானதொரு சமூக வகுப்பாகக் (social class) கருதப்பெற்றிருந்தனர். அடிமைநிலையை நாகரிகமற்ற செயலாகவோ, வெட்கக் கேடாகவோ கருதாது சமூகத் தேவையாகவே கருதினர். சிற்சில சூழல்களில் சிற்சில உரிமைகளைப் பெற்றிருந்தாலும் பெரும்பான்மையும் அவர்கள் இழிந்த, துன்பம்நிறைந்த, உரிமையற்ற வாழ்க்கையே வாழ்ந்துள்ளனர் எனக் கூறலாம்.

பக்தி இலக்கியக் காலச் சமுதாயத்தில் கோயில்களிலும் மடங்களிலும் தொண்டுபுரிந்த அடிமைகளே பெரும்பான்மையும் காணப்பட்டனர் என்பது தெளிவாகத் தெரிகின்றது அக்காலச் சமுதாயத்தில் இறைவனிடத்து அன்புகொண்ட அடியார்களும், இறைப்பணியை மேற்கொண்டவர்களும் உயர்ந்த நிலையில் மதிக்கப்பெற்றிருந்தமையைப் பக்தி இலக்கியம் மூலம் அறிகின்றோம் இறைவனுக்குத் தொண்டுபுரிந்த அடியார்களை இறைவனாகவே கருதினர் இறைவனுக்குத் தொண்டு செய்வதையே தம் வாழ்க்கையின் இன்றியமையாத கடமையாகக் கொண்டனர். உயிர் வாழ்வதற்கு உணவின்றி வறுமைநிலையில் வாடியவிடத்தும் இறைப்பணியைத் தவறாது நிறைவேற்றினர். இறை அன்பர்களுக்காகத் தம் மனைவியைத் தானமாகக் கொடுக்கவும், மகனை இழக்கவும், மகனின் கூந்தலை அரியவும் தயக்கம் காட்டாது துணிந்துவிட்ட போக்கை உணர்கின்றோம். இவை இறைவனுக்குத் தொண்டுபுரிவோர் பெற்றிருந்த சமுதாய மதிப்பைக் காட்டுகின்றன.

பக்தி இலக்கியத்துள் விலைக்கு விற்றல், வாங்குதல, ஒற்றிவைத்தல் போன்ற அடிமைநிலையின் தோற்றத்திற்குரிய சூழல்களையும் எழுதி அடிமைகொள்ளல், பொறியொற்றி அடிமைகொள்ளல், வழிவழியடிமைகொள்ளல் போன்ற அடிமைநிலையின் தன்மைகளையும் காணமுடிகின்றன. எனினும் இக்கோயில் அடிமைகள் பெரும்பான்மையும் உயர்மதிப்பைப பெற்றிருந்தனர் என்பதைக் கல்வெட்டுக்களும் காட்டுகின்றன இவர்கள் சிற்சில உற்பத்தி வேலைகளில் ஈடுபடுத்தப் பெற்றாலும் பிற சமுதாயங்களைப் போன்று உழைப்புக் கணங்களாகக் கருதப்பெறவில்லை. பெண் அடிமைகளுக்கு உயர் மதிப்ப அளிக்கப்பெற்றது. அவர்களுடைய கற்புக்கு எவ்விதப பங்கமும ஏறபடவில்லை பெண் அடிமைகளுக்கும் அவர்களை ஆடடுவித்த நட்டுவன்மார்களுக்குப் மானிங்கள் அளிக்கபபெற்றன இவ்வாறு அளிக்கப்பெறற மானியங்கள் பதியிலியார்க்காணி, நட்டுவக்காணி என அழைக்கப்பெற்றன

தளிச்சேரிபபெண்டிாக்கும், தேவரடியார்க்கும் இசைப்பயிற்சி அளித்த பாணர்க்கும் அளிக்கப்பெற்ற மானிய நிலங்கள் பாணிக்காணி என வழங்கப்பெற்றன.[113] தஞ்சைப பெரிய கோயிலில் பணியட்ட நடனமாதர்கள் நாநூறு பேர்களைத் தேர்ந்தெடுத்து. ஒவ்வொருவருக்கும ஒவ்வொரு வீடும், ஒருவேலி நிலமும் இராசராசனால் அளிக்கப்பெற்றமையைக் கல்வெட்டு காட்டுகின்றது.[114] முதல் இராசேந்திர சோழனின் இருபத்தாறாம் ஆட்சியாண்டுத் திருவொற்றியூர்க் கல்வெட்டு கோயிலில் பணிபுரிந்த பன்னிரண்டு தேவரடியார்களுக்கு உணவு அளிக்க நிவநதஙகள் அளிக்கப்பெற்றமையைக் குறிப்பிடுகின்றது [115]

குடும்பப் பெண்களில் பலர் தாமாக அடிமைகளாக மாறியமையையும், பிறரால் அடிமைகளாகக் ஆக்கப்பெற்றமையையும் நோக்கும்போது கோயில் அடிமைகள் பெருமபாலும் குடும்பப் பெண்களே என்று கருதலாம். கோயில் அடிமைகளில் பலர் அறங்கள் செய்தமையைக் குறிப்பிடும் கல்வெட்டுச் செய்திகளைப பார்க்கும்போது [116] அவர்களுடைய பொருளாதார மேம்பாடும் புலனாகின்றது. வடகாடு கோயிலைச் சார்ந்த தேவரடியார்கள் அக்கோயிலிலுள்ள ஆதிசண்டேசுரத்தேவகன்மிகளுக்கு நந்தாவிளக்கு வைததுள்ளனர். அவர்களுடைய இச்செயலை யாரும் குறைகூறக் கூடாது என்றும். அவ்வாறு குறை கூறுவோர் இல்லங்களில் நிகழும் இன்பதுன்ப நிகழ்ச்சிகளுககு யாரும் செல்லக்கூடாது எனறும் ஆணையிட்டுள்ளமையைச் சுடடும் அக்கோயில் கல்வெட்டுச் செய்தியாலும் கோயில் அடிமைகளின சமுதாய மேன்மை விளக்குகின்றது.

கோயில் அடிமைகள் இறைவனுக்குத் தொண்டு புரிபவர்களாகையால் அவர்கள சமுதாயத்தில பிறருக்குத் தொண்டு செய்ய அனுமதிக்கப்பெறவில்லை என்பதையும் அறிய முடிகின்றது. முதற்குலோத்துங்க சோழனின் பதினெட்டாம் ஆட்சியாண்டுச சித்தூர்க் கல்வெடடொன்று திருக்காளத்திக் கோயிலிலுள்ள தேவரடியார்களும், அவர்களுடைய மக்களும் அரண்மனையில் தொண்டு செய்வதற்காக அழைத்துச் செல்லப்பெற்றனா என்றும் அலுவலர் ஒருவர் கொடுத்த புகாரினால் அவர்கள் மீணடும் அக்கோயிலுக்கே திருப்பி அழைக்கப்பெற்றனர் என்றும் கூறுவதைச் சான்றாகக் கொள்ளலாம்.[118] கோயில் அடிமைகளில் சில பிரிவினர் விரும்பினால மணம் செய்து இல்லற வாழ்வில் ஈடுபடும் உரிமையும் பெற்றிருந்தனர் நாகன்பெருங்காடன் சதுரி என்ற தேவரடியாரை மணந்துகொண்ட கல்வெட்டுச் செய்தி [119] இக்கருத்திற்கு அரணாக அமைகின்றது.

இவ்வாறு கோயில் அடிமைகள் உயர்வாகப் பல நிலைகளில் மதிக்கப்பெற்றிருப்பினும், சிற்சில சூழல்களில் தாழ்வடைந்திருந்தமையையும கல்வெட்டுச் செய்திகள் பகர்கின்றன. அரசன ஆணைப்படி இவாகள் ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு மாற்றப்பெற்றனர் [120] பிற சமுதாயங்களில் காணப்பெற்றமையைப் போன்று கடமை தவறியவர்கள் தண்டிக்கப்பெற்றனர் என்பதையும்[121] தப்பியோடியவர்கள பிடித்துவரப்பெற்று மன்னன் ஆணைப்படி மீண்டும் பணியமாத்தபெற்றனர் என்பதையும்[122] அறிகின்றோம் இதனால்தான் அப்பர்பெருமானும் இறைவனிடம் நின்பணி பிழைக்கிற் புளியம் வளாரால்

மோதுவிப்பாய் எனக்கூறுகின்றாரோ என்று எண்ணத் தோன்றுகின்றது. அப்பர்பெருமானின் இக்கருத்து அடிமைகள் கடமையில் தவறினால் தண்டிக்கப்பெற்றனர் என்ற சமுதாய நிலையைக் காட்டுவதாகக் கொள்ளலாம். அடிமைகள் பிறரால் விற்கப்பெற்றமையாலும், ஒற்றிவைக்கப்பெற்றமையாலும், கொடையாகக் கொடுக்கப்பெற்றமையாலும் அவர்கள் பிறர் உரிமைப்பொருளாகக் கருதப்பெற்றிருந்தனர் எனக் கொள்ளலாம். கோயிலில் பணிபுரிந்த அடிமைகள் நாளடைவில் வழிப்போக்கற்கும் தொண்டு செய்யும் நிலைக்குள்ளாகிவிட்டமையும் புலனாகின்றது. மகேந்திரவர்மனின் முத்தவிலாசப்பிரகடனத்தில் *காபாலிகன்* ஒருவன் ஒரு தேவரடியாருடன் காஞ்சிமா நகரில் உலாவிய செய்தி இடம்பெறுகின்றமையைச் சான்றாகக் கூறுவர்.[123]

இதுகாறும் கூறியனவற்றால் பக்தி இலக்கியம் சமய நோக்கில் இறைவனுக்கு மனிதன் அடிமையாகும் இறையடிமை நிலையைச் சுட்டுகின்றதெனினும், சமுதாய நோக்கில் அணுகும்போது அவ்விறையடிமைநிலை சமுதாயத்தில் காணப்பெற்ற அடிமைநிலையின் பிரதிபலிப்பாகத் தோன்றுகின்றது என்பதும், இச்சூழல்களில் சிலர் அடிமைகளாக வாழ்ந்துள்ளனர் என்பதும், அவர்களுள் பெரும் பான்மையோர் இறைவனுடைய கோயில்களில் தொண்டாற்றியவர்களே என்பதும் புலனாகின்றன. இவர்கள் பிற சமுதாயங்களில் காணப்பெற்ற அடிமைகளுடன் முற்றிலும் ஒப்பிடத்தக்கவர்கள் அல்லர் என்றும், பெரும்பாலும் உயர்சமூக மதிப்பைப் பெற்று வாழ்ந்துள்ளனர் என்றும் அறுதியிட்டுக் கூறலாம்.

### 5. 5. 7. அடிமைநிலைக்கு எதிரான சிந்தனைகள்

சமுதாயத்தில் நிலவிய அடிமைநிலைக்குரிய சூழல்களையும், அடிமைகொள்ளும் நிலைகளையும், அடிமை நிலையையும் இறை அடிமைநிலையின் மூலமாகச் சுட்டிக்காட்டிய பக்தி இலக்கியச் சான்றோர்கள், மனிதனுக்கு மனிதன் அடிமையாகும் சமுதாய அடிமைநிலையைக் கண்டு மனம் வெறுத்த நிலையில் வெளிப்படுத்திய சிந்தனைகளையும் நாம் பக்தி இலக்கியத்தில் காணமுடிகின்றது. சமுதாயத்தில் காணப்பெற்ற சாதிமுறையின் அடிப்படையிலான தரப்பிரிவுகளினாலும் தாழ்நிலையுற்ற பிரிவினர் மேட்டுக்குடியினரின் கீழ், பல நிலைகளில் அல்லலுற்று வாழ்வதைக் கண்ட சமயக்குரவர்கள் வெளிப்படுத்தும் கருத்துக்களில் சமுதாயத்தில் நிலவிய அடிமைநிலையின் மீது தாம்கொண்ட வெறுப்பினை உமிழ்வனவாக அமையும் கருத்துக்களும் இடம்பெறுகின்றன எனலாம். இறைவன் மட்டுமே தமக்கு நாயகன் எனத்துணிந்து நின்ற இச்சான்றோர்கள் இறைவனைத் தவிர மன்னா மனிதர்களைப் புகழமாட்டோம் என்றும்,[124] மானிடர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லோம் என்றும்,[125] இறைவனைத் தவிர இனி ஒருவர்க்கும் ஆளாக மாட்டோம் என்றும்,[126] இறைவன் புகழ்பாடுதலைத் தவிரப் பிற மனிதர்களை அண்டிப் புகழ்ந்து பாடமாட்டோம் என்றும்,[127] மனிதர்கள் கூறும் ஏவல் கேட்டுத் தொண்டுசெய்து வாழமாட்டோம் என்றும்,[128] பிறருடைய கடைவாயிலில் நின்று அவர்களைத் தொழுது வாழமாட்டோம் என்றும்[129] இவ்வாறு மனிதரைத் தொழுதும் அணடியும்

வாழாமையால் எவ்வீதத் தீமைகள் நேரினும் அவற்றைப் பற்றிக் கவலை கொள்ளமாட்டோம் என்றும்[130] யாமார்க்கும் குடியல்லோம் என்றும்[131] மனிதர்களைக் கண்டு அஞ்சோம் என்றும் [132] துணிந்து கூறும் நிலையைக் காண்கின்றோம். இறைவனை உண்மை அன்புடன் வழிபட்டு அவன் அருளுக்கு இலக்கான பின்பு அவன் ஒருவனுக்கே அடிமையாக வாழ்கின்றோம்.[133] எனவே, இனி அஞ்சுவதற்கு யாதொன்றும் இல்லை.[134] இறைவனே நம்மை அடிமையாகக் கொள்வதற்கு உரிமையுடையவன்,[135] அதனால் பிறரை அண்டித் தொண்டு செய்ய வேண்டிய தேவையில்லை.[136] உண்ணும் சோறும் பருகும் நீரும் எல்லாம் அவனுக்கே [137] என இறைவனிடம் தன்னை அடிமையாக்கிக் கொள்ளும் நிலையையும் உணர்கின்றோம். இவற்றால் சமுதாயத்தில் மேட்டுக்குடியினரைத் தாழ்நிலையுற்றவர்கள் அண்டியும், தொழுதும், ஏவல்கேட்டும், தொண்டுசெய்தும் அடிமைகளாக வாழ்ந்துள்ளனர் என்பதும், இத்தகைய மனிதர்களை அண்டி வாழ்வதால் எந்நாளும் துன்பமே தவிர இன்பம் இல்லை என உறுதிபூண்டும், இறைவனிடம் அடிமை புகுதலே ஏற்புடைத்து என அவர்களுக்கு உணர்த்துகின்றனர் என்பதும் தெளிவாகின்றன. உலகில் மனிதர்களைக் கண்டு அஞ்சமாட்டோம் என்றும், மனிதர்களுக்கு அடிமையாக மாட்டோம் என்றும் கூறப்பெறுமிடங்களில் சுட்டப்பெறும் மனிதர்கள் சமுதாயத் தாழ்நிலையில் வாழும் மக்களை ஆட்டிப்படைக்கும் செல்வம், அதிகாரம், சாதி போன்றனவற்றால் மேம்பட்ட மேட்டுக்குடியினரே எனக் கூறலாம். எனவே, இறைவனுக்கு அடிமையாதல் என்பதைக் கூறி மனிதனுக்கு மனிதன் அடிமையாகும் நிலையிலிருந்து மக்களை விடுவித்து இன்ப நிலைக்கு அழைத்துச் செல்கின்றனர் எனக் கருதலாம்.

## 5. 4. முடிபுகள்

1. அடிமைநிலை என்பது உலகச்சமுதாயங்கள் அனைத்திலும் மிகப் பழங்காலம் முதலே காணப்பெற்ற பொதுவான தன்மை என்பதை உலகச் சமுதாயங்களின் அரசியல், பொருளாதார, சமுதாய வரலாறுகளால் அறியமுடிகின்றது.

2. அடிமைநிலையின் சூழல்களும், தன்மைகளும் சமுதாயத்திற்குச் சமுதாயம் வேறுபட்டுக் காணப்பெறும்.

3. பக்தி இலக்கியத்தைச் சமய நோக்கில் பார்க்கும்போது உலகியல் துன்பங்களாகிய கட்டுக்களில் சிக்குண்ட மக்கள் இறைவனிடம் தம்மை முழுமையாக ஒப்படைத்து விடுதலை பெறுவதற்குத் துடிக்கின்ற இறை அடிமைநிலை வெளிப்படுகின்றது எனக் கூறலாம்.

4. சமுதாய நோக்கில் பார்க்கும்போது பக்தி இலக்கியம் காட்டும் இறை அடிமைநிலை மனிதனுக்கு மனிதன் அடிமையாகும் சமுதாய அடிமைநிலையையும் பிரதிபலிப்பதாகத் தோன்றுகின்றது.

5. ஒரு சமுதாயத்தின் பண்பாட்டை அச்சமுதாயத்தில் காணப்பெறும்

மொழியும் வெளிப்படுத்துகின்றது என்ற மொழியியலாளர்களின் கருத்துப்படி நோக்கும்போது பக்தி இலக்கியத்துள் இடம்பெறும் அடிமை, அடிமைநிலை என்பனவற்றைக் குறிக்கும் சொற்களும், சொற்றொடர்களும் அச்சமுதாயத்தில் நிலவிய அடிமைநிலை பற்றிய சிந்தனையின் வெளிப்பாடுகளே என எண்ணலாம்.

6. பிறசமுதாயங்களில் அடிமைநிலையின் தோற்றத்திற்கும், வளர்ச்சிக்கும் உரிய சூழல்களாகக் காணப்பெற்றனவற்றுள் சில பக்தி இலக்கியத்திலும் இடம்பெறுகின்றன.

7. நிலவுரிமை அமைப்பு அடிமைநிலைக்கு வழிவகுப்பதாக வரலாற்றறிஞர்கள் கருதுகின்றனர். பக்தி இலக்கியத்துக்கும் நிலவுரிமை அமைப்புக்கும் இடையே தொடர்பு உள்ளது என்றும், பக்தி இலக்கியத்துள் சுட்டப்பெறும் ஆண்டான் அடிமை உறவுமுறை நிலவுரிமையமைப்புச் சமுதாயத்தில் இடம்பெற்ற நிலவுரிமையாளர் - பண்ணை அடிமைகள் என்ற உறவுமுறையைப் பிரதிபலிக்கின்றது என்றும் கருதுகின்றனர்.

8. வறுமை, பஞ்சம், கடன்படல் போன்ற காரணங்களால் பாதிப்புக்குள்ளானவர் வாழவேண்டித் தம்மை அடிமை நிலைக்குள்ளாக்கியமையையும், பிறரால் அடிமைநிலைக்கு உள்ளாக்கப்பெற்றமையும் உலகச் சமுதாயங்களில் காண்கின்றோம். பக்தி இலக்கியமும் வறுமை, பஞ்சம், கடன்படல் போன்றனவற்றையும் அவற்றால் பாதிக்கப்பெற்றவர்களையும் காட்டுகின்றது.

9. அடிமைகளாக விலைக்கு விற்றல், வாங்கல், ஒற்றிவைத்தல் ஆகியவை மூலம் அடிமைநிலை பிற சமுதாயங்களில் வளர்ச்சியுற்றுள்ளது. பக்தி இலக்கியத்திலும் இத்தகைய நிலைகளில் அடிமை கொள்ளும் நிலை சமுதாயத்தில் நிலவியிருந்தது எனக் கருதுவதற்குரிய குறிப்புக்கள் உள்ளன. இக்கருத்தை நிறைவு செய்யும் கல்வெட்டுச் சான்றுக்களும் கிடைக்கின்றன.

10. சாதிமுறை அடிமைநிலையை உருவாக்குமாற்றைச் சமூகவியலாளர்கள் விளக்குவர். பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்திலும் சாதிமுறை நிலவியிருந்தது எனக் கருத வாய்ப்புள்ளது. இவற்றால் அடிமைநிலையின் தோற்றத்திற்குரிய சூழல்கள் சில சமுதாயத்தில் நிலவியமை பலனாகின்றது.

11. பக்தி இலக்கியத்துள் எழுதி அடிமைகொள்ளல், பொறியொற்றி அடிமைகொள்ளல், வழிவழியாக அடிமைகொள்ளல் என ஒருவர் பிறரை அடிமைகொள்ளும் நிலைகள் சுட்டப்பெறுகின்றன. பிற சமுதாயங்களிலும் இத்தகைய நிலைகள் இடம்பெற்றிருந்தன.

12. பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் இறைவன் உறையும் கோயில்களில் தொண்டுபுரியும் கோயில் அடிமைகளே அதிகம் காணப்பெற்றனர் எனலாம்.

13. தனியார் அடிமைநிலை சமுதாயத்தில் காணப்பெற்றது என்பதற்குச் சுந்தரர் வரலாறு சான்றாக அமைகின்றது.

14. அரண்மனையில் தொண்டுபுரியும் அரண்மனை அடிமைகளும் இருந்துள்ளனர் என எண்ணமுடிகின்றது.

15. சமயக்குரவர்கள் இறைவனை இன்னின்னவாறு வழிபடவேண்டும் என மக்களை ஆற்றுப்படுத்தும் இடங்களில் குறிப்பிடுவனவற்றைக் கோயில் அடிமைகள் மேற்கொண்ட தொழில்களாகக் கொள்ளலாம். கல்வெட்டுச் செய்திகளுடனும் பக்தி இலக்கியச் செய்திகள் ஒத்த நிலையில் அமைந்துள்ளன.

16. பிற நாடுகளில் அடிமைகள் உழைப்புக் கணங்களாகக் கருதப் பெற்ற நிலையில் இவண் அடிமைகள் அவ்வாறு கருதப்பெறவில்லை.

17. பிற சமுதாயங்களில் பிறர் வலியுறுத்துதலின்மூலம் அடிமைநிலையை ஏற்றவர்களே அதிகமாகக் காணப்பெற்றனர். ஆனால் இவண் விரும்பியாட்பட்ட நிலையையே பெரும்பாலும் காண்கின்றோம்.

18. பிறசமுதாயங்களில் அடிமைகள் மிக இழிந்த நிலையில் சமுதாயத்தினரால் கருதப்பெற்றனர். கோயில் அடிமைகள் சமுதாயத்தில் மிக உயர்ந்த நிலையிலேயே பெரும்பாலும் மதிக்கப்பெற்றனர்.

19. பக்தி இலக்கியம் சமுதாயத்தில் நிலவிய தரப்பிரிவுகளில் சிலர் உயிர்நிலையுற்ற மேட்டுக்குடியினரின் கீழ் அடிமைநிலையில் வாழ்ந்தமையைக் கண்ணுற்று, செல்வம், அதிகாரம், சாதி ஆகியனவற்றால் மேம்பட்டவரிடம் அடிமைவாழ்வு வாழ்வதை விட்டுவிட்டு இறைவனிடம் அடிமையாகி உயர்கதி அடைந்துய்யுமாறு அறிவுரை கூறும் போக்கைப் பல இடங்களில் உணரலாம்.

20. இவ்வாறு பக்தி இலக்கியம் மனிதனுக்கு மனிதன் அடிமையாகும் அடிமைநிலையை அகற்றி, இறைவனிடம் அடிமையாதல் மூலம் உலகியல் துன்பங்களிலிருந்து விடுதலைபெற்றுப் பேரின்ப வாழ்வு வாழ மக்களை அழைத்துச் செல்கின்றது எனலாம்.

## மேற்கோள்சான்றுகள்

1. Maheswari M. Arunachalam, "The Concept of Liberation in Saiva Siddhanta" **Philosophical Heritage of the Tamils**, P.2

2. கா. சிவத்தம்பி, தமிழ் இலக்கியத்தில் மதமும் மானுடமும். ப. 17.

3. Jon M. Shepered. **Socialogy**, pp. 58-59

4. கா. சிவத்தம்பி, தமிழ்மொழி இலக்கண இயல்புகள். ப. 11.

5. S. V. Stalin, **Marxim and Problem of Linguistics**, p.9.

6. கா. சிவத்தம்பி, இலக்கணமும் சமூக உறவுகளும், ப. 18.

7. பெரியாழ்வார்: 5:1:4:3.

8. தடுத்தாட். 37:1.

9. 7:1:4:9:1, 7:6:5:1, 7:7:5:5:2 - 3, 7:7:5:10:2, 7:8:3:10:2, 11:4:3 - 4.

10. திருவா. 5:30:2.

11. மெய்ப்பொருள்: 17:2.

12. 5:447:3 - 4.

13. பெரியாழ்: 2:9:8:3.

14. 5:664:4:4, திருவா. 15:13:3 - 4, திருமந்திரம்: 2849:2.

15. திருவா. 6:2:2 - 3, திருவா. 7:9:6, 8:14:5, 20:8:2.

16. 5:328:4.

17. திருப்பாண், முதலாயிரம்:5:2.

18. 4: கோயில் திருவிருத்தம்: 8:2, 11:33:8:2 - 3, ஆண்டாள் திருப்பாவை:28:7.

19. திருமங்கை. பெரிய. 7:7:8:3 - 4,

20. பெரியாழ். 5:1:4:2.

21. N. D Kamble, **Bonded Labour**, P.3.

22. Stephen Fucks, **At the Bottom of the Indian Society**, P.305.

23. D. R. Chanana, **Slavery in Ancient India**, P.41

24. F Korovkin, **History of the Ancient World**, P.128. Michael Grant, **The Birth of Civilization**, P.203.

25. Veluthot Kesavan, "Kulasekara Alwar's Bhakti", **Indian History Congress,** PP.142-142

26. நா. வானமாமலை, தமிழர் பண்பாடும் தத்துவமும், ப. 215.

27. கா. சிவத்தம்பி, தமிழ் இலக்கியத்தில் மதமும் மானுடமும். ப.22.

28. Radhakrishna Choudri, "Slaves and Serfs in Medeival India," **Indian History congress, 28th Session,** P.520

29. மனு. 8:177.

30. பார்க்க. இயல். பொருளாதார ஏற்றத்தாழ்வுகள்.

31. திருப்பிரம்மபுரக் கோயில் கல்வெட்டு, Ins,86 of 1911, A.R.C. No.218 ப்தீ 1925, 90 ப்தீ 1926. தி.வை. சதாசிவப்பண்டாரத்தார், பிற்காலச் சோழர் வரலாறு. ப. 571.

32. திருமங்கை,பெரிய. 7:7:8:3 - 4

33. பெரியாழ். 5:1:4:2 - 3.

34. மனு. 8:215.

35. மனு. 8:415.

36. W. Wards Fowlet, **Social Life at Rome,** P.206.

37. Danial Lambert, **World History-Civilization from its Begining,** P. 143.

38. L. Gopal, **Economic Life in Northern India,** P.73.

39. P. C. Jain Socio, **Economic Exploitation in Medieval India,** p.274.

40. A. Swaminathan, 'Adimaikal in Chola Temples and Mathas', **Bulletin of the Institute of Traditional Cculture,** 1978, Jan.-June P.35.

41. கே. கே. பிள்ளை, மு. கூ. நூல். ப. 332.

42. 7: திருத்தொண்டர்தொகை, 6:2:1.

43. A. Swaminathan, op. cit., pp.35-36.

44. A.R.E.217 of 1925 எம். இராசமாணிக்கம், " கல்வெட்டுக்களும் அரசியல் வரலாறும், **Journal of the Annamalai University**, P.40.

45. 2: திரு ஆனைக்கா: 2:3, 2:159:2:3:6:3, 2:217:10:3-4, 3: திருச்கொள்ளம்புதூர்:3:2, 5:34:1 2 திருவா:6:18:1.

46. 7: திருத்தொண்டர்தொகை: 6:2:1, திருமழிசை: நான்முகன்:5:2.

47. கௌடில்யம், III 13, நர்மதா: V; 26. Chakaravarti, **Social Life in Ancient India**, P.129.

48. 4: திருவேகம்பம்: 9:2 - 4.

49. 6: திருவாரூர். திருத்தாண்டகம்: 4:4:7: திருத்தொண்டர்தொகை 6:2:1, திருவா.9:2 - 4.

50. 7:8:3:3:9:4.

51. A.L. Basham, **The Wonder That was India**, P.153.

52. N.D. Kamble, **Bonded labour**, P. V.

53. S.I.I. Vo. V. No.363. திவை. சதாசிவப்பண்டாரத்தார், பிற்காலச் சோழர் வரலாறு, ப. 571.

55. 296 பத் 1911.

56. தடுத்தாட். 4:39:3.

57. தடுத்தாட். 56:3.

58. **Chinese Civilization and Society**, PP. 64-65.

59. 1:116:3:1 - 2, 3: திருக்கொள்ளம்புதூர் 4:3 - 3, 4:திருவேதிகுடி: 3:2, 5:215:1 2, 6:திருவாரூர் - தண்டாகம்:4:4.

60. 6: திருவாரூர் 24:3. 7:6:5:1, 7:7:5:10:2, 7:7:5:5 7:8:3:10:2, 11:38:8:2-3.

61. திருவா. 13:8:3.

62. பெரியாழ். திருவாய், 1:10:1- 2

63. F. Korovkin, op. cit., p.96.

64. R.S. Sharma, Sudras in Ancient India, P.109.

65. Katasarithasagara, ; XIII; 189-190; p.4 P.C. Jain, op. cit., p. 266.

66. 4: திருத்துாங்கானைமடம். 1, 2, 3, 10 பாடல்கள்.

67. திருநாவுக், 152.

68. திருமந்திரம்: 1566:3,

69. பெரியாழ்.திருவாய். 14:7:1 - 2.

70. பெரியாழ். 5:4:7:2.

71. 128, 221, ப்தீ 1912, மா. இராசமாணிக்கம், கல்வெட்டுக்களில் அரசியல். சமயம், சமுதாயம், ப.95.

72. A.R.E. No.230 of 1921, A. Swaminathan, op. cit., P. 96.

73. Eph. Ind. Vol.18. p.81, மா. இராசமாணிக்கம், மு. கூ. நூல். ப. 96.

74. நா. மார்க்சிய காந்தி, "தமிழகத்தில் அடிமைகள்", தமிழ்நாட்டு வரலாற்றுக்கருத்தரங்கு, ப. 220.

75. அற்புதத்.3 4: கோயில் திருவிருத்தம், 8:2, 4: திருக்காரோணம் 4:4, 6:கோயில் புக்க திருத்தாண்டகம். 10:2 6:திருநாகை திருவோமாம்புலியூர். 1:1, 7:1:21:11:1. 11:4:3:11, பேய். 3:18:3 - 4, ஆண்டாள், திருப்பாவை, 20:6.

76. திருவா. 7:11:3.

77. நம்மாழ். 9:2:1:2 - 3.

78. திருமங்கை, பெரிய. 7:2:6:1 - 2.

79. திருமங்கை. பெரிய. 7:2:6:1 - 2.

80. பெரியாழ். 7:2:3:2.

81. நம்மாழ், திருவாய். 7:2:3:2.

82. 11:33:8:2- 3.

83. A.R.C. No.230 of 1922, A. Swaminathan, op. cit., p.37

84. 333 of 1901, 278 of 1902, 14 of 1813, 302 of 1902.

85. 166 of 1926, 617 of 1920, 272 of 1923, 14 of 1910.

86. 120 of 1925, 250 of 1925, 272 of 1923 14 of 1910, மா. இராசமாணிக்கம் ''கல்வெட்டுக்களும் அரசியல் வரலாறும்'' **Journal of the Annamalai University**, P.57.

87. S. I. I. Vol. IV. 827.

88. கே. கே. பிள்ளை, மு.கூ.நூல், ப. 302.

89. S. I. I. Vol. II, 210,66, தி. வை. சதாசிவப்பண்டாரத்தார். மு. கூ. நூல். ப.567.

90. க. வெள்ளை வாரணனார், திருமுறை வரலாறு, ப. 444.

91. C. Minakshi, **Administrative and Social Life under the Pallavas**, P.204.

92. 183 of 1923,1410 of 1925, எம். இராசமாணிக்கம், மு.கூ.நூல். பக். 95 - 96.

93. *Eph*. Rep. 421/12, 285/27, 149/36-37, கே.கே. பிள்ளை. மு.கூ.நூல். ப. 319.

94. பரி: செவ்வேள்: 17.

95. 1:102:7:4.

96. 1:130:3, மானக்கஞ்சாறர்: 6:3, திருநகர:2:3

97. 1:130:5:4, திருஞான, 505:1, கலிய: 3:2, ஏயர்கோன் 3:2, தடுத்தாட்.122

98. 1:30:6:3 - 4, 1:130:9:3 - 4, 2:186:4:3 - 4, 2:232:3 - 4 3:திருவேதவனம் 1:4, திருஞான, 130:9 223:3, 300.

99. திருஞான. 8:6.

100. 2:188:4:1 - 2, திருஞான. 503:1 - 2, திருநகர. 4.

101. திருமந்திரம்: 67.

102. திருநகர. 5, தடுத்தாட். 122.

103. N. Subramoniam, **History of Tamil Nadu,** - 1565, P.345.

104. தி. வை. சதாசிவப்பண்டாரத்தார். மு.கூ.நூல். ப.87.

105. Ins. 149 of 1936-37, தி. வை. சதாசிவப்பண்டாரத்தார், மு.கூ.நூல்,ப.570.

106. மா. சுப்பிரமணியம், சோழர்களின் கலாச்சார வரலாறு. பக். 239-240.

107. தடுத்தாட். 37:1.

108. 499 of 1904

109. மா. இராசமாணிக்கம், மு.கூ.நூல், ப.98. K.A. Nilakanta Sastri, **The Cholas, Part.II,** VolI. I. P.366.

110 A. Swaminathan, op. cit., p. 38.

111 மெய்ப்பொருள். 17:2.

112. தடுத்தாட். 63:2.

113. தி.வை. சதாசிவப்பண்டாரத்தார், மு.கூ.நூல்.பக். 544 - 545

114. மா. இராசமாணிக்கம், பெரியபுராண ஆராய்ச்சி, ப. 131, S.I.I. Vo.II, No.66.

115. S.I.I.Vo..V. No.430.

116. A. Swaminathan, op.cit., p.34,141 of 1922.

117. 147 of 1912, 411 of 1925.

118. 411 of 1925, தி. வை. சதாசிவப்பண்டாரத்தார், மு.கூ.நூல், ப.568.

119. 153 of 1912. கே. கே. பிள்ளை. மு.கூ.நூல், ப. 233.

120. S.I.I. Vol. II, No.66, A. Swaminathan, op. cit., p.37.

121. 94 of 1926, Rajalakshmi, **Tamil Polity,** p.185.

122. 94 of 1926, Rajalakshmi, **Tamil Polity**, P.185. தி. வை. சதாசிவப்பண்டாரத்தார். மு.கூ.நூல். ப. 571.

123. ந. சுப்பிரமணியம். தமிழக வரலாறு 1565 வரை, ப. 249.

124. நம்மாழ். திருவாய். 3:9:7, 3:9:8:3 - 4, 3:9:9:1 - 2.

125. திருமங்கை.பெரிய. 8:9:3:3 - 4.

126. நாச்சியார். 1:5, பெரியாழ். 3:4:5:2 - 3.

127. 7:8:2:7:4, நம்மாழ். திருவாய். 3:9:10:3 - 4.

128. 6: மறுமாற்றுத் திருத்தாண்டகம், 2:4, 3:4.

129. 2:246:3:4.

130. 4: தனி. திருவிருத்தம். 8

131. *திருவா. 5:30:2 - 4, 6: மறுமாற்றுத்திருத்தாண்டகம் :1*

132. திருவா. 5:30:2 - 4.

133. நம்மாழ், திருவாய். 7:5:2:1.

134. 4: திருக்கெடில விரட்டானம். 2:4:3:5, 3:6:3:7.

135. 7:1:21:1:1, நம்மாழ். திருவாய். 6:4:10, பெரியாழ், 4:9:2:4, திருமழிசை, நான்முகன். 51:1 - 2.

136. பெரியாழ். 5:3:3:1 - 2.

137. நம்மாழ். திருவாய். 7:7:1.

# இயல் - 6

## பண்பாடு

மனிதர்கள் சமுதாயத்தில் பிறந்ததுமே தம் வாழ்க்கையின் ஒவ்வொரு செயலுக்கும் பிறரைச் சார்ந்துநிற்கவேண்டிய நிலையில் காணப்பெறுகின்றனர். ஆனால், பறவைகள், விலங்கினங்கள் போன்ற பிற உயிரினங்கள் உலகில் பிறந்து மிகக் குறுகிய காலத்திலேயே தாமாகத் தம் இன்றியமையா வாழ்க்கைத் தேவைகளை நிறைவேற்றக் கற்றுக் கொள்கின்றன. எனினும், மனிதர்களுக்கும் பிற உயிரினங்களுக்கும் இடையே காணப்பெறும் மிக அடிப்படையான வேறுபாடு மனிதர்கள் பகுத்தறியும் அறிவைப் பெற்றுள்ளமையே ஆகும். இவ்வாற்றலினால் மனிதர்கள் குறியீடுகளை உருவாக்கவும், பயன்படுத்தவும் திறமை பெற்றுள்ளனர். இக்குறியீடுகளால் மனிதர்கள் பண்பாட்டையும் படைத்துக் கொள்ளுகின்றனர்.

பண்பாட்டை உருவாக்கும் குறியீடுகளில் ஒன்றாக மொழியும் திகழ்கின்றது. மொழி என்ற ஒன்று இல்லாவிடில் பண்பாட்டில் வளர்ச்சியும், விரிவும் ஏற்பட்டிருக்க முடியாது எனக் கருதப்பெறுவதால் மொழி பண்பாட்டின் வளர்ச்சிக்குரிய அடிப்படையான முன்தேவையாகச் செயலாற்றுகின்றது என்லாம். சமுதாயத்தில் காணப்பெறும் பண்பாட்டை ஒருவர் மற்றொருவரிடமிருந்து கற்றுக் கொள்கின்றனர். இக்காரணம் பற்றியே சமூகவியலாளர்கள் பண்பாட்டைச் சமூக மரபுரிமை (social heritage) என்று குறிப்பிடுகின்றனர் எனலாம். முற்காலச் சந்ததியினர் பண்பாட்டைத் தம் குழந்தைகளுக்குக் கடத்துவதுடன், சில மாற்றங்களை ஏற்படுத்திக் கொடுக்கும் பரந்த பண்பாட்டு மரபுகளை விட்டுச் செல்லவும் செய்கின்றனர். இதனால் சமுதாயம் என்பதற்குச் சில பொதுவான பண்பாடுகளைக் கொண்ட மக்கட் கூட்டம் என்றும் [1] பண்பாட்டை வளர்க்கும் களம் என்றும்[2] விளக்கங்கள் அளிக்கப்பெறுவதையும் காணலாம்.

பண்பாடு என்ற வாழ்க்கைக் கோலத்தின் இரண்டு முகிழ்ப்புக்களே மதமும் இலக்கியமும் ஆகும். பண்பாடு என்ற வட்டத்திற்குள்ளேயே இவை இரண்டும் இயங்குகின்றன.[3] சமுதாயத்தில் தோன்றிய நிறுவனம் என்ற நிலையில் ஏனைய நிறுவனங்களைப் போன்றே சமயமும் குறிப்பிட்ட பண்பாட்டுப் பொதுமைகளையும், வேறுபாடுகளையும் வெளிப்படுத்துவதுடன், சமூகத்தினதும் தனி நபர்களதும் உறவுகளுக்கிடையேயுள்ள செயல்பாடுகளையும் வெளிப்படுத்துகின்றது.[4]

கடந்தகாலச் சமுதாயங்களில் வாழ்க்கை நெறிகளினூடே சில புனித உறவுகள் காணப்பெற்றன. சமயமானது குறியீடுகள் மூலமாகவும், சடங்குகள்

மூலமாகவும் இப்புனித உறவுகளுக்குப் பண்பாட்டு வெளிப்பாடுகளை (cultural expressions) அளிக்கின்றது. சமயம் புனிதப் பொருட்களுடன் தொடர்புடைய நம்பிக்கைகள், செயல்முறைகள் ஆகியவற்றின் ஒருங்கிணைந்த செயல்முறை ஆகும். இந்த நம்பிக்கைகளையும் செயல்முறைகளையும் பின்பற்றும் மக்களை அது ஒரே இனமாக ஒன்றிணைக்கின்றது. சமயச் சடங்குகள் பொதுவாக அமையும் மனோபாவங்களையும், மதிப்புக்களையும் புதுப்பிக்கும் வழியாகவும் அமைகின்றன. இவ்வாறு சமயத்தின் செயல்பாடுகள் குறித்து அளிக்கப்பெறும் விளக்கங்கள் சமயத்திற்கும் பண்பாட்டிற்கும் இடையேயுள்ள தொடர்புகளைப் புலப்படுத்துகின்றன.

இனி, பண்பாடு என்பதன் விளக்கங்கள், பண்பாட்டின் கூறுகள், பண்பாட்டின் பரிணாம வளர்ச்சி, பண்பாட்டின் செயல்பாடுகள், பண்பாட்டின் தன்மைகள், பண்பாட்டின் வகைகள் என்பனவற்றையும், பக்தி இலக்கியம் சுட்டும் பண்பாட்டினையும், பண்பாட்டுக்கூறுகளையும் விளக்குதல் தகும்.

## 6. 1. பண்பாடு – விளக்கம்

பண்பாடு என்றால் என்ன என்பது பற்றிச் சமூகவியலாளர்கள் தரும் விளக்கங்கள் சிலவற்றை இவண் காண்போம். பண்பாடு என்பது சமுதாயத்திலிருந்து உறுப்பினர்களால் கற்கப் பெறுவனவும் பங்கிடப்பெறுவனவும் ஆகும். சமுதாயத்தில் வாழும் மனிதர்கள் மதிப்புக்களையும் நம்பிக்கைகளையும் நடவடிக்கைகளையும் (Behaviours) கற்பதால்தான் மனிதர்களாக வாழ்க்கின்றனர்.[5] மக்களின் வரலாற்றில் அவர்கள் படைத்துக்கொண்ட கருவிகள், சமூகப் பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள், ஒழுக்கங்கள், கொள்கைகள் முதலியவனவற்றின் சாராம்சங்களைப் பண்பாடு எனப் பொதுவாகக் கூறலாம்.[6] சமுதாயத்திலிருந்து பெறப்படுவதும், அடையாளங்கள், மதிப்புக்கள், செயல்பாடுகள் ஆகியவற்றைக் கடத்தக் கூடியதும், அவற்றுடன் தொடர்புடையனவற்றை உள்ளடக்கியதும் பண்பாடு எனப்படும்.[7] சமுதாயத்தில் வாழ்கின்ற உறுப்பினர்களால் சமுதாயத்திலிருந்து கற்கப் பெறுவனவும், பகிர்ந்துகொள்ளப் பெறுவனவும் ஆகிய அனைத்தும் பண்பாடு எனப்படும். அதாவது சமுதாயத்தின் உறுப்பினர் என்ற முறையில் மனிதர்களால் மேற்கொள்ளப்பெறும் அறிவுரைகள், நம்பிக்கைகள், கலைகள், ஒழுக்கங்கள், சட்டங்கள், வழக்கங்கள் என்பனவற்றின் கூட்டே (complex) பண்பாடு எனப்படும். சமுதாயங்களில் வாழ்கின்ற மக்கள் நாம் சில நம்பிக்கைகளுக்கும், வழக்கங்களுக்கும் பணிகின்றோம் என்பதை உணராமலும், ஏன் பிறர் இவ்வாறு நம்பிக்கை கொண்டிருக்கின்றார்கள், செயல்படுகின்றார்கள் என்று எண்ணி வியவாமலும் சில நம்பிக்கைகளுக்கும் வழக்கங்களுக்கும் ஆட்பட்டுவிடுகின்றனர். மேலும், தம் வாழ்க்கை அனுபவங்களால் சமுதாயத் தேவைகளை நிறைவேற்றுவதாகச் சில சட்டங்களையும் நடைமுறைகளையும் வகுத்துக்கொள்கின்றனர். இந்த நம்பிக்கைகளும், வழக்கங்களும், சட்டங்களும், நடைமுறைகளும் பண்பாடு என வழங்கப்பெறுகின்றன.[8] மனித இனத்தின் வாழ்க்கையைச் செம்மைப்படுத்தும்

நம்பிக்கைகள், வழக்கங்கள், நிறுவனங்கள் அனைத்தையும் பண்பாடு என்ற சொல் குறிக்கின்றது.[9] நம் வாழ்க்கைச் சூழல்களுக்கேற்ப நாம் மேற்கொள்ளும் வழிகள் அனைத்தையும் மொத்தமாகப் பண்பாடு என்று கூறலாம்.[10] எதிர்பார்ப்புகள் (expectations), நம்பிக்கைகள், கருத்துக்கள், புரிந்துகொள்ளல்கள் (understandings), யூகங்கள் (speculations), இலக்குகள் (goals), விருப்பங்கள் (interests), நோக்கங்கள் (motives), தேர்வுகள் (choices) அனைத்தையும் பரலாகப் பங்கிட்டுக் கொள்வதையே பண்பாடு என்ற சொல் வெளிப்படுத்துகின்றது. காலம் முழுவதும் உறுதியாக நிற்க ஏதுவானதும், சில குறிப்பிட்ட மதிப்புக்களைச் சுற்றி அமைக்கப்பெற்றதும் ஆகிய சமூக அமைப்பு நிறுவனமே பண்பாடு எனலாம்.[11] பண்பாடு மனித வழியில் (human path) நடப்பதற்கான அடிப்படையான அல்லது இன்றியமையாத விதிகளின் தொகுதியாக அமைகின்றது.[12] மக்களின் நடவடிக்கைகளுக்கு வழிகாட்டும் எல்லா வழக்கங்களும், மதிப்புக்களும், திறமைகளும் சமூகப் பண்பாட்டின் பகுதிகளாகும்,[13] பண்பாடு என்பது மக்களால் பகிர்ந்துகொள்ளப் பெறுவனவும், அவர்களுடைய குழந்தைகளுக்குச் கடத்தப்பெறுவனவும் ஆகிய நம்பிக்கைகள், உற்பத்திகள், திறமைகள், ஆகியவனற்றைக் குறிக்கின்றது.[14] மொழி, கருவிகளைச் செய்தல், தொழில்கள், கலைகள், அறிவியல், சட்டங்கள், அரசு, ஒழுங்கு, சமயம் மட்டுமன்றி உருவக் கருவிகள், கைவினைப் பொருள்கள் ஆகியனவற்றை உள்ளடக்கிய அனைத்தும் பண்பாட்டினுள் அடங்கும்.[15] இவ்விளக்கங்களை நோக்கும்போது சமுதாயத்தில் வாழ்கின்ற மக்களின் நடவடிக்கைகளின் (human behaviours) கூட்டே பண்பாடு எனப்பொதுவாகக் கூறலாம்.

## 6. 2. பண்பாட்டின் கூறுகள் (COMPONENTS OF CULTURE)

சமூகவியலாளர்களால் பண்பாடு குறித்து அளிக்கப்பெறும் விளக்கங்கள் மூலம் பண்பாட்டினுள் அடங்கியுள்ள கூறுகளை இனங்கண்டுகொள்ள முடிகின்றது. வழக்கங்கள், நம்பிக்கைகள், மதிப்புக்கள், கருத்துக்கள், சமயம், அரசு, ஒழுக்கம், கொள்கைகள், கருவிகள், தொழில்நுட்பங்கள், அறிவியில், பொருட்கள், உற்பத்திகள், கைவினைப்பொருட்கள் போன்ற அனைத்தையும் பண்பாட்டின் கூறுகள் எனக் கொள்ளலாம். இலாப்பியர் (T. Lapiere) என்ற சமூகவியலறிஞர் பண்பாட்டின் கூறுகளை மூன்று உட்தொடர்புடைய முறைகளாகப் (Inter-related system) பாகுபாடு செய்துள்ளார். [16]

கருத்துக்கள், நம்பிக்கைகள், மதிப்புக்கள், விரும்பத்தக்கவை, விரும்பத்தகாதவை ஆகியனவற்றைக் கற்கும் வழிகள் அனைத்தும் கருத்துமுறை (Ideological system) என்ற பாகுபாட்டிற்குள் அடக்கப்பெறுகின்றன. இவை மனிதச் சிந்தனைகளுக்கும் செயல்களுக்கும் அடிப்படையாக அமைகின்றன. பண்பாட்டை உருவாக்கும் கூறுகளாகிய உணவு, உணவு தயாரிக்கும் முறை, பொழுதுபோக்கு, அரசியல், ஒழுக்கம், சமய நடவடிக்கைகள், சட்டங்கள், பால் வழக்கங்கள் (sexual customs) என்பனவற்றையும் இம்முறை குறிக்கின்றது.

கச்சாப்பொருட்களிலிருந்து மனிதர்கள் தயாரிக்கும் பொருட்கள், கலைகள், அவர்களுடைய தொழில்கள், திறமைகள் என்பன தொழில்நுட்ப முறை (Technical system) என்ற பகுப்பினுள் அடங்கும். பிற செயல்களுடன் ஒருங்கிணைப்பதற்காக மனிதர்கள் கற்கும் அனைத்தையும் ஒருங்கிணைப்பு முறையின் (Organised system) கீழ் அடக்குவர். முற்கூறிய பண்பாட்டின் கூறுகள் அனைத்தும் இம்மூன்று முறைகளினுள்ளே அடங்குமாற்றை அறியலாம்.

## 6. 3. பண்பாட்டின் பரிணாம வளர்ச்சி (EVOLUTION OF CULTURE)

சமூகவியலாளர்கள் பண்பாடு மிகத் தொன்மையான காலத்திலேயே தோன்றிவிட்டது எனவும், முற்கால மனிதர்களின் உடல் அமைப்பிலிருந்து இக்கால மனிதர்களின் உடல் அமைப்பு வரையிலும் உள்ள பரிணாம வளர்ச்சிநிலைகளுடன் தொடர்பான வளர்ச்சிநிலையைப் (corresponding development) பண்பாடும் கொண்டுள்ளது எனவும் கருதுகின்றனர்.[17] முற்காலத்தில் மனிதர்கள் இயற்கையுடன் இயைந்த வாழ்க்கை வாழ்ந்துவந்தனர். மக்கள் கூட்டம் கூட்டமாகச் சென்று உணவு தேடினர். இயற்கையிலிருந்து பெற்ற காய்கள், கிழங்குகள், கனிகள், விலங்குகள், பறவைகள் ஆகியனவற்றின் இறைச்சி போன்றவற்றை அவ்வாறே உண்டனர். பின்னர் உணவைப் பெறவும், கொடிய விலங்குகளிலிருந்து தம்மைக் காத்துச் கொள்ளவும் கூரிய கற்கள், மரக்கொப்புகள் ஆகியனவற்றைக் கருவிகளாகப் பயன்படுத்தும் நிலைக்கு முன்னேறினர். மரத்தழைகளையும், மரவுரிகளையும், விலங்குகளின் தோலையும் ஆடையாக உடுத்துக் குளிர், மழை போன்ற இயற்கைச் சீற்றங்களிலிருந்து தம்மைப் காத்துக்கொள்ளும் நிலையைக் கற்றுக்கொண்டனர். ஒரு கூட்டத்தினர் தம்மிடையேயும், ஒரு கூட்டத்தினர் மற்றொரு கூட்டத்தினரிடையே தம் மன உணர்வுகளையும், கருத்துக்களையும் ஒலிகளை எழுப்புதல், அடையாளங்களைப் பயன்படுத்தல் மூலம் வெளிப்படுத்தினர். இவ்வாறு மனித இன வளர்ச்சியுடன் பண்பாட்டுக் கூறுகளாகிய உணவுவகைகள், கருவிகள், ஆடைகள், ஒலி, அடையாளம் போன்ற மொழிவகைகள் என்பனவும் ஒத்த நிலையில் வளர்ச்சியுற்றமையை அறிகின்றோம்.

காலம் செல்லச் செல்ல மனிதர்கள் கற்களை ஒன்றுடன் ஒன்றை உராய்த்து நெருப்பை உண்டாக்கும் கலையைக் கற்றுக்கொண்டனர். குளிர்காலத்தில் தம்மைப் பாதுகாத்தல், விலங்குகளின் இறைச்சி, கிழங்குகள், காய்கள் போன்றவற்றை வேகவைத்தல், கொடிய விலங்குகளிடமிருந்து தம்மைப் பாதுகாத்தல் என்பவனவற்றிற்கு நெருப்பைப் பயன்படுத்தினர். மனிதனின் அறிவு வளர்ச்சியாலும். முயற்சியின் அதிகரிப்பினாலும் உலோகங்கள் கண்டுபிடிக்கப்பெற்றதுடன், அவற்றைப் பயன்படுத்திக் கருவிகள் பல செய்யவும் கற்றுக்கொண்டனர். ஒலியளவிலும், குறியீட்டு அளவிலும் தம் கருத்தை வெளியிட்டுவந்த மக்கள் பேச்சுமொழியை உருவாக்கிக்கொண்டனர். அலைந்து

திரிந்த மக்கள் நீர்வளமிக்க நிலப்பரப்பில் நிலையாகத் தங்கி விவசாயத் தொழில்களை மேற்கொண்டு வாழத் தொடங்கினர். ஆடவர், பெண்டிரிடையே வேலைப் பிரிவினை ஏற்பட்டது. விவசாயப் பொருட்களும், விலங்குகளின் பால், இறைச்சி போன்றனவும் உணவுப்பொருட்களாயின. இவ்வாறு படிப்படியாக மனித இன வளர்ச்சியுடன் பண்பாட்டு வளர்ச்சியும் ஏற்பட்ட நிலையை அறியலாம்.

## 6. 4. பண்பாட்டின் செயல்பாடுகள் (FUNCTIONS OF CULTURE)

சமுதாயத்தில் ஒவ்வொரு குழந்தையும் (infant) குறிப்பிட்ட பண்பாடுகளால் ஏற்றுக்கொள்ளப்பெற்ற மனித நிலைக்கு உயர்த்தப்பெறுகின்றது. ஏதேனும் சில சூழ்நிலைகள் காரணமாக இப்பண்பாட்டைப் பெறாது கைவிடப்பெற்ற நிலைக்கு அக்குழந்தை உள்ளாகும்போது அது மனிதனைவிட வேறாக, விலங்கைவிடக் கீழாக வளர்ந்துவிடும் வாய்ப்பு உருவாகின்றது. எனவே, பண்பாடு ஒரு மனிதனைப் பாடறிந்து ஒழுகும் பண்புடையனவாக வாழச்செய்வதில் பெரும்பங்காற்றுகின்றது எனலாம். குழந்தைகள் இளமைப்பருவம் முதலாகவே சரியான வழிகளில் நடக்கப் பண்பாடு துணைசெய்கின்றது. மனிதர்கள் உருவாக்கிய மொழியின் மூலமாகப் பிறரிடம் தொடர்பு கொள்ள வாய்ப்பளிக்கும் சக்தியாகவும் பண்பாடு செயலாற்றுகின்றது.

மனிதர்கள் தம் அடிப்படைத் தேவைகளை நிறைவேற்றுவதற்குரிய அறிவையும் திறமையையும் அளிக்கின்றது. ஒரே பின்னணியில் வாழ்கின்ற மக்கள் ஒருவரையொருவர் ஐக்கியப்படுத்திக்கொள்ளப் பண்பாடு துணைநிற்கின்றது. ஒரே பண்பாட்டினைப் பின்பற்றும் குழுவினரிடையே 'நான் என்பதற்குப் பதில் ' நாம்' என்ற ஒற்றுமை உணர்வை ஊட்டுகின்றது. சமுதாயத்தில் வாழ்கின்ற மக்கள் அனைவரும் ஏதோ ஒருவகையில் ஒரு சிக்கலை எதிர்நோக்கி வாழ்கின்றனர். பண்பாடு இச்சிக்கல்களுக்கு விடையளிப்பதாய் அமைகின்றது. இத்தகைய சமூகச் செயல்பாடுகளைப் பண்பாடு கொண்டுள்ளமையால் சமூகவியலாளர்கள் எந்தக் குழுவின் நடவடிக்கைகளைப் புரிந்துகொள்ள வேண்டுமானாலும் அக்குழுவின் பண்பாடு பற்றிய அறிவில் தேர்ச்சிபெற்றிருக்க வேண்டும் என எதிர்பார்க்கின்றனர். இதனால் பண்பாடு பற்றிய அறிவு சமூகவியல் ஆய்வாளர்களுக்கு இன்றியமையாத தேவையானது என்பது புலனாகின்றது.

## 6. 5. பண்பாட்டின் குணங்கள் (CHARACTERISTICS OF CULTURE)

பண்பாட்டின் மிக அடிப்படையான குணங்களாக அது மனித நடவடிக்கைகளின் உற்பத்தியாகத் (product of human behaviours) திகழ்தல், கற்றல் மூலமாக மாற்றப் பெறுதல், எப்போதும் மனிதத் தேவைகளை நிறைவேற்றுதல், சமுதாய ஒற்றுமையை நிலைநிறுத்தத் துணைசெய்தல்

என்பவனவற்றைக் கூறுவர்.[19] பண்பாடு என்பது ஒருவரது பிறவிக்குணமாக வருவது அன்று. அது அறிவாலும், அனுபவத்தினாலும் மனிதர்களால் உருவாக்கப்பெறுவது ஆகும்.

இப்பண்பாட்டின் சில கூறுகள் இனத்துக்கு இனம், சமுதாயத்துக்குச் சமுதாயம் பொதுவானதாக அமைந்திருக்கும். அடிப்படை நிறுவனங்களாகிய குடும்பம், பொருளாதாரம், சமயம், அரசு போன்றவை எப்போதும் சில குறிப்பிட்ட வடிவங்களிலேயே தோற்றமளிக்கும், இந்நிறுவனங்களிடையே காணப்பெறும் பண்பாட்டுக் கூறுகளும் சிறிதளவே வேறுபடும்.

ஒவ்வொரு மனிதச் சமூகத்தின் நடவடிக்கைகளிலும் இப்பண்பாட்டின் தாக்கத்தைக் காணமுடியும். பண்பாடு சமூக, மனித உறவுகளைத் தீர்மானிக்கின்றது. மனிதன் எவ்வாறு செயல்படவேண்டும் என்ற வழிகளைப் பண்பாடு கூறுவதாய் அமைந்த போதிலும் அது நியாயமான ஒழுக்கங்களை நிலைநாட்டவும் செய்கின்றது. மனித இனங்களில் மட்டுமே தனிநபர்களிடையே வேறுபாடு காணப்பட்டபோதிலும் குறிப்பிட்ட அளவில் ஒற்றுமையுடனும் காணப்பெறும்.[20] இவ்வாறு பண்பாட்டின் குணங்கள் விளக்கப்பெறுகின்றன.

## 6. 6. பண்பாட்டின் வகைகள்

சமூகவியலாளர்கள் பண்பாட்டைப் பல நிலைகளில் வகைப்படுத்தி விளக்குவர். அவற்றுள் உருவப்பண்பாடு, அருவப்பண்பாடு என்ற பாகுபாட்டையும் ஒன்றாகக் குறிப்பர்.[21] கருவிகள், மரப்பொருட்கள், மோட்டார் வாகனங்கள், கட்டடங்கள், சாலைகள், பாலங்கள், மக்களால் பயன்படுத்தப்பெறும் பிற பௌதிகப்பொருட்கள், கைவினைப்பொருட்கள் முதலானவற்றை உருவப்பண்பாடு (Material culture) என்ற பாகுபாட்டினுள்ளும், கருத்துக்கள், வழக்கங்கள், நம்பிக்கைகள், மக்களால் பின்பற்றப்பெறும் சமூகத்தடைகள் (social taboos), மதிப்புக்கள், தொடர்புவகைகள் முதலானவற்றை அருவப்பண்பாடு (Non-material culture) என்ற பாகுபாட்டினுள்ளும் அடக்கலாம்.

பண்பாட்டைப் பண்பாட்டுக் கலவை (Cultural complex) என்றும், பண்பாட்டு இனம் (cultural trait) என்றும் பாகுபடுத்தும் நிலையை அடுத்துக் கூறலாம்.[22] பண்பாட்டின் மொத்தக் கூறுகள் பண்பாட்டுக் கலவை என்றும், பண்பாட்டின் மிகச் சிறிய கூறுகள் பண்பாட்டு இனங்கள் என்றும் கருதப்பெறும். எடுத்துக்காட்டாகத் திருமணச் சடங்கைப் பண்பாட்டுக் கலவை எனக் கொண்டால், மணம் பேசிப் பெரியோர் வருதல், மணநாள் குறித்தல், மணவோலை அனுப்புதல், உறவினர்கள் வருதல், மண மக்களை அலங்கரித்தல், மணவீட்டை அலங்கரித்தல், விருந்தினர்க்கு உணவு அளித்தல், தாலிகட்டுதல், மண ஊர்வலம் வருதல், திருமணத்திற்குப் பின்னர் நிகழும் சடங்குகள் என்றிவை போன்ற அனைத்தையும் பண்பாட்டு இனங்கள் எனக் கொள்ளலாம்.

எந்த ஒரு பண்பாட்டிலும் பல பண்பாட்டு இனங்கள் இடம்பெறுகின்ற பொதுவான பண்பைக் காணமுடியும். பண்பாட்டு இனங்களை உருவப்பண்பாட்டு இனங்கள் (Material traits), சட்டதிட்டங்களுக்கு உட்பட்ட பண்பாட்டு இனங்கள் (Normative traits), மதிப்புக்கள் (Values) என்று வகைப்படுத்துவர்.[23] மனிதர்களால் உருவாக்கப்பெற்று, சமுதாயத்தினரால் பயன்படுத்தப்பெறும் எல்லா உருவ அல்லது தொழில்நுட்பப்பொருட்களும் உருவப்பண்பாட்டு இனத்துள் அடங்கும். சட்டதிட்டங்களுக்கு உட்பட்ட பண்பாட்டு இனங்கள் அருவப் பண்பாட்டின் முக்கியவகையாகக் கருதப்பெறுகின்றன. இவை சமுதாயத்தின் உறுப்பினர்கள் ஒருவருக்கொருவர் மேற்கொள்ளும் நடவடிக்கைகளின்போது பின்பற்றப்பெறும் நிறுவனமாக்கப்பெற்ற எதிர்பார்ப்புகள் (Institutionalized expectations) ஆகும். சமுதாயத்தில் மக்கள் எவ்வாறு ஒழுகவேண்டும் எனக் கூறுவனவே மதிப்புக்கள் ஆகும்.

அடுத்து, பண்பாட்டைப் பண்பாட்டுப் பொதுமைகள் (cultural universals) என்றும், துணைப்பண்பாடு (sub-culture) என்றும் பாகுபடுத்திக் காண்பர். எல்லாச் சமுதாயங்களிலும் இடம்பெறும் பொதுவான நடவடிக்கைகளும், நிறுவனங்களும் பண்பாட்டுப் பொதுமைகள் எனப்பெறும். பரந்ததாகவும், பெரிய அளவிலும் காணப்பெறும் பண்பாட்டினுடைய சில குறிப்பிட்ட மதிப்புக்களையும், வழக்கங்களையும் பகிர்ந்து கொள்ளும் மக்கள் சமுதாயத்தில் வாழ்கின்றனர். இவர்கள் தங்களுக்குள்ளாக மட்டுமே பகிர்ந்துகொள்ளும் சில பண்புகளைக் கொண்டுள்ளனர். இப்பண்புகளைப் பிறரிடம் பகிர்ந்துகொள்வதில்லை. இவற்றைத் துணைப் பண்பாடுகள் எனக் கொள்ளலாம். எடுத்துக்காட்டாகச் சமையல் செய்தலைப் பொதுப்பண்பாடு எனக்கொண்டால் சமையல் செய்வதிலுள்ள பல்வேறு முறைகளைத் துணைப்பண்பாடு எனக் கொள்ளலாம். இவ்வாறு சமுதாயத்தில் காணப்பெறும் பண்பாட்டைப் பல நிலைகளில் பகுத்துக் காணலாம்.

இனி, இறைவனின் பெருமைகள், அருட்செயல்கள், அடியார்களின் வாழ்க்கை வரலாறுகள், உலகியல் நிலை, மக்களுக்கு அறிவுரைகள் கூறுதல், இறைவனிடம் வேண்டுதல் போன்ற இடங்களில் பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயப் பண்பாடுகளைக் காண்போம்.

## 6. 7. பக்தி இலக்கியம் காட்டும் பண்பாடு

### 6. 7. 1. *வழக்கங்கள்* (CUSTOMS)

மரபாகக் கடைப்பிடிக்கப்பட்டுவரும் சமூக மயமாக்கப் பெற்ற நடவடிக்கைகளின் குறிக்கோள்கள் வழக்கம் எனப்படும். இவற்றிற்கு எதிரான செயல்களுக்குச் சமூகம் ஒப்புதல் அளிப்பதில்லை என்பதன் மூலம் இவ்வழக்கங்கள் சமூகத்தில் வலியுறுத்தப்பெறுகின்றன.[24] பக்தி இலக்கியம் மூலம் சமுதாயத்தில் கடைப்பிடிக்கப்பெற்றிருந்த பல்வேறு வழக்கங்களை அறியமுடிகின்றது.

### 6. 7. 1. 1. பொதுவான வழக்கங்கள்

#### 6. 7. 1. 1. 1. விருந்தோம்புதல்

வீட்டிற்கு வந்த விருந்தினர்களைப் போற்றுதல் என்பது மிகத் தொன்மைக் காலம் முதலாகவே தமிழ்ச். சமுதாயத்தில் போற்றிப்பாதுகாக்கப் பெற்ற பண்பாட்டுக் கூறுகளில் ஒன்று எனலாம். பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்திலும் இவ்வழக்கம் பெரிதும் போற்றப்பட்டு வந்துள்ளது. இறைவன் எழுந்தருளியுள்ள திருத்தலங்களை வருணிக்கும் பகுதிகளில் அவ்விடங்களில் வாழும் மக்களின் விருந்தோம்பும் பண்பும் சிறப்புற மொழியப்பெறுகின்றது. சான்றாக வருவிருந்தை அளித்திடும் மக்கள் நிறைந்த ஊர் எனத் திருவரங்கமும், நாடொறும் விருந்து ஓம்புவார் நிறைந்த ஊர் எனத் திருமுனைப்பாடியும் வருணிக்கப்பெறுமாற்றைக் கூறலாம்.25 அடியார்களின் வாழ்க்கை வரலாறுகளிலும் விருந்தோம்பும் பண்பு விதந்தோதப்பெறுகின்றது. கையில் பொருளின்றி வறுமை நிலையுற்றிருந்த போதிலும் இல்லிலுள்ள மாற்றத்தக்க பொருள்களை மாற்றியும், மனைவியின் மங்கல அணிகலனை விற்றும், மனைவியையே விற்க முயன்றும், கூலிக்காக உழைத்தும் பொருளீட்டி இறையன்பர்களை விருந்தோம்புகின்ற உயர்பண்பை அடியார்களின் வரலாறு மூலம் காண்கின்றோம்.

#### 6. 7. 1. 1. 2. உணவு உண்ணும் முறை

மக்களின் வாழ்க்கையில் நிகழும் ஒவ்வொரு செயலும் அவர்களுடைய பண்பாட்டை வெளிப்படுத்துவதாக அமைகின்றது. இவ்வகையில் பக்தி இலக்கியம் மக்களின் உணவு உண்ணும் முறையையும் காட்டுகின்றது. மக்கள் உச்சிவேளையில் மதிய உணவு உண்டனர்.[26] மதிய உணவு உண்பதற்கு முன்னர் மலர் பறித்துவந்து, நெற்றியில் நீறுபூசி, இறைவனை வணங்கும் வழக்கத்தை மேற்கொண்டிருந்தனர்.[27] வணிகர் குலத்தினர் மதிய உணவு உண்பதற்கு முன்னர் நீராடும் வழக்கத்தை மேற்கொண்டிருந்தமையைக் காரைக்காலம்மையார் வரலாறு மூலம் அறியலாம்.[28] வாழை இலையில் - வாழைக் குருத்திலையில் - அதன் ஈர்வாய் வலம்பெற வைத்து, நீர்கொண்டு அதனை விளக்கிய பின்னர் உணவு உண்டனர்.[29] திருமாலைக் குழந்தையாக எண்ணிப் பரவும் நிலையில் உன் அப்பனும் இன்னும் உண்டிலனாகையால் உன்னுடனிருந்து உண்ணும்பொருட்டு விரைந்து உண்ண வருவாயாக என ஆழ்வார் அழைக்கின்றார்.[30] தந்தையார் குழந்தைகளை அழைத்துத் தன்னுடன் அமர்த்திச் சேர்ந்திருந்து உணவு உண்ணும் வழக்கம் நிலவியமையை இக்குறிப்பு உணர்த்துகின்றது. அக்கால மக்கள் நிலத்தின் இயல்பிற்கும், உடலின் இயல்பிற்கும் ஏற்ற வகையில் உணவை உண்டனர் என்பதற்கான குறிப்பும் உள்ளது.[31]

#### 6. 7. 1. 1. 3. உபசரிக்கும் முறை

இறை அன்பர்களை உபசரிக்கும் நிகழ்ச்சிகளை விளக்குமிடத்து, அக்காலச் சமுதாயத்தில் நிலவிய உபசரிக்கும் வழக்கம் விளக்கப்பெறுகின்றது.

இறைவன் அடியார் உருவில் எழுந்தருளிவந்து சிறுத்தொண்டர் வீட்டை அடைந்து அவர் உளரா என்று வினவ, அவர் மனைவி மகிழ்ச்சியுடன் முன்வந்து, தாள் வணங்கி அகத்தெழுந்தருளும் என வேண்டுகின்றாள்.[32] காரைக்காலம்மையார் தம் இல்லத்திற்கு வந்த அடியாரின் பாதம் விளக்க நீர் முகந்தளிக்கின்றார்.[33] பரஞ்சோதியார் அடியாரை முன்னூட்டிப் பின்னுண்ணுகின்றார்.[34] கழற்றறிவார் அரசர்க்கமைந்த சிறப்பினும் மேலாக அடியவர்க்குப் பெருகும் அன்புடன் விரும்பும் அமுது படைக்கின்றார்.[35] அப்பூதியடிகள் தம் அருமைப்புதல்வன் இறந்துவிட்ட செய்தியை அறிந்த பின்னரும். தாங்கொணாத் துன்பத்தை மனத்துள் அடக்கிக்கொண்டு திருநாவுக்கரசரை உபசரிக்கின்றார்.[36] மக்கள் இன்சொற்களை மொழிந்துகொண்டே விருந்தினர்க்கு உணவுபடைத்தனர்.[38] மறையவர் வடிவில்வந்த இறைவனை இயற்பகையார் அன்புடன் எதிர்கொண்டு, வணங்கி அழைத்துவந்து வழிபாடுகள் செய்து முகமன்மொழிகின்றார்.[39] திருநீலகண்டநாயனார் மட்கலங்கள் செய்து, தம் இல்வாழ்க்கைக்கு வேண்டிய அளவு பொருளை மட்டும் எடுத்துக்கொண்டு, ஏனையவற்றை இறைஅடியார்களை உபசரிப்பதற்காகச் செலவிட்டுள்ளார்.[40] இளையான்குடிமாறநாயனார் அடியார்கள் யாவராயினும் வேற்றுமை பாராட்டாது எதிரே சென்று அழைத்துவந்து வணக்கமாக நின்று, குளிர்ந்த அன்பாலான இனிய மொழிகளைக் கூறி, திருவடிகளை விள்க்கி, அருச்சித்து, அறுசுவை உணவை ஊட்டி உபசரித்துள்ளார்.[41] இவற்றால் வீட்டிற்கு வருவோர் யாவராயினும் வேற்றுமை பாராட்டாது எதிர் சென்று அழைத்தும், இன்மொழி கூறியும், வணங்கியும் உபசரிக்கும் வழக்கம் காணப்பெற்றது எனக் கருதலாம். மேலும், வீட்டிற்குச் சான்றோர்கள் எழுந்தருளியபோது, பகற்பொழுதாயினும்கூட விளக்கிடும் மரபு நிலவியமையையும் உணரமுடிகின்றது.[42] திருநீலகண்டநாயனார் யோகியர் வடிவில் வந்த இறைவனிடம் திருவோட்டினைப் பெற்று, அவருடன் வெளியே வந்து, வழிபட்டு விடைபெற்றமையால்[43] வீட்டிற்கு வந்தவர்களை வாயில்வரை சென்று வழியனுப்பும் வழக்கமும் தெரிகின்றது.

### 6. 7. 1. 1. 4. பெரியோர்கள் வழக்கம்

பெரியோர்கள் சந்திக்கும்போது இடைநாட்களில் நிகழ்ந்த செய்திகளைக் கேட்டறியும் வழக்கம் உண்டு என்பது திருநாவுக்கரசரும், திருஞானசம்பந்தரும் சந்தித்தபோது தாம் சந்திக்காத நாட்களில் நடந்தனவற்றைக் கேட்டறிகின்றமையின் மூலம் தெரிகின்றது.[44] திருமறைக் காட்டில் ஆளுடைப்பிள்ளையாரைக் காணவந்த பாண்டிமாதேவியாராலும், குலச்சிறையாராலும் செல்ல விடுத்த சிலரிடம் அவர் முதன்முதலில் தீதின்மையை வினவியறிகின்றார். அதற்கு அவர்கள் முதன்முதலில் இவ்வுலகம் உய்யவந்த உமது இருதாள் நினைவார்க்குத் தீமைகளும் உளவாமோ என்று கூறிவிட்டுப் பின்னரே பொய்வல்லமணர்களது செயல்களைக் கூறுகின்றனர்.[45] இதனால் பெரியோர்கள் தம்மைக் காணவந்தவர்களிடம் முதலில் தீதின்மையைக் கேட்டறிந்து மங்கலமாக உரையாடலைத் தொடங்கும் வழக்கமும், பெரியோர்களிடம் முதலில்

தீதின்மையைக் கூறிய பின்னரே ஏனைய நிகழ்ச்சிகளைக் கூறும் வழக்கமும் நிலவியமை புலனாகின்றது. திருநாவுக்கரசரைத் தொழுது திருஞானசம்பந்தர் விடைகூறுதல் [46] பெரியோர்களின் வினாவிற்குத் தொழுது விடைகூறும் மரபைக் காட்டுகின்றது.

## 6. 7. 1. 1. 5. பெரியோர்களை வரவேற்கும் முறை

திருஞானசம்பந்தரின் வருகையை அறிந்த மக்கள் உள்ளமகிழ்வுடன் நடைக்காவணமிட்டும், ஊரை அலங்கரித்தும், சுண்ணம், மலர், பொரி போன்றனவற்றைக் கலந்து தூவியும் வரவேற்கின்றனர்.[47] மேலும், வாயில்களில் தோரணங்கள் கட்டியும், வாழைமரங்கள், கமுகு மரங்கள் ஆகியனவற்றைக் கட்டியும், பொன்னாலான நிறைகுடங்கள், தூபம், தீபம், இதழ்கள் பொருந்திய மலர்மாலைகள் ஆகியனவற்றை ஏந்தியும், கொடிகள் கட்டி அழகு செய்தும் வரவேற்கின்றமையைக் காண்கின்றோம்.[48] தொண்டர்கள் திருவீதிகளைத் திருவலகிட்டுத் தூய்மை செய்கின்றனர்.[49] மக்கள் மஞ்சள் கலந்த வாசனைப் பொருட்களைத் தூவுகின்றனர்.[50] அப்பூதியடிகள் திருநாவுக்கரசரின் வருகையை அறிந்து மகிழ்ச்சி பொங்க இல்லவர்க்கும், மக்களுக்கும் அறிவித்து வணங்கி, ஆராக் காதலுடன் வரவேற்கின்றார்.[51] சுந்தரர் வீதியில் எழுந்தருளியபோது அவர் திருமுன்பு கடா, குரங்கு, கோழி, சிவல், கவுதாரி ஆகியனவற்றைப் பிடித்துச் சென்று இருபக்கமும் நின்று வரவேற்கின்றனர்.[52] இவற்றால் சமுதாயத்தில் பெரியோர்களை வரவேற்கும் மரபை அறியமுடிகின்றது.

## 6. 7. 1. 1. 6. பெரியோர்களிடம் பழகும் முறை

சுந்தரர் செங்குன்றூர் வந்ததும் மக்கள் கூப்பிய கைகளைத் தலைமீது பொருந்த ஏற்றி வணங்குகின்றனர்.[53] மேலும், பெரியோர்களின் அடிகளில் வீழ்ந்து கிடந்து, அவர்கள் எழுக என்று கூறியபின்னர் எழுதலும், திருவடிகளிலே வீழ்ந்து கிடத்தலும், பெரியோர்கள் இறைவனை வணங்கச் செல்லும்போது அவர்களுடைய வழிபாட்டிற்கு இடையூறு நேராதவாறு அவர்களை வணங்காது ஒதுங்கி நிற்றலும் பெரியோர்களிடம் பழகும்போது கடைப்பிடிக்கவேண்டிய வழக்கங்களாகக் கருதப்பெற்றிருந்தன.

## 6. 7. 1. 1. 7. நீராடும் வழக்கம்

கன்னிப் பெண்கள் கோழியழைப்பதன் முன்னர் நீர் நிலைகளில் சென்று படிந்து நீராடுதலும், குழந்தைகளைக் காய்ச்சிய சூடான நீரில் நீராட்டுதலும், குழந்தைகளை நீராட்ட மஞ்சள், செங்கழுநீரின் வாசிகை, நறுஞ்சாந்து, சந்தனம், மணப்பொருட்கள் போன்றனவற்றைப் பயன்படுத்தலும் அக்கால மக்களிடையே - குறிப்பாக உயர்சமூக நிலையினரிடையே - காணப்பெற்ற நீராடும் முறை பற்றிய வழக்கங்கள் எனலாம்.[54]

## 6. 7. 1. 1. 8. பெண்களின் வழக்கம்

அரசர் குலப் பெண்களும், செல்வ வளம் மிக்க மேட்டுக்குடிப் பெண்களும் பல்லக்கின் மீதேறி வெளியே வருதல் வழக்கம் என்பது தெரிகின்றது. காரைக்கால் அம்மையார் மூடு பல்லக்கில் வருகின்றமையையும், பூம்பாவையின் சாம்பல் குடத்தை மூடுபல்லக்கில் வைத்துக்கொண்டு, வருகின்றமையையும் சான்றுகளாகக் கொள்ளலாம். இதனைப் போன்று உயர்வகுப்புப்பெண்கள் தோழியர் புடைசூழச் செல்கின்றமையும், தோழியருடன் இருப்பதற்காகக் காவல் மிக்க கன்னிமாடங்கள் அமைத்தலும் அக்கால வழக்கமாகக் காணப்பெற்றது.[55]

## 6. 7. 1. 1. 9. பொழுதுபோக்கு

கடா, குரங்கு, கோழி, சிவல், கவுதாரி போன்றனவற்றைப் பிடித்துப் பழக்கிப் பொழுதுபோக்கும் வழக்கமும் காணப்பெற்றது. இவற்றைப் பிடித்துச்சென்று பெரியோர்கள் முன்னிலையில் காட்டிச் சன்மானம் பெறும் வழக்கமும் இருந்துள்ளமை தெரிகின்றது.[56]

## 6. 7. 1. 10. குளிர்காய்தல்

வாடைக்காற்றின் கொடுமையை ஆற்றமாட்டாத நிலையில் மலைவாழிடங்களிலும் அயலிடங்களிலும் வாழ்ந்த மக்கள் மஞ்சளையும் குங்குமத்தையும் சேர அரைத்துப் புகைத்துள்ளனர். பக்க இடங்களில் உள்ளோர் அகிற்புகையிட்டும், இடையிடங்களில் உள்ளோர் தீயை உமிழும் பெரிய வாயையுடைய இரும்புச் சட்டியைத் தம் அணிமைக்கண் வைத்தும் குளிர்காயும் வழக்கத்தைக் கொண்டிருந்தனர்.[57]

## 6. 7. 1. 1. 11. பண்டமாற்றுச் செய்தல்

மாணிக்கவாசகப்பெருமான் இறைவனிடம் எளியேன் உள்ளத்தை நின் இருப்பிடமாகக் கொண்டு நின்னை அடியேனுக்குக் கொடுத்துள்ளாய் என்றும், இம்முறையில் பண்டமாற்றூதியம் பெற்ற திறலார்யாரெனக் கண்டவர் மருள்வர் என்றும் இறைவனுடைய திருவருட்செயலை எண்ணி வியக்குமிடத்து[58] ஒருபொருளைக் கொடுத்துவிட்டு மற்றொரு பொருளைப் பெறுகின்ற பண்டமாற்றும் வழக்கம் பற்றிய சிந்தனை வெளிப்படுகின்றது எனலாம். இவ்வெண்ணத்தை நிறைவுசெய்யும் வகையில் பரதவர்கள் மீன்குவியல்களை இடையர்களுக்குக் கொடுத்துவிட்டு மாற்றாக அவர்களிடமிருந்து சிவல், கவுதாரி முதலியனவற்றைப் பெறும் பண்டமாற்று முறையையும் நெய்தல் நிலச்சிறுமியர் இடைச்சியர்களிடமிருந்து அவரைக்கு ஈடாகப் பவளத்தைப் பெறுகின்ற பண்டமாற்றுமுறையையும் காண்கின்றோம் என்பது இவண் சுட்டுதற்குரியது ஆகும்.[59]

### 6. 7. 1. 1. 2. அழகுசெய்தல்

பெண்கள் தம்மை அழகுசெய்தல் என்பது ஒரு சமுதாய வழக்கமாகும். கூந்தலில் மலர்களை அணிந்தும், கூந்தலை மங்கலமாகப் புனைந்தும் அழகுசெய்துள்ளனர்.[60] ஆடவர்களுக்கும் அழகூட்டும் வழக்கம் காணப்பெற்றது. இவ்வாறு அழகு செய்வதற்குத் தேர்ச்சிபெற்ற சிலர் அமர்த்தப் பெற்றிருந்தனர். இவர்கள் கைவல்லான் என அழைக்கப்பெற்றனர். சுந்தரரின் திருமணத்திற்கு முன்னர் அகிற்புகை சுமழும் அழகிய பட்டாடையைச் சார்த்திக் கைவல்லான் ஒருவன் முன்கையிற் கொண்ட வெள்ளைத் துகிலை நம்பிகளின் நீண்ட குடுமியின் உள்ளே முகிலுக்குள் நுழைந்த வெண்மதியைப் போன்று செலுத்தி, ஈரம் போக்கி, கையின் நகநுனியால் குஞ்சியின் சிக்கறுத்துச் சிகையைக் கட்டி அழகூட்டியமை காட்டப்பெறுகின்றது.[61]

### 6. 7. 1. 1. 13. மாடுகளை வளர்க்கும் முறை

ஆநிரைகளை மேய்ப்பவர்கள் கொடுங் காற்றாலும் தீயநீராலும் விளையும் நோய்கள் ஆநிரைகளைத் தாக்காதவாறும், ஆநிரைகளை நோய்களிலிருந்து தடுக்கும்வண்ணமும் தூய்மையானதும், புதுமையானதும், சுவையானதுமாகிய நீரையும், புல்லையும் நாடி ஊட்டும் வழக்கமும், கன்றுகள், பால்கறவை மாறிய இளம்பசுக்கள், பால் கொடுக்கும் பசுக்கள், சினைப்பசுக்கள், விடைகள் ஆகியனவற்றை வேறுவேறாகத் தொழுவங்களில் கட்டும் வழக்கமும் காணப்பெற்றன என அறியலாம்.[62]

### 6. 7. 1. 1. 14. கைமாறு கொடுத்தல்

ஒருவர் செய்த உதவியை மனத்திற்கொண்டும், நற்செய்தி கொண்டுவந்தமையால் ஏற்பட்ட மகிழ்ச்சியை மனத்திற்கொண்டும் கைம்மாறு கொடுக்கும் வழக்கம் சமுதாயத்தில் நிலவியிருந்து. விடம் ஏறி இறந்த பூம்பாவையின் சாம்பலைத் திருஞானசம்பந்தர் வருமளவு பாதுகாத்துவைத்திருந்த சிவநேசரிடம் அவர் வருகைபுரிந்துள்ளார் என்ற செய்தியையும், அவர் அருட்செயல்களையும் கூறியவர்களுக்குச் சிவநேசர் பரிசுகள் பல அளிக்கின்றார்.[63] மங்கையர்க்கரசியாரும் சம்பந்தரின் வருகையை அறிவித்தவர்களுக்குப் பரிசுகள் கொடுக்கின்றார்.[64] இக் கருத்திற்கேற்ற வகையில் திருமங்கையாழ்வார் இறைவனிடம் தம் காதலை எடுத்து மொழியும்படி வேண்டிய நாரையிடம், அவ்வாறு மொழிந்தால் பழமீன்களைத் தருவதாகவும்,[65] நம்மாழ்வார் இறைவனிடம் தீமனம் கெடுத்த உனக்கு நான் என்ன கைமாறுசெய்வேன் என வினவுவதாகவும் [66] அமைந்த குறிப்புக்கள் இடம்பெறுகின்றன.

### 6. 7. 1. 1. 15. மேற்பார்வையாளர்கள் அமர்த்துதல்

தொழிலாளர்கள் கொடுக்கப்பெற்ற பணிகளைச் செவ்வனே செய்கின்றார்களா என மேற்பார்வையிடுவதற்காகவும், அவர்களைச் செவ்வனே தொழில்களைச் செய்விப்பதற்காகவும் மேற்பார்வையாளர்களை அமர்த்தும் வழக்கம் காணப்பெற்றது. இவர்களைக் கண்காணிகள் என அழைத்தனர். கண்காணி இல்லென்று கள்ளம்பல செய்வர் என்ற திருமூலரின் வாக்கினால்[67] இவ்வழக்கம் உண்மை புலாகின்றது.

### 6. 7. 1. 1. 16. கையூட்டுப் பெறதல்

திருநாவுக்கரசர் சமண சமயம் நீங்கிச் சைவ சமயத்தைச் சார்ந்து மேம்மையுடன் திகழ்வதைக் கண்ணுற்ற சமணர்கள் மன்னனிடம் தகாத பொய்மொழிகளை எடுத்துக்கூறித் தண்டிக்குமாறு வேண்டினர். மன்னனும் அவ்வாறே ஏவலர்களை அழைத்துச் சமண முனிவர்கள் கூறிய திருநாவுக்கரசரைக் கையூட்டுப் பெற்றுத் தம் கடமையில் சோர்வுறாது என்னிடம் அழைத்துவாருங்கள் என ஆணையிடுகின்றான்.[68] இதனால் சமுதாயத்தில் அரசியல் அலுவலரிடையே- மிகச் சிலரிடத்திலாவது - கையூட்டுப் பெறும் வழக்கம் காணப்பெற்றிருந்தது எனத் தோன்றுகின்றது, அதேநேரத்தில் கையூட்டுப் பெறுவதைக் தடுப்பதில் மன்னன் கண்ணும் கருத்துமாக இருந்தான் என்பதும் தெரிகின்றது.

### 6. 7. 1. 1. 17. பெண்விலை கொடுத்தல்

பெண்ணைத் திருமணம் செய்துகொள்வதற்காக மணமகனுக்குப் பெண்வீட்டார் பொருள்கொடுக்கும் வழக்கம் காணப்பட்டது என்பதைக் காரைக்காலம்மையார் வரலாறு காட்டுகின்றது.[69] இவ்வாறு மணமகள் வீட்டார் கொடுக்கும் பணத்தைப் பெண்விலை என்று குறிப்பிடக் காணலாம்.[70]

### 6. 7. 1. 1. 18. தருமங்கள் செய்தல்

தருமங்கள் செய்வதால் உயர்ந்த பலன் கிட்டும் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் பல்வேறு தருமங்கள் செய்யும் வழக்கம் சமுதாயத்தில் காணப்பெற்றது. ஊர்கள்தோறும் அன்னச் சாலைகள் அமைத்தல், தண்ணீர்ப்பந்தல் நிறுவுதல்[71] வழிப்போக்கர் தங்கி இளைப்பாறிச் செல்லக் கோயில்களின் பக்கங்களிலும், ஊர்களின் புறங்களிலும் மடங்கள் அமைத்தல்72 போன்றவை காணப்பெற்றன. இவ்வாறு நிகழ்த்தப்பெறும் அறங்களை உயர்ந்தோர் பெயரில் நிறுவும் வழக்கமும் இடம்பெற்றிருந்தது என்பதை அப்பூதியடிகள் அப்பர்பெருமான் பெயரில் தண்ணீர்ப்பந்தல் வைத்துள்ளமை மூலம்[72] அறிய முடிகின்றது.

## 6. 7. 1. 1. 19. சிறுகுறிப்பு எழுதும் வழக்கம்

தன்னை வழிபட்டு உளம் மகிழ்வோரையும் வீணான வழிகளில் பொழுதைப் போக்கிப் புறக்கணிப்போரையும் இனம்கண்டு எழுதும் கீழ்க்கணக்கு இன்னம்பர் ஈசன் என இறைவன் போற்றப்பெறுமாற்றால்[75] சிறுசிறு வரிகளாகக் குறிக்கும் குறிப்பு என்று பொருள் பெறும் கீழ்க்கணக்கு எழுதும் வழக்கம் சமுதாயத்தில் காணப்பெற்றமையை இவ்வரிகள் சுட்டுவனவாகத் தோன்றுகின்றது.

## 6. 7. 1. 2. குறிப்பிட்ட பிரிவினரின் வழக்கங்கள்

இனி, அந்தணர்கள், வேடர்கள், ஆயர்கள் போன்ற சில குறிப்பிட்ட பிரிவினரிடையே காணப்பெற்ற வழக்கங்களைக் காணலாம்.

## 6. 7. 1. 2. 1. அந்தணர் வழக்கம்

திருமணத்திற்கு முன்னர் அகமகுடம் செய்தல்,[75] கழுத்தளவு ஆழத்தில் நின்று அன்பொடு மனத்தையும் ஒருமைப்பட நிறுத்தி உருத்திரம் பயிலல், [76] நீராடிய பின்னரே மறைவிதிப்படியான காரியங்களையும் தருப்பணமும் செய்தல், [77] குறித்த காலம் வந்துற்றதும் வேள்விகள் செய்தல்[78] போன்றவை அந்தணர்களிடையே காணப்பெற்ற வழக்கங்கள் எனலாம்.

## 6. 7. 1. 2. 2. வேடர்கள் வழக்கம்

கண்ணப்பநாயனாரின் வரலாறு கூறும் பகுதி மூலமாக வேடர்குல மக்களிடையே காணப்பெற்ற வழக்கங்கள் சிலவற்றை அறியமுடிகின்றது. திண்ணன் விற்பிடிக்கின்றான் என்ற செய்தியை உறவினருக்கு உடுக்கை ஒலிப்பித்து அறிவிக்கின்றனர்.[79] வில்வித்தைக் கற்பிக்கப்போகும் செய்தியை உறவினர்களுக்கு அழைப்பு விடுத்து அறிவிக்க, அனைவரும் மலையில் கிடைக்கும் பொருட்களை எடுத்து வருகின்றனர்.[80] உறவினர்கள் மட்டுமன்றி, பிற மலைநிலத்தலைவர்களும் பொன், மணி, முத்து, புலித்தோல், யானைக்கொம்பு, மயிற்பீலி, தேன், நறவு, ஊன், பழங்கள் முதலியனவற்றைக்கொண்டுவருகின்றனர்.[81] விற்பயிற்சி தொடங்கும் முன்னர் நாட்டினர் அனைவருக்கும் உணவு அளிக்கப்பெறுகின்றது.[82] விற்பயிற்சி தொடங்கும் முன்பு தேவராட்டி நெற்றியில் அர்ச்சதை சார்த்தி வாழ்த்துகின்றாள்.[83] இவற்றால் விற்பயிற்சி தொடங்குவதற்கு வேடர்கள் மேற்கொண்ட வழக்கங்கள் புலனாகின்றன. இவைதவிர வேடர்கள் புலித்தோலாகிய ஆசனத்தைப் பயன்படுத்தல்,[84] வைகறைப் பொழுதிலேயே வேட்டையாடச் செல்லுதல்,[85] வேட்டைக்குச் செல்லும்போது தம்முடன் நாய்களையும் அழைத்துச் செல்லுதல்,[86] மேகங்கள் சூழ்ந்த மலைகளிலும், மலைக்காடுகளிலும் விலங்குகளைப் பிடிக்கும் பொருட்டு நீண்ட வார்களையும் வலைகளையும் கொண்டு செல்லுதல்[87] போன்ற வழக்கங்களையும் அறியலாம். விலங்குகளை வேட்டையாடிப் பிடிப்பதற்கு வேறுசில விலங்குகளைப் பிடித்துப் பழக்கப்படுத்தியுள்ளனர். இவ்விலங்குகள் பார்வை

விலங்குகள் என அழைக்கப்பெற்றன.[88] வேட்டை அறம் எனக்கருதி யானைக்கன்று, விலங்குகளின் குட்டிகள், கருப்பமுற்ற பெண் விலங்குகள் போன்றனவற்றைத் கொல்லாது விட்டுவிடும் வழக்கமும் காணப்பெற்றது.[89]

### 6. 7. 1. 2. 3. பிற பிரிவினரின் வழக்கங்கள்

ஆயர்குல மகளிர் காலையில் எழுந்ததும் பாலைக் கறந்து, காய்ச்சி, கடைந்து, மோர்எடுத்து அதை விற்கச்செல்லுதல்,[90] ஆயர்கள் குடை, செருப்புடன் ஆனிரை மேய்க்கச் செல்லுதல்,[91] மருதநிலப்பெண்கள் தேவேந்திரனைத் தொழுது நாற்றுநடத்தொடங்குதல்,[92] குறிஞ்சி நில மக்கள் மாலையில் இன்பம் தரும் நீர்நிலைகளில் படிந்து மனைகளில் வைகுதல்[93], புலைமகளிர் கள்ளுண்டு களியாட்டயர்தல்[94] போன்ற வழக்கங்களையும் அறியமுடிகின்றது.

### 6. 7. 1. 3. அரசியல் தொடர்பான வழக்கங்கள்

### 6. 7. 1. 3. 1. வழக்குமுறைகள்

### 6. 7. 1. 3. 1. 1. வழக்கு வகைகள்

சுந்தரர் தமக்கு அடிமை என மறையவர் வடிவில் வந்த இறைவன் கூறத் திருமண மன்றத்தில் கூடியிருந்தவர்கள் அந்தணர்கள் பிறருக்கு அடிமைபாதல் இல்லையே என வியக்கின்றனர். உடனே மறையவர் வடிவில் வந்த இறைவன் இது இசைவின் வழிவந்த வழக்கு என்கின்றான்.[95] வழக்குகள் தரும நூல்,தாயநூல், உலகநூல் என்பனவற்றின் வழிவரும். எனவே, வழக்குகளைப் பொதுஉரிமைகளின் பேரில் நூல் வழக்குப்படி வரும் வழக்குகள் (causes based on common laws, right etc),. ஒப்பந்தப்படி வரும் வழக்குகள் (causes based upon agreement) என இருவகைகளில் மேற்காள்ளும் வழக்கம் இருந்துள்ளமை தெரிகிறது. மனுநீதிச்சோழன் வரலாறு மூலம் குற்றங்கள் உடம்பைப் பொறுத்த குற்றங்கள், சொத்தைப் பொறுத்தக் குற்றங்கள் (offences against person and offences against property) என வகைப்படுத்தப்பெற்ற வழக்கம் புலனாகின்றது.[96]

### 6. 7. 1. 3. 1. 2. முறையிடுதல்

இறைவன் பாதுகாப்பாக வைத்திருக்குமாறு கொடுத்த ஓட்டைக் களைந்தமைக்காகக் திருநீலகண்டரைப் பற்றி மன்றத்தில் முறையிடச் செல்கின்றான் இறைவன். அவன் பின்னாலேயே திருநீல கண்டரும் செல்கின்றார்.[97] வழக்குத் தொடுப்பவர் சபையில் முறையிடும் போது வழக்குக்குட்பட்டவரும் பின்தொடர்ந்து சென்று நீதிமன்றத்தில் தன் முறையீட்டையும் கூறித் தீர்ப்பு கேட்டல் வழக்கமாகும். நம்பியாரூரார் ஓலையைக் கிழித்து எறிந்ததும் அந்தணர் நிறைந்த சபையில் சென்று இவர் எனக்கு அடிமை

என எழுதியுள்ள ஓலையைக் கிழித்து விட்டார் என்பதே என் முறைப்பாடு (complaint) என இறைவன் கூறுகின்றான்.[98] இதனால் வழக்குத் தொடுப்பவர் சபையில் சென்று தன் முறைப்பாடு என்ன என்பதை முறையிடும் வழக்கம் நிலவியிருந்தமை புலனாகும்.

## 6. 7. 1. 3. 1. 3. விசாரிக்கும் முறை

நீதிச் சபையில் வீற்றிருப்போரை அனைத்து நூலுணர்ந்தோரே என்றும்[99] நிறையும் பெருமை அந்தணர்களே என்றும் [100] அவர்களின் நுண்மாண்நுழைபுலம், சான்றாண்மை, நடுநிலைவகிக்கும் பண்பு என்பன வெளிப்படும் வண்ணம் அழைத்தல் வழக்கமாகும். சுந்தரர் தமக்கு அடிமை என முறையிட்ட இறைவனிடம் தக்க சான்றுகளுடன் உறுதிசெய்யுமாறு சபையோர் வேண்டுகின்றனர். இதனால், சபையில் முறையிடுவோர் தம் முறையீட்டை மெய்ப்பிக்கவேண்டிய பொறுப்பு (Burden of proof) உடையவர் என எதிர்பாக்கப் பெற்றனர். தம் முறையீட்டை உறுதிசெய்ய ஆட்சி, ஆவணம், அயலார் காட்சி என்ற மூன்று வழிகளில் ஒன்றினை நாடுவர்.[101] சான்றோரிடத்துத் தொன்றுதொட்டு வழங்கிவருவதும், அக்காரணம் பற்றி யாவராலும் ஒப்புக்கொள்ளப் பெறுவதும் ஆகிய உலக வழக்கே ஆட்சி ஆகும். வழக்கின் பகுதிகளைக் காட்டக்கூடிய செய்திகளை உள்ளடக்கிய ஓலை ஆவணம் எனப்பெற்றது. வழக்கின் பகுதிகளைப் பிறர் தாம் கண்ணுற்றதாகக் கூறுவது காட்சி ஆகும். இதனை வாய்மொழிக்காட்சி (oral evidence) என்பர். இவற்றுள் ஆவணம் காட்டப்பெறுமாயின் மூல ஓலையே வேண்டப்பெறும்.

நீதிச்சபையில் சபையோர் ஆணைப்படி செயல்பட்டுச் சபைநடவடிக்கைகளுக்குத் துணைநிற்போர் காரணத்தார் எனப்பட்டனர் (clerks of the court/ clerks of the crown). இவர்களுக்குக் கருணீகர்கள் அல்லது கணக்கர்கள் என்ற பெயர்களும் காணப்பெற்றன. கரணத்தான் என்ற சொல்லாட்சியைக் கல்வெட்டுக்களில் காணமுடிகின்றது.102 இக்கரணத்தானே இறைவன் கொடுத்த மூல ஓலையைத் தொழுதுவாங்கிச் சபையில் படிக்கின்றான்.[103] இவ்வாறு தொழுதுவாங்குதல் நீதிச்சபையோர் வழக்குத் தொடுப்போர்களிடம் நடந்துகொண்ட முறையைக் காட்டுகின்றது. சபையோர் சுந்தரரிடம் அம்மூலவோலையை வாங்கி அவருடைய பாட்டனார் எழுதிய ஓலைதானா என்று சோதித்துப் பார்க்க வேண்டுகின்றனர். இது வழக்குக் கொடுத்தவர்களின் முறையீட்டை ஆராய்ந்தபின்பு வழக்குக்குட்பட்டவர்களை நோக்கி அவர்களுடைய வாய்மொழியைக் கேட்கும் வழக்கத்தையும், கையெழுத்தைச் சோதித்துப் பார்க்கும் வழக்கத்தையும் காட்டுவதாக உள்ளது. இதுமட்டுமன்றி இறைவனே சுந்தரரின் பாட்டனார் எழுதிய வேறு கையெழுத்து ஏதேனும் உண்டானால் ஒப்பிட்டுப்பார்க்கும்படி வேண்டுகின்றான் 104 இவ்வேண்டுகோளின்படி சுந்தரரின் பாட்டனார் எழுதிய வேறு கையெழுத்தையும்

சோதித்துப் பார்க்கின்றனர்.[105] (comparision of handwritting and signature) இரண்டையும் ஒப்பிட்டுப்பார்த்த ஆருரார் தான் இறைவனுக்கு அடிமையே என்பதை ஒப்புக்கொள்ளுகின்றார்.[106] இவை அக்காலச் சமுதாயத்தில் நிலவிய வழக்குமுறை பற்றிய வழக்கங்களைக் காட்டுவனவாய் உள்ளன.

சண்டேசுவரர் வரலாற்றில் சபையோர் சிறுவனாகிய விசாரசன்மன் பசுக்களின் பாலைக்கறந்து கீழே ஊற்றியதாகக் குற்றம் சாட்டப்பெற்றபோது சண்டேசுவரரை அழைத்து விசாரிக்கின்றனர்.[107] இந்நிகழ்ச்சி சிறுவர்கள் செய்த குற்றத்திற்காக அவர்களுடைய தந்தையையும் அழைத்து விசாரிக்கும் வழக்கம் நிலவியமையைக் சுட்டுகின்றது.

## 6. 7. 1. 3. 1. 4. தீர்ப்புக் கூறுதல்

திருநீலகண்டரிடம் வழக்கை விசாரித்து நீதிச்சபையோர் வழக்குத் தொடுத்தவர் வேண்டியவண்ணம் அவர் மனைவியின் கையைப் பிடித்து நீரில் மூழ்கி உண்மையை நிலைநாட்ட வேண்டும் எனக் கூறுகின்றனர்[108] வழக்குத் தொடுத்தோர் வேண்டியவண்ணம் வழக்குக்குட்பட்டோர் செய்யவேண்டும் எனத் தீர்ப்பளிப்பது அக்கால வழக்கம் எனத் தோன்றுகின்றது. மேலும் உண்மையை நிலைநாட்ட நீரில் மூழ்கிச் சத்தியம் செய்யும் வழக்கம் இருந்தமையும் புலனாகின்றது. குற்றத்திற்கான தண்டனையாகக் கழுவேற்றும் வழக்கமும் இருந்துள்ளது. [109] நாடோறும் இறைவன் உறையும் கோடிக்காவைக் கூறவில்லையென்றால் பாடிக்காவில்பட்டு அழிவர் என அப்பர்பெருமான் அறிவுறுத்துகின்றார்.[110] இவண் பாடிக்காவல் என்பது குற்றம் செய்யதவர்களை வழக்கு நாடி அரசன் நிறுத்தும் தண்டத்தொழில் என்று கூறலாம்.

## 6. 7. 1. 3. 2. மானியங்கள் வகுத்தல்

மன்னர்கள் தம்கீழ் வாழும் பணிமக்கள் வறுமையின்றி நல்வாழ்வு வாழ மானியங்கள் வகுக்கும் வழக்கம் சமுதாயத்தில் காணப்பெற்றது. தேவராட்டியிடம் கண்ணப்பரின் தந்தை நாகன் நன்றாயிருக்கின்றனையோ என வினவுதன்மூலமும் இவ்வழக்கம் விளங்குகின்றது.[111] புலையர் குலத்தில் தோன்றிய நந்தனார் வெட்டினமத்தொழிலை மேற்கொண்டமைக்காக அவருக்கு மானியம் விடப்பெற்றிருந்தமையும் இவண் சுட்டுதற்குரியதாகும்.[112]

## 6. 7. 1. 3. 3. உலாவருதல்

நாடாளும் மன்னர்கள் உலாவரும் வழக்கம் காணப்பெற்றது. உலாவின்போது புகழ்பாடுவோர் முன்னரும், சூதர், மாகதர் மற்றொருபக்கமும்,

வெள்வளைசிந்தும் பெண்கள் இன்னொரு பக்கமும், சங்கம் ஒலிப்பவர்கள் ஒருபக்கமும் புடைசூழ்ந்துவர மன்னர்கள் உலாவந்தனர்.[113] அரசர்கள் குதிரைகள் மீது ஏறியும் உலாச் சென்றனர்.[114]

### 6. 7. 1. 3. 4. வாரிசு தேர்ந்தெடுக்கும் வழக்கம்

ஐயடிகள் கர்டவர்கோன் அரசாட்சி அல்லல் நிறைந்தது என்று எண்ணியும், திருத்தொண்டு செய்ய எண்ணியும் தன் எழிற்குமரனிடத்து அரசாட்சியைச் சுமத்துகின்றான்.[115] கண்ணப்பரின் தந்தை முதுமைப்பருவம் அடைந்ததும் மலையாட்சியை மகனுக்குக் கொடுக்கின்றார்.[116] புகழ்ச்சோழர் வென்றி முடி என் குமரன்தனைப் புணர்வேன் என்கின்றார்.[117] கருநாடக மன்னன் இறந்ததும் அடுத்து ஆட்சிக்கு வர மைந்தன் இன்மையால் யானையின் கண்களைக் கட்டி நாடாளும் மன்னனைத் தேர்ந்தெடுக்க முடிவுசெய்கின்றனர்.[118] இவற்றால் மன்னன் இறந்தாலோ, முதுமையடைந்தாலோ அவனுடைய மைந்தனுக்கு முடிசூடும் வழக்கமும், மைந்தர்கள் இல்லாதபோது யானையின் மூலம் மன்னனைத் தேர்ந்தடுக்கும் வழக்கமும் காணப்பெற்றன எனலாம்.

### 6. 2. 1. 3. 5. தோற்றவர் நிலை

பெருமன்னர்களிடம் தோல்வியுற்றவர்களும், எதிர்க்க இயலாத மன்னர்களும் திறைசெலுத்தி வாழ்தல் வழக்கமாகும். அவ்வாறு திறை செலுத்தாதவர் மீது பெருமன்னர்கள் போர்தொடுத்துள்ளனர்.[119] போர்க்களத்தில் தோல்வியுற்ற அரக்கர்கள் இராமபிரானின் வெற்றியைப் பாடி அபயம் வேண்டுவதாகத் திருமங்கையாழ்வார் பாடுவதால்[120] தோல்வியுற்றவர்கள் வெற்றிபெற்ற மன்னனைப் புகழ்ந்துபாடி அபயம் வேண்டும் வழக்கம் உண்டு என்றும் அறியலாம்.

### 6. 7. 1. 4. சமய வழக்கங்கள்

### 6. 7. 1. 4. 1. விழாக்கள்

இறைவனுக்கு விழாக்கள் எடுத்து மகிழ்தல் சமுதாயத்தில் மக்களிடையே காணப்பெற்ற வழக்கமெனக் கூறலாம். ஒவ்வொரு மாதமும் திருவிழாக்கள் நிகழ்த்தப்பெற்றன. இதனைத் திங்கள் நாள்விழா எனக் கொண்டாடினர்.[121] இறைவன் எழுந்தருளியுள்ள திருத்தலங்களையும், ஊர்களின் ஒலிகளையும் வருணிக்குமிடங்களில் இறைவனுக்கு விழாக்கள் எடுக்கும் நிகழ்ச்சிகளும் இடம்பெறுகின்றன.[122] சித்திரை அட்டமி விழா,[123] வைகாசிப்பொன்னூசல் விழா,[124] ஆனி, ஆடி, ஆவணி ஆகிய மாதங்களில் நிகழ்த்தப்பெறும் பெருஞ்சாந்தி என்னும் பவித்ரோற்சவ விழா,[125] புரட்டாசி மகாநவமி விழா, கார்த்திகை நாள் விழா அல்லது விளக்கீடுவிழா,[126] தைப்பூச விழா,[127] பங்குனி உத்திரத் திருவிழா 128 போன்ற விழாக்களைப் பற்றிய குறிப்புக்கள் உள்ளன. இவை தவிரப் பெண்கள் கொண்டாடும்சோறு அளித்தல் விழா,[129] தினச்சோறு

இடும் பலிவிழா,[130] தேர்த்திருவிழா,[131] திருவோணத்திருவிழா,[132] திருவாதிரைநாள்விழா[133] போன்ற விழாக்கள் நிகழ்த்தப்பெற்றமையையும் அறிகிறோம். இவ்விழாக்களின்போது இறைவன் திருவீதியில் எழுந்தருளிவரும் வழக்கமும் காணப்பெற்றது.[134] விழாக்கள் நிகழ்த்தும்போது இறைவனுக்குரிய கொடிகள் எடுக்கும் வழக்கமும் நிலவியதெனலாம்.[135]

## 6. 7. 1. 4. 2. நோன்பிருத்தல்

இறை நம்பிக்கையின் அடிப்படையில் மக்கள் பல்வேறு நோன்புகளைக் கடைப்பிடிக்கும் வழக்கத்தையும் கொண்டிருந்தனர். பெண்கள் பாவைநோன்பு நோற்கின்றபோது அதிகாலையில் எழுந்து நீராடுதலும், நெய்யுண்ணலையும், பாலுண்ணலையும் விலக்குதலும், தீக்குறளை ஓதாதிருத்தலும் ஐயமும், பிச்சையும் ஆந்தனையும் காட்டுதலும் வழக்கங்களாகக் காணப்பெற்றன.[138] இந்நோன்பினை மார்கழி மாதம் மதிநிறைந்த நன்னாளில் தொடங்குவர். இதனைப் போன்று காமன் நோன்பு நோற்கும் வழக்கமும் பெண்களிடையே நிலவியிருந்தது. காமன்நோன்பை மேற்கொள்ளும் பெண்கள் தை மாதம் தரைவிளக்கி, தண்மண்டலமிட்டு, மாசி முன்நாள் நுண்மணல் கொண்டு தெருவை அலங்கரித்து மன்மதனை உய்யவும் ஆம்கொலோ என்று கூறுதலும், காலையில் துறைபடிதலும், சுள்ளி எரிமடுத்தலும், முருக்கமலர் கொண்டு முப்போதும் வணங்குதலும், சுவரில் பெயர் எழுதலும், சுறவக்கொடி எடுத்தலும், கரும்புவில் தருதலும், காயுடைய நெல்லையும் கரும்பையும் அமைத்துக் கட்டியரிசி அவல் பிடித்து மந்திரத்தால் வணங்குதலும் வழக்கங்களாகக் காணப்பெற்றன.[137]

## 6. 7. 1. 4. 3. வழிபாட்டிற்குரிய பூக்களும் பறிக்கும் முறையும்

தாமரை, கருங்குவளை, செங்கழுநீர், நெய்தல், மாதவி, மந்தாரை, தும்பை, மகிழ், சுரபுன்னை, மல்லிகை, செண்பகம், பாதிரி, செவ்வந்தி முதலிய மலர்களை இறைவழிபாட்டிற்காகப் பயன்படுத்தும் வழக்கமும்,[138] இத்தகைய வழிபாட்டிற்குப் பயன்படும் மலர்களைத் தூய்மை கெடாது பெரும் புலர்க்காலையில் எழுந்து நீராடி, வாயைக்கட்டிக்கொண்டு பறிக்கும் வழக்கமும் [139] நிலவியிருந்தன என்பது தெரிகின்றது.

## 6. 7. 1. 4. 4. இறைவனை வழிபடும் முறை

சமயக்குரவர்கள் இறைவனை இன்னின்னவாறு வணங்க வில்லையே என எண்ணி மனம் வருந்தும் நிலையிலும், இன்னின்னவாறு வணங்க வேண்டும் என அறிவுரைகள் கூறுமிடங்களிலும் மக்கள் இறைவனை வணங்கிய முறைகள் வெளிப்படுத்தப்பெறுகின்றன. அகில்காட்டித் தொழுதல், அலறுதல், அழுதல், ஆடல், இடித்தமாவினால் பலிபீடம் அமைத்து வணங்குதல், உடல் நிலம் பொருந்த வீழ்ந்து வணங்குதல், உணர்ந்து உருகுதல், எட்டு உறுப்புகளாலும், ஐந்து உறுப்புகளாலும் வீழ்ந்து வணங்குதல், காமுற்று அரற்றுதல், காலையிலும் மாலையிலும் தவம் செய்தல், கோயில் திருவாயிலை முதலில் பணிந்து பின்னால் கோயிலுக்குள்ளே

செல்லுதல், கோயிலை அலகிடல், திருமெழுகிடுதல், தலையாரக்கும்பிடுதல், தீபம் காட்டித்தொழுதல், தூநீராட்டுதல், தூமலர் தூவுதல், தோத்திரம்பல சொல்லித் துதித்தல், நாண்மலர் தூவுதல், நீர்சுமந்தேத்தல், நீர்மூழ்கிப் பணிந்தேத்தல், பாமாலை பாடுதல், பூமாலை புனைந்தேத்தல், மூன்று சந்தி தியானித்து வணங்குதல், வட்டமிட்டு ஆடுதல் போன்ற வழக்கங்கள் சுட்டப்பெறுகின்றன. நம்பியாரூராரின் பெருமைகளை விளக்குமிடத்தில் மால், அயன் போன்றோர் காலமல்லாக் காலத்தில் சென்று தில்லை இறைவனை வணங்க உள்ளே புகமாட்டாமையால் நிற்க ஆரூரார் உள்ளே சென்று இறைவனை வழிபட்ட நிகழ்ச்சி சுட்டப்பெறுகின்றது.[140] இதனால் இறைவனைக் குறிப்பிட்ட காலத்திலேயே சென்று வழிபடும் வழக்கம் உண்டு என்பது புலனாகின்றது.

### 6. 7. 1. 4. 5. கோயிலுக்குப் பொருட்கள் கொடுத்தல்

இறையன்பின் மிகுதி காரணமாகவும், தாம் எண்ணியதை இறைவன் நிறைவேற்றியதன் காரணமாகவும், மானியங்கள் பெற்றுள்ளமை காரணமாகவும் கோயில்களுக்கு இறைவனின் வழிபாட்டிற்குரிய பொருட்களை அளித்தல் சமுதாயத்தில் காணப்பெற்றதொரு வழக்கம் எனத் தோன்றுகின்றது. கண்ணப்பரின் பெற்றோர் குழந்தைவரம் வேண்டித் தெய்வத்தைப் பரவிச் சேவல், மயில் போன்றனவற்றைக் காணிக்கையாகக் கொடுக்கின்றனர். கோயில்களில் மணிகளையும், கட்ப மாலைகளையும் தொங்கவிடுகின்றார்.[141] குங்கிலியக் கலயர் குங்கிலியத் தூபமும், மூர்த்திநாயனார் மானியம் பெற்றுக் கோயிலுக்கு வேண்டிய போர்வைத்தோல், விசிவார், தந்திரி, கோரோசனை முதலியனவற்றையும் கொடுத்து வருகின்றனர்.[142]

### 6. 7. 1. 4. 6. இனக்குழு வழக்கங்கள்

பண்டைச் சமுதாயத்தில் நிலவிய இனக்குழுச் சமுதாய அமைப்பின் வழிபாட்டுமுறைகளின் எச்சக்கூறுகளின் அடிப்படையிலான சில வழக்கங்களும் பக்தி இலக்கியச் சமுதாயத்தில் இடம்பெற்றிருந்தன எனக் கொள்ளலாம். கட்டுவிச்சி சுளகில் சிறுநெல் பிடித்துக் குறிகூறும் வழக்கம்[142], தேவராட்டி தேன், தசை, கள், பொரி முதலியனவற்றைப் படைத்துக் காடுபலியூட்டும் வழக்கம்,[144] ஆட்டிறைச்சியைப் படைத்து அணங்காடும் வழக்கம் [145] என்பனவற்றைச் சான்றுகளாகக் கூறலாம்.

### 6. 7. 2. கலைகள்

இனி, பண்பாட்டின் மற்றொரு கூறாகிய கலைகள் பற்றிக் காணலாம்.

### 6. 7. 2. 1. மருத்துவக் கலை

சிவபெருமான் கண்ணில் வடியும் குருதிநீரைக் கண்ணுற்று அவர்பால் கொண்ட அன்பின் மிகுதியினால் துடிதுடித்துப்போன கண்ணப்பர் என்செய்வது

எனத் திகைத்து, அக்குருதியைத் தணிப்பதற்காகப் பொன்செய் வரையில் பச்சிலையைப் பறித்துவருவேன் எனக்கூறிக்கொண்டு சென்று, அவ்வாறே பச்சிலையைப் பறித்து வந்து சிவபெருமானின் அடையாளமாகிய இலிங்க உருவத்தின் கண்களில் அப்புகின்றார்.[146] அதன் பின்னரும் கண்களில் குருதிவடிதல் நிற்காது போகவே தம் கண்களில் ஒன்றைப் பிடுங்கிச் சிவபெருமானின் கண்களுக்குப் பதிலாக வைக்கும் செயலில் துணிந்து விடுகின்றார். அப்போது உற்றநோய்த் தீர்த்தல் ஊனுக்கு ஊன் என்று குறிப்பிடுகின்றார்.[147] இது வேடர்குல மக்களிடம் வழக்கில் காணப்பெற்ற பழமொழி என்றும் தெரியவருகின்றது. இது இயற்கை மருத்துவக் கலையிலும், இக்காலத்தில் விஞ்ஞானக் கண்டுபிடிப்புக்களின் முன்னேற்றத்தின் விளைவாகக் கண்டு பிடிக்கப்பெற்ற ''ஒத்ததற்கு ஒத்தமுறை'' (like for like) என்ற நவீன மருத்துவக்கலையிலும் அக்காலத்திலேயே மக்கள் தேர்ச்சிபெற்றிருந்த உயர்பண்பாட்டு நிலையைக் காட்டுகின்றது.

### ௬. ௭. ௨. ௨. சோதிடக்கலை

அடியார்களின் வாழ்க்கை வரலாறுகளைக் கூறும் பகுதிகளின் மூலமாகக் குழந்தைகள் பிறக்கும் நேரத்தைக் கணித்தல், திருமணம் செய்தற்குரிய நல்ல நாளைத் தீர்மானித்தல், பயிற்சி தொடங்குதற்குரிய நேரத்தைக் குறித்தல், கோள்களின் நிலைகளைக் கணித்தல் போன்ற சோதிடக் கலைகளில் மக்கள் தேர்ச்சி பெற்றிருந்தமை புலாகின்றது.

### ௬. ௭. ௨. ௩. யோகக்கலை

அக்காலச் சமுதாயதத்தில் வாழ்ந்த மக்கள் தாமரை இருக்கை, சவத்திக ஆசனம், பத்திராசனம், கோழியிருக்கை, அரிமா இருக்கை போன்ற இருக்கை வகைகளையும், பல்வேறு உயிர்ப்பு முறைகளையும், மூச்சினை வலமூக்கு வழியாகவும், இடமூக்கு வழியாகவும் விதிப்படி செலுத்தி, நாடொறும் இருபத்தைந்து நாழிகை பயின்று நூறு அகவை வரையிலும் வாழும் முறையையும், பிற உயிர்ப்புமுறைகளால் நீண்ட நாட்கள் வாழும் முறையையும், எந்தெந்த நாட்களில் எவ்வெவ்வாறு மூச்சைக் செலுத்தி நோயின்றி வாழலாம் என்பதையும், நவகுண்டத்தின் தன்மைகள் யாவை என்பதையும் அறிந்துள்ளனர் என்பது புல்னாகின்றது.[148]

### ௬. ௭. ௨. ௪. விடம்நீக்கும் கலை

பூம்பாவையின் உடம்பைப் பாம்பு தீண்டியமையால் அவள் விடம் ஏறப்பெற்று இறந்துவிடுகின்றாள். இதனைக் கண்டு மனம் வருத்தமுற்ற அவள் தந்தை தன் மகளுடைய உடம்பில் ஏறிய விடத்தை நீக்குதற்கு விடம் நீக்கும் கலையில் தேர்ச்சிபெற்றவர்களை வரவழைக்கின்றார். விடம் நீக்கும் கலை பயின்ற பெரியவர்களும், உலகில் உள்ள எல்லையில்லாத கல்வியறிவு உடையவர்களும்

வந்து விடத்தை நீக்க முயலுகின்றனர்.[149] இந்நிகழ்ச்சி அக்காலச்சமுதாயத்தில் விடம் தீர்க்கும் கலையில் தேர்ச்சி பெற்றவர்கள் வாழ்ந்துள்ளமையைக் காட்டுவதாய் அமைகின்றது.

### 6. 7. 2. 5. ஆடல், பாடல், விளையாடற்கலைகள்

கூத்தர்கள் குடமெடுத்தாடும் கூத்து,[150] தோல்வியுற்றவர்கள் ஆடும் பொங்கத்தம் பொங்கோ என்ற கூத்து,[151] தோல்வியுற்றவர்கள் தலைகீழாக ஆடும் குழமணிதூரம் என்ற கூத்து, வேடர் வரிக்கூத்து, வேடச்சியர் ஆடும் துயில்கைக்கூத்து [152] போன்ற கூத்துவகைகளைப் பக்தி இலக்கியம் குறிப்பிடுகின்றது. சமயக்குரவர்கள் உலகில் சிலர் உண்மை அன்பின்றிப் பொய்வேடம்பூண்டு வாழ்தல் நாடகத்தால் அடியார்போல் நடிப்பது போன்றுள்ளது என்றும் [153] இறை அன்பின்றி வீணில் அலைந்து திரிதல் தோற்பாவைக் கூத்தாகும்[154] என்றும் கூறுமாற்றால் நாடகம், தோற்பாவைக்கூத்து பற்றிய செய்திகளைத் தருகின்றனர்.

ஏழிசைப் பாடல்களில் சிறந்த தேர்ச்சிபெற்றவர்களும் காணப்பெற்றனர்.[155] பலவகை மணப்பொருட்களை உரலில் இட்டுப் பொற்சுண்ணம் இடிக்கும்போதும், நெற்குற்றும்போதும், வயலில் வேலை செய்யும்போதும் பலவகைப் பாடல்களைப் பாடியுள்ளனர். குரவைப் பாடலிலும் தேர்ச்சி பெற்றிருந்தனர்.

அம்மானை, ஊசல், கழங்கு, சாழல், சிற்றில், சிறுசோறு அடுதல், சிறுதேர், பந்தாடல், பாவையாடுதல், பூச்சிக் காட்டுதல், உண்டாட்டயர்தல் போன்ற பலவகையான விளையாட்டுக்களில் ஈடுபட்டுள்ளனர். வேட்டுவச் சிறார்கள் புலிக்குட்டிகளுடனும் யானைக் குட்டிகளுடனும் விளையாடியுள்ளனர். சிறுவர்கள் விளையாடுவதற்குக் குறக்குறடு என்ற துடிபோன்ற கருவியைப் பயன்படுத்தினர்.

### 6. 7. 2. 6. பிறகலைகள்

முற்கூறியனவற்றைத் தவிர மரத்தால் தீக்கடை செய்து நெருப்பை உண்டாக்கும் கலையிலும்,[156] படைக்கலத்தொழிற்கலையிலும்,[157] ஓலையினால் தடுக்கு எனப்பெறும் இருக்கை செய்யும் கலையிலும்,[157] முத்துக்களை ஒழுங்காகக் கோக்கும் கலையிலும்,[158] காற்று, மழை, வெயில் போன்றனவற்றால் சிதைவுறாது முட்டைகளை அகன்றவாயையுடைய பானைகளில் இட்டு, அவற்றை மரநிழலில் வைத்துக் கோழிகளை அடைகாக்கச் செய்யும் கலையிலும்,[160] நகரையும், வீதியையும் அலங்கரிக்கும் கலையிலும்[161], வீடுகட்டும் கலையிலும் சிறந்த தொழில் நுட்ப அறிவு பெற்றிருந்தமையையும் பக்தி இலக்கியம் விளக்குகின்றது.

### 6. 7. 3. சடங்குகள்

மனித வாழ்க்கையின் பிறப்பு முதல் இறப்புவரை பல்வேறு கட்டங்களில் பல்வேறு சடங்குகள் இடம்பெறுகின்றன. பக்தி இலக்கியம் காட்டும்

சமுதாயத்திலும் பண்பாட்டின் கூறாக அமையும் இச்சடங்குகள் சிறப்பிடம் பெற்றிருந்தமையை அறிகின்றோம்.

### 6. 7. 3. 1. குழந்தைச் சடங்குகள்

கருவுற்ற காலம் முதல் பத்து மாதம் வரையிலும் தாய்க்கும் குழந்தைக்கும் நோய்கள் அணுகாதிருப்பதற்காகவும், நன்மைகள் பெருகுவதற்காகவும் பல சடங்குகளை மேற்கொண்டுள்ளனர்.[161] குழந்தை பிறந்த பின்னரும் பல சடங்குகள் நிகழத்தப்பெற்றன.

#### 6. 7. 3. 1. 1. தானங்கள், வேள்விகள் செய்தல்

திருஞானசம்பந்தர் பிறந்ததும் பெற்றோர்கள் செம்பொன்னைத் தானமாக வழங்குகின்றனர்.[164] சிவநேசர் குழந்தை பிறந்ததும் சுற்றத்தார்க்குப் பல தானங்கள் வழங்குகின்றார்.[166] நாகனின் மனைவி மகப்பெற்றதை அறிந்த வேடர்கள் மனம் மகிழ்ச்சியுற்று முத்துக்களை மழைபோல் கொடுக்கின்றனர்.[166] குழந்தையின் உறவினர்களும் பொருட்கள் பலவற்றைத் தானமாகக் கொடுக்கின்றனர்.[167] அந்தணர்களிடையே குழந்தை பிறந்தபின்னர் வேள்விசெய்யும் சடங்கு இடம்பெற்றமையைச் சம்பந்தர் வரலாறு காட்டுகின்றது.[168]

#### 6. 7. 3. 1. 2. பத்து நாட்கள் செய்யும் சடங்குகள்

சம்பந்தர்வரலாறு மூலம் குழந்தை பிறந்த பத்து நாட்களும் பல்வேறு சடங்குகள் நிகழ்த்தப்பெறும் வழக்கம் உண்மையை அறிகின்றோம்.[169] இப்பத்து நாட்களிலும் நிகழும் சடங்குகளில் ஒன்றாகத் திருமலி நெய்யாட்டல் சடங்கு அமைகின்றது. சிறுத்தொண்டர் மைந்தன் பிறந்ததும் திருமலிநெய்யாட்டல் சடங்கு செய்விக்கின்றார்.[170]

#### 6. 7. 3. 1. 3. பன்னிரண்டாம் நாட்சடங்கு

குழந்தை பிறந்த பன்னிரண்டாம் நாளில் குழந்தைக்கு உத்தானவிழா என்ற சடங்கு செய்து மகிழும் நிலையைக் காண்கின்றோம்.[171]

#### 6. 7. 3. 1. 4. மாதந்தோறும் நடத்தும் சடங்குகள்

சிவநேசர் பூம்பாவை பிறந்து ஒருமாதம் கழிந்ததும் குழந்தைக்குத் தொட்டிலேற்றும் சடங்கு செய்விக்கின்றார்.[172] குழந்தைக்கு இரண்டாவது மாதமானதும் காப்பிடல் என்னும் சடங்கு நிகழத்தப்பெறுகின்றது.[173] வெண்சிறுகடுகு, அகில், வெள்ளைக் குங்கிலியம், கருப்பூரம் முதலியன காட்டித் தீய சக்திகளும் நோய்களும் அணுகாது குழந்தையைப் பாதுகாக்கின்றனர். ஏழாம்

மாதத்தில் நிகழும் சடங்கு உணவூட்டும் சடங்காக அமைகின்றது.[174] இதை அன்னப்பரிசனம் என்றும் குறிப்பர். நாவுக்கரசர் வரலாற்றிலும் இச்சடங்கு சுட்டப்பெறுகின்றது.[175]

### 6. 7. 3. 1. 5. பெருமடைகொடுத்தல்

மாதந்தொறும் நிகழும் பொதுவான சடங்குகளைத் தவிரக் குழந்தையின் நல்வாழ்க்கையை மனத்துட் கொண்டு ஒவ்வொரு மாதமும் தெய்வங்கட்குப் பெருமடை கொத்தலும் வழக்கமாகக் காணப்பெற்றது என்பது தெரிகின்றது.[176]

### 6. 7. 3. 1. 6. பெயர்சூட்டுதல்

குழந்தைக்குப் பெயர்சூட்டுதலை நாமகரணம் என அழைத்தனர். பெயர்சூட்டுதலுக்கு நல்ல நாளைத் தெரிவுசெய்வர். கமலினியாருக்குப் பெயர்சூட்டப் பெரியோர்கள் இறைவனது திருவாதிரைத் திருநாளைத் தேர்ந்தெடுக்கின்றனர். பெயர்சூட்டும் சடங்கில் உறவினர் அனைவரும் மகிழ்வுடன் கலந்துகொள்வதோடு குழந்தைக்கு அணிகலன்களும் அணிவிக்கின்றனர்.[177]

### 6. 7. 3. 1. 7. பெயரிடும் மரபு

குழந்தைகளுக்குப் பெயர்சூட்டும்போது சில மரபுகள் கடைபபிடிக்கப்பெற்றன என்பதை அறியலாம். அவற்றுள்

1. இறைவனின் திருப்பெயரை இடல்
2. உடலின் தன்மைக்கேற்பப் பெயரிடல்
3. பண்பு அல்லது நல் உறுப்பு பற்றிப் பெயரிடுதல்
4. பிறந்த நாளுக்குப் பொருந்தும்வகையில் பெயரிடுதல்
5. தம் தந்தையின் பெயரைத் தம்குழந்தைக்குச் சூட்டுதல்

என்பன குறிப்பிடத்தக்கவை ஆகும்.

காரைக்கால் அம்மையார் இறைவனின் திருவருளால் மாங்கனி வரவழைத்ததைக் கண்ட அவர் கணவன் அவர் மனிதப்பிறவியினர் அன்றென்று எண்ணி, அவரைப் பிரிந்துசென்று, கடல்கடந்து சென்று பொருளீட்டி, மீண்டும்வந்து, இன்னொரு பெண்ணைத் திருமணம்செய்து இல்வாழ்க்கை நடத்துகின்றான். அப்போது ஒரு பெண்மகவு பிறக்கின்றது. அக்குழந்தைக்குத் காரைக்கால் அம்மையார் தெய்வத் தொழுகுலம் என்று கருதி அவர்பெயரைச் சூட்டுகின்றான்.[178] சுந்தரரின் பாட்டனாருக்குத் திருவாரூரில் எழுந்தருவியுள்ள இறைவன் நினைவாக ஆருரர் எனப் பெயரிடப்பெறுகின்றது.[179] பொருளாசையின் காரணமாக இறைவன் திருப்பெயரைச் சூட்டாது மானுடப்பெயரிடும் செயல் கண்டிக்கப் பெறுகின்றது.[180]

கண்ணப்பர் பிறந்ததும் உறவினரும், மற்றவரும் ஆசையுடன் குழந்தையைக் கையிலெடுக்க அக்குழந்தை உடல் கனம் காரணமாகத் திண்ணென்று காணப்பெற்றதால் திண்ணப்பன் என்று பெயரிடப்பட்டுள்ளனர்.[181] சிவநேசரின் மகளின் அழகு விளங்கும் தன்மையை நோக்கியும் பூம்பாவை எனப் பெயரிட்டுள்ளனர்.[182] பாவையார் பிறந்த மதியணி புனித நன்னாளைக் கருதி அப்பெயரிட்டுள்ளனர்.[183] மேலும், பிறந்த நாளுக்குப் பொருந்தும்வகையில் அந்நாளின் பெயரின் முற்பகுதியைப் பெயருடன் இணைத்து வழங்குதலும் உண்டு. திருவாதிரைத் திருநாளில் பிறந்த ஞானசம்பந்தருக்குத் திரு என்பதை முதலில் இணைத்துப் பெயரிட்டுள்ளனர்.[184] சுந்தரர் தந்தையின் தந்தைபெயராகிய ஆரூரர் என்ற பெயரைக் கொண்டுள்ளார்.[185]

### 6. 7. 3. 1. 8. மூன்றாம் ஆண்டுச் சடங்கு

குழந்தை மூன்று ஆண்டுப் பருவம் அடைந்ததும் மயிர் நீக்கும் சடங்கு நிகழ்த்தப்பெறுகின்றது. இச்சடங்கு மயிர்வினை மங்கலம் செய்தல் என்றும்,[186] மயிர்நீக்கு மணவினை என்றும் [187] குறிக்கப்பெறுகின்றது. சைவச் சடங்குகள் என்று கருதப்பெறும் பதினாறு சடங்குகளில் இதுவும் ஒன்றாகக் கொள்ளப்பெறுகின்றது.

### 6. 7. 3. 1. 9. ஏழாம் ஆண்டுச் சடங்கு

குழந்தைக்கு ஏழு ஆண்டு பருவம் வந்துற்றதும் அந்தணர்கள் உபநயனச் சடங்கு செய்விக்கின்றனர்.[188] பஞ்சசிகை வைத்தல், மான் தோலுடன் முந்நூல் அணிவித்தல், பிரம்ம மந்திர உபதேசம் செய்து பிரம்மசரியமாகிய முதல் நிலையில் நிறுத்தல் முதலியன மேற்கொள்ளப்பெறுகின்றன. தக்க பருவம் வந்துற்றதும் அந்தணர்கள் குழந்தைகளுக்குப் பூணூல் அணிவிக்கின்றனர்.[189]

### 6. 7. 3. 1. 10. காதுகுத்தல் சடங்கு

குழந்தைகளுக்குக் காதுகுத்தும் வழக்கமும் காணப்பெற்றது. இச்சடங்கின்போது அருகிலுள்ள பெண்கள் வந்திருந்து சிறப்புச் செய்வர்.[190]

### 6. 7. 3. 2. திருமணச் சடங்குகள்

வாழ்க்கையின் இன்றியமையாத கட்டமாகிய இல்வாழ்க்கையைத் தொடங்கும் திருமணத்தின்போதும் பல்வேறு சடங்குகளை மேற்கொள்ளும் வழக்கமும் சமுதாயத்தில் காணப்பெற்றது.

### 6. 7. 3. 2. 1. நாட்கணித்தல்

ஏயர்கோன்கலிக்காமருக்கும் மானக்கஞ்சாறனார் மகளுக்கும் திருமணம் செய்விக்க ஏற்ற மங்கல நாளைச் சோதிட நூல் வல்லார் வகுத்துக் கூறுகின்றமையால் [191] திருமணத்துக்கு முன்னர் நாட்கணிக்கும் வழக்கம் உண்மை தெரிகின்றது.

### 6. 7. 3. 2. 2. முளை சார்த்தல்

திருமணத்திற்கு ஏற்ற நாளைத் தெரிவுசெய்த பின்னர் ஒரு நல்ல நாளில் முளை சார்த்தல் என்ற சடங்கு நிகழ்த்தப்பெறுகின்றது. பொன்னாலாகிய கலங்களில் முளை சார்த்தப்பெறும்.[192]

### 6. 7. 3. 2. 3. மண ஓலை அனுப்புதல்

மணமகள் வீட்டாருக்கு மணநாள் குறித்த ஓலையைப் பெரியோர்கள் அனுப்பிவைக்கின்றனர். இதனை மணஓலை என்பர். ஆருராரின் தந்தை, சடங்கவி இசைவு தெரிவித்தும் மணமகளின் வீட்டாருக்கு மணஓலை அனுப்புகின்றமையைக் காண்கின்றோம்.[193] மணமகன் வீட்டு ஆடவரும், மங்கலப் பெண்டிரும் மணநாள் குறித்த ஓலையை மணமகள் வீட்டிற்குக் கொண்டு செல்வர். அப்போது வரவேற்று மணவோலையைப் பணிவுடன் ஏற்றுக்கொள்வர்.[194]

### 6. 7. 3. 2. 4. திருக்காப்பு அணிவித்தல்

திருமணத்திற்கு முந்திய நாளில் தீங்குகள் நிகழாவண்ணம் மணமகனுக்குக் காப்புக் கட்டும் சடங்கு நடத்தப்பெறுகின்றது.[195] சம்பந்தரின் திருமணத்திற்கு முதல்நாளில் பொற்காப்பு நாணினை மறையவர்களும் ஆடவர்களும் பெண்டிரும் கூடிநின்று வாழ்த்திச் சார்த்துகின்றனர்.

### 6. 7. 3. 2. 5. மணமகனுக்குக் கோலம் செய்தல்

திருமணத்திற்கு முன்னர்த் திருமஞ்சள் நீராட்டுவித்தல், வெண்பட்டாடை சார்த்தல், திருவுத்தரியம் சார்ததல், மணப்பொருட்கள் பூசுதல், அணிகலன்கள் அணிவித்தல், மலர்மாலைகள் அணிவித்தல், பொன் அரியாசனத்தில் அமர்த்துதல், பச்சைக் கற்பூரத்துடனும் சுண்ணத்துடனும் அழகிய பூக்களிலிருந்தும் ஆக்கிய தண்பனி நீரைக்கூட்டிச் செய்த சந்தனக்குழம்பு பூசுதல், விதிப்படி பூணூலை மார்பில் சார்த்துதல், தருப்பையைக் கைவிரலில் அணிவித்தல் போன்ற பல வகைகளில் கோலம் செய்கின்றனர்.[196]

## 6. 7. 3. 2. 6. உறவினர்கள் பொருள்கொண்டு வருதல்

திருமணத்தின்போது அவ்வத்திசையிலுள்ள உறவினர்கள் தத்தம் இடங்களிலுள்ள வளங்களாகிய பல பொருள்களைக் கொண்டு வருகின்றனர்.[197] உறவினர்களுக்குப் புத்தாடை (கோடி) வழங்கப்பெறுகின்றது.[198] இரவலர் முதலியோர்க்குத் தானம் வழங்குகின்றனர்.[199]

## 6. 7. 3. 2. 7. தாரை வார்த்தல்

அந்தணர் குலத்தினரிடையே நிகழும் திருமணத்தின்போது மணமகளின் தந்தை மணமகனுக்கு மணமகளைத் தந்தேன் எனத் தண்ணீர் வார்த்துக் கொடுக்கின்றார். இதற்கு ஞானசம்பந்தரின் திருமண நிகழ்ச்சி சான்றாக அமைகின்றது.[200]

## 6. 7. 3. 2. 8. மங்கல நாண் அணிவித்தல்

இசைக்கருவிகள் முழங்க மங்கல நூலில் பொன்னாலாகிய தாலியை மணமகன் மணமகளின் கழுத்தில் அணியும் வழக்கம் காணப்பெற்றது. இத்தாலியை மங்கலநூல் என்றும் பொற்காப்பு நாண் என்றும் அழைத்தனர்.[201] மங்கல நாணைப் பூட்டிய பின்னர் மணமகளை ஏற்றுக்கொண்டமைக்கு அறிகுறியாக மணமகன் மணமகள் கையைப் பற்றுதலைப் பாணிக்கிரகணம் என அழைத்தனர்.[202] அடுத்து எரிவலம் வரும் வழக்கமும்[203] அதன் பின்பு அம்மி மிதிக்கும் வழக்கமும்[204] காணப்பெற்றன. பின்னர் மணமக்கள் மங்கல வீதி வலம் வருவர்.[206] இவ்வாறு திருமணத்தின் முன்னரும், பின்னரும் பல்வேறு சடங்குகள் நிகழ்த்தப்பெற்றமையை அறிய முடிகின்றது.

## 6. 7. 3. 3. இறப்புச் சடங்குகள்

இறப்புச் சடங்குகளும் ஏனைய சடங்குகளைப் போன்று மக்கள் வாழ்க்கையில் இன்றியமையாத இடத்தை வகித்துள்ளமையையும் பக்தி இலக்கியம் காட்டுகின்றது. ஒருவர் இறந்ததும் திருமுறை முதலான இறைப்பற்றை ஊட்டும் பாடல்களைப் பாடுதலும், ஒப்பாரி வைத்தலும் அக்கால வழக்கங்களாகக் காணப்பெற்றன.[206] சுற்றத்தினரும், உரிய பெண்டும், ஏனைய மக்களும் ஊர்ப்பொதுவாகிய வாய்க்காலில் சென்று சடங்குகள் செய்து, தூய்மையான நீரைக் கொண்டுவந்து இறந்தவரை முழுக்காட்டுவர்.[207] இறந்தவர் முகத்தைப் புத்தம்புதிய ஆடையால் மூடிப் பாடையில் எடுத்துச் செல்வர்.[208] இறந்தவர்களை எரிக்கும் வழக்கம் காணப்பெற்றது.[209] ஊர்ப்புறமாகிய இடத்தில் இறந்தவர்களை எரிக்கும் இடம் காணப்பெற்றமையால் இதைப் புறங்காடு என அழைத்தனர்.[210] இறப்பின்போது கோடி ஆடை வழங்கப்பெற்றது.[211]

### 6. 7. 4. நம்பிக்கைகள்

சமுதாயத்தில் நிலவும் நம்பிக்கைகளும் பண்பாட்டின் ஒரு கூறு என்ற வகையில் பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் காணப்பெற்ற நம்பிக்கைகளை இவண் காணலாம். பக்தி இலக்கியம் இறைப்பற்றை மிகுவிக்கும் நிலையில் அமைந்துள்ளமையால் இவண் சமயம் தொடர்பான நம்பிக்கைகளே அதிகமாகக்சுட்டப்பெறுகின்றன.

இறைவனுக்கு ஆட்படல் என்பது அவரவர் செய்த நல்வினைகளால் வருவது என்றும்,[212] உள்ளன்புடன் மனம் ஊன்றிப் பற்றினால் இறைவனைக் காணலாம் என்றும்[213] நம்பினர். திருஞானசம்பந்தரிடம் சமணரை வாதில்வென்று, பாண்டியனின் வெப்பு நோயைக் தீர்க்கத் திருநீறு தந்தருளவேண்டும் என வேண்ட அவர் இறைவன் திருவருளாணையால் செய்வேன் என்கின்றார்.[219] எல்லாச் செயல்களும் இறைவனின் திருவருளாணையின் விளைவே என்ற சமய நம்பிக்கையை இக்கூற்று மெய்ப்பிக்கின்றது. மதுரை மாநகரில் சமணர்களை வாதிட்டு வெல்ல விரும்பிய சம்பந்தர் இறைவனிடம் திருவுளம் கேட்டல் ஒரு செயலைத் தொடங்கும்போது இறைவனின் திருவுளத்தைச் கேட்டுத் தொடங்கவேண்டும் என்ற நம்பிக்கையின் விளைவே எனலாம்.[215]

கண்ணப்ருக்கு விற்பயிற்சி தொடங்கும்முன் தெய்வத்திற்குப் பரவுக்கடன் செலுத்தி வில்விழா எடுக்க நாகன் ஆணையிடுகின்றான்.[216] பரமத்தன் கடவுளைப் போற்றிக் கலமேறிப் புறப்படுகின்றான்.[217] எச்செயலையும் இறைவன் திருவருளை எண்ணித் தொடங்கினால் தடையின்றி முடிக்கலாம் என்ற நம்பிக்கையை இவை காட்டுகின்றன. இவைதவிர இறைவனையும் இறைவனின் திருநாமத்தையும் இடையின்றி உளமார உன்னினால் வேண்டும் வரம் கிட்டும் என்றும் நம்பினர்.[218] இறைவனின் திருப்பார்வை நேரே விழும்போது நோய் முதலிய தீமைகள் அகலும் என்ற நம்பிக்கையில் கொல்லிமழவன் தன் மகளுக்கு முயலகன்நோய் வந்துற்றபோது அவளை இறைவன் திருமுன்னர் இடுகின்றான் எனலாம்.[219]

நோன்புகளைக் கடைப்பிடித்தால் பல நன்மைகள் கிடைக்கும் என்றும்,[220] சுவர்க்கம் அடையலாம் என்றும் [221] நம்பினர். பாவை நோன்பு நோற்றால் திங்கள் மும்மாரி பொழியும் என்றும், பசுக்கள் குடம் நிரம்பப் பாலைத் தரும் என்றும், வயல்கள் வளம் கொழிக்கும் என்றும், நீங்காத செல்வம் பெருகும் என்றும் நம்பிய நம்பிக்கைகள் வெளிப்படுகின்றன.[222] நோன்பு வகைகளில் ஒன்றாக உண்ணாநோன்பும் காணப்பெற்றது.[223] புனித நீராடினால் தீயவை அகலும் என்ற நம்பிக்கையில் கோடித் தீர்த்தம் ஆடுதலும், காலையிலும் மாலையிலும் நீராடுதலும், காவிரி, கங்கை, குமரி, சந்திர, சூரிய, அக்கினி ஆகிய முக்குளங்கள் போன்றனவற்றில் நீராடுதலும் காணப்பெற்றன.[224] தைப்பூச நீராடுதலும் சமுதாயத்தில் இடம்பெற்றிருந்தது.[225]

குழந்தைப் பேற்றுக்காக நாகனின் மனைவி செவ்வேல் ஏந்திய முருகவேளின் திருமுன்றிலில் சென்று பரவி நாடொறும் பரவுக்கடன்

பூணுகின்றாள். முருகன் கோயிலில் குரவைக் கூத்தாடி அணங்காடலும் செய்விக்கின்றான்.[226] இச்செயல்களால் குழந்தைப்பேற்றை அடையமுடியும் என்ற நம்பிக்கை காணப்பெற்றது. தவம் செய்வதன் மூலமும் நன்மைகளைப் பெறலாம் என்ற நம்பிக்கையும் வெளிப்படுகின்றது.[227]

இறைவன் உறையும் திருக்கோயில்கள் அனைத்திலும் மறைவிதிப்படி நாள் வழிபாடுகளையும், சிறப்பு வழிபாடுகளையும் முட்டாது செய்யவேண்டும் என்றும், தவறினால் உலகில் எண்ணற்ற கொடிய நோய்கள் உருவாகும் என்றும், வேண்டும் காலத்தில் மழை பெய்யாது பொய்க்கும் என்றும், மன்னன் போர்வளம் குன்றிமானமும் மறமும் இழந்து அழிவான் என்றும் நம்பினர்.[228] நாகனின் மனைவி குழந்தை வரம் வேண்டிக் காணிக்கை செலுத்துகின்றமையையும் அறியமுடிகின்றது.

நாம்பெற்றுள்ள இவ்வுடம்பு இறைவனால் அளிக்கப்பெற்றது,[230] உயிரும் உடம்பும் உலகில் ஒருவழிச் செல்லும்,[231] சித்தரகுப்தன் ஒவ்வொருவருடைய கணக்கையும் எழுதுகின்றான்,[232] திருக்கோயில் இல்லாத ஊர் திருவில். ஊர் 233 போன்ற நம்பிக்கைகளும் நிலவின.

நாம் செய்கின்ற பாவச்செயல்கள் நம்மை வருத்தும், [234] இப்பிறப்பு வினைகள் இம்மையே கிட்டும்,[235] முற்பிறப்புவினைகளும் இப்பிறப்பில் வந்து வருந்தகும்,[236] உயிர்களுக்கு ஏழு பிறப்பும் [237] பல்வேறு பிறப்புக்களும் உண்டு,[238] பிற சமயத்தைவரைக் காண்டலும் பிற சமயக்கருத்துக்களைக் கேட்டலும் தீமையானவை[239] என்பன போன்ற நம்பிக்கைகள் சமுதாயத்தில் இடம்பெற்றமையை அறியலாம்.

பல்லிசொல் கேட்டலும், கூகை, ஆந்தை போன்ற பறவைக் கூட்டங்கள் தம்முட் போர்செய்து அரற்றுதலும், கையிலுள்ள பொருள் நழுவி கீழே விழுதல், கால் தடுமாறுதல், இடக்கண் துடித்தல், வழிபடு தெய்வத்திற்குரிய மரம் வேருடன் அற்று விழுதல், கழுதைமேற் படரல், பெண்டிர் ஊழையிட்டுப்புலம்பல், மாற்றுச் சமயத்தார் உழக்குதல் போன்ற கனவுகள் காணுதலும், கடலில் மீனம் படிதலும், விரிசுடர் வீழ்தலும் தீய நிமித்தங்கள் என மக்களால் நம்பப் பெற்றமை புலனாகின்றது.

வாரநாட்களில் திங்களும் சனியும் கீழ்த்திசையிலும், புதன் வடக்குத் திசையிலும், சனியும் வெள்ளியும் மேற்குத்திசையிலும் வியாழன் தெற்குத் திசையிலும் பயணம் செய்தல் கூடாது என்றும் [240] பரணி, கார்த்திகை, சித்திரை, சுவாதி, பூரட்டாதி ஆகிய நட்சத்திரங்களில் வழி நடத்தல் கூடாது என்றும்[241] தெற்கும் வடக்கும் ஆகிய திசைகள் வீடுபேற்றை அளிக்கும் என்றும்[242] மகத்திற்புகுந்த சனி நன்மையைக் கொடுக்கும் என்றும்[243] குழந்தைகள் நல்ல நேரத்திற் பிறக்க வேண்டும் என்றும்,[244] நல்ல நேரத்தில் திருமணம் செய்ய வேண்டும் என்றும்[245] நல்ல நேரத்தில் குழந்தைகளுக்குச் கல்வியைத் தொடங்க வேண்டும் என்றும்[246] மக்கள் நம்பிய நம்பிக்கைகள் வெளிப்படுத்தப்படுகின்றன.

சுட்டுவிச்சியின் குறியிலும்[247] கூடற்சுழியிலும் கொண்டுள்ள நம்பிக்கை,[248] வேப்பங்குச்சியை இழைத்துக் காப்புக்கட்டினால் குழந்தையின் நோய்கள் நீங்கும் என்ற நம்பிக்கை,[249] வில்வித்தைப் பயில்வோர்க்கும், அவர் பிடிக்கும் சிலைக்கும் காப்பு இட்டால் நல்லமுறையில் பயிலலாம் என்ற நம்பிக்கை,[250] அந்தியம்பொழுதில் நாற்சந்தியில் உலவக்கூடாது என்ற நம்பிக்கை,[251] மாலைப்பொழுதில் கடுகின் புகையூட்டினால் தீய சக்திகள் அகலும் என்ற நம்பிக்கை,[252] அறச்சாலைகள் அமைத்தலும் சோலைகள் அமைத்தலும் குளங்கள் தோண்டுதலும் நன்மைகளை விளைவிக்கும் என்ற நம்பிக்கை,[253] மன்மதன் நோன்பிருந்தால் பிரிந்தவர் கூடுவர் என்ற நம்பிக்கை [254] ஆகியனவும் சமுதாயத்தில் காணப்பெற்றமையை உணரலாம்.

### 6. 7. 5. உருவப்பண்பாட்டுக் கூறுகள்

#### 6. 7. 5. 1. அணிகலன்கள்

பக்தி இலக்கியத்துள் ஆணி, இரும்புக்காப்பு, இரும்புமணிச் சதங்கை, உச்சிமணிச்சுட்டி, ஐம்படைத் தாலி, ஒட்டியாணம், ஒற்றைவடம், சுகங்கணம், கடிம்பு, கலைமான் கொம்பாலான குழை வடிவ அணி, கழல், கனகவளை, காறை, கிண்கிணி, கிறி, குதம்பை, குழை, கைச்செறி, சங்கம், சங்கு, மணிவடம், சதங்கை, சாதிப்பவளம், சிலம்பு, சுட்டி, சுழியம், சூடகம், குளாமணி, செவிப்பூ, தட்டையாக வடிவமைந்த வெற்றிமாலை, தோடு, தோள்வளை, நவமணிப்பட்டம், பவளம், பாடகம், புலிநகச் சுட்டி, புலிப்பல், தாலி, பொற்சுரிகை, பொன்வடம், மகரம், மண்டலம், மணி ஆரம், மலை வேப்பங்கொட்டையை இடையிடையே கோத்த மணிக்கோவை, முஞ்சிப்புல்லாலான அரைநாண், முத்தாலான அணி, முள்ளம்பன்றியின் முள்ளை இடையிடையே கோத்த புலிப்பல் மாலை, மேகலை, மோதிரம், யானைக்கொம்பாலான தண்டை முதலான அணிகலன்களைப் பற்றி அறியமுடிகின்றது.

#### 6. 7. 5. 2. கருவிகள்

உடுக்கை, ஊதுகொம்பு, கண்டை, கல்லவட்டம், காளம், குழல், கொக்கரை, கொட்டு, கொடுகொட்டி, சங்கு, சச்சரி, சிறுபறை, சின்னம், தண்ணுமை, தாளம், திமிலை, துடி, துந்துபி, படகம், பம்பை, பறை, முரசு, முழவு, மொத்தை, யாழ், வீணை, வெண்சங்கு, வேய்ங்குழல் போன்ற இசைக்கருவிகளும், அரிவாள், இருப்புஉலக்கை, ஒளிவட்டம், குற்றுடைவாள், சக்கரம், சூலம், தண்டு, பலகை, பாலம், பிண்டி, வாள், வில், வேல் போன்ற கருவிகளும் குறிப்பிடப்பெறுகின்றன.

### 6. 7. 5. 3. மணப்பொருள்களும் அழகுப்பொருள்களும்

மக்கள் தம்மை அலங்கரித்துக் கொள்வதற்காக அகில், குங்குமக்குழம்பு, நானப்பொடி, பச்சைக் கருப்பூரம், பனிநீர், புனுகு போன்ற மணப்பொருட்களையும், அஞ்சனம், அரிதாரப் பொட்டு, இலைத் தளிர், பூமாலை, மயிற்பீலி போன்ற அழகுப் பொருட்களையும் பயன்படுத்தியுள்ளனர்.

### 6. 7. 5. 4. உணவுப் பொருட்கள்

அக்காரம், அடகுக்கீரை, அப்பம், அவல், இலட்டு, இளநீர், ஈசல் உணவு, ஊன், எள்ளுண்டை, ஐவன அரிசி, களி, கார்நெல், கிழங்கு, சீடை, சிறுகதலிக்காய், செங்கீரை, செந்நெல் அரிசி, தயிர், தினைச்சோறு, நெய், நெய்ச்சோறு, பாலமுது, புல்லரிசிச்சோறு, மலைத்தேன், மாவடு, மூங்கிற் சோறு, விழாம்பழம் போன்ற காய்களையும், கனிகளையும், கிழங்குகளையும், திடப்பொருட்களையும், திரவப் பொருட்களையும் சூழலுக்கேற்பவும், பொருளாதார நிலைக்கு ஏற்பவும் உண்டு வாழ்ந்துள்ளனர். உணவின் தன்மைக்கேற்ப உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன எனவும் வகைப்படுத்தியுள்ளனர்.[255]

### 6. 7. 5. 5. உடை வகைகள்

கச்சு, கந்தை (நாலைந்து ஆடைகளை ஒன்றன்மேல் ஒன்றாக வைத்து நூலிழைகள் ஒட்டப்பட்டுத் தைத்த போர்வை), காம்புத்துகில், குப்பாயம், கீள், கூறையாடை, தோலாலான ஆடை, நால்விரல் கோவண ஆடை, நூலாலான சிற்றாடை, பட்டு, பள்ளிக்குப்பாயம், பீதக ஆடை, பொன்னாலாகிய நூல் கலந்த ஆடை, மரவுரி என ஆடவர்களும், பெண்டிரும், துறவியரும் அணிந்த ஆடைகள் சுட்டப்பெறுகின்றன.

### 6. 7. 5. 6. பிறபொருட்கள்

வாயானது சிறுத்துப் பக்கம் பெருத்த மண்ணாலாகிய குடம், மட்கலம், இலைச்சருகாலான உண்கலம், கிண்ணம், தடா, குடம் போன்ற பாத்திர வகைகளும், கண்ணி, கோவை, தளிர்மாலை, தொடையல், பச்சிலைமாலை, பிணையல், முடிமாலை போன்ற மாலை வகைகளும், பூப்படுக்கைகளும், யானைத் தந்தந்தாலான கால்களைக்கொண்ட கட்டில்களும், பொன், வெள்ளி போன்ற விலையுயர்ந்த உலோகங்களும், பல உலோகங்களின் கலவையாலான புணர்ச்சி உலோகங்களும், பொற்காசுகளும், நிறைகோல்களும் சமுதாயத்தில் மக்களால் பயன்படுத்தப்பெற்றமையை அறிகின்றோம்.

இவ்வாறு பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் நிலவிய உருவப் பண்பாட்டுக்கூறுகளையும், அருவப்பண்பாட்டுக் கூறுகளையும் காண்கின்றோம். இனி, பண்பாட்டின் மற்றொரு கூறாகிய சமூக மதிப்புக்கள் பற்றி அடுத்த இயலில் காணலாம்.

## 6. 8. முடிவுகள்

1. பண்பாடு சமூக மரபுரிமை எனச் சமூகவியலாளர்களால் கருதப்பெறுகின்றது.

2. பண்பாட்டைச் சமுதாய உறுப்பினர் ஒருதலைமுறையினரிடமிருந்து மற்றொரு தலைமுறையினருக்குக் கடத்துகின்றனர். இப்பண்பாடு கற்றல் மூலமாகப் பின்பற்றப்பெறுகின்றது.

3. பண்பாடு என்ற வட்டத்திற்குள்ளேயே சமயமும் இலக்கியமும் இயங்குகின்றன.

4. சமுதாயத்தின் உறுப்பினர் என்ற முறையில் மக்களால் பின்பற்றப்படும் அனைத்து நடவடிக்கைகளையும் பண்பாடு எனப் பொதுவாகக் கூறலாம்.

5. சமுதாயத்தில் நிலவுகின்ற வழக்கங்கள், நம்பிக்கைகள், சடங்குகள், மதிப்புக்கள், ஒழுக்கங்கள், தொழில் நுட்பங்கள், கலைகள், கருவிகள், பொருட்கள் முதலிய அனைத்தையும் பண்பாட்டின் கூறுகள் எனலாம்.

6. மனித இன வளர்ச்சிப்போக்கின் ஒத்த நிலையில் பண்பாடும் வளர்ச்சியுற்று வருகின்றமையைக் காணலாம்.

7. பண்பாடு குழந்தைகள் இளம்பருவம் முதலே சரியான வழியில் நடப்பதற்குத் துணைசெய்தல், பிறரிடம் தொடர்பு கொள்ள வாய்ப்பளித்தல், சமூக ஒற்றுமைக்குத் துணைநிற்றல், சிக்கல்களுக்கு விடையளித்தல் போன்ற சமூகச் செயல்பாடுகளைக் கொண்டுள்ளது.

8. பண்பாடு மனித நடவடிக்கைகளின் உற்பத்தியாகவும், அறிவினாலும் அனுபவத்தாலும் உருவாக்கப்பெறுவதாகவும், மனிதத் தேவைகளை நிறைவேற்றுவதாகவும், சமூக உறவுகளைத் தீர்மானிப்பதாகவும் உள்ள குணங்களைக் கொண்டுள்ளது.

9. சமூகவியலாளர்கள் பண்பாட்டை உருவப் பண்பாடு, அருவப்பண்பாடு என்றும், பண்பாட்டுக் கலவை, பண்பாட்டு இனம் என்றும், பண்பாட்டுப் பொதுமைகள், துணைப்பண்பாடு என்றும் பலநிலைகளில் பாகுபடுத்தி விளக்குவர்.

10. சமயத்தை அடிப்படையாகக் கொண்டு எழுந்த பக்தி இலக்கியத்துள் சமயம் ஒரு சமுதாயநிறுவனம் என்ற நிலையில் சமுதாயத்தில் காணப்பெற்ற பண்பாட்டுக் கூறுகள் பலவும் சுட்டப் பெறுமாற்றை அறிகின்றோம்.

11. விருந்தோம்புதல், உணவு உண்ணும்முறை, உபசரிக்கும் முறை, பெரியோர்களின் வழக்கம், பெரியோர்களை வரவேற்கும் முறை, பெரியோர்களிடம்

பழகும்முறை, நீராடும் வழக்கம், பெண்களின் வழக்கம், பொழுதுபோக்கு, குளிர்காய்தல், பண்டமாற்று, அழகு செய்தல், மாடுகளை வளர்க்கும் முறை, பெண்விலைகொடுத்தல், குறிப்புக்கள் எழுதுதல் போன்ற சமுதாயப் பண்பாட்டின் ஒரு கூறாகிய வழக்கங்கள் குறிப்பிடப்பெறுகின்றன.

12. வழக்கு வகைகள், முறையிடுதல், விசாரிக்கும்முறை, தீர்ப்புக் கூறும் முறை, மானியங்கள் வகுத்தல், உலாவருதல், வாரிசைத் தேர்ந்தெடுக்கும் முறை, தோற்றவர்நிலை போன்ற அரசியல் தொடர்பான வழக்கங்களும் புலனாகின்றன.

13. விழாக்கள் நடத்துதல், நோன்புகள் மேற்கொள்ளுதல், வழிபாட்டிற்குரிய மலர்களும் அவற்றைப் பறிக்கும் முறைகளும், வழிபடும்முறை, கோயிலுக்குப் பொருட்கள் கொடுத்தல் போன்ற சமயத்தொடர்பான வழக்கங்களும் குறிப்பிடப்பெறுகின்றன.

14. பண்பாட்டின் மற்றொரு கூறாகிய மருத்துவக்கலை, சோதிடக்கலை, யோகக்கலை, விடம்நீக்கும் கலை, ஆடல் பாடல் கலை, விளையாடல் கலைகள், நெருப்புண்டாக்கும் கலை, படைக்கலத் தொழிற்கலை, அலங்கரிக்கும் கலை போன்ற கலைகள் விளக்கப்பெறுகின்றன.

15. மனித வாழ்க்கையின் மூன்று நிலைகளான குழந்தைப் பருவம், திருமணம், இறப்பு ஆகிய நிலைகளில் சமுதாய மக்களால் நிகழ்த்தப்பெறும் பல்வேறு சடங்கு முறைகளைப் பற்றி அறிய முடிகின்றது.

16. சமுதாய மக்களிடையே காணப்பெற்ற பல்வேறு நம்பிக்கைகளையும் பக்தி இலக்கியம் வெளிப்படுத்துகின்றது.

17. உருவப் பண்பாட்டுக் கூறுகளாகிய அணிகலன்கள், கருவிகள், மணப்பொருட்கள், அழகுப்பொருட்கள், உணவுப் பொருட்கள், ஆடை வகைகள், பாத்திரவகைகள், மாலை வகைகள், படுக்கைகள், உலோகங்கள், போன்றனவற்றையும் பக்தி இலக்கியம் புலப்படுகின்றது.

18. இவ்வாறு பக்தி இலக்கியம் இறைவன் பெருமைகளை உணர்த்துவதுடன் மட்டும் அமையாது சமுதாயத்தில் காணப்பெற்ற பண்பாட்டுக் கூறுகளையும் வெளிப்படுத்துதல் அறியத்தக்கது ஆகும்.

## மேற்கோள்சான்றுகள்

1. Ronald W. smith, **Sociology-An Introduction**, P. 19

2. David Dreseller, William W Wills., **Sociology, The Study of Human Interaction**, P.33

3. கா. சிவத்தம்பி, தமிழ் இலக்கியத்தில் மதமும் மானுடமும், ப.14

4. Mercer & Warderer, **Sociology, The Study of Society,** P.264

5. R. Serge Danisoff, Ralph Wabraman, **An Introduction to Sociology,** P.50

6. அ. தட்சிணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும் பண்பாடும். ப.23.

7. Theodore Caplow, **Sociology,** P.55

8. *Paul B. Hurton, Chester* L. Hunt, **Sociology, P.60**

9. **Melvin De Fleur,** William V.D. Antonio, Lois, D. Fleur, **Sociology,** PP.99-100

10. Ronad W. Smith, op. cit., P.19

11. Bernard Phillips, **Sociology,** PP.30 & 225

12. Alexander Alland, Jr. Evolution and Human Behaviour, PP.227-228

13. Ralph Linton, **The Study of Man,** P.10

14. David Dreseller, op. cit. P.33

15. **Dictionary of Sociology,** P.90

16. Ronald W. Smith, op. cit., P.17, David Dreseller, op. cit. PP. 43-43

17 David Light, Jr. Suzannekeller, **Sociology**, P.82, Mercer and Warderer, op. cit. P.18

18. Melvin De Fleur, *op. cit.* P.99

19. Mercer and Warderer, op. cit. P.18

20. Dreseller. op. cit., P.39-42

21. Paul B Hurton. Chester. L. Hunt. op. cit. P.60 David Light. Jr Suzannekeller. op cit P.82

22. Theodore Caplow, op, cit. 113-114

23. Melvin De Fleur, op, cit. 113-114

24. **Dictionary of Sociology,** P.84.

25. பெரியாழ். திருமொழி: 4:4:1:1, 4:8:2:3, திருநாவுக். 4:4.

26. திருஞான. 567:1

27. 4:9: தனி. திருத்தாண்டகம:6:2, அப்பூதி: 31:3- 4

28. காரைக்கால் :22:3

29. அப்பூதி. 23:3- 4, 39:3- 4

30. பெரியாழ், திருமொழி, 3:3:3- 4

31. கண்ணப்பர். 36:1- 2

32. சிறுத்தொண்டர். 38

33. காரைக்கால். 18: 1- 3

34. சிறுத்தொண்டர். 13:2

35. கழற்றறிவார். 73:1- 2

36. அப்பூதி. 29:4

37. திருஞான. 462

38. திருஞான. 566:4

39. இயற்பகை. 5

40 திருநீலகண்டர். 3

41. இளையான்குடி. 3 - 4

42. திருஞான. 1068 :2

43. திருநீலகண்டர். 10

44. திருஞான. 469 : 4

45. திருநாவுக். 285,286

46. திருஞான. 943 : 1

47. திருஞான. 300, 308, 1071

48. திருநாவுக். 319,333

49. திருநாவுக. 160,320

50. திருநாவுக். 134: 3 - 4

51. அப்பூதி. 20 : 1 - 2

52. தடுத்தாட். 187: 1 - 2

53. திருஞான. 325: 3

54. நாச்சியார் திருமொழி: 3:1

55. பெரியாழ், திருமொழி: 2:4:3:3, 2:4:4:3 - 4

56. திருஞான. 332

57. தடுத்தாட். 187: 1 - 2

58. திருஞான. 332

59. திருவா. 22:10:1 - 2

60. திருக்குறிப்பு. 44

61. அமர்நீதி. 42:2

62. தடுத்தாட். 16

63. கண்ணப்பர். 10,11

64. திருஞான. 1052, 1070

65. திருஞான. 644:1

66. திருமங்கை, திருநெடுந்தாண்டகம். 27:2 - 3

67. நம்மாழ் திருவாய். 2:7:8:3 - 4. திருமூலர்.20 29:1

68. திருநாவுக். 90:3 - 4

69. காரைக்கால். 13:1

70. திருஞான. 480

71. தடுத்தாட். 101

72. திருஞான.473

73. அப்பூதி. 3

74. 5:212

75. திருஞான. 60:3

76. உருத்திரபசுபதி:6

77. திருஞான. 54:2:60:1

78. திருஞான.422

79. கண்ணப்பர். 29

80. கண்ணப்பர். 28

81. கண்ணப்பர். 30

82. கண்ணப்பர். 34

83. கண்ணப்பர். 66:2 - 4

84. கண்ணப்பர். 52:4

85. கண்ணப்பர். 56:3

86. கண்ணப்பர். 3:1

87. கண்ணப்பர். 70

88. கண்ணப்பர். 3:3 - 4

89. கண்ணப்பர். 86

90. திருமங்கை. பெரிய. 10:7:2:1

91. பெரியாழ். திருமொழி. 3:2:9:1

92. திருநாட்டு. 12

93. கண்ணப்பர். 56:3

94. திருநாளைப். 10:4

95. தடுத்தாட். 52

96. திருநகர. 121 - 122

97. திருநீலகண்டர். 32

98. தடுத்தாட். 51

99. தடுத்தாட். 54:1

100. சண்டேசுரர். 43:3

101. தடுத்தாட். 55

102. S. I. I. Vol VII. No.44.

103. தடுத்தாட். 58

104. தடுத்தாட். 61

105. தடுத்தாட். 63

106. தடுத்தாட். 63

107. சண்டேசுரர். 40:4

108. திருநீலகண்டர். 35,386

109. திருஞான. 855

110. 5:1:19:2:2 - 4

111. கண்ணப்பர். 49

112. திருநாளை. 13:1

113. திருநகர. 21

114. எறிபத்தர். 32:4

115. ஐயடிகள் :3

116. கண்ணப்பர். 45 - 46

117. புகழ்ச்சோழர். 16,17

118. மூர்த்தி. 31

119. புகழ்ச்சோழர். 16,17

120. திருமங்கை, பெரிய. 10:2:1 - 10 பாடல்கள்

121. 2:5:18:8:3 - 4

122. 2:183:9:3 - 4

123. 2:183:10:3 - 4

124. 2:5:18:2:4

125. 2:5:18:3 - 4

126. 4:5:18:5:4

127. 2:183:6:1 - 2

128. 2:4:52: திருவிருத்தம். 2:2, 2:5:18:7:3 - 4 6:6:7, திருத்தாண்டகம். 2:2

129. 2:183:4:3 - 4

130. 2:183:7:3 - 4

131. 1:2:25:3:3

132. பெரியாழ். திருவாய். 14:1:6:2, 14:1:9:3

133. 2:4:52: திருவாதிரைத் திருப்பதிகம். 2:5:18:4:4

134. புருடோத்தம நம்பி, திருவிசைப்பா. 1:1:4

135. 1:2:54:2:8:3 1:3:12:2:2 1:4:19. திருக்கோடிக்கா. 2:4 1:4:52. திருவாதிரைத் திருப்பதிகம். 3:1

136. ஆண்டாள்திருப்பாவை. 2

137. நாச்சியார். திருமொழி. 1:1 - 7 பாடல்கள்

138. திருமந்திரம்: 979

139. 4:1:27: காந்தாரம்: 8:1 - 2

140. தடுத்தாட். 103

141. கண்ணப்பர். 10 - 11

142. திருநாளை. 14

143. திருமங்கை. சிறிய திருமல். 20

144. கண்ணப்பர். 65:3 - 4

145. நம்மாழ். திருவாய். 4:6:7:1

146. கண்ணப்பர். 169

147. கண்ணப்பர். 172

148. திருமூலர். 540 - 545, 750, 753 - 755, 776, 991 - 1020

149. திருஞான. 1060, 1064

150. நம்மாழ். திருவாய். 4:6:1

151. திருமங்கை. பெரிய. 10:2:1 - 4

152. கண்ணப்பர். 39:1

153. திருவா. 5:2:1

154. திருவாசகம். 50:3:2

155. மெய்ப்பொருள். 5:3:3

156. கண்ணப்பர். 99

157. சிறுத்தொண்டர். 3

158. 1:7:10:1

159. விறன்மிண்டர். 2:3

160. திருநாளை. 8:2

161. திருநகர: 7:1 - 2

162. தடுத்தாட். 170

163. திருஞான. 21:2 - 3

164. திருஞான. 38:1

165. திருஞான. 1041.

166. கண்ணப்பர். 14

167. பெரியாழ். திருவாய். 14:4:1 - 10 பாடல்கள்

168. திருஞான. 30:4

169. திருஞான. 1043

170. சிறுத்தொண்டர். 18, 19:3 - 4

171. பெரியாழ். திருவாய். 14:2:7:20

172. திருஞான.1045

173. கண்ணப்பர். 18:1 திருஞான. 39:1 - 2, மானக்கஞ்சாறனார். 13:1

174. திருஞான. 1045

175. திருநாவுக். 19:2

176. கண்ணப்பர். 17:1 - 2

177. தடுத்தாட். 132, திருஞான. 41:1

178. காரைக்கால். 38:3 - 4

179. தடுத்தாட். 59

180. பெரியாழ். திருவாய். 4:6:1 - 10 பாடல்கள்

181. கண்ணப்பர். 666

182. திருஞான. 1044

183. திருநாவுக். 278

184. திருஞான. 41:1

185. தடுத்தாட். 59:1

186. சிறுத்தொண்டர். 22:1

187. திருநாவுக். 20:1

188. சண்டேசுவரர். 14:11 - 12

189. தடுத்தாட். 6:3

190. பெரியாழ். திருவாய். 2: பேய்ப்பாடு : 2:3:1 - 4

191. மானகஞ்சாறனார். 18

192. தடுத்தாட். 11:4 மானக்கஞ்சாறனார். 19:3 திருஞான. 1169:4

193. தடுத்தாட். 9

194. தடுத்தாட். 10

195. திருஞான. 1182, நாச்சியார் திருமொழி. 6:1:4:4 தடுத்தாட். 12

196. தடுத்தாட். 15 - 19

197. திருஞான. 1178: 1 - 2

198. திருமந்திரம். 193, நாச்சியார்திருமொழி. 6:1:3 - 4

199. மானாக்கஞ்சாறனார். 36

200. திருஞான. 1235 - 1236

201. குங்கிலிய:9:3 - 4. திருஞான. 1187

202. மானக்கஞ்சாறனார். 20:1

203. திருஞான. 1240

204. நாச்சியார்திருமொழி.6:1:8:3 - 4

205. நாச்சியார்திருமொழி. 6:1:10:1 - 2

206. திருமந்திரம். 206

207. திருமந்திரம். 210

208. திருமந்திரம். 191. பெரியாழ், திருமொழி. 4:5:8:3

209. திருமந்திரம். 197:3

210. திருமந்திரம். 199:3

211. திருமந்திரம் .191

212. பூதத். இரண்டாம் திருவந்தாதி. 34

213. பொய்கை: முதல் திருவந்தாதி. 49

214. திருஞான. 734

215. திருஞான. 738:2

216. கண்ணப்பர் . 31:3 - 4

217. காரைக்கால். 33:3 - 4

218. 6:1:5: திருச்சிற்றம்பலம். 6:8:3 - 4, பூதத், இரண்டாம்திருவந்தாதி 37, 5:2:35: திருக்குறுந்தொகை. 1:3 - 4, திருவா. 5:20:2

219. திருஞான. 212

220. 4:9:பாவநாசத்திருப்பதிகம்.8. நம்மாழ்.திருவாய்.5:7:1:2

221. ஆண்டாள், திருப்பாவை. 10

222. ஆண்டாள், திருப்பாவை. 3

223. 5:1003:1

224. 2:1:15:1:2:3 - 4, 2:2:17:8:1 - 2, 4:10: பாவநாசத்திருப்பதிகம். 5:1-2 4:9:பாவநாசத்திருப்பதிகம். 9:1- 2 4:1:27, திருவிருத்தம். 15:7 4:9. பாவநாசத்திருப்பதிகம். குறுந்தொகை. 2:3:937 5:1004:1, 2:2:2:6:5:2

225. 2:2:2:6:5:2

226. கண்ணப்பர். 10 - 11

227. 6:1:4:9: பாவநாசத்திருப்பதிகம். 6:2

228. திருமந்திரம். 500

229. கண்ணப்பர். 11:1

230. நம்மாழ், திருவாய். 3:2:2

231. 4:1:6. திருக்கழுமலம்:8:1

232. பெரியாழ். திருவாய். 5:2:2:1

233. 4:9: தனி. திருத்தாண்டகம். 5:1

234. பெரியாழ். திருவாய் 5:4:2:3

235. 7:1:1:16:4:1 - 2

236. திருமங்கை.பெரிய. 10:2:1:1

237. திருமழிசை. நான்முகன்:6:3

238. நம்மாழ். திருவாய். 3:10:1:1

239. திருஞான. 684

240. திருமூலர். 777 - 778

241. 2:பொது:3:2

242. திருமூலர். 2522

243. திருஞான. 616:2

244. 7:8:9:9:1

245. கோச்செங்கட். 9: திருநாவுக். 22: 2, திருஞான. 1041

246. திருஞான. 1169:1 - 2

247. காரைக்கால். 23:3 - 4

248. நம்மாழ்.திருவிருத்தம்.53, நம்மாழ்.திருவாய்:4:6:3:2 திருமங்கை திருநெடும்.53, நாச்சியார்.திருமொழி. 4

249. திருஞான. 38:4

250. கண்ணப்பர். 32

251. பெரியாழ்.திருவாய். 2:8:1:4

252. கண்ணப்பர். 27:1 - 2

253. திருநாவுக்.35:4, 36:1, அப்பூதி. 3:3 - 4

254. நாச்சியார். திருமொழி. 2:1:1, 2:1:3

255. இளையான்குடி. 4:3.

# இயல் – 7

## சமூக மதிப்புக்கள்

பண்பாடு என்பது சமுதாயத்தில் காணப்பெறும் நியமங்களையும் (Norms), மதிப்புக்களையும் (Values) உள்ளடக்கிய ஓர் ஒருங்கிணைந்த முறையாகும். ஒரு சமுதாயத்தில் மக்கள் நடைமுறையில் எவற்றைப் பின்பற்றுகின்றனர் என்பதை உண்மைப் பண்பாடும் (True culture), மக்கள் எப்படி நடக்கவேண்டும், எவற்றைப் பின்பற்ற வேண்டும் என்பதைக் கருத்துப் பண்பாடும் (ideal culture) விளக்குகின்றன. இதனால் பண்பாட்டின் அடிப்படையான கூறுகளுள் ஒன்றாக மதிப்புகள் திகழ்கின்றமை புலனாகின்றது. எனவே, சமூகவியலாளர்கள் எந்தப் பண்பாட்டையும் மதிப்புக்களின் மூலம் விளக்கிக்காட்ட முடியும் எனக் கருதுகின்றனர்.[1] பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் நிலவிய பண்பாட்டின் கூறாகிய மதிப்புகளைப் பற்றி அறியப் புகும் முன்பு மதிப்புக்கள் என்பது குறித்துச் சமூகவியலாளர்கள் அளிக்கும் விளக்கங்கள் சிலவற்றை முதற்கண் காணலாம்.

### 7. 1. மதிப்புக்கள் – விளக்கம்

உயர் நோக்கங்களுக்கும், கொள்கைகளுக்கும் எவை உயர்வானவை, எவை இழிந்தவை, எவை புனிதமானவை, எவை நகைப்பிற்குரியவை என்பதை மக்கள் கற்பித்துக்கொள்கின்றனரோ அத்தகைய அடிப்படையான உணர்வுகளை மதிப்புக்கள் என்று கூறலாம்.[2] எவை விரும்பத்தக்கவை, எவை விரும்பத் தகாதவை, எவை உயர்வானவை, எவை மதிப்பற்றவை, எவை பொருத்தமற்றவை, எவற்றைச் செய்யவேண்டும், எவற்றைச் செய்தல் கூடாது என அறிவுறுத்துவனவே சமூக மதிப்புக்கள் ஆகும். பெரும்பாலான சமூக மதிப்புக்கள் பண்பாட்டுப்பூர்வமாகவே உருவாக்கப்பெறுகின்றன.[3] தனிமனிதர்களுடைய குறிப்பிட்ட செயல்கள் விரும்பத்தக்கனவா அல்லனவா எனச் சமூகமயமாக ஏற்றுக் கொள்ளப்பெறும் நீதிகள் சமூகமதிப்புக்கள் எனப்பெறும்.[4] சமூகம் முழுமையிலும் உள்ள மக்கள் எவற்றுக்கு முதன்மை கொடுக்கின்றனரோ எவற்றை விரும்புகின்றரோ அவற்றைச் சமூகமதிப்புக்கள் குறிக்கும். சமுதாயத்தினுள்ளேயே பகிர்ந்து கொள்ளப்பெறும் நோக்கங்கள் மதிப்புக்கள் ஆகின்றன.[5] எது நல்லது எனக்குறிக்கும் சுருக்கமான கருத்தே (abstract idea) மதிப்பு எனப்படும்.[6]

## 7. 2. சமுதாயமும் மதிப்புக்களும்

சமூகவியலாளர்கள் சமுதாயத்தின் இன்றியமையாப் பண்புகளுள் பின்வருவற்றையும் அடக்கிக் காட்டுவர்.

1. சமுதாயம் ஒரு தொடர்ச்சியைக் கொண்டுள்ளது. தனிப்பட்ட முறையில் ஒவ்வொரு, பிரிவினரையும் ஒவ்வோர் உறுப்பினரையும் கற்பதன்மூலம் சமுதாயத்தின் உண்மையான அல்லது முழுமையான உருவத்தை அறியமுடியும். மக்கள் சமுதாயத்தில் பிறக்கின்றனர், வாழ்கின்றனர், இடமாற்றம் செய்கின்றனர், இறக்கின்றனர், ஆனால், சமுதாயம் தொடர்ந்து வாழ்கின்றது.

2. சமுதாயத்தில் நிலவும் பண்பாடு பொதுவாகச் சமுதாய உறுப்பினர்களால் ஏற்றுக்கொள்ளப்பெறும் மதிப்புக்களைக் தன்னகத்தே கொண்டுள்ளது. சமுதாயத்தில் வாழ்கின்ற மக்கள் இம்மதிப்புக்களை இன்றியமையாதன என்றும் அடிப்படையானவை என்றும் கருதுகின்றனர்.

3. சமுதாயம் முடிவான மதிப்புக்களை (ultimate values) நிறைவேற்றும் இடைநிலையான மதிப்புக்கள் (intermediate values) பலவற்றைக் கொண்டுள்ளது.

4. சமுதாயம் வாழச் சில அடிப்படையான செயல்பாட்டுத் தேவைகள் (basic funtional needs) நிறைவேற்றப்படவேண்டும். சமுதாய ஒழுங்குகள் காக்கப்பட வேண்டும்.

இவற்றால் சமுதாயத்தில் மதிப்புக்களின் பங்கினை அறியமுடிகின்றது.

## 7. 3. சமயமும் மதிப்புக்களும்

சமுதாயத்தின் இன்றியமையா நிறுவனங்களுள் ஒன்றாகிய சமயம் தனி மனிதர்களுக்குச் சுகம் அளிக்கக்கூடிய, ஆறுதல் அளிக்கக்கூடிய தன்மையுடையதாகத் திகழ்கின்றது. வாழ்க்கையின் பொருளையும் விளக்கத்தையும் அளிப்பதன்மூலம் சமயமுறைகள் நியமங்களையும், மதிப்புக்களையும் புனிதமுடையனவாய் மாற்றுகின்றன. சமுதாயத்தில் நிலவும் சமூக ஒழுங்குகளுக்கு நியாயத்தை அளிக்கின்றது. சமுதாயம் சில நிலைகளிலிருந்து சில சமயம் வழுவும்போது காக்கப்படவேண்டும். சடங்குகளின் மூலமும், சமய விழாக்களின் மூலமும் சமயம் சமூக நியமங்களையும் மதிப்புக்களையும் வழுவாமல் காக்கின்றது. சமூக உறுப்பினர்கள் சமுதாயத்தில் நிலவும் மேலோங்கிய மதிப்புக்களையும் நியமங்களையும் ஏற்கவும், அங்கீகரிக்கவும் செய்கின்ற சமூகக் கட்டுப்பாட்டுக் கருவியாகவும் சமயம் செயலாற்றுகின்றது.7 சமய அமைப்புக்கள் (Religious structures) ஒரு சமுதாயத்தின் சமூக மதிப்புக்களைப் பிரதிபலிக்கின்றன. எல்லாச் சமூகங்களும் பழங்காலம் முதல் இக்காலம்வரையிலும் வாழ்க்கையின்

பொருளுக்கும் இயக்கத்திற்கும் சமய நிறுவனங்களை நிறுவியுள்ளன. ஓர் உயிரின் வாழ்க்கையைச் சமுதாய வாழ்க்கையுடன் இணைத்து வளர்ப்பதாகச் சமயம் செயலாற்றுகின்றது. சிறந்த சமய முறைகள் சமுதாய நடைமுறைகள் கால்கொள்ளத் துணைசெய்கின்றன.

முற்கூறியனவற்றால் சமுதாயத்தில் மதிப்புக்கள் இன்றியமையாத பங்கு வகிக்கின்றமையும், இம்மதிப்புகளைப் பேணிப் பாதுகாக்கும் சமூகச் செயல்பாட்டைச் சமயம் கொண்டுள்ளமையும் தெளிவாகின்றன. இவற்றின் அடிப்படையில் பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் நிலவிய மதிப்புக்களைக் காண்போம்.

## 7. 4. பக்தி இலக்கியம் காட்டும் சமுதாய மதிப்புக்கள்

பக்தி இலக்கியத்தில் இறைவனின் போற்றற்கரிய பெருமைகள், இறைவனிடம் வேண்டுதல், சமுதாய மக்களுக்கு அறிவுரை கூறுதல், அடியார்களின் வாழ்க்கை வரலாறு கூறுதல், ஊர் வருணனைகள் முதலிய பல பகுதிகளில் சமுதாயத்தில் மேலோங்கிநின்ற மதிப்புக்கள் சுட்டப்பெறுகின்றன.

### 7. 4. 1. மேற்கொள்ளத் தகாதன

இன்னின்னவற்றை மேற்கொள்ளுதல் கூடாது என அறிவுரைப்பதன்மூலம் சமுதாயத்தில் மக்கள் வாழ்வாங்கு வாழ வழிவகுக்கும் போக்கை உணரமுடிகின்றது.

#### 7. 4. 1. 1. ஆணவம் கொள்ளுதல்

சிவபெருமானின் போற்றற்கரிய பெருமைகளை விளக்குமிடங்களில் இராவணனாகிய அரக்கனை அழித்த செய்தியும் இடம்பெறுகின்றது. திருஞானசம்பந்தர் தம் ஒவ்வொரு பதிகத்திலும் இச்செய்தியைச் சுட்டுகின்றார். இராவணன் இறைவன் அருளால் தான்பெற்ற வரத்தை எண்ணி மிகவும் ஆணவம் கொண்டு தன் இருபது தோள்களால் வரம்கொடுத்த இறைவனுடைய கயிலாய மலையையே எடுக்கத் துணிகின்றான். இதனைக் கண்ணுற்ற சிவபெருமான் தன் கால்விரலின் நுனியால் மலையைச் சிறிது அழுத்த, இராவணன் கை நைந்து குருதி கொப்பளிக்க வருந்துகின்றான். பின்னர், தவறை உணர்ந்து, மனம் உருகிக் கைநரம்பெடுத்து இறைவனின் திருவைந்தெழுத்தை ஓதிக் கீதம்பாடி வழிபட, இறைவன் மனம் மகிழ்ந்து அருளுகின்றான். இதனைப் போன்று திருமாலும், பிரம்மனும் தாங்கள் தான் உயர்ந்தவர்கள் எனச்செருக்குற்றுச் சிவபெருமானின் அடியையும் முடியையும் தேடமுயன்றும் முடியாமல் போன நிகழ்ச்சியும் பக்தி இலக்கியத்துள் பெருமளவில் சுட்டப்பெறுகின்றது. கல்விச் செருக்குடைய பிரம்மனின் தலையைச் இறைவன் கொய்துள்ளான். ஆணவத்தின் உயர்நிலையில் நின்ற தக்கன் செய்த வேள்வியைச் சிவபெருமான்

சிதைத்துள்ளான். அந்தகன் என்ற அரக்கன் சிவபெருமானிடம் வரம்பெற்று, ஆணவத்தினால் உலக உயிர்களைத் துன்புறுத்தியமையைக் கண்ட சிவபெருமான் அவனை அடக்கியுள்ளான். திருமால் இரணியன் மார்பை வகிர்ந்துள்ளான். முற்கூறிய இவ்வரலாறுகள் புராண வரலாறுகளாகக் காணப்பெறினும். சமுதாயத்தில் மக்கள் கட்டாயம் பின்பற்றவேண்டிய ஆணவம்கொள்ளாமை என்ற கருத்தை வலியுறுத்துவனவாகவே அமைகின்றன. இக்கருத்தை மேலும் வலியுறுத்தும் நோக்கமுடம் இறைவன் செருக்கை அறுப்பனவாகக் காட்டப்பெறுகின்றான். நாயன்மார்களும் ஆழ்வார்களும் உலக மக்களைப் பார்த்து நீர், நுமது என்ற செருக்கை வேர்முதல் மாய்க்கவேண்டும் என அறிவுரை கூறுமாற்றையும் உணர்கின்றோம். அதிசூரன் என்பவன் வாட்படைப்பயிற்சியில் தன்னினும் மேம்பட்டவர் ஒருவர் இல்லை என ஆணவம்கொண்டு தோல்வியுற்றமையை ஏனாதி நாயனார் வரலாறுமூலமும் அறிகின்றோம்.

## 7. 4. 1. 2. இரத்தல்

எத்தகைய வறுமைநிலை வந்துற்றாலும் பொருளைப் பெறுவதற்கோ, உயிர்வாழ வேண்டியயோ பிறரிடம் சென்று இரத்தல் என்ற செயல் வன்மையாகக் கண்டிக்கப் பெறுகின்றது. மக்கள் பிறரிடம் சென்று இரத்தலாகிய செயலை இழிவானதாகக் கருதவேண்டும் என அறிவுறுத்தப்பெறுகின்றது. பிறரிடம் சென்று பொருள் காரணமாக இரக்காதீர்கள் என்றும், வஞ்சகர் மனைகளில் நின்று இரக்காதீர்கள் என்றும் அறிவுரைகள் கூறப்பெறுகின்றன.[10] கணம்புல்லர் நாயனார் வறுமையின் காரணமாக வீட்டிலுள்ள பொருள்கள் அனைத்தையும் விற்றுவிட்ட பின்னரும் வறுமைநிலை மாறாத நிலையில் அயலவர்பால் இரப்பஞ்சிக் காயமுயற்சியில் அரிந்த கணம்புல்லைக் கொண்டுவருகின்றார்.[11] இது எவ்வளவு வறுமை வந்தபோதும் இரப்பதற்கு அஞ்சிய மனநிலையைக் காட்டுகின்றது.

## 7. 4. 1. 3. பிற உயிர்களுக்குத் துன்பம் செய்தல்

பிற உயிர்களைக் கொன்று அவற்றின் ஊனை உண்டு மகிழும் செயல் வன்மையாகக் கண்டிக்கப்பெறுகின்றது. பிற உயிர்களைக் கொல்லாமையும், ஊன் உண்ணாமையும் பல நிலைகளில் வலியுறுத்தப்பெறகின்றன. வேள்விகள் என்ற பெயரால் பிற உயிர்களைக் கொலைசெய்யும் நிலை கண்டிக்கப்பெறுகின்றது. திருமூலர் நிலையாகச் செய்துவரும் கொலை வேள்விகளை விட்டொழியாதவர்களைக் கண்டு மனம் வருந்துகின்றார்.[12] பிற உயிர்களைக் கொல்லுதல் மாறா மனமயக்கத்தைத் தரும் பாவச் செயலாகக் கருதப்பெற்றது.[13] புலால் உண்பவரை எமன் தூதுவர் கொண்டு செல்வர் என்றும்,[14] பிற உயிர்களைக் கொலைசெய்யாதவர் இமயத்திடை நிற்பர் என்றும்,[15] உணர்வற்றவர்களும், குறிக்கோளற்றவர்களும் ஓடியும், உழன்றும் பிற உயிர்களைக் கொல்வர் என்றும்,[16] பிற உயிர்களைக் கொல்வோர் மட்டுமன்றிக் கொல்விப்போர்களையும் எமன்தூதுவர் நரகிடை வீழ்த்துவர் என்றும்,[17] பிற உயிர்களின் ஊனை உண்போரும், உண்ணும்படி வலியுறுத்துவோரும் பன்றியாய்ப்

பிறப்பர் என்றும்,[18] அறிவுறுத்துவதன் மூலமும், அச்சுறுத்தல் மூலமும் உயிர்க்கொலை செய்தல் என்ற செயல் கண்டிக்கப்பெறுகின்றது. கொலைக்குற்றம் செய்த தக்கனின் தலையை அரிந்து ஆட்டுக்கடாவின் தலையைச் சிவபெருமான் பொருத்தினான் என்ற புராணச்செய்தியும்[19] கொலைசெயலை விலக்குமாறு கூறுகின்றது. பிற உயிர்களைத் துன்புறுத்தல் கண்டிக்கப்பெற்றமையுடன் பிற உயிர்களிடத்து இரக்கம் காட்டவேண்டும் என அறிவுறுத்தப் பெற்றமையையும் காண்கின்றோம். சண்டேசுவர நாயனாரின் மகன் விசாரசருமன் இடைக்குலச்சிறுவன் ஒருவன் தன்னை முட்டவந்த பசுவை அடிப்பதைக் கண்டு தடுத்துநிறுத்துகின்றான். பசுவிலிருந்து பெறும் பாலையும், பசுவின் கன்றினை நன்கு வளர்க்கும் பயனையும் பெருகச் செய்வதற்காகப் பசுக்கள் பாதுகாக்கப்படவேண்டும் என்று அறிவுரை கூறுகின்றான்.[20] பசுக்களை மேய்ப்பவன் இறந்துவிட்டமையைக் கண்ட பசுக்கள் துன்பமுற்று வாடி நிற்பதைப் பொறுக்கலாற்றாதயோகியர் அப்பசுக்களின் துன்பத்தைக் துடைக்கின்றார்.[21] இவற்றால் கொல்லாமை, ஊன் உண்ணாமை, பிற உயிரினங்களைத் துன்புறுத்தாமை போன்ற செயல்கள் சமுதாயத்தில் நன்கு மதிக்கப்பெற்றிருந்தமை புலனாகின்றது.

### 7. 4. 1. 4. உருவுகண்டு எள்ளுதல்

கண்ணனைக் குழந்தையாகக் கருதி அழைத்து அவன் பெருமைகளைக் போற்றும் பெரியாழ்வார் அம்புலியைக் கண்ணனுடன் விளையாட வருமாறு அழைக்கும் சூழலில் இவனைப் பாலகன் என்று பரிபவஞ்செய்யேல் என்றும், சிறியவன் என்று இகழேல் என்றும் அறிவுரை கூறுகின்றார்.[22] இக்கண்ணன் குழந்தையாகக் காட்சியளிக்கின்றான். எனினும், பல்வேறு செயற்கருஞ்செயல்களைச் செய்தருளியவன் என்றும், கொடிய அரக்கர்களையும், வஞ்சகர்களையும், எதிரிகளையும் அடக்கியவன் என்றும் மொழிகின்றார். இதனால் உருவத்தை மட்டும் மனதிற்கொண்டு எவரையும் இகழ்ந்து ஒதுக்குதல் கூடாது என்ற கருத்து புலப்படுகின்றது.

### 7. 4. 1. 5. கள்ளுண்ணுதல்

சங்க இலக்கியம்மூலம் சமுதாயத்தில் கள்ளுண்ணும் செயல் கண்டிக்கப்பெறவில்லை என்பது தெரிகின்றது. ஆனால், பக்தி இலக்கியத்துள் கண்டிக்கப்பெறுகின்றது. இது சமுதாயத்தில் நிகழ்ந்துள்ள மதிப்புமாற்றத்தைக் காட்டுவதாய் அமைகின்றது. சமுதாயத்தைச் சீர்குலைக்கும் கள்ளுண்ணலாகிய செயல் மனிதர்களுக்கு மாறாமயக்கத்தை உண்டாக்கும். கள்ளுண்போர் அறமுறையையும், அருள்முறையையும் விட்டுப் பாவநெறியில் செல்வர். எனவே கள்ளுண்ணல் கீழ்நிலை ஆகும். கள்ளுண்ணலாகிய செயல் தீக்குணமுடைய கலதிகளாகிய கீழ்மக்களுக்கே உரிய செயல் ஆகும். மெய்ம்மை, மெய்ப்பொருள் ஆகியனவற்றைப் பகுத்தறியும் அறிவை அழித்தொழிக்கும் கள்ளை உண்பவர் பிறப்பு, இறப்பாகிய பெருந்துன்பத்தில் வீழ்ந்து, பெண்ணியலாரை நாடுவர். எனவே கள் உண்ணுதல்கூடாது என்று[23] அறிவுரைகள் இயம்பப்பெறுகின்றன.

### 7. 4. 1. 6. உள்ளத்தில் கள்ளம் கொள்ளுதல்

உள்ளத்தால் கள்ளம் நீங்கித் தூய்மை அடைந்தால்தான் தனிமனிதர்களும், அவர்கள் வாழ்கின்ற சமுதாயமும் சீர்மை அடையமுடியும் என்ற சிந்தனை வெளிப்படுத்தப்பெறுகின்றது. திருமங்கையாழ்வார் சூதினைப் பெருக்கியதாகவும், களவினைத் துணிந்ததாகவும் உலகியல் நிலையைக் தம்மேலிட்டுக் கூறுகின்றார்.[24] திருஞானசம்பந்தர் கள்ளம் ஒழிந்திடுமின் என்றும்,[25] திருநாவுக்கரசர் கள்ளத்தைக் கழிப்பீர் என்றும்,[26] திருமூலர் பொய், களவு, காமம், கள், கொலை என்ற ஐந்துப் பாவங்களையும் செய்பவர்கள் கேடு சூழ் பெரும் பாதகர் என்றும்,[27] நம்மாழ்வார் சூதென்றும் களவென்றும் செய்யாதே என்றும்[28] உலக மக்களுக்கு அறிவுரைகள் கூறுகின்றனர். இத்தகைய களவு, பொய், காமம், கோபம் முதலியனவற்றைக் கடந்து உயர் நிலையை அடைந்தவராக அப்பூதியடிகள் காட்டப்பெறுகின்றார்.[29] இதனால் களவு, பொய் முதலியனவற்றைக் குற்றங்களாகக் கருதி நீக்கியவர்கள் போற்றத்தக்க உயர்நிலையை அடையலாம் என்று உயர்ந்த சிந்தனை வெளிப்படுகின்றது.

### 7. 4. 1. 7. காமம்கொள்ளுதல்

பல நிலைகளில் இல்லற நெறியைப் போற்றும் பக்தி இலக்கியம் அளவுக்கு மீறிய இழிந்த காமத்தை இகழ்ந்துரைக்குமாற்றையும் உணரமுடிகின்றது. காம மயக்கம்கொண்டு திரியும் மக்களைப் பார்த்துக் காமவினையை அகற்றவேண்டும்.[30] பெண் ஆசையால் துன்பம் வரும்.[31] வேலை வென்ற கண்ணாரை விரும்பிச் சீலம் கெட்டுத் திகையாதீர்.[32] பெண்ணாசையால் குடிகெடும்,[33] போகமாதர் வெள்ளத்தைக் கழிக்கவேண்டினால் இறைவனை உன்ன வேண்டும்.[34] பெண்ணாசையை ஒழித்தால் பரமன் அருள் கிட்டும்[36] என்றெல்லாம் அறிவுரைகள் புகலப்பெறுகின்றன. கனியை ஒத்த துவர் வாயார் என்னும் காற்றால் கலக்குண்டு, காமவான் சுறவின் வாய்ப்பட்டு, இனி உய்யும் வழி என்னே என்று திகைத்துநிற்பதாகவும், வலையிடை அகப்பட்ட மான்போன்ற பார்வையை உடைய பெண்கள்பால் மோகங்கொண்டு மிலைத்து அலைவதாகவும், சுருள்புரிகூழையர் குழலிற்பட்டு இறைவன் திறம் மறந்ததாகவும் மாணிக்கவாசகர் காமம் இறைவன் அருளைப்பெறத் தடையாக நிற்கின்றமையைக் காட்டுகின்றார்.[37] அப்பர்பெருமான் தையலாள் வலையுட்பட்டதாகவும், பெண்கள் பற்றிய பேச்சைப் பேசியே காலத்தைக் கழித்ததாகவும், இதனால் இறைவனை நினைக்காதிருந்ததாகவும் கூறுமாற்றால்[38] காமம் வாழ்க்கையில் ஏற்படுத்தும் பாதிப்புக்களை உணர்த்துதல் அறியத்தக்கது ஆகும். மாணிக்கவாசகர் இத்தகைய துன்பங்களுக்குக் காரணமாக மன்மதன் பாணத்துக்கும், பெண்ணாசைக்கும் இலக்காகிப் பதைத்துருகும் பாழ் நெஞ்சைக் கடிந்துரைக்கிறார்.[39] இறைவனிடம் தீப்புகும் விட்டிலைப்போல் பெண்ணாசையால் துன்புறுகின்ற என்னை விட்டுவிடாதே என வேண்டுகின்றார்.[40] இழிந்த காமத்தை உள்ளத்திலே கொண்டவர்கள் கள்ளுண்ணலாகிய இழிந்த நிலைக்கும் ஆட்பட்டு விடுவர் என்பதைத் திருமூலர் சுட்டுகின்றார்.[41] இதனால்தான் அப்பர்பெருமான் வாராண்ட கொங்கையார் மனையிற் சேரோம் என உறுதியுடன் மொழிவதாகத்

தோன்றுகின்றது.[42] இக்கருத்துக்களுக்குச் சான்றுகளாக இராவணன் தன் மனத்தை மங்கையின்பாற் செலுத்தியமையாலே கெட்டொழிந்ததாகவும்[43] சிவபெருமான் அறம் உரைக்கும் பொழுதில் காமத்திறம் எழுப்ப உன்னிய காமனை நெற்றிக்கண்ணால் காய்ந்ததாகவும்[44] வரும் புராணச்செய்திகள் அமைகின்றன எனலாம்.

## 7. 4. 1. 8. அவாகொள்ளல்

மனிதர்களுக்கு எண்ணங்கள் அதிகரிக்கும்போது உலகப் பற்றுக்களும் மிகும். இவ்வெண்ணங்களுக்கு அடிப்படையாக அமைவது பேராசை. இவ்வாசையின் அமைவிடம் அறிவின்மை. இறைவனை உண்மை அன்புடன் பற்றினால் அறியாமை நீங்க, அதனால் ஆசை அகன்று பிறப்பு அறுகின்றது. எனவே, மக்கள் உயர்நிலையை அடைய ஆசையை அறவே ஒழிக்கவேண்டும் என்ற கருத்து பலவிடங்களில் எடுத்தோதப்பெறுகின்றது. நாவுக்கரசர் ஊனுடம்பைச் சுமந்து பெரிய ஆசையின் வாயகப்பட்டுவிட்டதாக மறுகுகின்றார்.[45] ஆசையைவிட்டால் ஆனந்தம் வரும் என்றும் உரைக்கின்றார்.[46]

## 7. 4. 1. 9. பொச்சாத்தல்

உலக இன்பங்களில் மூழ்கி, எல்லாம்வல்ல இறைவனை உன்ன மறந்த மனத்தைக் கடிவனவாய் அமைந்த பாடல்கள் பொச்சாவாமையை வலியுறுத்துகின்றன எனக் கொள்ளலாம். எனவேதான் குலசேகரர் இறைவனிடம் மறந்திருக்கும் மனத்தை ஒழிக்குமாறு வேண்டுகின்றார் எனலாம்.[47]

## 7. 4. 1. 10. பொய்ம்மை மகளிரை முயங்குதல்

எட்டிப்பழம் அழகுடையதாயினும் அதனை உண்பவர் இறத்தல் உறுதி என்பதை எண்ணி மக்கள் அதனை உண்ணமாட்டார்கள். அதனைப் போன்று பொய்ம்மை மாதர் மேல் செல்லும் எண்ணத்தைக் கொடிதெனக் கொள்ளவேண்டும். பொய்ம்மை மகளிர் தரும் இன்பமானது கனவு போன்று நிலைத்து நில்லாது அழியும். பொய்ம்மை மாதர் புதுப்பொருள் உடையவரைக் கண்டால் அவர்பால் மனம் செலுத்துவர். தாழ்ந்தோராயினும் மயல் கொள்ளுவர். இவர்களைப் பலவாறு புகழ்ந்துரைப்பர். கையிலுள்ள பொருள் கரைந்து விட்டமையை அறிந்ததும் தம்மை விட்டு விலகும்படி கடுமையாகப் பேசியும், துன்புறுத்தியும் விலக்குவர். பொய்ம்மை மகளிர் இயல்புகளையும், அவர்களைச் சார்தலின் தீமைகளையும் முற்கூறியவாறு விளக்கும் திருமூலர் பொய்ம்மை மகளிர் முயக்கத்தைக் கடிக்கின்றார்.[48]

## 7. 4. 1. 11. பொய்ம்மை கூறுதல்

பொய்ம்மையை நீக்கவேண்டும் என்றும்,[49] பொய்ம்மையைப் பேசிப் பொழுதைக் கழிக்கக்கூடாது என்றும் [50] பொய்யாநாவால் இறைவனைப் போற்றவேண்டும் என்றும்[51] பக்தி இலக்கியம் அறிவுரை பகர்கின்றது. தொண்டரடிப் பொடியாழ்வார் தம்மைப் பொய்யெல்லாம் பொதித்துகொண்ட

பொக்கனேன் எனக் கடிந்துரைக்கின்றார்.[52] இறைவன் பொய்மையைக் கழிக்கத் துணைநிற்பவனாகவும்[54] பொய்த்தவர் புரமூன்றும் எய்தவனாகவும்[55] காட்டப்பெறுகின்றான். இதனால் அப்பர் பெருமான் பொய்யினைத் தவிரவிட்டுப் புறமலா அடிமைசெய்ய அருளும்படி இறைவனை வேண்டுவதுடன், இறைவனை வணங்குதல் மூலம் பொய்மையைப் போக்கலாம் என்றும் எடுத்துரைக்கின்றார்.[56] அப்பூதியடிகள் தன் மகன் இறந்தமையைக் கூறினால் அப்பர்பெருமான் அமுதுசெய்தருளுவதற்கு இடையூறு நிகழுமே என்ற எண்ணம் ஒருபக்கம் ஈர்க்க, இறையன்பரிடம் பொய்கூறுதல் கூடாது என்ற எண்ணம் மற்றொரு பக்கம் ஈர்க்கத் திகைத்து, இறுதியில் பொய்கூறுதல் கூடாது என்ற எண்ணமே மேலெழ அப்பர்பெருமானிடம் தன் மகன் இறந்துவிட்ட செய்தியைக் கூறுகின்றார்.[57] இந்நிகழ்ச்சி எந்தச் சூழலிலும் மனிதர்கள் பொய்கூறுதல் தவறு என்ற சிந்தனையைப் புலப்படுத்துகின்றது.

## 7. 4. 1. 12. கடும் வட்டி வாங்குதல்

வறுமையின் காரணமாகப் பொருளாதார ஏற்றத்தாழ்வில் தாழ்நிலையுற்றிருக்கும் பிரிவினர்கள் உயர்நிலையுற்றிருப்பவர்களிடம் கடன் வாங்கும்போது அதற்குப் பதிலாகக் கடும் வட்டி வாங்குதல் கூடாது என்ற உயரிய சிந்தனை வெளிப்படுத்தப்படுகின்றது. திருமூலர் இவ்வாறு கடும்வட்டி வாங்குவோர்களைப் பாதகர் என இகழ்ந்துரைக்கின்றார்.[58]

## 7. 4. 1. 13. கடமை தவறுதல்

வாழ்க்கையில் பல்வேறு துன்பங்களும், சொல்லொணாத வறுமைநிலையும் வந்துற்றாலும் மக்கள் தம் கடமையிலிருந்து தவறுதல் கூடாது என்ற சீரிய கருத்து அடியார்களின் வரலாறுகள் மூலம் உணர்த்தப்பெறுகின்றது. கணம்புல்லர் வறுமையுற்ற நிலையிலும் உடல் உழைப்பால் கிடைத்த பொருளால் இறைவனுக்கு விளக்கெரிக்கும் பணியை மேற்கொள்ளுகின்றார். புகழ்த்துணை நாயனார் பசி வந்து மயங்கிய நிலையிலும் இறைவன் கொடுத்த காசினைப் பெற்று இறைத்தொண்டினையே செய்கிறார். பூசலார் நாயனார் இறைவனுக்குக் கோயில் எடுக்க முயன்று, கையில் பொருளில்லாமையால் தன் முயற்சியைக் கைவிடாது மனத்துட்கோயில் எடுத்து வழிபடுகின்றார். இவை கடமை உணர்வைப் பறைசாற்றும் நிகழ்ச்சிகளாக அமைகின்றன.

## 7. 4. 2. மேற்கொள்ளத் தக்கவை

### 7. 4. 2. 1. கொடை கொடுத்தல்

கொடை கொடுத்தல் என்ற பண்பாடு சங்ககாலம்தொட்டே தமிழ் மக்களிடத்தில் காணப்பெற்ற போற்றற்கரிய பெருநிலை ஆகும். பக்தி இலக்கியத்திலும் கொடை கொடுத்தல் என்ற செயல் பலநிலைகளில்

விளக்கப்பெறுகின்றது. இறைவன் கரவாத கொடை கலந்தாரவர்க்கு விரவாக வல்லவனாகக் காட்டப்பெறுகின்றான்.[59] இறைவனை அடையும் வாயில்களாகத் திருமூலர் அறத்தையும் தவத்தையும் குறிப்பிடுகின்றார்.[60] அவர் அறம் செய்வான் திறம் என்று தனி அதிகாரமே வகுத்துக்கொண்டு விளக்குகிறார். அறம் செய்யாவிடில் குத்திருமல், குருதிக்குறைவு, கோழை, உட்சூடு, பிளவைக்கட்டி முதலான நோய்கள் அண்டி வருத்தும் என்றும், இருளலகத் துன்பங்கள் வந்து சேரும் என்றும் அறம் செய்யாதவர்கள் விலங்குகளாய் அதுவும் நாட்டிலும் வீட்டிலும் வளர்க்கப்பெறும் நல்விலங்குகளாய் உலகில் பிறப்பர் என்றும் அறம் செய்யாமையால் விளையும் கேடுகளைக் கூறும் திருமூலர்,[61] நாம் பெற்ற பொருளை வழித்துணையாகிய புண்ணியத்திற்கே செலவிட வேண்டும் என்றும்,[62] கடைப்பருவ முடிவில் செய்தற்கரிய செயல்களைச் செய்ய முடியாமல் போய்விடுமாகையால் இப்போதே செய்க என்றும் [63] அறிவுரைகளும் கூறுகின்றார். தொண்டரடிப்பொடியாழ்வார் கொடை கொடுக்க முடியாத இயலாமை நிலையை உவர்த்த நீரைப்போல என்றன் உற்றவர்க்கு ஒன்றுமிலேன் என மனமுருகிக் கூறுகின்றார்.[64] கொடைப்பண்பை மக்கட்கு வலியுறுத்துவனவாய் அடியார்களின் வரலாறுகள் அமைந்து காணப்பெறுகின்றன. மெய்ப்பொருள்நாயனார் தனது அரிசுரிமையால் தேடிய பொருள் அனைத்தையும் பெருமான் அன்பர்க்கே ஆகும் என்று வேண்டிய அளவு மனமுவந்து கொடுத்து வந்தார்.[65] பெருமிழலைக்குறும்பனார் உண்ணத் தொலையா அமுதூட்டல் கொண்டு சொல்ல அருநிதியம் முகந்து கொடுக்கின்றார்.[66] அரிவாட்டாய நாயனார் வறுமையிலும் உணவு படைக்கின்றார்.[67] மூர்க்க நாயனார் உடைமையான பொருள்கள் அனைத்தையும் விற்று அடியார்க்கு அன்னம் அளிக்கின்றார்.[68] இளயான்குடிமாறநாயனார் கையில் பொருளில்லாத காலத்தும் மனைவியின் கருத்துப்படி விதைத்த முளையை வாரிக்கொண்டுவந்து அன்னமிடுகின்றார். இந்நிகழ்ச்சி அடியார்கள் மட்டுமின்றி அவர்களது மனைவியும் கொடைகொடுக்கும் பண்பில் மேம்பட்டவராகக் காணப்பட்டமையைத் தெளிவுறுத்துகின்றது. இயற்பகையார் இறையடியார் வேண்டும் எவற்றையும் இல்லையென்னாது கொடுத்து வருகின்றார்.[69] மனத்துக்கண் மாசிலனாதலே சிறந்த அறம் என்றும் ஏனையவை ஆராவரமிக்கவை என்றும் உலகுக்கு அறிவுறுத்திய வள்ளுவரின் கருத்தையுணர்ந்து அப்பூதியடிகள் தம் பெயரினை வெளிப்படுத்தாது அப்பர் பெருமானின் திருப்பெயரால் அறங்கள் பல செய்கின்றார்.

இறையடியார்கள் மட்டுமன்றி மக்களும் கொடைப்பண்பில் சிறந்து நிற்றல் புலனாகின்றது. இரப்போரிடத்துக் கரவாது வழங்கும் வள்ளன்மையுடைய மக்கள் நிறைந்த ஊர் என ஊர்வருணனையுள் மக்களின் கொடைப்பண்பு எடுத்துக்கூறப்பெறுகின்றது.[70] மக்கள் கொடைகொடுத்து மகிழ்வதற்கும், பிற உயிர்களைத் தம் உயிர்போலக் கருதுவதற்கும் அருள் உள்ளம் இன்றியமையாது வேண்டப் பெறுகின்றது. இவ்வருள் உணர்வு இல்லையென்றால் மக்கள் வாழ்க்கையில் நெறிகெட்டு வாழும் நிலை உருவாகிவிடும். நெறியான வாழ்க்கை வாழத் தேவையான அருள் உணர்வை அருள வல்லவனாக இறைவன் காட்டப் பெறுவதன் மூலம் அருளுணர்வை அடைந்து அதன்மூலம் கொடைப்பண்பை வளர்க்க முடியும் என்ற கருத்து இவண் பெறப்படுகின்றது.

### 7. 4. 2. 2. அன்புடைமை

இறை அன்பு கொள்ளுதலே பக்தி இலக்கியத்தின் அடிப்படையாக அமைகின்றது. அன்பு நெறியே தமிழர்களின் பக்தி நெறி என்று அறுதியிட்டுக் கூறமுடியும். இறைவனிடம் அன்பு செலுத்துதல் என்ற செயல் மூலம் உலகில் வாழும் மக்கள் ஒருவருக்கொருவர் அன்பு செலுத்தி ஒற்றுமையுடன் வாழவேண்டும் என்ற உயர்ந்த நோக்கம் வலியுறுத்தப்பெறுகின்றது. இறைவன் அடியார்களின் உள்ளத்தில் அன்பு என்னும் பாசம் வைப்பவனாகவும்[72] அன்பர்கள் பறித்திட்ட இலை, மொட்டு என்பனவற்றை அழகிய மலராகக் கொள்பவனாகவும்[73] பக்தர்களின் நெஞ்சினுள் தேனும் அமுதும்போன்று நிற்பவனாகவும்[74] அன்பு செய்வார்க்கு அன்பராகவும் நீசர்க்குக்கூசராக நிற்பவனாகவும்[75] அன்புடன் வணங்குவோர் நோய்களைக் களைந்து இவ்வுலகையெல்லாம் காட்டுவோனாகவும்[76] பல்லுயிர்க்கும் பரிவோனாகவும்[77] விளக்கப்பெறுகின்றான். இத்தகைய இறைவன் தம்மை ஆண்டருளியமையை நினைந்து நினைந்து அடியார்கள் இன்புறுகின்றமையைப் பல இடங்களில் காண்கின்றோம்.

இறைவன்பால் கொண்ட அன்பின் உயர்நிலையில் அடியார்களும் வாழ்ந்துள்ளனர். குலச்சிறை நாயனார் இறையன்பர்கள் பலர் வந்தாலும், ஒருவர் வந்தாலும் முகமலர்ந்து எதிர்கொண்டழைத்து அமுது செய்கின்றார்.[78] அதிபத்தர் அகில உலகமும் விலைகொள்ளும் பொன்மீன் கிடைத்தபோதும் வறுமை நிலையைக் கூடக் கருதாது அன்பின் காரணமாக அதை இறைவனுக்கெனத் திரையிலேயே விட்டுவிடுகின்றார்.[79] சிறுத்தொண்டர் ஒருகுடிக்கு நல்ல சிறுவன் ஒருமகனைக் கூட அன்பின் மிகுதியால் அடியார்க்குக் கறி சமைத்தூட்டத் துணிந்து விடுகின்றார்.[80] சண்டேசுவரர் அன்பின்கடனே இயல்பாய் முற்றிவரும் காதலுடன் வாழுகின்றார்.[81] கண்ணப்பர் உள்ளத்தில் ஊற்றெடுத்த அன்பினால் ஊன் உணவைப் படைத்தபோதும், தலையிலுள்ள மாலைகளைச் செருப்பணிந்த காலால் மாற்றியபோதும், வாயிலுள்ள நீரை ஊற்றி நீராட்டியபோதும், ஊனை உண்டு சுவைத்துப் பார்த்துப் படைத்தபோதும் இறைவன் அவர் அன்பினை எண்ணி மனம் உவந்து ஏற்றருள்கின்றார். இந்நிகழ்ச்சிகள் அனைத்தும் அன்பு செலுத்துதற்கு வறுமைநிலை, குலம் முதலியன தடைகளாகா என்பதை விளக்குகின்றன. இத்தகைய அன்பின் முதிர்ச்சியை உற்ற அடியார்களின் திருக்கூட்டத்தினால் மண்ணுலகும் விண்ணுலகாயிற்று என நம்மாழ்வார் வியந்து மகிழ்கின்றார்.[82] பெரியாழ்வார் இறைவனிடம் மனத்துள் உண்மை அன்பின்றி வாழ்பவர் அகத்திலிருந்து விளையாடாதே என வேண்டுகின்றார்.[83] நாடாளும் மன்னர்களும் அன்பின் பொருட்டுத் தம் பதவியையும் மதிப்பையும் கருதாது வாழ்ந்துள்ளனர். பரஞ்சோதியார் இறைவனின் அன்பர் என அறிந்த மன்னன் அவர் அடிகளில் வீழ்ந்து வணங்குதலும்[84] எறிபத்தரிடம் மன்னன் தன் யானை விளைவித்த துன்பத்திற்காகத் தன்னைக் கொல்லுதல் தகும் எனத் தன் உடைவாளை உருவிக் கொடுத்தலும்[85] சான்றுகளாக அமைகின்றன. இறைவன் வேடனாய் வந்த விசயர்க்கு அருள்செய்தலும், அப்பருக்குத் திருவையாற்றிலேயே கயிலைக் காட்சியை அளித்தலும், பஞ்சம் வந்துற்றபோது காசு கொடுத்தலும், தன்னடைந்த மாணிக்கு அருள் செய்தலும், சம்பந்தரின் வேண்டுகோளுக்கிணங்கி

ஆண்பனையைக் காய்க்க வைத்தலும், பார்த்தனுக்குப் பரிதலும், பாஞ்சாலிக்கு உதவுதலும் போன்ற திருவருட்செயல்கள் அன்பின் உயர்வைக் காட்டுதற்காக அமைந்தவை எனக் கருதலாம். இவற்றைக் கண்ட மக்கள் மேலும் அன்புடைமை என்ற அரிய பண்பை வளர்க்க வேண்டும் என்பதே இப்புராணக்கதைகளின் நோக்கமாக அமைகின்றது.

### 7. 4. 2. 3. இனியவை கூறல்

தன்னையொத்த மனிதர்களிடமும் தன்னை நாடி வருவோர்களிடமும் இனிய உரைகளை முகம்மலர்ந்து கூறித் தாமும் மகிழ்ந்து பிறரையும் மகிழ்விக்கவேண்டும் என்ற கருத்து எடுத்துரைக்கப்பெறுகின்றது. இப்பண்பை மக்கள் வளர்த்துக்கொள்வதற்காகவே இறைவன் வாக்கினால் இன்புரைத்து வாழ்கிலார் தமையெல்லாம் போக்கினால் புடைத்து அவர் உயிர்தனை உண்பவன் எனக் காட்டப்பெறுகின்றான் என்று கொள்ளலாம்.[86] இறை அன்பர்களைக் கண்டால் பணிந்தமொழி கூறியும், இனியமொழிகூறியும் மகிழ்விக்கும் செயலை அடியார்களின் வரலாறுகள் நன்கு விளக்குகின்றன. என்றேனும் இரந்தார்க்கு இனிதாக உரைத்தறியேன் எனத் திருமங்கையாழ்வார் தன்னை நொந்துகொள்ளுதலும் இனியவை கூறல் என்ற கருத்தையே வலியுறுத்துவதாகத் தோன்றுகின்றது.[87]

### 7. 4. 2. 4. உழைத்து வாழ்தல்

திருவடி உணர்வில்லாத கீழோர் சிவக்கோலம் பூண்டு சிறந்த தென்னாட்டகத்துக் கூடா ஒழுக்கம் புரிந்து, பிறரை வஞ்சித்து, ஏதும் உழையாது, இரந்து உண்டுகொண்டிருப்பர் என்று திருமூலர் இழித்துரைக்கின்றார்.[88] நம்மாழ்வார் புலவர்களிடம் பிறரைப் புகழ்ந்து, இச்சைபேசிப் பொருளுக்காக இரந்துநில்லாது மெய்வருந்திக் கைசெய்து உண்டு வாழுங்கள் என்று வேண்டுகின்றார்.[89] அடியார்களும் வறுமையுற்ற காலத்தில் உழைத்துப் பொருளீட்டியமையையும் அறிகின்றோம். இதனால் விதியை நினைந்து புலம்பிக்கொண்டு வறுமையில் வாழ்தலையும், பிறரிடம் சென்று இரத்தலையும் விட்டுவிட்டு இறையுணர்வுடன் உடல் உழைப்பில் ஈடுபட்டால் வறுமையை வென்று தன் நிலையில் உயர்வடையலாம் என்ற ஆழமான சிந்தனை புலப்படுகின்றது.

### 7. 4. 2. 5. புலன்களை அடக்குதல்

ஐம்புலன்களையும் அவ்வவற்றின் வழிகளில் செல்ல விடுத்தால் பெருந்துன்பங்கள் விளையும். எனவே அவற்றைக் கட்டுப்படுத்த வேண்டும். ஐம்புலன்களால் கிட்டும் இன்பம் தெரிவரிய அளவிலாத சிற்றின்பமே ஆகும். ஐம்புலன்கள் வழிச் சென்றால் பேரின்ப நிலையை அடையமுடியாது. இறைவன் உயிர்களுடன் வாழ்கின்ற ஐவரை ஆசறுத்து ஆள்பவன். எனவே ஐம்புலன்களை

அடக்கி, இறைவனை நினைப்பதிலேயே மனத்தைச் செலுத்தி உயர்கதி அடையவேண்டும் என்ற சிந்தனையைப் பக்தி இலக்கியம் பல இடங்களில் காட்டுகின்றது.

### 7. 4. 2. 6. செய்ந்நன்றியறிதல்

இன்றமிழ் பாடச்செய்த இறைவனை நான் எவ்வாறு பாராட்டுவேன் என்றும்[90] இறைவன் தன் திருவடிகளை எனக்குத் தந்த பேருதவிக்கு ஈடாக நான் என் உயிரையும் கொடுப்பேன் என்றும்,[91] வாழ்த்துவதற்கு வாயையும், நினைப்பதற்கு நெஞ்சினையும் தாழ்த்துவதற்குச் சென்னினையும் தந்த இறைவனை மாமலர் தூவிப் பாவியேன் வணங்கவில்லை என்றும்[92] பக்தி இலக்கியச் சான்றோர்கள் எண்ணி மனம் மறுகும் இடங்களில் செய்ந்நன்றியறிதல் என்ற பண்பு எல்லோராலும் பின்பற்றப்பட வேண்டும் என்ற கருத்து வெளிப்படுத்தப் பெறுகின்றது.

### 7. 4. 2. 7. சொன்னசொல் காத்தல்

பழையனூர் வேளாளர் தம்மேல் குற்றம் வந்தபோது தம் உயிரையும், தாம் ஒருவணிகனுக்குச் சொல்லிய சொல்லின் வாய்மையையும், சீர்தூக்கிப் பார்த்து இறுதியில் தம் உயிரினும் தாம் கூறிய சொல்லே உயர்வானது எனக் கருதிக் காத்தார்.[93] இவ்வரலாறு எந்நிலையிலும் சொன்னசொல்லை உயிரைக் கொடுத்தேனும் காக்க வேண்டும் என்ற பண்பை மக்களுக்குப் பறைசாற்றுகின்றது எனலாம்.

### 7. 4. 2. 8. பகைவருக்கும் அருளுதல்

சிவவேடத்தில் வந்து வஞ்சனையில் மெய்ப்பொருள் நாயனாரைக் கொன்றவரைக் காவலர் கடியச் சென்றபோது, குற்றுயிரும் குலையுயிருமாய்க் கிடந்த மெய்ப்பொருள் நாயனார் அவனிடம் பகைமை பாராட்டாது "தத்தா நமர்" எனக் கூறித் தடுத்து நிறுத்துகின்றார். அத்துடன் அமையாது இவர் திரும்பச் செல்லும் வழியில் எவரும் தடுக்காதபடி காவல்புரிந்து இவரை எவ்விதத் துன்பமின்றிக் கொண்டுபோய் விடுவாயாக என ஆணையிடவும் செய்கின்றார்.[94] இச்செயல் தமக்குத் துன்பம் செய்தவராயினும், பகைவராயினும் அவர் செயலை மனத்துட் கருதாது அவருக்கு இனியதையே செய்யவேண்டும் என்ற கருத்து மக்கள் அனைவராலும் மேற்கொள்ளப்பெறவேண்டும் என்ற நோக்குடன் அமைந்துள்ளது.

### 7. 4. 2. 9. மனமாசு நீக்குதல்

இறைவனின் கருணையைப் பெறுவதற்கு இன்றியமையாது வேண்டப்பெறுவது தூய்மையான, வஞ்சகமற்ற, மாசற்ற, கேடுதலற்ற மனமே என்பதைப் பக்தி இலக்கியம் பல்வேறு இடங்களில் விளக்குகின்றது.[95] இதனால்

இறைவனைக் கரவுடை மனத்தினரைக் காணாதவனாகவும்[96], மனமாசு தீர்ப்பவனாகவும்,[97] கரவாடும் வன்னெஞ்சத்தினர்க்கு அரியனாகவும்,[98] கரவிலா மனத்தார்க்கு இன்னருள் செய்பவனாகவும்,[99] வஞ்சகர்பால் அணுகாதவனாகவும்,[100] மாசுடையார் சிந்தைபுகாதவனாகவும்,[101] மக்களை அழுக்கடையாமல் ஆள்பவனாகவும்,[102] புரையற்ற பாலுள் நெய் போன்று திரையற்ற சிந்தையுள் வீற்றிருப்பவனாகவும்,[103] மாசற்ற மனத்துள் அமர்ந்திருப்பவனாகவும்[104] காட்டுகின்றனர். மனமாசு உடையவர்கள் கலதிகள்,[105] பாதகர்,[106] பொய்ப்பாதகர்[107] எனப் பழிக்கப் பெறுவதுடன், இவரைக் கண்டு எமனின் தூதுவரும்கூட அஞ்சுவதாகவும் இழித்துரைக்கவும் பெறுகின்றனர்.[108] நம்மாழ்வார் இறைவனிடம் கறுத்த மனம் ஒன்றும் வேண்டேன் என்று சிறிதும் மாசற்ற உள்ளத்தைத் தந்தருளவேண்டும் என இறைவனிடம் வேண்டுகின்றார்.[109] வஞ்சனையே உருவான சலந்திரனை இறைவன் தடிந்தமையும், பேய்ச்சி முலை உண்டமையும் மாசுடைய மனத்தவர்கள் அழிவர் என்ற கருத்தை மக்கட்கு உணர்த்துகின்றன.

### 7. 4. 2. 10. பணிவு கொள்ளல்

*எல்லார்க்கும் நன்றாம் பணிதல்* என்ற வள்ளுவரின் கருத்திற்கிணங்க உயர்ந்த இறைப்பற்றைக் கொண்ட மானக்கஞ்சாற நாயனார் பணிவை வெளிப்படுத்தும் வடிவுடையவராகக் காட்டப்பெறுகின்றார்.[110] உயர்ந்த தவநெறியில் மேலோங்கி நின்ற திருஞானசம்பந்திரின் வருகையை அறிந்த இறை அன்பர்கள் அனைவரும் ஒன்றுகூடி அவரை வரவேற்க வருகின்றனர். இதைக் கண்ட சம்பந்தர் பெருமான் தாம் இவர்ந்துவந்த சிவிகையை விட்டுக் கீழிறங்கி அவர்களுடன் நடந்து செல்கின்றார்.[111] இது அருளால், பண்பால், தவத்தால் உயர்ந்துநின்ற சம்பந்தர் பெருமானின் பணிவுடைமையைக் காட்டுவதாகக் கொள்ளலாம். இதைப்போன்று சம்பந்தரின் வருகையை அறிந்த நின்றசீர்ப்பாண்டிய மன்னனும், குலச்சிறையாரும், மங்கையர்க்கரசியாரும் தம் பெருமையை மனத்துட்கருதாது பணிவுடைமையின் காரணமாகச் சம்பந்தரை வணங்கி வரவேற்கின்றனர்.[112] வயதால், உலக அனுபவத்தால் உயர்நிலையுற்றிருந்த திருநாவுக்கரசர் சம்பந்தர் இறை அன்பர் என்ற நோக்கில் எழுந்த பணியுடைமை காரணமாக வயதால் சிறியவர் எனச் சிறிதும் எண்ணாது அவர் கால்களில் வீழ்ந்து வணங்குகின்றார்.[113] மேலும் அடியார்க்குச் செய்யும் தொண்டு இறைவனுக்குச் செய்யும் தொண்டு என்ற கருத்தில் சம்பந்தர் ஏறிவரும் சிவிகையையும் தாங்கிவருகின்றார்.[114] சம்பந்தர் அப்பர் எங்குள்ளார் என வினவச் சிவிகையைத் தாங்கிவரும் அப்பர்பெருமான் இங்குள்ளேன் எனக் கூறியதும் சம்பந்தரின் பணிவுடைமை காரணமாக அவர் சிவிகையை விட்டுப் பதைப்புற்றுக் கீழே இறங்குகின்றார். இந்நிகழ்ச்சிகள் அனைத்தும் மக்கள் அனைவராலும் பணிவுடைமை கடைப்பிடிக்கப்படவேண்டும் என்ற நியதியை நிலை நாட்டுவனவாய் அமைகின்றன

## 7. 4. 2. 11. பிழைபொறுத்தல்

இறைவனின் போற்றற்கரிய பெருமைகளை எடுத்து மொழியும் இடங்களில் சிறியோர் பிழைகளைப் பெரியோராயின் பொறுத்தல் கடன் என்ற வள்ளுவரின் சிந்தனைக்கிணங்கப் பிழைபொறுத்தல் என்ற பண்பும் வெளிப்படுத்தப்பெறுகின்றது. இறைவன் சிறியோர் செய்த சிறுபிழைகளைப் பொறுப்பவன் என்றும்,[115] பிழை பொறுத்தலைக் கடனாகக் கொண்டவன் என்றும்,[116] இறை உணர்வின்றித் திரியும் நாய்போன்ற இழிந்த தன்மையுடையவர்களின் பிழைகளைப் பொறுத்து நன்னெறியில் செலுத்துபவன் என்றும்,[117] பொய்யராயினும் அன்பு கூர்ந்து ஆட்கொள்பவன் என்றும்,[118] பிழைகள் பல செய்வதைக் கண்டும் சீறாதவன் என்றும்[119] வஞ்சகர்களாயினும் ஆட்கொள்பவன் என்றும்120 அடியார்கள் செய்த குற்றங்களைக் குணங்களாகக் கொள்பவன் என்றும்[121] அடியார்களின் செய்கை பெறுப்பவன் என்றும்[122] போற்றப்பெறுமாற்றால் தன்னினும் தாழ்ந்தவர்கள் பிழைசெய்தபோது அவற்றைப் பெரியோர்கள் பொறுத்து அவர்களை நன்னெறியில் செலுத்த வேண்டும் என்ற கருத்து புலப்படுத்தப்பெறுகின்றது.

## 7. 4. 2. 12. தன்னலம் மறுத்தல்

பக்தி இலக்கியத்துள் சிவபெருமானுடைய அருட்செயல்களில் சிறு உயிர்களுக்கு இரங்கியும் உலகம் உய்யவும் பாற்கடலில் அமுதம் கடையும்போது தோன்றிய விடத்தை உண்ட செயல் பரவலாகப் பேசப்பெறுகின்றது. சமுதாயத்தில் வாழும் மக்கள் தன்னல உணர்வை ஒழித்துப் பிறர் நலம்மேல் நாட்டம் செலுத்தி உயர் வாழ்க்கை வாழவேண்டும் என்ற கருத்தை ஆழமாக வேரூன்றச் செய்வதற்கே இப்புராண நிகழ்ச்சி இயம்பப்பெறுகின்றது எனக்கொள்ளலாம். தன்னலம் கருதாது பிறர் நலம் பேண வேண்டும் என்ற இக்கருத்தை வலியுறுத்தவே திருமங்கையாழ்வாரும் இறைவனிடம் பெரியோராயின பின்னால் பிறர்க்கே உழைத்து ஏழையாயினேன் எனக் கூறுகின்றார்[123] எனலாம்.

## 7. 4. 2. 13. பிறவியை மதித்தல்

உலகில் பிறந்து விட்டோம் என்றும், எவ்வாறோ வாழ்ந்து இப்பிறவியைக் கழிக்க வேண்டும் என்றும் எண்ணுதல் கூடாது. இப்பிறவியானது இறைவன் திருவருளினால் கிட்டியது ஆகும். இறைவன் அளித்த இப்பிறவியின் பயன் சமுதாயத்தில் வாழ்கின்ற தன்னை ஒத்த மனிதர்கள் அனைவரும் பல்வேறு நலன்களை அடையப் பாடுபடுவதே ஆகும். இறையுணர்வு மக்கள் நன்மை செய்யத் துணைநிற்கும். எனவே, ஈதோர் பிறவி வாய்ந்தது என மதித்து இறையுணர்வுடன் உலகம் உய்யும்படி வாழவேண்டும் என்ற சிந்தனை பக்தி இலக்கியத்துள் இடம்பெறுகின்றது.124

### 7. 4. 2. 14. பெரியாரைத் துணைக்கோடல்

நல்லாரோடு இணையவேண்டும் என்றும்,[125] பெரியாருடன் கூடல் இன்பம் என்றும்,[126] அடியார் குழாங்களையே கூடல் வேண்டும் என்றும்,[127] துப்புடையாரை அடைந்தால் சோர்விடத்துத்துணையாவர் என்றும்,[128] பேராளன் பேரோதும் பெரியாரை ஒருகாலும் பிரியேன் என்றும்,[129] சூதன், கள்வன், தூர்த்தரோடு இணங்கேன் என்றும்[130] கூறப்பெறும் கருத்துக்கள் இறைப்பற்றால், அறிவால், பண்பால், செய்கையால், அன்பால், பெரியோர்களாயினாரை இடைவிடாது பற்றி, அவர்களைத் துணையாகக் கொள்ளவேண்டும் என்ற உயர்பண்பை நிலைநாட்டுகின்றன.

### 7. 4. 2. 15. பொறுமையை மேற்கொள்ளல்

பற்றுள்ளம் கொண்டவரிடத்துப் பொறாமை என்ற பல்லி பற்றிக் கிடந்தது. பொறாமை நம்மைப் பற்றாமலிருக்கப் பொறுமையை மேற்கொள்ளவேண்டும் எனத் திருமூலர் அறிவுரை கூறுகின்றார்.[131] திருமங்கையாழ்வாரும் பொறுமையை மக்கள் மேற்கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தில் உலகை இழித்துக் கூறுகின்ற புன்சொற்களைச் பொறுத்துக்கொண்டு இறைவன் அருளையே நினைத்து கொண்டிருப்பதாகக் கூறுகின்றார்.[132]

### 7. 4. 2. 16. மனத்திட்பம் கொள்ளல்

வாழ்க்கையில் மனிதர்கள் மேற்கொண்ட செயல்கள் இனிது நிகழ்ந்தேற மனத்திட்பம் தேவை. இச்சிந்தனையை மக்கள் மனத்துள் பசுமரத்து ஆணியைப் போல் பதியவைப்பதற்காகப் பக்தி இலக்கியச் சான்றோர்களின் செயல்களும் எண்ணங்களும் அமைந்து காணப்பெறுகின்றன. இறைவனைத் தவிர வேறு எவரையும் ஏத்தமாட்டேன் என்றும் வேறு எவரையும் உன்னமாட்டேன் என்றும் கூறுமிடங்களில் அழுத்தமான மன உறுதியைக் காண்கின்றோம். திருநாவுக்கரசர் பெருமான் உடல் தளர்ந்து வாடியபோதும் உள்ளம் தளராது இறைவன் உறையும் கயிலாய மலையைக் கண்டால் அல்லது இந்தப் பாழும் உடலைக் கொண்டு திரும்பேன் எனக் கூறுதலும் அவர் மனத்திட்பத்தையே காட்டுகின்றது.[133] பக்தி இலக்கியம் சுட்டும் வீடு, நரகம் எது கிடைப்பினும் அதைப்பற்றிக் கவலையில்லை எனவரும் அடிகளும்,[134] சொன்னால் விரோதமாகிலும் சொல்லுவன் நம்பெருமான் இருக்கப் பிறரைப் புகழமாட்டேன் என்ற நம்மாழ்வார் கூற்றும்,[135] எது நேர்ந்தாலும் ஏத்துக நாயகனை என்ற திருமங்கையாழ்வாரின் துணிவும்,[136] மலையே வந்து வீழினும் மனிதர்களே நிலையில் நின்று கலங்காதீர்கள் என்ற நாவுக்கரசரின் அறிவுரையும்[137] வாழ்க்கையில் இன்பம், துன்பம், நட்பு, பகை, புகழ்ச்சி, இகழ்ச்சி எது வந்தாலும் கலங்காது தாம் கொண்ட கொள்கையில் உறுதியாக வாழ வேண்டும் என்பதையே எடுத்துக்காட்டுவனவாக அமைதல் எண்ணத்தக்கது ஆகும்.

## 7. 4. 2. 17. வினைச்செயல் வகை

மக்களுடைய செயல்கள் எவ்வாறு அமைந்து காணப்பெற வேண்டும் என்பது பற்றியும் பக்தி இலக்கியம் கூறுகின்றது. நல்லனவற்றைக் காண்டல் வேண்டும்,[138] நல்லனவற்றைப் பேசுதல் வேண்டும்,[139] நல்லனவற்றை எண்ணுதல் வேண்டும்,[140] வெற்றுரை பேசுதல் கூடாது,[141] வெறுப்பனவற்றைப் பேசுதல் கூடாது,[142] நல்ல வழிகளில் காலத்தைக் கழிக்க வேண்டும்,[143] பாவச் செயல்கள் செய்தல் கூடாது,[144] தகுதியற்ற செயல்களைச் செய்யப் பதைத்தல் வேண்டும்,[145] தீதில் நன்னெறியிற் செல்ல வேண்டும்,[146] அகமும் புறமும் தூய்மையுடன் செயல்படவேண்டும்,[147] தீவினைகளை அழித்தல் வேண்டும்,[148] தூயதொண்டில் ஈடுபடவேண்டும்,[149] எச்செயலையும் உரிய காலத்தில் செய்[illegible]டும், வாழ்க்கையில் நடந்து காட்டிய பின்னர் அறிவுரை கூறவேண்டும்.[150] [illegible]மை நலமுடன் வாழவேண்டும்,[151] விருப்பமுடன் செயல்படவேண்டும்,[152] கூடா ஒழுக்கத்தைக் கைவிட வேண்டும்,[154] திருந்திய செயலையும் சொல்லையும் மேற்கொள்ளவேண்டும், குற்றமற்ற செயலைச் செய்ய வேண்டும்,[155] இழிந்த செயல்களைச் செய்தல் கூடாது[156] நிலையினின்றும் நீங்காது செயல்படவேண்டும்,[158] வாக்கு, கருமம், மனம் மூன்றையும் ஒருவழிப்படுத்திச் செயல்படவேண்டும்,[158] உணர்வுடனும் அறிவுடனும் ஒன்றிய செயல்களைச் செய்யவேண்டும்[159] என்ற சிந்தனைகள் பக்தி இலக்கியத்துள் காணப்பெறுகின்றன.

## 7. 4. 3. குடும்பம் தொடர்பான மதிப்புக்கள்

சமுதாயத்தில் மக்கள் அனைவராலும் போற்றப் பெறவேண்டிய சமுதாய மதிப்புக்களை வெளிப்படுத்திய பக்தி இலக்கியம் சமுதாய நிறுவனங்களுள் ஒன்றாகிய குடும்பம் தொடர்பான சமுதாய மதிப்புக்களையும் புலப்படுத்துகிறது.

## 7. 4. 3. 1. ஆடவர் கற்பு

பிறன்மனை நோக்காத பேராண்மை என வள்ளுவர் வற்புறுத்திய கருத்தையும், கற்பு நிலை என்று சொல்லவந்தால் அதை இருகட்சிக்கும் பொதுவில் வைப்போம் என்று பிற்காலத்தில் பாரதியார் கூறிய கருத்தையும் பக்தி இலக்கியக்காலச் சமுதாயத்திலும் காணமுடிகின்றது. திருமூலர் ஐம்புலன்களையும் அடக்கியவர் எனச் சிறப்பித்துக் கூறப்பெறுவோர் பிறன்மனை நோக்காத பேராண்மையுடையவரே என்றும், ஆடவர்கள் தம் மனைவியைத் தவிரப் பிறபெண்களை உடலாலும், உள்ளத்தாலும் தீண்டுதல் கூடாது என்றும் அறிவுரைகள் கூறுகின்றார்.[160] திருநீலகண்ட நாயனார் பரத்தையின் வீட்டிற்குச் சென்றுவந்ததை அறிந்த அவர் மனைவியார் நீர் இனி என்னைத் தீண்டுதல் கூடாது எனக் கூறியதும், அவர் அச்சொல்லை ஏற்றுத் தன் மனைவியை மனத்தாலும் தீண்டாது வாழ்ந்துவருகின்றார்[161] உள்ளத்தால் எண்ணும் செயலானது உடலால் தீண்டுதலினால் விளையும் அதே பயனைக் கொடுக்கும் என்ற கருத்து இவண் பெறப்படுகின்றது. தான் உயர்வாகப் போற்றும்

இறையடியாரே மனைவியின் கையைப் பிடித்து நீரில் மூழ்கிச் சத்தியம் செய்துதர வேண்டும் எனக் கேட்டபொழுதுகூடத் திருநீலகண்டர் மறுத்துவிடுகின்றமை இவண் சுட்டுதற்குரியது ஆகும். இதைப்போன்று சிறுத்தொண்டநாயனாரின் இல்லத்திற்கு மறையவர் வடிவில் வந்த இறைவன் அவண் சிறுத்தொண்டர் இல்லை என்பதை அவர் மனைவியின் மூலம் அறிந்ததும் மாதரார் இருக்கும் இடந்தனியில் தனியாகப் புகமாட்டோம் எனக் கூறிப் புறப்படுகின்றார். சிறுத்தொண்டரின் மனைவி அவரிடம் போக வேண்டாம் என வேண்டிய போதிலும் சிறுத்தொண்டர் இங்கு இல்லாமையால் எப்பரிசும் அவரொழிய இங்கு இரோம் என்றும், கணபதீச்சுரத்தில் உள்ள ஆத்தியின் கீழ் அமர்ந்திருந்து அவர் வந்ததும் வருகிறோம் என்றும் கூறிச் செல்கின்றார்[162] இந்நிகழ்ச்சி முற்றும் துறந்த முனிவராயினும், தவவேடம் பூண்ட சான்றோராயினும் பிறருடைய மனைவி தனித்திருக்கும்பொழுது அவ்விடத்தில செல்லுதல் கூடாது என்ற உயரிய சமூக மதிப்பை எடுத்துக் கூறுவதாய் அமைந்துள்ளது எனலாம். மேலும் பெண்களுக்கு மட்டுமே கற்பு தேவை எனக் கூறிக்கொண்டு ஆடவர்கள் மனம்போனபோக்கில் நடத்தல் கூடாது என்ற எண்ணமும் வலியுறுத்தப்பெறுகின்றது.

### 7. 4. 3. 2. பெண்டிர்கடன்

காரைக்காலம்மையார் தன் கணவன் கொடுத்தனுப்பிய மாங்கனிகளில் ஒன்றினைத் தன் இல்லத்திற்கு வந்த இறையடியார் பசியாறும்பொருட்டு அமுதுடன் கொடுத்து மகிழ்கின்றார். உணவின் பொருட்டு வீட்டிற்கு வந்த அவர் கணவனுக்கு ஒரு மாங்கனியை வைக்கின்றார். அவன் அக்கனியை உண்டுவிட்டு அதன் இன்சுவையைக் கண்டு இன்னுமுள மற்றொரு மாங்கனியைக் கொண்டு வருமாறு கூறுகின்றான். செய்வதறியாத அம்மையார் சிவபெருமானை இறைஞ்சி அவனருளால் ஒரு மாங்கனியைப் பெற்றுக் கணவனுக்குப் படைக்கின்றார். அவன் அக்கனி முன்னயதைவிடவும் அதிக சுவை நிறைந்ததாக இருத்தல் கண்டு இக்கனி ஏது என வினவுகின்றான். அவ்வமயம் அம்மையார் கைவரு கற்புடை நெறியால் கணவன் உரை காவாமை மெய்வழி என்று எண்ணி இக்கனி இறையருளால் கிட்டியது என உண்மையைக் கூறுகின்றார்.[163] கற்புடைய பெண்கள் கணவனிடம் உண்மையை கூறவேண்டும் என்ற சமூக மதிப்பினையே இது காட்டுகின்றது. மேலும் ஒரு பெண் திருமணத்திற்கு முன்பு பிற ஆடவர்களை மனத்தால் தீண்டுதல் கூடாது என்பதும், கணவனுடன் ஒத்த கருத்துகொண்டு இல்லறம் நடத்தவேண்டும் என்பதும், கணவன் மிகப்புலர்தல் காணின் அதற்குரிய தீர்வுகளைத் தேடுதல் வேண்டும் என்பதும் சமுதாயத்தில் மகளிர் மேற்கொள்ளவேண்டியனவாகக் கருதப்பெற்றிருந்தன.

### 7. 4. 3. 3. குழந்தைகள் கடன்

அப்பர் பெருமானுக்குத் திருவமுது படைப்பதற்காக அப்பூதியடிகள் வாழை இலை அரிந்துகொண்டுவருமாறு தன் மகனிடம் கூறுகின்றார். அவன் நல்ல தாய், தந்தை ஏவ இது செய்யப்பெற்றேன் என எண்ணி மனம் மகிழ்வடையச் செல்கின்றான்.[164] திருமாலைக் குழந்தையாகக் கற்பித்து மகிழும் பெரியாழ்வார் இவனைப் பெற்ற வயிறுடையாள் என்ன நோன்பு நோற்றாள் கொல் என்று

உலகோர் கூறும் வார்த்தையை எய்துவித்த இருடிகேசனே என்று மகிழ்ந்தும்,[165] தாய்ச் சொல்லைக் கேட்பது தன்மம் கண்டாய் என்று அறிவுறுத்தியும்[166] இவ்வாறு பெற்றோர்களைப் போற்றாதவர்கள் பெற்ற தாயின் வயிற்றைப் பெருநோய் செய்வான் பிறந்தவர்களே என்று இடித்துரைத்தும்[167] சமுதாயத்தில் குழந்தைகள் பெற்றோர்களுக்கு அடங்கி நடந்து புகழ் ஏற்படும் வண்ணம் விளங்கவேண்டும் என்ற கருத்தை வெளிப்படுத்துகின்றார்.

### 7. 4. 3. 4. இல்லற வாழ்க்கை

ஆடவர், பெண்டிர், குழந்தைகள் ஆகியோரின் கடமைகளைக் கூறிய பக்தி இலக்கியம் இவர்களை உள்ளடக்கிய இல்லற வாழ்க்கை சிறப்புற அமைவதற்கு உரிய வழியையும் உரைக்கின்றது. திருநீலகண்ட நாயனாரும் அவரது மனைவியாரும் மெய்யுறு புணர்ச்சியின்றி, அயலார் அறியாமல் வாழ்ந்தமை குறிக்கப்பெறுகின்றது.[168] இதனால் கணவன், மனைவி இருவரும் குடும்பத்தில் நடக்கும் சிறுசிறு பூசல்களைக்கூட மற்றவர் அறியாத வண்ணம் காத்து இல்லறத்தை நடத்திச்செல்லவேண்டும் என்ற கருத்து அறிவுறுத்தப்பெறுகின்றது.

### 7. 4. 4. அரசியல் தொடர்பான மதிப்புக்கள்

சமுதாயம் சிறப்புடன் திகழ நாடாளும் மன்னனும், அவனைச் சார்ந்து வாழும் குடிமக்களும் தத்தம் கடமைகளைச் செவ்வனே நிறைவேற்ற வேண்டும் என்ற நோக்கத்தில் அரசர் கடமைகளையும், குடிமக்கள் கடமைகளையும் எடுத்தோதும் நிலையைக் காண்கின்றோம். திருமூலர் நாடும் சமுதாயமும் நலமுற அரசாட்சி முறை எவ்வாறு அமையவேண்டும் என விளக்குகின்றார். மன்னர் அறமுறைப்படி ஒழுகவேண்டும். தவநெறியினின்றும் பிறழாமல் மக்களைக் காக்க வேண்டும். மெய்யடியார் போல நடித்து உலகை ஏமாற்றித் திரிவோரைத் தண்டிக்க வேண்டும். திருவேடத்தார்களையும் அறவோர்களையும், பெண்களையும், பசுக்களையும் காக்கவேண்டும். சமயக் கொள்கையில் அவரவர் மேற்கொண்ட வரம்பின்வழி நின்று ஒழுகவேண்டும். அவ்வாறு நில்லாதவரை மன்னன் தன் அதிகாரத்தைப் பயன்படுத்தி நிலைநிறுத்தவேண்டும். உலக மக்கள் நலமுடன் வாழ வழிவகுக்கவேண்டும். கள்ளுண்டு மதிமயங்கிச் சமுதாயத்திற்கு ஊறுவிளைவிப்போரைத் தண்டிக்கவேண்டும் என விளக்குகின்றார்.[169] எல்லா உயிர்களையும் தன்னுயிர்போல மதித்துப் போற்றவேண்டும் என்றும்,[170] நடுநிலை தவறாமல் நீதி வழங்க வேண்டும் என்றும்,[171] தன்கீழ்ப் பணியாற்றுபவர்கள் வறுமை நீங்கி நல்வாழ்வு வாழ மானியங்கள் வகுத்துக் கொடுத்தல் வேண்டும் என்றும்[172] அறிவுரைகள் வழங்கப்பெறுகின்றன. இவ்வாறு மன்னன் சிறப்புற ஆட்சி நடத்துவதற்கு உறுதுணையாகக் குடிமக்களும் நல்லொழுக்கமுடன் திகழவேண்டும் என்று குடிமக்களுக்கும் அறிவுரை வழங்கப்பெறுகின்றது.[173]

### 7. 4. 5. சமயம் தொடர்பான மதிப்புக்கள்

உலகில் பிரியாத பெருநெறி என்பது இறவாத அன்பு நெறியாகிய சிவநெறியேயாகும்.[174] இறைவனை வணங்காதவர் மாலதுவாகி மயக்கம் எய்துவர்[175] உயிர்களுக்கு உற்றதொரு கடமை பரம்பொருளிடத்து அன்பு செலுத்துதலே.[176] கடுந் தவம் செய்தலினின்றும் இறைவனைச் சிந்தையுள் வைத்தலே சாலச் சிறந்தது.[177] இறையன்பு செலுத்துவதற்கு எதுவும் தடையாகாது,[178] ஊன் நோக்கும் இன்பம் வேண்டி உழலாது வான் நோக்கும் வழியை நினைக்கவேண்டும்,[179] ஒருவனே தேவன்,[180] பிற உயிர்களுக்குத் தீமை செய்யாதிருத்தலே சிறந்த தவம்,[181] போகங்களைத் துறந்து பிச்சையேற்ற உண்டியை நுகர்பவரும்[181] ஓட்டையும் செம்பொன்னையும் ஒக்க நோக்குபவரும்[182] மட்டுமே உண்மையான துறவிகள்[183] என்று இறையன்பு, சமயக்காழ்ப்பின்மை, உண்மை ஒழுக்கம் என்பவனவற்றை வலியுறுத்தும் சமயம் தொடர்பான கருத்துக்கள் இடம்பெறுமாற்றை அறிகின்றோம்.

### 7. 5. முடிபுகள்

1. சமுதாயத்தில் மக்கள் வாழ்வாங்கு வாழ்வதற்கு மேற்கொள்ளத்தக்கவை யாவை. மேற்கொள்ளத்தகாதவை யாவை என்பன பற்றிய கருத்துக்களையே சமூக மதிப்புக்கள் என்று கூறலாம்.

2. சமூக மதிப்புக்கள் ஒரு சமுதாயத்தில் காணப்பெறும் பண்பாட்டின் அடிப்படைக் கூறுகளில் ஒன்றாகக் கருதப்பெறுகின்றது.

3. சமுதாயம் சிறப்புடன் செயல்படவும் சமுதாய ஒழுங்குகள் காக்கப்படவும் சமூக மதிப்புக்கள் பெரிதும் தேவைப்படுகின்றன.

4. சமயத்தின் சமூகச் செயல்பாடுகளுள் ஒன்றாக அது சமூகத்தில் நிலவும் மதிப்புக்களைக் காப்பதில் தீவிரமாகக் கவனம் செலுத்துவதைக் கூறலாம்.

5. பக்தி இலக்கியம் மக்கள் மனத்தில் இறைப்பற்றை ஊட்டுவதுடன் மக்கள் உயரிய வாழ்க்கை வாழ்வதற்குரிய அரிய பல கருத்துக்களையும் வெளிப்படுத்துகின்றது.

6. ஆணவம் கொள்ளுதல், இரத்தல், பிற உயிர்களுக்குத் துன்பம் செய்தல், உருவு கண்டு எள்ளுதல், கள்ளுண்டல், உள்ளத்தில் வஞ்சனை கொள்ளுதல், காமம் கொள்ளுதல், பேராசை கொள்ளுதல், பொச்சாத்தல், பொய்ம்மை மகளிரை முயங்குதல், எளியவரிடம் கடும்வட்டி வாங்குதல், கடமை தவறுதல் போன்ற செயல்கள் மக்களால் மேற்கொள்ளத் தகாதவை என வலியுறுத்தப்பெறுகின்றன.

7. கொடை கொடுத்தல், அன்புசெலுத்துதல், இனியவை கூறல், உழைத்து வாழ்தல், புலன்களை அடக்குதல், செய்ந்நன்றியறிதல், சொன்ன சொல்லைக் காத்தல், பகைவருக்கு அருளுதல், மனமாசு நீக்குதல், பணிவு கொள்ளல், பிழை

பொறுத்தல், தன்னலம் மறுத்தல், பிறவியை மதித்தல்,பெரியாரைத் துணைக்கோடல், பொறையுடைமை, மனத்திட்பத்தைக் கடைப்பிடித்தல் போன்றவை மக்கள் அனைவராலும் கடைப்பிடிக்க வேண்டியவை என அறிவுரைக்கப்பெறுகின்றமையை உணர்கிறோம்.

8. சமுதாயத்தில் காணப்பெறும் நிறுவனங்களுள் ஒன்றாகிய குடும்பம் சிறப்புறத் திகழ்வதற்குக் குடும்ப உறுப்பினர்களாகிய கணவன், மனைவி, குழந்தைகள் ஆகியோர் பின்பற்ற வேண்டிய நியதிகள் விளக்கப்பெறுகின்றன.

9. உண்மை அன்பு செலுத்துதல், சமயக் காழ்ப்பின்மை, உண்மைத் துறவிகளின் பண்புகள் போன்ற சமயத் தொடர்பான மதிப்புக்களும் எடுத்துரைக்கப்பெறுகின்றன.

10. சமுதாயம் உயர்வடைய நாடாளும் மன்னர்களும், குடிமக்களும் பின்பற்ற வேண்டிய நியதிகளும் புலப்படுத்தப்பெறுகின்றன.

11. இவ்வாறு பக்தி இலக்கியம் இறைப்பற்றை உணர்த்தும் சமய இலக்கியமாக மட்டும் திகழாது, சமுதாயமும், சமுதாய உறுப்பினர்களும் வையகம் போற்றும் வகையில் வாழ வழிவகுக்கும் சமூக மதிப்புக்கள் பலவற்றை எடுத்துக்கூறும் வகையிலும் விளங்குகின்றது.

மேற்கோள் சான்றுகள்

1. Donald Light. Jr - Suzzanne Keller, **Sociology**. P 83

2 Melvin De Flever, **Sociology, Human Society,** P 114

3. Theodore Caplow, **Sociology**. P 13

4. David Dreseller, William M. Wills, Jr. **Sociology, The Study of Human Interaction,** P.52

5 Bernard Philliphs, **Sociology,** PP. 38 & 52

6. R. Serge Danisoff, Ralph Wilbrman, **Introduction to Sociology,** P 38

7 George Ritzer, **Sociology,** P.451

8. குன்றக்குடி அடிகள், ''சமய இலக்கியம்'', ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டுக் கருத்தரங்கம், தொகுதி 1 ப. 326.

9. க. வெள்ளைவாரணனார், ''சங்க இலக்கியத்தில் சமய நோக்கு'', சங்க இலக்கியக் கருத்தரங்கம், ப.3.

10. 2:4:1:2:1 - 2

11. கணம்புல்லர் :5:1- 2

12. திருமந்திரம்.79:1- 2

13. திருமந்திரம். 241:1- 2

14. திருமந்திரம்:242

15. திருமந்திரம். 535

16. திருமங்கை. பெரிய: 1:6:6:3, 1:9:1

17. திருமந்திரம்: 240

18. திருமந்திரம் 243

19. திருமந்திரம் 326

20. சண்டேசுவரர்:25:3

21. திருமூல நாயனார். 12:3 - 4

22. பெரியாழ். திருமொழி. 1:5:7:1, 1:5:8:1

23. திருமந்திரம்:241:2, 311:3 - 4, 312:3 - 4, 313:1, 317:1 - 2

24. திருமங்கை.பெரிய. 1:6:3:1 - 3

25. 1:2:69:3:2

26. 4:2:34: திருநேரிசை.1:4

27. திருமந்திரம். 1656:1

28. நம்மாழ். திருவாய்.2:10:10:1

29. அப்பூதி. 2:1

30. 1:2:95:1:2

31 4:2:52: திருநேரிசை. 3.4.5. பாடல்கள்

32. 5:2:7: திருக்குறுந்தொகை. 8:1 - 2

33. திருமங்கை.பெரிய. 10:2:3:3

34. 4.2:34: திருநேரிசை.1:1: - 2

35. பேய். 3 ஆம் திருவந்தாதி 14

36. திருமந்திரம்:2396

37. திருவா. 5:27:1 - 2, 6:40:1 - 2, 24:5:1 - 2

38. 4:2:11: திருநேரிசை. 7:1, 4:2:45, திருநேரிசை.5:1 - 3 4:5:3: திருநேரிசை. 7:1 - 2

39. திருவா.5:19:1 - 2

40. திருவா. 6:5:1 - 2

41. திருமந்திரம். 341:2

42. 4:9: மறுமாற்றுத்திருத் தாண்டகம். 3:1

43. திருமங்கை.பெரிய.10:2:2:1.

44. திருமந்திரம்.372

45. 4:9: தனி - திருநேரிசை. 6:2

46. திருமந்திரம். 2570:3 - 4

47. குலசேகரர். பெருமாள்திருமொழி. 5:7:1

48. திருமந்திரம். 247 - 249

49. 1:2:95:4:1, 4:9: இலிங்கபுராணத் திருக்குறுந்தொகை. 4:2 5:6:8. திருக்குறுந்தொகை 2:1 - 2, குலசேகரர் பெருமாள் திருமொழி 3:1:1.

50 5:2:25: திருக்குறுந்தொகை.2:1

51. 7:1:1:2:9:1 - 2

52. தொண்டரடி. திருமாலை. 33:2

53. 4:6:7. திருநேரிசை.1:3

54. 5:6:1: திருக்குறுந்தொகை. 9:1 - 2

55. 6:8:2: போற்றித்திருத்தாண்டகம். 2:3

56. 4:1:1: திருச்சிற்றம்பலம். 7:1 - 2, 4:6:7: திருநேரிசை.7:2

57. அப்பூதி.34:1 - 3

58. திருமந்திரம். 117:3 - 4

59. 2:1:14:7:2:3 - 4

60. திருமந்திரம. 115:4

61. திருமந்திரம். 120, 121, 125

62. திருமந்திரம்.223

63. திருமந்திரம். 223

64. தொண்டரடி, திருமாலை.31:2

65. மெய்ப்பொருள். 4

66. மிழலைக் குறும்பர். 3:1:2

67. அரிவாட்டாயர். 8

68. மூர்க்க, 5

69. இயற்பகையார். 2:3 - 4

70. 2:1:14:14:8:3

71. 4:1:27: திருச்சிற்றம்பலம். 3:3

72. 4:1:3. திருச்சிற்றம்பலம். 3:3

73. 4:1:3. திருவிருத்தம். 1:3 - 4

74. 4:2:30. திருநேரிசை. 1:1:2

75. 5:6:1. திருத்தாண்டகம். 3:1 - 2

76. 6:1:7. திருச்சிற்றம்பலம்:9:1 - 2

77. 6:6:3: திருத்தாண்டகம்.1:1

78. குலச்சிறை. 6

79. அதிபத்தர். 17

80. சிறுத்தொண்டர். 63

81. சண்டேசுவரர். 16

82. நம்மாழ். திருவாய்:5:2:1

83. பெரியாழ். திருவாய்:2:9:8:2

84. சிறத்தொண்டர். 8

85. எறிபத்தர். 42:1 - 2

86. 4:3:3. திருநேரிசை. 7:1 - 3

87. திருமங்கை.பெரிய. 1:9:3 - 2

88. திருமந்திரம். 1628:1 - 2

89. நம்மாழ். திருவாய். 3:9:6:1

90. நம்மாழ். திருவாய். 7:9:1:3 - 4

91. நம்மாழ். திருவாய். 8:2:10:1 - 2

92. 4:9: தனி, திருத்தாண்டகம். 7

93. திருக்குறிப்பு. 3

94. மெய்ப்பொருள். 17 - 19

95. 4:1:1, திருச்சிற்றம்பலம்:9:1 - 2, 4:3:1: திருநேரிசை,6:2 4:5:3: திருநேரிசை, 9:3. திருமங்கை.பெரிய. 1:6:1 தொண்டரடி, திருமாலை, 30:1, நம்மாழ்,திருவாய். 1:3:8:2, குலசேகரர்.பெருமாள் திருமொழி.1:7:1, பெரியாழ்.திருமொழி. 4:4:2:1 - 2

96.. 2:1:14:11:7:1

97. 4:2:66. திருநேரிசை. 8:4

98. 4:4:1: காந்தாரம். 1:1

99. 4:8:1: திருநேரிசை. 3:1 - 2

100. 6:2:52. திருத்தாண்டகம். 10:2

101. 6:8:2. போற்றித்திருத்தாண்டகம்.5:2

102. திருவா. 2:109

103. திருமந்திரம். 178:1 - 2

104. தொண்டரடி, திருமாலை. 22:3

105. 3:1:26:10:2

106. திருமந்திரம். 117:3 - 4

107. திருமந்திரம். 2554:1 - 2

108. திருமந்திரம்.2079:2 - 3

109. நம்மாழ். திருவாய். 5:2:7:3

110. மானக்கஞ்சாறர். 8:1

111. திருஞான. 389

112. திருஞான. 405

113. திருநாவுக்.182.

114. திருநாவுக். 394

115. 2:4:6:5:1:1:1 - 2, 6:2:52. திருத்தாண்டகம். 5:2, திருவா.5:85:2 - 6:50:1 - 2, கருவூர்த்தேவர், திருவிசைப்பா. 2:4:1 - 2, வேணாட்டிகள் 1:1:1:

116. 6:2:27: திருத்தாண்டகம். 7:2 - 3

117. 6:2:50: திருத்தாண்டகம். 2:2

118. திருவா. 5:63:1

119. 6:6:3. திருத்தாண்டகம். 5:3 - 4

120. திருவா. 5:80:1, 5:96:2 - 3

121. பொய்கை. முதல் திருவந்தாதி. 35:1 - 2, 441:1

122. பெரியாழ். திருவாய். 5:1:2:2

123. திருமங்கை. பெரிய. 1:9:7:2

124. 4:1:1: திருத்தாண்டகம். 5:1

125. 4:9. தனி. திருத்தாண்டகம். 9:2

126. திருமந்திரம்.527:4

127. நம்மாழ்.திருவாய். 2:3:10:4

128. பெரியாழ்.திருவாய்.4:10:1:1

129. திருமங்கை. பெரிய.7:4:4:4

130. தொண்டரடி, திருமாலை.16:1

131. திருமந்திரம். 522, 524

132. திருமங்கை.பெரிய.6:2:1:1.

133. திருநாவுக். 336

134. நம்மாழ், திருவாய். 2:9:5

135. திருமழிசை. 67.

136. நம்மாழ். திருவாய். 3:9:1

137. 4:9: தனி. திருக்குறுந்தொகை. 1:2:2:1 - 2

138. 4:1. திருச்சிற்றம்பலம். 1:3 - 4

139. 1:1:12:1:9:4. நம்மாழ், திருவாய். 6:4:1:1

140. 6:1:32. திருத்தாண்டகம். 9:2

141. திருஞா.ன. 1038

142. 4:9. தனி, திருத்தாண்டகம். 9:3

144. திருமங்கை. பெரிய. 1:S:9:1

145. திருநாவுக். 397:1 - 2

146. குலசேகரர். பெருமாள் திருமொழி. 2:6.3

147. திருமந்திரம். 537

148. ஆண்டாள், திருப்பாவை 25:1 - 4

149. திருயங்கை. திருக்குறு[illegible] 17:2

150. திருமந்திரம். 2031:1 - 2

151. திருவா. 51:9:1

152. திருநாளை.16:2

153. திருமந்திரம். 1627:1 - 2

154 மதுரகவி,கண்ணிநுண் சிறுதாம்பு.10:1- 2

155. நம்மாழ், திருவாய். 3.3 1 - 2

156 நம்மாழ்.திருவாய்.2:10 6:1

157 திருநாவுக். 424

158 திருமங்கை.பெரிய. 4:3:4

159. திருஞான. 465. திருமந்திரம். 1655

160. திருமந்திரம். 983:1

161. திருநீலகண்டர். 7:4

162. சிறுத்தொண்டர். 38 - 41

163. காரைக்கால். 27 - 28

164. அப்பூதி. 24:1

165. பெரியாழ். திருவாய். 2.2:6:3 - 4

166. பெரியாழ்.திருவாய். 2:9:3-4

167. பெரியாழ். திருவாய்.4:4:2:4

168. திருநீலகண்டர். 8:4

169. திருமந்திரம். 100 - 104

170. திருநகரச். 14:1 - 2

171. திருஞான. 784 - 749

172. கண்ணப்பர்.49

173. திருநாவுக். 2:2

174. திருமந்திரம். 176:1

175. திருவா. 2:133

176. புருடோத்தம நம்பி திருவிசைப்பா. 1:1:4

77. திருமங்கை.பெரிய. 3:2:2

78. குலசசிறை. 5

79. 5:1:5: திருச்சிற்றம்பலம். 8:1 - 2

80. திருமந்திரம். 2086:1

81. திருமந்திரம்.539

82. திருஞான.469:3 - 4

83. திருக்கூட்டச்சிறப்பு. 8:2

# இயல் - 8

## குடும்பம்

சமூகவியலாளர்கள் குடும்பம் என்ற சமூக நிறுவனம் பற்றித் தனிக் கவனம் செலுத்துகின்றனர். *குடும்பம் என்ற நிறுவனம் உலகச் சமுதாயங்கள்* அனைத்திலும் ஒரே அமைப்புடையதாகக் காணப்பெறவில்லையென்றாலும் எல்லாச் சமூகங்களிலும் காணப்பெறும் சிறப்புடையதாகத் திகழ்கின்றது. குடும்பம் என்பது இரத்த உறவுகளின் வழியாகவோ, திருமணம் மூலமாகவோ தொடர்புடைய உறுப்பினர்களை உள்ளடக்கிய சமூகக் குழு என்று பொதுவாகக் கருதப்பெறுகிறது.[1] எனவே, சமுதாய உறுப்பினர்கள் தாம் பிறந்து, வளர்ந்து, திருமணம் செய்து, குழந்தைகள் பெற்றுக்கொள்ளும் குழுவினர் என்ற நிலையில் குடும்பம் என்ற நிறுவனத்தைச் சார்ந்தவர்கள் ஆகின்றனர். இக்குடும்பம் என்பது தரும சிந்தனைகளையும், பண்பாட்டையும் வளர்க்கும் மூலாதாரமான அமைப்பு (source form) என உளவியலாளர்கள் கருதுகின்றனர்.[2] குடும்பம் என்பதன் விளக்கத்தையும், அதன் வகைகளையும், செயல்பாடுகளையும், பக்தி இலக்கியம் காட்டும் குடும்ப அமைப்பையும் இனிக் காணலாம்.

### 8. 1. குடும்பம் – விளக்கம்

பர்கல் மற்றும் லோக் என்போர் குடும்பம் என்பது திருமணக் கட்டுக்களாலும் (family ties) இரத்த உறவுகளினாலும் இணைக்கப்பெற்ற மக்கட் கூட்டம் என்றும், பொதுவான பண்பாடுகளைத் தம் குழுவினரிடையே உருவாக்கிப் பாதுகாத்துவரும் அமைப்பு என்றும் கருதுகின்றனர்.[3] குடும்ப அமைப்பில் சமுதாயத்தில் வாழ்கின்ற மக்கட்கூட்டத்தினர் தாய் - தந்தை, கணவன் - *மனைவி, மகன் - மகள்.* சகோதரன் - சகோதரி என்று பல்வேறு உறவுகளால் தொடர்புறுத்தப்பெற்று ஒரே குடும்பத்தைச் சார்ந்தவர்களாக கருதப்பெறுகின்றனர் என்று அவர்கள் மேலும் குடும்பம் என்ற நிறுவனம் குறித்து விளக்கம் தருகின்றனர். அவர்கள் குடும்ப நிறுவனத்தைக் குறித்துப் பல்வேறு ஆய்வுகளை மேற்கொண்டு பழங்காலச் சமுதாயத்தில் காணப்பெற்ற பெரிய ஆண் ஆதிக்கக் குடும்பம், இடைக்காலச் சமுதாயத்தில் காணப்பெற்ற சிறிய ஆண் ஆதிக்கக் குடும்பம், தற்காலத்தில் காணப்பெறும் குடும்பம் என்று குடும்பத்தின் முக்கியமான வரலாற்று நிலைகளைக் குறிப்பிடுகின்றனர்.[4] பெர்னார்டு பிலிப்ஸ், என்பவர் இரத்த உறவு, திருமண உறவு, தத்தெடுத்தல் (adoption) போன்றனவற்றால் தொடர்புடைய மக்களால் உருவாக்கப்பெற்ற சமூக அமைப்பு (social structure) எனக் குடும்பம் என்ற நிறுவனத்தை விளக்குகின்றார்.[5] இவை தவிரக் கணவன், மனைவி. அவர்களுடைய குழந்தைகள், உறவினர்கள், நண்பர்கள் மற்றும்

முழுச்சமூக இனம் ஆகியவர்களின் உரிமைகளையும் பொறுப்புக்களையும் விளக்கும் ஒழுங்குகள், வழக்கங்கள் ஆகியனவற்றின் கலவையே குடும்பம் என்றும்,[6] சமுதாயத்தில் புதிய உறுப்பினர்களை உருவாக்கவும், பாதுகாக்கவும் செய்கின்ற பொறுப்புடைய குழுவே குடும்பம் என்றும்,[7] பல்வேறு விளக்கங்கள் அளிக்கப்பெறுகின்றன. இக்குடும்பம் என்ற நிறுவனம் உலகளாவிய சமூக நிறுவனமாகத் திகழ்கின்றது.

## 8. 2. குடும்பத்தின் வகைகள்

சமூகவியலாளர்கள் குடும்பத்தில் காணப்பெறும் உறுப்பினர்களின் எண்ணிக்கை, குடும்பத்தில் அதிகாரம் செலுத்தும் பிரிவினர், வாழும் இடம், திருமண வகைகள் போன்றனவற்றின் அடிப்படையில் குடும்பம் என்ற நிறுவனத்தை வகைப்படுத்திக் காணுமாற்றைப் பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் இடம்பெற்ற குடும்ப நிறுவனத்துடன் பொருத்திக் காணுதல் தகும்.

### 8. 2. 1. எண்ணிக்கையின் அடிப்படையில்

குடும்பத்தில் இடம்பெறுகின்ற உறுப்பினர்களின் எண்ணிகையை அடிப்படையாகக் கொண்டு சிறு குடும்பம் (Nuclear family) என்றும், பரந்துபட்ட குடும்பம் (Extended family) என்றும் இருநிலைகளில் பாகுபடுத்திக் காண்பர். நம்மில் பெரும்பாலோர் சிறு குடும்ப வகையைச் சார்ந்தவர்களாகவே காணப்பெறுகின்றனர் எனப் பெரும்பாலான சமூகவியலாளர்களும் கருதுகின்றனர்.[8] கணவன், மனைவி, அவர்களுடைய குழந்தைகள் ஆகியவர்களை உள்ளடக்கிய குடும்பம் சிறுகுடும்பம் என்று விளக்கம் அளிக்கப்பெறுகின்றது. சில நேரங்களில் முற்கூறியவர்களுடன் வேறுசில உறவினர்களும் சிறுகுடும்பத்தில் இடம் பெறுவர் என்றும் கருதப் பெறுகிறது.[9] சிறு குடும்பத்தின் தன்மைகளுள் ஒன்றாக ஆண் ஆதிக்கத்தின் மேலோங்கிய நிலையைக் குறிப்பிடுவர். இச் சிறுகுடும்பத்தில் பெண்களின் ஆதிக்கம் மேலோங்கியிருக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. தியோடார்கேப்லோ என்பவர் பெரும்பாலான மனித இனங்கள் தம் இளமைப்பருவக் காலத்தைத் தாய், தந்தை ஆகியோரின் முன்னிலையிலேயே கழிக்கின்றனர் என்றும், இதைச் சிறுகுடும்பம் என்று கருதலாம் என்றும் விளக்குகின்றார்.[10] எல்லாச் சமூகங்களிலும் காணப்பெறும் சிறு குடும்பத்தில் பால் வேறுபாட்டின் அடிப்படையில் உழைப்புப் பிரிவினை காணப்பெறும். சில குறிப்பிட்ட வேலைகள் ஆடவர்களாலும், குறிப்பிட்ட வேறுசில வேலைகள் பெண்களாலும், ஏனையவை ஆடவர்களும், பெண்களும் சேர்ந்து கூட்டாகவும் நிறைவேற்றப்பெறும்.

பரந்துபட்ட குடும்பம் என்பது இரண்டு அல்லது இரண்டிற்கு மேற்பட்ட சிறு குடும்பங்களைத் தன்னகத்தே கொண்டு விளங்குவது ஆகும். மூன்று அல்லது மூன்றுக்கு மேற்பட்ட தலைமுறையினர் ஒன்று சேர்ந்து வாழ்வர். சிறுகுடும்ப வகையுள் காணப்பெறும் உறுப்பினர்களுடன் மற்ற உறவினர்களும் இணைந்து பரந்துபட்ட குடும்பத்தில் காணப்பெறுவர். தாய், தந்தை. மனைவி,

கணவன், மகள், மகன், மகனின் மனைவி, அவர்களுடைய குழந்தைகள் என்றிவ்வாறு பல உறுப்பினர்கள் பரந்துபட்ட குடும்பத்தில் இடம்பெறுவர். இப்பரந்துபட்ட குடும்ப நிறுவனமானது சமுதாயத்தை அல்லது சமுதாயத்தின் பகுதியைக் (part of the society) காப்பத்தில் துணைநிற்கும். குடும்ப உறுப்பினர்களுக்கு ஏதேனும் சிக்கல் வந்துற்றபோது குடும்ப உறுப்பினர்களுக்கு தோளோடு தோள் கொடுத்து உதவுதல் இதன் இன்றியமையாப் பண்பு ஆகும். மனிதர்கள் சிறப்புடன் வாழ்க்கை நடத்தப் பரந்துபட்ட குடும்ப அமைப்பு தேவை எனச் சமூகவியலாளர்கள் கருதுகின்றனர்.[11] சமூகவியலாளர்களும், சமூக வரலாற்றறிஞர்களும் தொழில்மயமான சமுதாயத்திற்கு முற்பட்ட காலத்தில் (pre-industrial soceity) தற்காலத்திலுள்ள தொழில்மயமான சமுதாயத்தில் காணப்பெறும் குடும்பங்களைவிடப் பல பகுதிகளையும், பல்வேறு உறுப்பினர்களையும் உள்ளடக்கிய குடும்பங்களே காணப்பெற்றன எனக் குறிப்பிடுகின்றனர்.[12] இதனால், சமுதாயத்தின் வளர்ச்சிப்போக்கில் முதன்முதலில் பரந்துபட்ட குடும்பங்களே காணப்பெற்றுக் காலப்போக்கில் சிறுசிறு குடும்பங்களாக மாறிவிட்டமை புலனாகின்றது.

பக்தி இலக்கியத்தில் - குறிப்பாக அடியார்களின் வாழ்க்கை வரலாறு கூறும் பகுதியுள் - அக்காலச் சமுதாயத்தில் நிலவிய குடும்ப அமைப்பைப் பற்றி அறியமுடிகின்றது. கணவன், மனைவி, குழந்தைகள் எனச் சிறுகுடும்பத்திற்கேற்ற உறுப்பினர்களே அக்காலச் சமுதாயத்தில் இடம்பெற்ற குடும்பத்தில் காணப்பெற்றனர் எனக் கருத முடிகின்றது. சிறு குடும்பத்தின் தன்மையை ஒத்த நிலையில் ஆடவர்களே ஆதிக்கத்தில் மேலோங்கியவர்களாகக் காணப்பெறுகின்றனர். பெண்கள் திருமணத்திற்கு முன்பு தந்தையின் வழியிலும், திருமணத்திற்குப் பின்பு கணவனைச் சார்பாகக் கொண்டும் வாழ்ந்துள்ளமையைப் பக்தி இலக்கியம் மூலம் அறிய முடிகின்றது. பால்வேறுபாட்டின் அடிப்படையில் காணப்பெற்ற உழைப்புப் பிரிவினையையும் காண்கின்றோம். ஆடவர்கள் வீட்டுக்கு வெளியேயுள்ள வேலைகளையும், குடும்பத்தை நடத்திச் செல்லும் கடமையையும் மேற்கொண்டுள்ளனர். பெண்கள் வீட்டு வேலைகள் செய்தல், உணவு, சமைத்தல், குழந்தைகளை வளர்த்தல் போன்ற வேலைகளை மேற்கொண்டுள்ளனர். சமய நடவடிக்கைகளில் ஆண், பெண் ஆகிய இருபாலாரும் இணைந்து ஈடுபட்டமையையும் அறிகின்றோம். இவற்றால் அக்காலச் சமுதாயத்தில் சிறுகுடும்ப அமைப்பு காணப்பெற்றது என எண்ணமுடிகின்றது.

சமுதாயத்தில் பரந்துபட்ட குடும்பமும் காணப்பெற்றது எனக் கருதுவதற்குரிய குறிப்புக்களும் உள்ளன. உலகியல் பற்றுக்களை அறவே விட்டுவிட்டு இறைவனிடத்து உண்மையான பற்றைக் கொண்டு உயர்நிலையை அடைய முயலவேண்டும் என அறிவுறுத்துமிடத்துத தந்தை தாய், மனைவி, மக்கள், தன்னுடன் தோன்றினார், சுற்றத்தார் ஆகியோர்பால் கொண்டுள்ள பற்றினைத் துறத்தல்வேண்டும் என வலியுறுத்தப் பெறுதல், அக்காலச் சமுதாயத்தில் காணப்பட்ட பரந்துபட்ட குடும்ப அமைப்பைப் பிரதிபலிப்பதாகத் தோன்றுகின்றது.[13] பரந்துபட்ட குடும்ப அமைப்பின் தன்மைகளுக்கேற்பக் குடும்ப

உறுப்பினர்களுக்கு ஏதேனும் சிக்கல் அல்லது குடும்பத்தில் ஏதேனும் மகிழ்ச்சி ஏற்படும்போது உறுப்பினர்கள் அனைவரும் ஒன்றுசேர்ந்து செயல்பட்டுள்ளமையையும் காண்கின்றோம். அடியார்களின் வரலாறுகளில் இடம்பெறும் குழந்தைச் சடங்குகளின் போதும் திருமண நிகழ்ச்சிகளின்போதும் உற்றார் உறவினர்கள் அனைவரும் மகிழ்ச்சியுடன் பங்குகொண்டு சிறப்பிக்கின்றனர். திருமணம் நிகழ்த்துதற்குக் குடும்பத்தில் உள்ள பெரியோர்கள் முன்வந்து துணை நிற்கின்றனர். இதனைப் போன்று சிக்கல்கள் வந்தபோதும் கைகொடுத்துள்ளனர். காரைக்கால் அம்மையாரின் இறைப்பற்றைக் கண்டு தெய்வத் தொழுகுலம் என்று எண்ணிய அவர் கணவன் கடல்கடந்துசென்று, பொருளீட்டி மீண்டும் வந்து, வேறொரு பெண்ணை மணம் செய்து இல்லறம் நடத்திவருகின்றான் என்பதை அறிந்ததும் உறவினர்கள் காரைக்காலம்மையாரை உடன் அழைத்துக்கொண்டு அவர் கணவனைக் காணச்செல்கின்றனர்.[14] குங்கிலியக்கலயநாயனார் வறுமை நிலையுற்று வாடிய நேரத்தில் அவர் உறவினர்களும் அற்ற குளத்து அறுநீர்ப் பறவைபோன்றல்லாது உடன் வாடுகின்றனர்.[15] இயற்பகை நாயனார் அடியாரின் விருப்பத்திற்கிணங்கத் தன் மனைவியைத் தானமாகக் கொடுத்ததை அறிந்த சுற்றத்தார்கள் அனைவரும் மனம் கொதிப்புற்றுத் தம் குடும்பத்திற்கு நிகழப்போகும் மானக்குறையைத் தடுக்க முற்படுகின்றனர். இயற்பகையார் தன் மனைவியைத் தானம் கொடுத்ததுடன் அமையாது உறவினரால் அடியாருக்குத் துன்பம் ஏதும் நிகழாவண்ணம் காத்துச் செல்கின்றமையைக் கண்ணுற்ற உற்றார் உறவினர்கள் இவனுக்குப் பித்தம் கொண்டுவிட்டது எனக் கடிந்துரைக்கின்றனர். இந்நிகழ்ச்சிகள் குடும்பப் பற்றையும், குடும்பத்தின் மானத்தைக் காப்பதில் உறவினர்கள் கொண்டிருந்த அக்கறையையும் காட்டுவனவாய் அமைகின்றன. இவற்றால் அக்காலச் சமுதாயத்தில் பழைமையான பரந்துபட்ட குடும்ப அமைப்பும், மாறிவரும் சமுதாயத்தில் உள்ள சிறுகுடும்ப அமைப்பும் நிலவியிருக்கலாம் எனக் கருதமுடிகின்றது.

### 8. 2. 2. அதிகாரத்தின் அடிப்படையில்

குடும்பத்தில் அதிகாரம் (power) யார் கையில் அதிகமாக அமைந்து காணப்பெறுகிறது என்பதன் அடிப்படையில் குடும்பத்தை ஆண் ஆதிக்கக் குடும்பம் (patriarchal family), பெண் ஆதிக்கக் குடும்பம் (Matriarchal family), முதியவர் ஆதிக்கக் குடும்பம் (Genoetritic family), சம அதிகாரம் உள்ள குடும்பம் (democratic family) எனப் பகுத்துக் காட்டுவர். ஆண் ஆதிக்கக் குடும்பத்தில் ஆடவர் அல்லது கணவன் ஆதிக்கம் செலுத்தும தன்மையையும், பெண்ணாதிக்கக் குடும்பத்தில் பெண் அல்லது மனைவி ஆதிக்கம் செலுத்தும் தன்மையையும், முதியவர் ஆதிக்கக் குடும்பத்தில் இனத்தில் முதியவர் ஆதிக்கம் செலுத்தும் தன்மையையும், சமமான ஆதிக்கம் செலுத்தும் குடும்பத்தில் அப்பா-அம்மா அல்லது கணவன் - மனைவி இருவரும் சமநிலையில் ஆதிக்கம் செலுத்தும் தன்மையையும் காணலாம். பக்தி இலக்கியத்தைப் பயிலும் பொழுது அக்காலச் சமுதாயத்தில் நிலவிய குடும்ப அமைப்பு பெரும்பாலும் ஆண் ஆதிக்கக் குடும்ப அமைப்பாகவே திகழ்ந்துள்ளது எனக் கருத முடிகின்றது. கணவன் சொற்படி

மனைவி நடப்பதுதான் கற்பு என்றும், பெண்கள் கணவனின் தவறுகளைத் தட்டிக்கேட்கும் உரிமையின்றிக் காணப்பட்டனர் என்றும் கணவனின் உரிமைப்பொருள்களைப் போல மதிக்கப்பெற்றிருந்தனர் என்றும் எண்ண இடமுள்ளது. குடும்பத்தில் இறுதி முடிவு எடுக்கும் அதிகாரம் (final authority) ஆடவரிடமே காணப்பெற்றது.

## 8. 2. 3. திருமண முறையின் அடிப்படையில்

திருமண முறையினை அடிப்படையாகக் கொண்டு குடும்பத்தை ஒரு தாரமணக் குடும்பம், (Monogamous), பலதார மணக்குடும்பம், (polyandry), குழுமணக் குடும்பம் (group marriage) என, வகைப்படுத்துவர். ஓர் ஆடவன் ஒரு பெண்ணை மணம்புரிதல் ஒருதார மணம் என்றும், ஓர் ஆடவன் பல பெண்களை மணம்புரிவதைப் பலதார மணம் என்றும், ஒருபெண் இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட ஆண்களை மணம்புரிதல் பல ஆடவர் மணம் என்றும் இரண்டு அல்லது இரண்டிற்கு மேற்பட்ட ஆடவர்கள் ஒரு பெண்ணையோ அல்லது இரண்டு அல்லது இரண்டிற்கு மேற்பட்ட பெண்கள் ஓர் ஆடவனையோ மணம் புரிவதைக் குழுமணம் என்றும் கூறலாம். இவ்வடிப்படையில் பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்திலுள்ள குடும்பத்தை நோக்கும்போது ஒருதார மணக் குடும்பமே பெரிதும் காணப்பெற்றது எனக் கூறலாம். எனினும், சுந்தரர் பரவையார், சங்கிலியார் என்ற இரு பெண்களை மணம் புரிந்த செயல் காட்டப் பெறுமாற்றால் சமுதாயத்தில் ஒருசிலரிடையேயாவது, அதுவும் மிக அருகிய நிலையில் பலதாரமணம் இடம்பெற்றிருந்தது என எண்ண இடமுள்ளது. மேலும், பக்தி இலக்கியத்துள் பிறன்மனை நயத்தலும், பரத்தை உறவு கொள்ளுதலும் கடியப்பெற்று ஆடவர் கற்பு வலியுறுத்தப்பெறுமாற்றால் ஒருதார மணமே சிறந்தது எனக் கருதப்பெற்ற சமுதாயச் சிந்தனையும் வெளிப்படுகின்றது எனலாம்.

திருமணத்தின் அடிப்படையில் குடும்பத்தை அகமணக் குடும்பம் என்றும், புறமணக் குடும்பம் என்றும் மேலும் விளக்கிக் காட்டுவர். ஒரு குடும்பப் பிரிவைச் சார்ந்தவர்கள் இனத்தால், சாதியால் ஒத்த அதே பிரிவைச் சார்ந்த உறுப்பினர்களிடமிருந்து பெண் எடுத்தும், பெண் கொடுத்தும் திருமணம் செய்தலை அகமண முறை (Endogamous) என்றும், ஒரு பிரிவைச் சார்ந்தவர்கள் வேறு பிரிவைச் சார்ந்தவர்களை மணம் புரிந்துகொள்வதைப் புறமண முறை (Exogamous) என்றும் கூறலாம். பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் - குறிப்பாக உயர்ந்த குலத்தவர் எனச் சமுதாயத்தினால் கருதப்பெற்றவர்களிடையேயாவது - அகமண முறை காணப்பெற்றது எனக் கொள்ளலாம். எச்சதத்தன், சுந்தரர், சம்பந்தரின் தந்தை, சம்பந்தர் ஆகியோர் அந்தணர்கள் குலத்தில் தத்தம் கோத்திரத்தில் தோன்றிய பெண்களையும் நாவுக்கரசரின் தந்தையார், கலிக்காமர் ஆகியோர் வேளாளர் குலத்தில் பிறந்த பெண்களையும், தனதத்தன் வணிகர்குலப் பெண்ணையும் மணம் புரிந்துள்ளமையைச் சான்றுகளாகக் காட்டலாம். எனினும், இவ்வுயர் குலத்தவர்களிடையேயும் புறமணமுறையும் காணப்பெற்றமையைச் சுந்தரர் வரலாறு மூலம் உணரலாம். சுந்தரர் அந்தணர் குலத்தில் பிறப்பினும், பரவையார் என்ற

உருத்திரக் குலப் பெண்ணையும், சங்கிலியார் என்ற வேளாண்குலப் பெண்ணையும் மணந்துள்ளார். எனவே, திருமண முறையின் அடிப்படையில் அக்காலச் சமுதாயத்தில் அகமண முறைக் குடும்பம் பெரும்பான்மையும் புற மணமுறைக் குடும்பம் சிறுபான்மையும் காணப்பெற்றமை புலனாகின்றது.

### 8. 2. 4. வாழும் இடத்தின் அடிப்படையில்

திருமணம் முடிந்து இல்வாழ்க்கையை எங்குத் தொடங்குகின்றனர் என்பதை அடிப்படையாக வைத்தும் குடும்பத்தைப் பாகுபடுத்துவர். மணமகன் வீட்டில் இல்வாழ்க்கை நடத்துதல் (patrilocal), மனைவி வீட்டாருடன் இல்வாழ்க்கை நடத்துதல் (Matrilocal), தனியாக இல்வாழ்க்கை நடத்துதல் (Neolocal) என்ற மூன்று நிலைகளை இவ்வடிப்படையில் சுட்டுவர். பெரியபுராணம் காட்டும் அடியார்களின் இல்வாழ்க்கையைப் பார்க்கும்போது மணமகன் வீட்டில் இல்வாழ்க்கை நடத்தும் போக்கையே பெரிதும் காணமுடிகின்றது. தலைவியின் நிலையைக் கண்டு நற்றாய் இரங்கிக் கூறுவதாய் அமைத்துப் பாடிய பாடல் ஒன்றில் பெரியாழ்வார் பெரும்பெருத்த கலியாணங்கள் செய்து பேணி நம் இல்லத்துள்ளே இருத்துவான் எண்ணி நாமிருக்க இவளும் ஒன்றெண்ணுகின்றாள் என்று குறிப்பிடுகின்றார்.[16] இக்கூற்று மகளைத் திருமணம் செய்து கொடுத்த பின்பு தம் இல்லத்துள்ளேயே இருத்தி இல்லற வாழ்க்கை வாழச் செய்த நிலை சமுதாயத்தில் காணப்பெற்றமையைச் சுட்டுவதாக அமைகின்றது. காரைக்கால் அம்மையாருக்குத் திருமணம் செய்வித்ததும் அவர் தந்தையார் தன் மகள் தன் குடிக்கு அரும்பெரும்புதல்வி ஆகையால் தன் ஊரிலேயே தங்கி இல்லறம் நடத்துவதற்கு அணிமாடம் அமைத்துக் கொடுத்தமையையும் காண்கின்றோம்.[17] திருமூலரும் நம்பி திருமணத்திற்குப் பின்பு மனையறம் புரக்கப் புதுமாடம் எடுத்தனன் எனக் குறிப்பிடுகின்றார்.[18] இவற்றால் திருமணம் முடிந்தபின்னர் மணமக்களின் பெற்றோர்களே முன்னின்று அவர்கள் இல்லற வாழ்க்கையைத் தனியாக நடத்துவதற்கு வாய்ப்பளித்துள்ளமையை அறியலாம். முற்கூறியனவற்றால் இல்லறம் நடத்தும் இடத்தின் அடிப்படையில் மேற்சுட்டப்பெற்ற மூவகையான குடும்பங்களும் சமுதாயத்தில் காணப்பெற்றன என்பது புலனாகின்றது. இவற்றுள் தனித்து வாழும் நிலை சிறு குடும்ப அமைப்பிற்கும், ஏனைய இரு நிலைகளும் பரந்துபட்ட குடும்ப அமைப்பிற்கும் துணை நின்றன எனலாம்.

## 8. 3. இல்லற வாழ்க்கை

குடும்பத்தின் இன்றியமையாத தன்மையாகிய இல்லற வாழ்க்கையைப் பக்தி இலக்கியம் சிறப்பாகப் போற்றுகின்றது. சமுதாயத்தில் மக்கள் மேற்கொள்ள வேண்டிய அறநெறிகளுள் மனைவாழ்க்கையாகிய அறம் தகுதி மிக்கதாகக் கருதப்பெறுகின்றது. இதனால் மனையறத்தை அறநெறித்தக்க மனையறம் எனச் சிறப்பித்துக் கூறப்பெறுமாற்றை அறிகின்றோம்.[19] துறவு நெறியை மேற்கொள்ளுதற்குக் கூட இல்லறம சிறந்த நெறியாக அமைகின்றது என்ற சிந்தனையைத் திருமழிசையாழ்வார் இல்லறம் இல்லையேல் துறவறமில்லை என்று கூறுவதன் மூலம் புலப்படுத்துகின்றார்.[20] பக்தி இலக்கியத்துள்

குடும்பவாழ்க்கையானது இல்வாழ்க்கை,[21] மனையறம்,[22] மனைவாழ்க்கை[23] என்றெல்லாம் சிறப்பித்துக் கூறப்பெறுகின்றது. இம்மனைவாழ்க்கையானது அன்புறுவாய்மைமனையறம்,[24] ஒப்பில்மனையறம்,[25] குற்றமற்றஇல்லறம்,[26] நீதிமனையறம்,[27] நீந்துநல்லறம்,[28] பெருகுதிருமனையறம்.[29] பெருமனைவாழ்க்கை,[30] மேம்பட்டஇல்லறம்,[31] வளமிகுமனையின் - வாழ்க்கை[32] என அடைகள் கொடுத்துச் சிறப்பிக்கப்பெறுமாற்றால் அக்காலச் சமுதாயத்தில் மக்கள் அன்பு நிறைந்த, வாய்மையுடைய, ஒப்பற்ற, குற்றமற்ற, நீதி நிறைந்த இல்லற வாழ்க்கையை நடத்தியுள்ளனர் என்றும், இவ்வாறு இல்லற வாழ்க்கை வாழவேண்டும் எனக் கருதியிருந்தனர் என்றும் எண்ண முடிகின்றது.

## 8. 4. திருமணம்

திருமணம் என்பதற்கு மாறுபட்ட மக்களிடையே நடைபெறும் முறையானதும், மிக நீண்டகாலம் தொடர்பு ஏற்படுத்தக் கூடியதும், சமூகத்தால் ஏற்றுக்கொள்ளப்பெற்றதுமாகிய கூட்டம் (union) என விளக்கம் அளிக்கப்பெறுகின்றது. மேலும் திருமணம் என்பது இரண்டு அல்லது இரண்டிற்கு மேற்பட்டவர்கள் குடும்பத்தை நிறுவிக்கொள்வதற்குத் துணைபுரியும் ஏற்றுக்கொள்ளப்பெற்ற சமுதாய முறை என்ற விளக்கமும் காணப்பெறுகின்றது.[33] சமூகவியல் அடிப்படையில் திருமணம் என்பதை ஆண், பெண் ஆகிய இரு பாலார்களுக்கும் இடையேயுள்ள பால் (sex), பொருளாதார உறவுகளுக்கு அளிக்கப்பெறும் இசைவு என்றும் விளக்குவர்.[34] இத்திருமணமும், குடும்ப நடவடிக்கைகளும் பெரும்பாலும் பண்பாட்டினாலேயே தீர்மானிக்கப்பெறுகின்றன என்று கருதுவர்[35] குடும்பத்தின் இன்றியமையாத தன்மையாகிய இல்லவாழ்க்கை திறம்படச் செயல்படுவதற்கு அடிப்படையாகத் திருமணம் அமைகின்றது. திருஞான சம்பந்தரிடம் பெரியோர்கள் வந்து வைதீகமாகிய பெருநெறியில் ஒழுகுவதற்கு இல்வாழ்க்கை தேவை என்றும், இல்வாழ்க்கை மனைவியோடன்றி நிகழத்தகாது என்றும் கூறி அவரிடம் திருமணம் செய்து கொள்ளுமாறு வேண்டுகின்றமையால்[36] முற்கூறிய கருத்து தெளிவாகின்றது.

பக்தி இலக்கியத்துள் இடம்பெறும் ஊர் வருணனைகளில் மக்களிடையே திருமணம் நடக்கும் காட்சிகளும், அதனால் எழுந்த ஆரவார ஒலியும் சுட்டப்பெறுகின்றன.[37] பெரியாழ்வார் திருமணத்தைக் கண்ணாலம் எனக் குறிப்பிடுகின்றார்.[38] பெண்களுக்குப் பன்னிரண்டு வயதும், ஆடவர்களுக்குப் பதினாறு வயதும் திருமணம் செய்துகொள்ளுதற்குரிய பருவமாகப் பொதுவாகக் கருதப்பெற்றிருந்தமை புலனாகின்றது. திருமணத்தின் பொருட்டு மரபிலுள்ள பெரியோர்கள் மணம் பேசி வருதல், திருமணத்திற்குரிய நாளை உறுதி செய்தல், மணவோலை அனுப்புதல் முதலியனவும், திருமணத்திற்கு முன்னரும் பின்னரும் நிகழும் சடங்குகளும் பக்தி இலக்கியத்துள் இடம்பெறுமாற்றைக் காண்கின்றோம். சமுதாயத்தில் உடன் பிறந்தார் மகனுக்குப் பெண் கொடுக்கும் வழக்கம் நிலவியமையும் தெரியவருகின்றது.[39]

## 8. 5. கணவன் – மனைவி

இல்வாழ்க்கையானது சிறப்புறச் செயல்படுவதற்கு இன்றியமையாத பங்கு வகிப்போர் கணவன் மனைவி இருவரும் ஆவர். பக்தி இலக்கியத்துள் கணவன் இல் இறைவன்,[40] இல்லாளன்[41], மனைப்பதி[42], விரும்புகணவன்[43] என்றும் மனைவி ஆராஇன்பமனையாள்[44] இல்வாழ்க்கைக்கு அருந்துணையாய் அமர்கின்ற பூங்குழலார்,[45] கற்புடைய மடவார்,[46] திருந்துமனையார்,[47] மையறு சிறப்பின் மிக்க மனையவள்[48], வாழ்க்கைத் துணையாகிய மனைவி[49] என்றும் சிறப்பிக்கப்பெறுகின்றனர். இவற்றால் குடும்ப வாழ்க்கையில் கணவன் இல்லத்திற்கே இறைவன் போன்றும், மனைவி மற்றும் குழந்தைகள் விரும்பத்தக்கவனாகவும் விளங்கியமையும், மனைவி மிக்க அன்பு நிறைந்தவளாகவும், இல்வாழ்க்கையைத் திறம்பட நடத்துவதில் கணவனுக்கு உறுதுணையாகவும், குற்றமற்ற சிறப்புடையவளாகவும், கற்பில் மேம்பட்டவளாகவும் விளக்கியமையும் தெரியவருகின்றன. அடியார்களின் குடும்ப வாழ்க்கையின் மூலம் முற்கூறிய தன்மைகள் மேலோங்கியமை புலனாகின்றது. மேலும் இல்வாழ்க்கையில் கணவன், மனைவி ஆகிய இருவரும் எவ்வாறு வாழவேண்டும் என்று அறிவுறுத்தும் சமுதாய மதிப்புக்களையும் பக்தி இலக்கியம் காட்டுகின்றமை சுட்டுதற்குரியது ஆகும்.

## 8. 6. குடும்பத்தின் செயல்பாடுகள்

குடும்பத்தைப் பற்றி ஆராய்ந்த சமூகவியலாளர்கள் சமுதாயத்தில் காணப்பெறும் பிற நிறுவனங்களைப் போன்று குடும்பம் என்ற நிறுவனமும் சில சமூகச் செயல்பாடுகளைக் கொண்டு திகழ்கின்றமையைச் சுட்டுக்காட்டுகின்றனர். அவற்றுள் பக்தி இலக்கியம் மூலம் அறியலாகும் குடும்பத்தின் செயல்பாடுகளை இவண் காணலாம்.

### 8. 6. 1. குழந்தைகள் பெறுதலும், வளர்த்தலும் (Reproduction and Child careing)

சமுதாயம் இடைவிட்டுப் போகாதவாறு அதன் தொடர்பைக் (continuty) கட்டிக்காக்கும் அடிப்படைச் செயல்பாடாகிய (function) குழந்தைகளை உருவாக்கும் பணியைக் குடும்பம் தலையாய கடமையாகக் கொண்டுள்ளது.[50] சமுதாயத்தில் புதிய உறுப்பினர்களை உருவாக்கும் பணியை மேற்கொள்வதற்கு ஒவ்வொரு சமுதாயமும் குடும்பம் என்ற நிறுவனத்தையே முழுமையாக நம்பியுள்ளது. சமூக உயிரினங்களை (social beings) உருவாக்கும் ஆதார நிறுவனம் (primary institution) என்ற நிலையில் குடும்பம் சமூக வாழ்க்கையை மக்கள் மறக்காமலிருக்கச் செய்கின்றது.[51] சமுதாய உறுப்பினர்கள் ஒவ்வொருவரும் மற்றவர்களுடன் தொடர்புகொள்வதையும், வாழ்க்கை முழுவதும் ஒருவருக்கொருவர் நெருங்கிய அன்புடன் வாழ்வதையுமே பெரிதும்

விரும்புகின்றனர். அவர்களிலும் குழந்தைகள் பெற்றோர்களின் அன்பைப் பெறாதபோது மாறான சுய கற்பனைகளை வளர்த்துக்கொண்டு பிற்காலத்தில் சமுதாயத்திற்குத் தேவையற்ற, சமுதாயத்திற்கு ஊறு விளைவிக்கக்கூடிய உறுப்பினர்களாக மாறிவிடுகின்றனர். இந்நிலையில் குடும்பமானது குழந்தைகள் முதல் பெரியவர் வரையிலும் அனைவருக்கும் தேவையான நெருக்கத்தையும், நிரந்தரப் பாதுகாப்பையும் அளிக்கும் இன்றியமையாத பணியை மேற்கொள்ளுகின்றது. குழந்தைகளின் அடிப்படை உடற்கூறு, பௌதீகத் தேவைகளான உண்ண உணவு, உடுக்க உடை, இருக்க வீடு என்பனவற்றை இக்குழந்தைகள் குடும்பம் என்ற நிறுவனம் மூலமே பெறுகின்றன. இதனால்தான் குழந்தைகளின் ஆதார வளர்ச்சியானது தாயின் மடியிலும், குடும்பம் என்ற ஊஞ்சலிலும் காணப்பெறுகின்றது என்பர். குழந்தைப்பேறு இல்லாவிட்டால் ஒருவருடைய குடும்ப வாழ்க்கை நிறைவற்றதாக எண்ணப்பெறுகின்றது. அதிலும் ஆண்குழந்தைகள் ஒருவரின் இறப்புக்குப் பின்பு செய்ய வேண்டிய சடங்குகளைச் செய்தால்தான் அவர் உயர்நிலை அடைய முடியும் என்ற நம்பிக்கையும் இந்துச் சமுதாயத்தில் காணப்பெறுகின்றது.

பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் இடம்பெற்ற குடும்ப வாழ்க்கையிலும் குழந்தைப்பேறு மிகவும் போற்றத்தக்கதாக மதிக்கப்பெற்றமையை உணரலாம். குழந்தைகள் குலம் விளங்கவந்தவர்களாகவும்,[52] மனை வாழ்க்கையில் இன்பம் செய்பவர்களாகவும்,[53] நல்ல தவங்கள் செய்தமையின் விளைவாகத் தோன்றி உலகில் துணை நிற்பவர்களாகவும்,[54] குடும்பத்தின் பெருகொளி விளக்கைப் போன்றவர்களாகவும்,[55] மனை வாழ்க்கைக்கு நன்கலமானவர்களாகவும்[55] காட்டப்பெறுகின்றனர். இத்தகைய குழந்தைப்பேறு வாய்க்கப்பெறாமையால்தான் மனம் வருந்திச் சுயதேவன் மனைவி கமலவதியும், சிவநேசரும், மானக்கஞ்சாற நாயனாரும் நாகனின் மனைவியும் இறைவனை வேண்டித் தவமிருக்கின்றனர். இவ்வாறு தவம் இருந்து குழந்தைப்பேறு வாய்க்கப்பெற்றமையைக் கிடைத்தற்கரிய பெரும்பேறு என எண்ணி மகிழ்கின்றனர்.[57] குழந்தைப் பேறு இல்லாதவர்கள் மலடர்கள் எனச் சமுதாயத்தினரால் இகழ்ந்து உரைக்கப்பெற்றனர் என எண்ணுதற்குரிய குறிப்பும் உள்ளது.[58] இவ்வாறு குழந்தைப்பேறு இல்லாதவர்கள் பிறர் குழந்தையைக் தத்தெடுக்கும் நிலையும் சமுதாயத்தில் காணப்பெற்றது என எண்ண இடமுள்ளது.[59] இவற்றால் குடும்பத்தின் முக்கிய செயல்பாடாகிய குழந்தைகளைப் பெறுதலும் வளர்த்தலும் என்ற செயல் புலனாகின்றது.

### 8. 6. 2. பால் நடவடிக்கைகளில் ஒழுங்குமுறைகளை வகுத்தல் (REGULATIONS IN SEXUAL BEHAVIOURS)

ஆண்களுக்கும் பெண்களுக்கும் இடையே நிகழும் பால வெளிப்பாடுகளில் குடும்பம் தன் உறுப்பினர்களிடையே சில ஒழுங்குமுறைகளையும், கட்டுப்பாடுகளையும் வகுத்து, அவற்றை உறுப்பினர்கள்

கட்டாயம் பின்பற்றுமாறு வலியுறுத்தலையும் குடும்பத்தின் மற்றொரு செயல்பாடாகக் கொள்ளலாம். இன்னின்னாருடன் பாலுறவு தவிர்க்கப்பெற வேண்டும் என்று ஒழுங்கு முறைகளை வகுக்கின்றது. பக்தி இலக்கியத்துள் காணப்பெறும் பிறன் மனை நயவாமை, பரத்தையர் உறவு கொள்ளாமை, இழிகாம உணர்வு கொள்ளாமை போன்ற சமூக மதிப்புகள் அக்காலச் சமுதாயத்தில் குடும்பம் என்ற நிறுவனம் தன் உறுப்பினர்களுக்கு விதித்துள்ள பால் நடவடிக்கைகளின் ஒழுங்கு முறைகளைப் பிரதிபலிப்பவையாகத் தோன்றுகின்றன. விடம் ஏறி இறந்துவிட்ட பூம்பாவையை மீண்டும் பெண்ணுருவாக்கிய திருஞானசம்பந்த பெருமானிடம் சிவநேசர் மன மகிழ்ச்சியுடன் தன் மகளை மணம்புரிந்து கொள்ளுமாறு வேண்டுகின்றார். அதைக் கேட்ட திருஞானசம்பந்தர் நான் பூம்பாவையை உயிர்பித்தமையால் அவளுக்குத் தந்தை முறையே ஆவேன் என்றும், எனவே அவளை மணத்தல் தக்கது அன்று என்றும் அறிவுரை கூறி மறுக்கின்றார்.[60] இதுவும் குடும்ப நிறுவனம் விதித்துள்ள பால் உறவுக்கட்டுப்பாட்டினைக் காட்டுவதாகக் கொள்ளலாம். திருமூலர் இம்மை வாழ்க்கையில் ஒருவனும் ஒருத்தியுமாய் இல்லறம் பேணுதலே தூய நல்வாழ்க்கை என்று அறிவுறுத்தலும் இவண் சுட்டுதற்குரியது ஆகும்.

## 8. 6. 3. கல்வி அளித்தல்

குழந்தைகளைப் பெற்று வளர்த்துப் பெரியவர்களாக்குவதுடன், அக்குழந்தைகளுக்குக் கல்வியையும் அளித்துச் சமுதாயத்தில் சான்றோராகத் திகழ வைத்தலும் குடும்பத்தின் செயல்பாடுகளுள் ஒன்றாகக் காணப்பெறுகின்றது. கல்வி என்ற நிறுவனமும் சமுதாயத்தில் இடம்பெறுகின்ற பிற நிறுவனங்களைப் போன்று சமுதாயத்தில் தோன்றும் சிக்கல்களை அகற்றுவதில் பெரிதும் துணை நிற்பதாகக் கருதப் பெறுகின்றது.[62] இக்கல்வியைப் போற்றுவதில் பக்தி இலக்கியக் காலச் சமுதாயம் தலை சிறந்து நின்றது எனக் கூறலாம். இறைவனே கற்றவர்க்கு அமுதானவனாகவும்,[63] கல்லாதவர் மனத்தகத்து அணுகாதவனாகவும்[64], கல்லாதவர் காட்சிக்கு அரியனவாகவும்[65] காட்டப்பெறுகின்றான். இதன்மூலம் சமுதாயம் கல்விக்கு அளித்திருந்த முதன்மை வெளிப்படுகின்றது. ஊர் வருணனைகளின்போதும் வேதம் பயிலும் மறைச் சிறார்களின் கூட்டம் சுட்டப்பெறுகின்றது.[66] திருஞானசம்பந்தர் மூன்றாண்டுகள் பருவம் நிரம்பப்பெற்றதும் வேதம் முதலான கலைகள் பயிற்றுவிக்கப்பெறுகின்றார்.[67] திருநாவுக்கரசருக்குத் தக்க பருவம் வந்துற்றதும் பெற்றோர்கள் கல்வி பயில ஏற்பாடுகள் செய்கின்றனர்[68] சண்டேசுவரர் தன் மகன் விசாரசன்மனை வேதம் கற்கும் செயலில் ஈடுபடுத்துகின்றார் அவன் கல்வி கற்பதைக்கண்டு அவனுடைய ஆசிரியர்களே அவன் அறிவுக் கூர்மையை எண்ணி வியக்கின்றார்.[69] சிறுத்தொண்ட நாயனார் தன் மகனைச் சிந்தை மலர் சொற்றெளிகுவித்த செழுங்கலைகளைப் பயில அவனைப் அமர்த்துகின்றார்.[70] இவை குடும்பத்தில் பெற்றோர்கள் தம் குழந்தைகளுக்குக் கல்வி அளிக்கும் பொறுப்பைச் சிறப்புடனாற்றியமையைக் காட்டுகின்றன.

## 8. 6. 4. குடும்பத் தேவைகளை நிறைவுசெய்தல்

குடும்பம் மனித இனத்தின் பௌதீக, உடலியல், சமுதாய, பொருளாதாரத் தேவைகளை நிறைவு செய்யும் செயல்பாட்டையும் கொண்டு திகழ்கின்றது.[71] *குடும்ப உறுப்பினர்களுக்கு நெருங்கிய ஆதரவு அளித்தல், வயதான காலத்தில்* முதியோர்களையும் பிணிவாய்ப்பட்டோர்களையும் பாதுகாத்தல் போன்ற பணிகளைச் செய்கின்றது. குடும்ப உறுப்பினர்களின் அடிப்படைத் தேவைகளுள் ஒன்றான இருக்கும் இடத்தை அளிக்கின்றது. இதனால்தான் பக்தி இலக்கியத்துள் குடும்பம் அல்லது இல்லற வாழ்க்கையை நடத்துதற்குரிய இடமாகிய வீடு உறையுளாகிய மனை எனக் குறிப்பிடப்பெறுமாற்றைக் காண்கின்றோம்.[72] பக்தி இலக்கியத்துள் இளமை, யாக்கை ஆகியவை நிலையற்றது என்றும் முதுமைக்காலத்திலும் நோயுற்ற காலத்திலும் உறவினர்கள் பைய நடமின்கள், பார்த்து உண்மின்கள், மெதுவாக அமருங்கள் என்று கூறுவதன் முன்னர் இறையன்பில் தலைப்பட்டு உய்மின்கள் என்றும் அறிவுரைகள் கூறப்பெறுகின்றன. இவை குடும்ப நிறுவனம் தன் உறுப்பினர்களுக்கு முதுமைக்காலத்திலும் நோயுற்ற காலத்திலும் ஆதரவு அளிக்கின்ற அதன் செயல்பாட்டைக் காட்டுவனவாகத் தோன்றுகின்றன.

*இதைப்போன்று மனிதக் குழந்தைகள் (human infant) தம்* வளர்ச்சிப்போக்கின் ஒவ்வொரு நிலைகளிலும் தம் பெற்றோர்களின் கவனிப்பையும், அன்பையும் எதிர்நோக்கியிருக்கும் இயல்புடையவர்களாகக் காணப்பெறுகின்றனர். *தாமாக எதையும் முனைந்து* செயலாற்றுதற்கேற்ற உடல் பக்குவமும், உளப்பக்குவமும் அவர்களுக்கு இல்லை. இச்சூழலில் குடும்ப உறுப்பினர்கள் - குறிப்பாகப் பெற்றோர்கள் - அதிலும் தாய்மார்கள் - அக்குழந்தைகளுக்கு ஆதரவு *அளிக்க* வேண்டிய நிலையில் காணப்பெறுகின்றனர். பக்தி இலக்கியம் இறைவனின் அன்பை வெளிப்படுத்துமிடங்களில் தாய் தன் குழந்தைகளிடம் காட்டும் அன்பை ஒப்பிட்டு அதனை விடவும் மேலான அன்புடையவன் இறைவன் எனக் கூறுகின்றது.

குலசேகரர் அரிசனத்தால் ஈன்றதாய் அகற்றிடினும் மற்றவள் அருள் நினைந்தே அழும் குழவி போன்றிருந்தேன் எனத் தன் இறையன்பை வெளிப்படுத்துமிடத்துக்[73] குழந்தைகள் தாயன்பை வேண்டிநிற்கும் இயற்கை நிலையைச் சுட்டுகின்றார் எனலாம். இதனைப் போன்று எறிபத்தர் இறைவனுக்குரிய பூக்களைச் சிதறியழித்த யானையை இறைவன்பால் கொண்ட பேரன்பின் காரணமாக எவ்வித அச்சமும் இன்றிக் கொன்றமையைத் தாய் தலையன்பின் முன் அச்சம் நிற்குமோ என வருணிக்குமாற்றை *உணராம்.*[74] பெரியாழ்வார் கண்ணனிடம் தத்தம் மக்கள் அழுதுசென்றால் தாய்மார்கள் தரிக்கிலர் என்கின்றார்.[75] இவை தாய்மார்களுக்கும் குழந்தைகளுக்குமிடைய காணப்பெறும் அன்பின் பிணைப்பையும், ஆதரவின் நெருக்கத்தையும் சுட்டுவனவாக உள்ளன. குடும்ப உறுப்பினர்கள் தங்களுக்குள் வேலைப் பங்கீட்டை மேற்கொண்டு கடமையாற்றுவதன் மூலம் குடும்பம் தன் உறுப்பினர்களின் பொருளாதார அலகாகவும் திகழ்கின்றது *எனலாம். கணவன்* அல்லது குடும்பத் தலைவன் ஈட்டிவரும் பொருளைக் கொண்டு, வருவாய்க்குத்தக்க செலவு செய்து

குடும்பம் சீராக இயங்குவதற்கு மனைவி துணைநிற்கின்றாள். இவ்வாறு குடும்பம் தன் உறுப்பினர்களின் பன்முகத் தேவைகளை நிறைவேற்றும் செயல்பாடுகளைக் கொண்டுள்ளது.

### 8. 6. 5. சமூகமயமாக்குதல்

குடும்ப உறுப்பினர்களிடமிருந்து குழந்தைகள் தாம் வளரும் காலத்தில் நல்ல தன்மைகளையும், ஒழுக்கங்களையும், பழைய மரபுகளையும், பண்பாட்டினையும் கற்றுக்கொள்கின்றனர். குடும்பத்திலுள்ள பெரியவர்கள் எவையெவை மேற்கொள்ளத் தக்கவை. எவையெவை விரும்பத்தகாதவை, எவையெவை நன்மை பயப்பவை, எவையெவை தீங்கு விளைவிப்பவை என்று குழந்தைகளுக்கு அறிவுரைகள் கூறுவதன் மூலமும், தாம் அவ்வாறு நடந்துகாட்டுவதன் மூலமும் அக்குழந்தைகள் பிற்காலத்தில் சிறந்த சமுதாய உறுப்பினராக வாழ்வதற்கு வழியமைத்துக் கொடுக்கின்றனர். பெரியோர்களிடம் பழகும்முறை, சமுதாயத்தில் பிறரிடம் நடந்துகொள்ளும் முறை என்பனவற்றைக் கூறிக் குழந்தைகளைச் சமூக மயமாக்குவதில் குடும்பம் பெரும்பங்கு வகிக்கின்றது. எனவே, குடும்பத்தைச் சமுதாயம் என்ற கட்டடத்தின் அடிப்படைக் கல் எனச் சுட்டுகின்றனர். பக்தி இலக்கியம் மூலம் குழந்தைகள் உயர் சமுதாய மதிப்புக்களைப் பின்பற்றி உயர் வாழ்க்கை வாழப் பெற்றோர்கள் துணை நிற்கின்றமையை உணர்கின்றோம்.

### 8. 7. முடிபுகள்

1. குடும்பம் என்பது உலகச் சமுதாயங்கள் அனைத்திலும் காணப்பெறும் ஒரு சமுதாய நிறுவனம் என்றும், அதன் அமைப்புகள் எல்லாச் சமுதாயங்களிலும் ஒன்று போல் காணப்பெறாவிடினும், சில பொதுவான பண்புகள் எல்லாச் சமுதாயங்களிலும் காணப்பெறும் என்றும் சமூகவியலாளர்கள் கருதுகின்றனர்.

2. திருமணம், இரத்த உறவுகள் போன்றனவற்றால் இணைக்கப்பெற்ற மக்கட்கூட்டமே குடும்பம் என்று பொதுவாகக் கூறலாம்.

3. பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் இடம் பெற்ற குடும்பம் என்ற நிறுவனத்தைச் சமூகவியலாளர்கள் கூறும் குடும்பம் பற்றிய கருத்துக்களுடன் ஒப்பிட்டுக் காணமுடிகின்றது.

4. குடும்பத்தில் காணப்பெறும் உறுப்பினர்களின் அடிப்படையில் நோக்கும்போது பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் தொடக்க காலத்தில் பரந்துபட்ட குடும்ப அமைப்பும், பிற்காலத்தில் காணப்பெற்ற சிறு குடும்ப அமைப்பும் இடம்பெற்றுள்ளமை புலனாகின்றது.

5. அதிகாரத்தின் அடிப்படையில் பக்தி இலக்கியம் காட்டும் குடும்பத்தை ஆண் ஆதிக்கக் குடும்பம் என்ற நிலையில் இனங்காண முடிகின்றது.

6. திருமணமுறையின் அடிப்படையில் பெரும்பான்மையும் ஒருதார மணக் குடும்பமே காணப்பட்டதெனினும், சிறுபான்மை இருதார மணக் குடும்பமும் இருந்துள்ளது எனக் கருத முடிகின்றது.

7. இதைப்போன்று பெரும்பான்மை அகமணமுறைக் குடும்பமே காணப்பெற்றது. எனினும் புறமணமுறைக் குடும்பம் பற்றிய குறிப்புக்களும் உள்ளன.

8. வாழும் இடத்தின் அடிப்படையில் கணவன் வீட்டில் இல்லறம் நடத்துதல், மனைவி வீட்டில் இலலறம் நடத்துதல், தனியாக இல்லறம் நடத்துதல் எனச் சமூகவியலாளர்கள் காட்டும் மூன்று நிலைகளையும் காணமுடிகின்றது.

9. குடும்ப நிறுவனத்தின் இன்றியமையாத சிறப்பாகிய இல்லற வாழ்க்கை பக்தி இலக்கியத்துள் சிறந்த நெறியாகப் போற்றப்பெறுகின்றது.

10. குடும்ப வாழ்க்கை நடத்துவதற்குரிய திருமணம், திருமணத்திற்குரிய வயது, திருமணம் தொடர்பான சடங்குகள் போன்றவை பக்தி இலக்கியத்துள் காணப்பெறுகின்றன.

11. இல்லற வாழ்க்கை இனிது நடைபெறுவதற்கு இன்றியமையாத பங்கு வகிக்கும் கணவன், மனைவி ஆகிய இருவரும் பக்தி இலக்கியத்துள் உயர்வாகப் போற்றப்பெறுகின்றனர்.

12. குடும்பத்தின் செயல்பாடுகளுள் ஒன்றாகிய குழந்தைகள் பெறுதலும், குழந்தைகளை வளர்த்தலுமாகிய செயல் பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் சிறப்பிடம் பெற்றிருந்தமை புலனாகின்றது. குழந்தைப் பேறு சிறந்த செல்வமாகச் சமுதாயத்தில் கருதப்பெற்றிருந்தது.

13. பால் நடவடிக்கைகளை ஒழுங்குபடுத்தும் குடும்பத்தின் செயல்பாடு பக்தி இலக்கியக் காலத்திலுள்ள குடும்பத்திலும் காணப்பெற்றமையை அறிகின்றோம்.

14. சமூகவியலாளர்களால் விளக்கப்பெறும் குடும்ப நிறுவனத்தின் செயல்பாடுகளில் குழந்தைகளுக்குக் கல்வி அளித்தல், குடும்ப உறுப்பினர்களின் தேவைகளை நிறைவேற்றுதல், பொருளாதார நடவடிக்கைகளை மேற்கொள்ளுதல், குழந்தைகளைச் சமூகமயமாக்குதல் போன்றவற்றைப் பக்தி இலக்கியம் காட்டும் குடும்பத்திலும் காணமுடிகின்றது,

15. இவ்வாறு பக்தி இலக்கியம் தம் காலச் சமுதாயத்தில் நிலவிய குடும்பம் பற்றிய சிந்தனைகளையும், நல்ல குடும்பம் அமைவதற்குரிய வழிமுறைகளையும் தருகின்றது.

## மேற்கோள்சான்றுகள்

1. Ronald W. Smith, **Sociology, An introduction**, P.171

2. Alwood, **Sociology and its Psychological Aspects** P.213

3. Burgess E. W. & Locke, H. J. **The Family**, P.8

4. George Riteor, **Sociology**, P.386

5. Bernard Phillips, **Sociology**, P.230

6. Mercer and Warderer, **Sociology, Study of Human Society**, P.228

7. R. Serge Danisoff, Ralph Wilbrerman, **An Introduction to Sociology**, P.192

8. Bernard Phillips, op. cit., P.231

9. Paul B. Hunt, Chester L. Hunt, **Sociology**, P.217

10. Theodore Caplow, **Sociology**, P.78

11. Ronald W. Smith, op.cit.,P.177

12. Gerorge Ritzer, op.cit., P.386

13. 1:2:95:3:1, 2:2:68:2:9:1-2, 2:2:69:2:1:1 4:2:49:திருநேரிசை:1-2, 4:5:5:9:2-4,4:9:தனி,திருத்தாண்டகம்:1:1 - 2, 5:2:4:4. திருக்குறுந்தொகை 1 - 2, 7:1:1:16:1:1-2, திருமங்கை.பெரிய. 1:9:1:1:1 - 2 5:7:4:2 - 3, 8:10:5:1, 9:7:1:1:1 - 2.

14. காரைக்கால். 40 - 41

15. குங்கிலியர் : 8:4

16. பெரியாழ். திருமொழி. 3:8:10:1 - 2

17. காரைக்கால். 12

18. திருமந்திரம். 193:1

19. அரிவாட்டாயர். 4:1 - 2

20. திருமழிசை.நான்முகன் : 7:2:2

21. சண்டேசுவரர். 11:2

22. காரைக்கால். 14:4, குங்கிலியக். 6:1, திருக்குறிப்பு :28:3 - 4

23. 5:2:7: திருககுறுந்தொகை. 5:1 - 2, 7:1:1:1:7:2

24. கணநாதர். 4:3 - 4

25. சிறுத்தொண்டர். 40:2

26 திருநாவுக். 15:3

27. சிறுத்தொண்டர். 12

28. திருநீலநக்கர். 3:3 - 4

29. சிறுத்தொண்டர். 17:2

30. சண்டேசுவரர் :10;1 - 2

31. திருநாவுக். 16:2

32. அப்பூதி. 2:2

33. Paul B. Hurton, Chester. L. Hunt, op. cit., P.241

34. Ronald W. Smith, op.cit., P.172

35. David Dreseller, William, M. Wills Jr. **Sociology**, P.39

36. திருஞான. 1158

37. திருநாட்டு. 30:1, 3:2:9:7:3 - 4, திருஞான. 623:3

38. பெரியாழ். திருவாய். 3:3:9:3

39. திருஞான. 480

40. காரைக்கால். 29:1

41. காரைக்கால். 20

42. காரைக்கால். 22

43. காரைக்கால். 5:4

44. சிறுத்தொண்டர். 42:3

45. காரைக்கால். 14:1 - 2

46. காரைக்கால். 22:4

47. கலிக்காமர். 5:1

48. திருநீலகண்டர். 28:3 - 4

49. திருஞான. 10:3 - 4, 385:3, கண்ணப்பர். 8:4

50. Bernard Philliphs, op. cit., P. 230

51 Geroge Ritzer, op. cit., P.385

52. காரைக்கால். 3:1, கண்ணப்பர். 8:4

53. திருஞான. 18:1

54. சண்டேசுவரர். 11:2 - 3

55. காரைக்கால். 37:3 - 4

56. திருநாட்டு. 34:2

57. திருஞான. 1039

58. பெரியாழ்.திருவாய். 1:5:4:4

59. பெரியாழ். திருவாய். 2:1:7:1

60. திருஞான. 1114

61. திருமந்திரம். 244

62. Ronald W. Smith, op. cit . P 231

63. 5:5:1: திருக்குறுந்தொகை. 10:1

64. 6:2:47: திருத்தாண்டகம். *8:1* - 2

65. 6:5:3: போற்றித்திருத்தாண்டகம். 1:3

66. திருஞான. 3:1, சண்டேசுவரர். 17

67. திருஞான. 53,54

68. திருநாவுக். 20:4

69. சண்டேசுவரர். 14:3 - 4, 15

70. சிறுத்தொண்டர். 22:3 - 4

71. Mercer and Warderer, op. cit., P. 226

72. திருநீலநக்கர். *8:1*

73. குலசேகரர், பெரியதிருமொழி. 5:1:3 - 4

74. எறிபத்தர். 24:3

75. பெரியாழ்,திருமொழி. 2:2:3:1

# இயல் - 9

# பெண்களின் நிலை

ஒரு சமுதாயத்தின் தரம் உயர்வடைவதும் தாழ்வடைவதும் அச்சமுதாயத்தில் வாழ்கின்ற பெண்களின் நிலையைப் பொறுத்தும் அமைகின்றது எனக் கருதலாம். சமுதாயம் என்பது சமூக உறவுமுறைகளாலான சிலந்திவலையைப் போன்றது என்றதொரு விளக்கமும் காணப்பெறுகின்றது. இவ்வுறவுமுறைகளில் ஆண், பெண் உறவுமுறைகள் மிகவும் நெருங்கியதும், நிலையானதும் ஆகும்.[1] எனவே, ஒரு சமுதாயத்தைப் பற்றிக் கூறும்போது அச்சமுதாதயத்தின் அச்சுப் போன்று திகழும் பெண்களைப் பற்றியும் கூறுதல் அவசியம் என்றும், ஒரு சமுதாயம் பெண்களுக்கு எந்த அளவுக்கு உரிமைகள் கொடுத்திருக்கின்றது என்பதன் அடிப்படையில் அச்சமுதாயத்தின் தன்மையையும், மேன்மையையும் அளவிடலாம் என்றும் கருதுவர்.[2] இவ்வகையில் பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் பெண்களின் சமுதாய, பொருளாதார, சமய நிலைகள் யாவை என்பனவற்றை அறியும் நிலையில் இவ்வியல் அமைகின்றது.

## 9. 1. பெண்களின் உயர்நிலை

சங்க காலத் தமிழ்ச் சமுதாயத்திலேயே பெண்கள் பெரும்பாலும் உயர்வுடையவர்களாகவும், போற்றிப் புகழத்தக்கவர்களாகவும், தொழத்தக்க சிறப்பு வாய்ந்தவர்களாகவும், உரிமைகள் நிறைந்தவர்களாகவும் வாழ்ந்துள்ளனர் என்பதைச் சங்க இலக்கியம் மூலம் அறியலாம் ஆனால், கீழ்க்கணக்கு நூல்களில்- குறிப்பாக நீதி நூல்களில் - ஆடவர்கள் ஒழுக்கத்தைக் கடைப்பிடிக்க வேண்டும் என்ற நோக்கத்திற்காகவும் பெண்கள் மீது கொண்ட ஆசையை நீக்கித் துறவை மேற்கொள்ள வேண்டும் என்பதற்காகவும், சமண, பௌத்த சமயங்களின் தாக்கம் காரணமாகவும் பெண்களின் நிலை சங்க காலத்தைவிடச் சற்று தாழ்வடைந்துள்ள போக்கை உணர முடிகின்றது. சமண, பௌதச் சமயச் செல்வாக்கைக் குறையச்செய்து, சைவ, வைணவ சமயங்களின் கொள்கைகளை மக்கள் மத்தியில் பரப்ப முயன்ற பக்தி இயக்கச் சான்றோர்கள் பெண்களுக்குச் சம அந்தஸ்த்து (equal status) கொடுத்து, இறைவனின் முன்னர் அனைவரும் சமம் என்ற சிந்தனையைச் சமுதாயத்தில் கால்கொள்ளச் செய்தனர். பக்தி இயக்கயத்தின் விளைவாகப் பெண்களின் சமுதாய நிலை உயர்வடைந்திருந்தமையைப் பக்தி இலக்கியம் தெளிவாகக் காட்டுகின்றது.

### 9. 1. 1. பெண்களின் பெருமை

பக்தி இலக்கியத்தில் பெண்பிறப்பு பெருமை நிறைந்தது எனப் போற்றப்பெறும் போக்கை உணர்கின்றோம். அடியார்களின் வரலாறு கூறப்பெறுமிடங்களில் அவர்களது மனைவியர் மிக உயர்வாகச் சுட்டப்பெறுகின்றனர். திருவினும் நல்லார் எனக் குங்கிலியக்கலய நாயனாரின் மனைவியும்[3] தருமம்புரிமனையார் என நமிநந்தியடிகளாரின் மனைவியும்[4] போற்றப்பெறுகின்றமையைச் சான்றுகளாகக் காட்டலாம். மேலும், திருவனையார் என்று திலகவதியாரும்[5], நம்பாண்டார் நம்பி பெறும் காதலி என நம்பாண்டார் நம்பியின் மகளும்[6], மங்கையர்க்குத் தனியரசி, எங்கள் தெய்வம், வளவர் திருக்குலக்கொழுந்து, செங்கமலத் திருமடந்தை, கன்னிநாடாள், தென்னர்குலப்பழி தீர்த்த தெய்வப்பாவை, சோழர்பெருமான் மங்கலமாகப் பெற்றருளிய செல்வம் பொருந்திய மாதேவியாகிய மங்கையர்க்கரசியார் என மங்கையர்க்கரசியாரும்[7], செய்ய தாமரைமேல் அன்னமேயனைய சேயிழை எனப் பாண்டியமாதேவியும்[8], உரிமை பொருந்திய பூமகள் போன்ற, கொடி போன்ற பெண் எனச் சிவநேசரின் புதல்வியும்[9] போற்றப்பெறுகின்றனர். ஊர் வருணனைகள் மூலமும் பெண்களின் உயர்வு புலப்படுத்தப்பெறுகின்றது. திருமகளைப் போன்ற பெண்கள்[10], நல்வினையின் பயனைச் செய்கின்ற மாதர்கள்,[11] துாண்டுசோதி விளக்கனையார்,[12] பொன்போன்ற பெண்கள்,[13] தையல் நல்லார்கள்,[14] திருவின் நேரனார்கள்,[15] ஒப்பவரில்லா மாதர்கள்[16] எனப் போற்றப் பெறுமாற்றைக் குறிப்பிடலாம். இவற்றால் சமுதாயத்தில் பெண்களின் பொலிவு, அன்பு, செயல்கள் முதலானவை நன்கு மதிக்கப்பெற்றிருந்தமை விளங்குகின்றது. பெண்மகப்பேறு ஒருவருக்கு உயர்நெறியைக் கூட்டுவிக்கும் என்று சமுதாயத்தினர் நம்பியிருந்தனர். அடியார்களின் வரலாறு கூறும் பெரிய புராணத்துள் இருபத்துநான்கு பெண்கள் சுட்டப்பெறுகின்றனர். இவர்களுள் இசைஞானியார், காரைக்காலம்மையார், மங்கையர்க்கரசியார் ஆகிய மூவரும் தனியடியார்களாக வைத்துப் போற்றப்பெறும் சிறப்புடையவர்களாகத் திகழ்கின்றனர். இதுவும் பெண்களின் பெருமையைப் பறைசாற்றுவதாய் உள்ளது.

### 9. 1. 2. சமய உரிமை

பெண்கள் தாம் விரும்பிய சமய நெறியை மேற்கொண்டொழுகுவதற்குரிய சமய உரிமையுடன் சமுதாயத்தில் வாழ்ந்துள்ளனர் எனக் கருத முடிகின்றது. சோழ மன்னனின் மகளாக அவதரித்த மங்கையர்க்கரசியார் நின்றசீர் நெடுமாறன் என்ற பாண்டியமன்னனை மணம் புரிகின்றார். தன் கணவன் சமணசமய நெறியைச் சார்ந்தொழுகினும், மங்கையர்க்கரசியார் சைவசமய நெறியில் தலைசிறந்து நிற்கின்றார். மங்கையர்க்கரசியாரும், அமைச்சரும் சிவ வழிபாட்டில் விரும்பி ஈடுபட்டபோது மன்னன் எவ்விதத் தடையும் விதிக்கவில்லை. இல்லற வாழ்க்கையில் மனவேறுபாட்டிற்கு இடமின்றி இன்பமாக வாழ்ந்துள்ளமையையும் அறிகின்றோம். இதனால், சமுதாயத்தில் நிலவிய சமயப்பொறையையும், பெண்கள் தாம் விரும்பிய சமய நெறியைப் பின்பற்றுதற்கு உரிமைபெற்றிருந்தமையையும் உணரலாம்

இறைவன் எழுந்தருவியுள்ள இடங்களை வருணிக்கும்போதும், இறைவனின் பெருமைகளைப் புகழும்போதும், அடியார் வாழ்க்கை வரலாறு கூறும்போதும் ஆடவர்களுடன் பெணகள் கூட்டமாகச் சென்று இறைவனை வழிபடும் உரிமையுடன் வாழ்ந்தமை குறிக்கப்பெறுகின்றது. நெருங்கிய மாதர்களும் ஆடவர்களும் சென்று வணங்கும் ஆவூர்ப்பசுபதி என்றும்,[17] சூடகமணிந்த முன்கையினையுடைய மகளிர் தம் துணைவருடன் சென்றேத்தும் ஆடகமாடம் என்றும்,[18] ஆடவர், மகளிர் மலர்களைத் தூவிநின்று வணங்கும் பல்லவனீச்சரம் என்றும்[19], மகளிர் நின்றேத்தும் திருவாழ்கொள்ளம்புத்தூர் என்றும்,[20] மைஞ்சரொடு மாதர் பலரும் தொழுது சேரும் வைகாவூர் என்றும்,[21] நெருங்கிய கூந்தலையுடைய அழகிய பெண்கள் வளைக்கரம் கூப்பி நின்று வணங்கும் ஐயாறு என்றும்[22] வருணிக்கப்பெறுதலைச் சான்றுகளாகக் கூறலாம். இறைவன் அந்தமில் புகழ் ஆயிழையார் எந்தை ஈசன் என்றேத்தப்பெறுபவனாய்ப் புகழப்பெறுகின்றான்.[23] திருநீலநக்கர் பூசனைக்குரிய பொருட்களைத் தம் மனைவியுடன் கொண்டுசெல்கினறார்.[24] சோழர் குலத்தரசன் காமதேவன் தன் தேவியார் கமலவதியுடன் சென்று கோயிலில் வழிபடுகின்றமையும், கழற்சிங்கன் என்ற பல்லவ மன்னன் தன் மனைவியுடன் வழிபடுகின்றமையும் சுட்டப்பெறகின்றன. இவற்றால் பெண்கள் ஆடவர்க்கு ஈடான நிலையில் இறைவனை வழிபடுவதில் உரிமைபெற்றிருந்தனர் எனக் கொள்ளலாம்.

வைதிக அந்தணர்கள் நடத்தும் வேள்விகளிலும், வைதீக முறையிலமைந்த திருமணங்களிலும் உடனிருந்து பங்காற்றும் உரிமையையும் பெண்கள் பெற்றிருந்தனர் எனக் கருதமுடிகின்றது. கழுமலம் நகரை வருணிக்குமிடத்துப் பெண்கள் பட்டாடை அணிந்து கொண்டு மெழுகிக் கோலமிட்டு, வேதியர்கட்குத் துணையாய்நின்று பணிபுரிகின்றமை காட்டப்பெறுகின்றது.[25] சம்பந்தரின் திருமண நிகழ்ச்சியில் வேள்விச் செந்தீயினைத் தத்தம் துணைவியருடன் மறையோர்கள் நடத்துகின்றமை சுட்டப்பெறுகின்றது.[26]

## 9. 1. 3. பொது நிகழ்ச்சிகளில் பங்குகொள்ளும் உரிமை

திருஞானசம்பந்தர்பெருமான் திருவீதியில் வரும்போது பெண்கள் மாளிகைகளின் மேல் நின்று சுண்ணம், பொரி போன்றனவற்றைத் தூவியும், நிறைகுடம், விளக்கு போன்றனவற்றை ஏந்தியும், ஆடவர்களுடன் கூடி நின்று போற்றியும், மங்கலவாழ்த்துப் பாடல்களைப் பாடியும் வரவேற்கின்றனர்.[27] நம்பியாரூரார் பூங்கோயில் வந்ததும் மகளிர் கூட்டமாக நின்று துதித்து எதிர்கொள்கின்றனர்.[28] சேரமான் பெருமாள் நாயனாரைப் பெண்கள் வரவேற்கும காட்சியையும் அறிகின்றோம்.[29] சிவபெருமானுக்குரிய திருவாதிரைத் திருவிழாவின் போது பெண்களும் ஆடவர்களும் பலியிட்டு வணங்குகின்றனர்.[30] திருஞானசம்பந்தரின் திருமண விழாவில் கலந்துகொண்டு வாழ்த்துகின்றனர். இவ்வாறு பெரியோர்களை வரவேற்றல், திருவிழாக்கள், திருமண நிகழ்ச்சிகள் போன்ற பொதுநிகழ்ச்சிகளில் ஆடவர்களுடன் கலந்துநின்று செயலாற்றுதல் போன்ற உரிமைகளைப் பெண்கள் பெற்றிருந்தமையை அறிய முடிகின்றது.

### 9. 1. 4. வெளியில் செல்லும் உரிமை

தேன்பொருந்திய மலர்களைக் கூந்தலில் அணிந்துள்ள மதிபோன்ற முகமுடைய பெண்கள் சூழ்ந்து செல்கின்றமை கருவூர் நகர வீதி வருணனையிலும்,[32] வேல் போன்ற கண்களையுடைய பெண்கள் செல்கின்றமை நறையூர் நகர வீதி வருணனையிலும் [33] இடம்பெறுகின்றன. வேல் போன்ற கண்களையுடைய கன்னிமார்கள் விளையாடுகின்ற ஓசை நிறைந்தது எனக் கொச்சைவயம் வருணிக்கப்பெறுகின்றது.[34] இவை தவிரக் கன்னியராடக் கடல் ஒலி மல்கும் கழுமலம் என்றும்,[35] மடந்தையர் குடைந்த புனல் வாசம் மிகும்படி நாறுகின்ற மயிலாடுதுறை என்றும்[36] வரும் வருணனைகளையும் காணமுடிகின்றது. மின்னைப் போன்ற நுண்ணிய இடையையுடைய பெண்கள் மிகுந்து வருகின்ற பொன்னியாற்றின் நீரில் மூழ்கி இறைவனைப் போற்றி மகிழ்ந்து விளையாடுகின்றனர். இவ்வருணனைகளை நோக்கும்போது பெண்கள் எவ்விதக் கட்டுப்பாடும், அச்சமும் இன்றித் தம் தோழியருடன் நகர வீதிகளில் செல்லுதல், விளையாடுதல், கடல், ஆறு, குளம் போன்றனவற்றில் நீராடுதல் போன்ற உரிமைகளுடன் திகழ்ந்துள்ளனர் என்பது புலனாகின்றது.

### 9. 1. 5. சொத்துரிமை

சிவநேசர் தன் மகள் பூம்பாவையை மணந்துகொள்பவர் தன்னுடைய செல்வங்கள் அனைத்திற்கும் உரிமையுடையவர் என அறிவிக்கின்றார்.[37] இவ்வறிவிப்பு தந்தையின் உடைமைகளில் குழந்தைகளுக்கும்- பெண்குழந்தைகளுக்கும் - உரிமை இருந்தது என்பதைக் காட்டுவதாகத் தோன்றுகின்றது. பெண்கள் ஆடவர்க்குச் சமமாக மதிக்கப்பெறும் சமுதாயத்தில்தான் பெண்கள் சொத்துரிமை பெறுதல் என்பது இயலுவதாய் அமையும். பெண்கள் சொத்துரிமை பெற்றிருந்தமையை வரலாற்று, கல்வெட்டுச் செய்திகளும் சுட்டுகின்றன. பல்லவர் காலத் தமிழ்ச் சமுதாயத்தில் பெண்கள் சொத்துரிமை பெற்றிருந்தமையையும், பெண்கள் தம் உடைமையிலிருந்து கொடைகள் பல கொடுத்துள்ளமையையும் அறிகின்றோம்.[38] சோழர் காலக் கல்வெட்டுக்களும் பெண்கள் சொத்துரிமையும், அவற்றைத் தம் விருப்பம்போல் பயன்படுத்தும் உரிமையும் பெற்றிருந்தமையை அறிவிக்கின்றன.[39] கணவன் இறந்த பின்னர் அவனுடைய நிலங்களும், அடிமைகளும், பிற பொருட்களும் அவனுடைய மனைவிக்குச் சொந்தமாகும் என்று குலோத்துங்கசோழச் சதுர்வேதி மங்கலச் சபையினர் இரண்டாம் இராசாதிராசனின் பதினான்காம் ஆட்சியாண்டில் நிறைவேற்றிய முடிபினை அச்சாள்புரத்துக் கல்வெட்டு காட்டுகின்றது.[40] இவற்றால் பெண் தம் தந்தையின் உடைமைகளிலும், கணவனின் உடைமைகளிலும் பங்குபெறும் உரிமை பெற்றிருந்தமையை அறிய முடிகின்றது.

### 9. 1. 6. கலைகள் கற்கும் உரிமை

பெண்கள் ஆடல், பாடல்களில் மேம்பட்டவர்களாகக் காட்டப்பெறுகின்றனர்.[41] பெண்களின் கலை நலன்களை வெளிப்படுத்தும்

வகையில் அவர்கள் கலை நன்மடவார் எனச் சிறப்பிக்கப்பெறுகின்றனர்.[42] இவை பெண்களின் கலைகள் கற்கும் உரிமையைப் புலப்படுத்துகின்றன. பெண்கள் கோயிலைச் சார்ந்த மடங்களுக்குச் சென்று சமயக் கல்வி கற்று வந்தமைக்கும் கல்வெட்டுச் சான்றுகள் காணப்பெறுகின்றன.[43]

## 9. 2. பெண்களின் தாழ்நிலை

முற்கூறியவாறு பெண்கள் ஆடவர்களுககு இணையான நிலையில் உரிமைகள் பல பெற்றுச் சமுதாயத்தில் உயர்வடைந்திருந்தமையை அறிய முடிகின்றது. எனினும், சிற்சில நிலைகளில் அவர்கள் தாழ்வடைந்திருந்தனர் எனக் கருதுவதற்குரிய குறிப்புக்களையும் பக்தி இலக்கியம் சுட்டுகின்றது. அவை பற்றி இனிக் காணலாம்.

### 9. 2. 1. பெண் கற்பை வலியுறுத்துதல்

பெண்கள் கற்புடன் வாழவேண்டும் என்று வலியுறுத்தப்பெற்றனர். அவர்கள் கொண்டானை அல்லால் பிறரை அறியாக்குலமகளாக வாழவேண்டும் என எதிர்பார்க்கப்பெற்றனர்.[44] கற்புடைய பெண்கள் அருந்ததியுடன் ஒப்பிட்டுப் போற்றப்பெற்றனர்.[45] கணவனிடம் எந்தச் சூழ்நிலையிலும் பொய் கூறாத கைவரும் கற்பு நெறியுடன் வாழவேண்டும் என அறிவுறுத்தப்பெற்றனர்.[46] சிவபாதவிருதயரின் மனைவியார் பகவதியார் கற்பினாலேயே மேம்பாடு பெறும் சிறப்புப்பற்றிக் கணவரின் கருத்துக்கிசையத் தாம் அமைந்து ஒழுகிவருபவராகக் காட்டப்பெறுகின்றார். இக்கற்பு தெய்வமறைக்கற்பு என உயர்வாகப் போற்றப்பெறுகின்றது.[47] காரைக்காலம்மையார் தன் கணவன் தன்னைவிட்டுப் பிரிந்து சென்ற பின்னரும்கூட மன்னிய கற்பினொடு மனையறம் புரிந்துவருகின்றார்.[48] கணவனுக்காகத் தாங்கிய வனப்பு நிறைந்த தசை பொதி உடம்பைக் கழித்திங்கு உன்பால் அங்கு நின் தாள் போற்றும் பேய்வடிவை அடியேனுக்குத் தந்தருளவேண்டும் என இறைவனிடம் இறைஞ்சுகின்றார்.[49] இவற்றால் கணவனுக்காகவே ஒரு பெண் உலகியல் வாழ்க்கை வாழ்தல் கற்புடைமை என்று சமுதாயத்தினரால் கருதப்பெற்றமை தெரிகின்றது.

பெண்களின் கற்புக்கு இந்த அளவுக்கு அழுத்தம் கொடுத்து வலியுறுத்திய அக்காலச் சமுதாயம் ஆடவர்களின் கற்புக்கு அழுத்தம் கொடுக்காத நிலையைக் காணமுடிகின்றது. பரமதத்தன் காரைக்காலம்மையாரின் திருவருள் திறத்தைக் கண்டு வியந்த நிலையில் அவரைப் பிரிந்து, கடல் கடந்துசென்று வாணிபம் செய்து, பொருளீட்டி மீண்டுவந்து, தன் மனைவியாகிய காரைக்காலம்மையாருக்குக் கூட அறிவிக்காது இன்னொரு பெண்ணைத் திருமணம் செய்துகொள்கின்றான்.[50] திருநீலகண்டநாயனார் கற்பினுக்கேற்ற மனைவியைப் பெற்றிருந்தும், பரத்தையர்பால் அணுகிவருகின்றார். திருமூலர் சமுதாயத்தில் சில கொடியோர்கள் தம் மனைவியை வருந்தும்படி விட்டுவிட்டுப் பிறன் மனைவியை விரும்பிப் புளிய மரக்கொம்பிலேறிப் பயன் எய்தாது கீழே வீழ்ந்து கால் ஒடிகின்றரே என வருந்துகின்றார்.[51] திருமங்கை ஆழ்வார் பிறன்

பொருள், தாரம் என்றிவற்றை நம்பினார் இறந்தால் நமன் தமர் பற்றி எற்றி வைப்பர் என எச்சரிக்கைக்குரல் எழுப்புகின்றார். இவற்றால் அக்காலச் சமுதாயத்தில் ஆடவர்களில் சிலராவது தம் செல்வச் செழிப்பின் மேலோங்கிய நிலையாலும், ஆணாதிக்க நிலையாலும் பல மனைவியரைக் கொண்டிருத்தல், பரத்தை உறவு கொண்டிருத்தல், பிறன்மனை நயத்தல் போன்ற செயல்களுக்குள்ளாயிருந்தனர் என்று எண்ணத்தோன்றகின்றது. சமுதாயம் இச்செயல்களால் ஆடவர்களின் கற்புக்கு இழுக்கு நேரிடும் என எண்ணி அவர்களைக் கண்டிக்கவில்லை. ஆனால் பெண்களின் கற்புக்கே முக்கியத்துவம் கொடுக்கின்றது. கற்பு நிலை என்று சொல்ல வந்தால் அதை இரு கட்சிக்கும்பொதுவில் வைப்போம் என்ற பாரதியாரின் சிந்தனையின் வழிநின்று நோக்கும் போது இவை சமுதாயத்தில் காணப்பெற்ற ஆண், பெண் சமத்துவமற்ற நிலையையே காட்டுகின்றன எனலாம்.

சமுதாயத்தில் நிலவிய இச்சமத்துவமற்ற நிலையைக் கண்ணுற்ற பக்தி இலக்கியச் சான்றோர்கள் பிறன்மனை நயத்தல் கொடிய செயல் என்றும், பரத்தை உறவு ஒருவனை நரகில் தள்ளித் துன்புறுத்தும் என்றும் அக்காலச் சமுதாயத்தில் வாழ்ந்த ஆடவர்களுக்கு அறிவுரை கூறுகின்றனர் எனலாம். சிறுத்தொண்டர் வீட்டில் இல்லாத சமயம் அவர் வீட்டில் தங்குதல் தவறு எனக் கூறித் திரும்புவதாகக் காட்டுதல் கற்பு நெறியை ஆடவர் உள்ளத்தில் பதியச் செய்வதற்கு மேற்கொண்ட முயற்சியின் விளைவே எனக் கூறலாம்.

## ௯. ௨. ௨. சார்ந்து வாழும் நிலை

அக்காலச் சமுதாயத்தில் பெண்கள் தம் இளமைப் பருவத்தில் தந்தையையும், திருமணத்திற்குப் பின்பு கணவனையும் சார்ந்து வாழும் நிலையிலேயே வாழ்ந்துள்ளனர் என எண்ணமுடிகின்றது. சிவநேசர் தம் மகளாகிய பூம்பாவை விடம்ஏறி இறந்துவிட்டமையைக் கண்ணுற்று மனம் வருந்தி, பூம்பாவையின் விடத்தை நீக்கி உயிர்பெறச் செய்பவர் யாவராயினும் அவருக்கு அவளை மணம் செய்துகொடுப்பேன் என அறிவிக்கின்றார்.[53] திருஞானசம்பந்தரின் அருட்செயலினால் பூம்பாவை மீண்டும் உயிர்பெற்றெழுகின்றாள். இதனால் சிவநேசர் பூம்பாவையை மணம்புரிந்தருளுமாறு சம்பந்தரிடம் வேண்டுகின்றார். சம்பந்தர் அவளுக்குத் தான் தந்தை முறையே ஆதல் பற்றி மணம் புரிய மறுக்கின்றார்.[54] திருநாவுக்கரசரின் தமக்கையார் திலகவதியார் தமக்குத் திருமணம் செய்விப்பதற்காக நிச்சயிக்கப்பெற்றவர் போரில் இறந்துவிட்ட செய்தியைக் கேள்வியுற்று என் தந்தையும் தாயும் அவர்க்கே என்னைக் கொடுக்க இசைந்த வகையால் நான் அவர்க்கே உரியது என்று கூறுகின்றார்.[55] பெண்ணின் இசைவினைக் கேட்ட பின்பே திருமணம் செய்துகொடுக்க இசைந்தனர் என்று கருதுவதற்குரிய குறிப்புக்கள் காணப்பெறவில்லை என்பது இவண் சுட்டுதற்குரியது ஆகும். இதனைப் போன்று மானக்கஞ்சாற நாயனார் இறையடியார் வேண்டியதற்கிணங்கத் தன் மகளின் கூந்தலை அரிந்துகொடுக்கின்றார்.[56] இவற்றால் பெண்கள் திருமணத்திற்கு முன்பு தந்தையின்வழி நடந்துவந்தனர் என்பதும், மணம் இசைந்து மகட்கொடை கொடுப்பதில் குடும்பத் தலைவராகிய தந்தையே முற்பட வருகின்றார் என்பதும்

புலனாகின்றன. திருமங்கை ஆழ்வார் மகளைப் பிரிந்த தாயின் கூற்றாக வைத்து என் சிறகின் கீழ் அடங்காப் பெண்ணைப்பெற்றேனாகையால் இங்கு நின்றதொரு பழியை யடைத்தேன் என இரங்கிக் கூறுகின்றமையும்[57] இவண் சுட்டுதற்குரியதாகும்.

திருஞான சம்பந்தர் வரலாறு கூறும் பகுதியுள் வணிகன் ஒருவனும், இளம்பெண் ஒருத்தியும் காதல்கொண்டு திருமணம் செய்யும் நோக்கமுடன் வீட்டைவிட்டு வெளியேறி வந்துவிடுகின்றனர். வரும் வழியில் அவ்வணிகனைப் பாம்பு தீண்டிவிடுகின்றது. இதனைக் கண்டு அஞ்சிய அப்பெண் தான் தந்தையையும், தாயையும் பிரிந்து தன் காதலனையே சார்பாக அடைந்து உடன் போந்ததாகவும் அவனும் விடத்தால் தன்னைப் பிரிந்துவிட்டதாகவும் புலம்பி அழுது இனி வாழ்வதில் பயனில்லை என அரற்றுகின்றாள்.[58] ஆனிரை மேய்க்கச் சென்றவன் இறந்துவிட, அதைக்கண்ட பசுக்கள் துன்பமுற்று வாடி நிற்கின்றன. பசுக்களின் துன்பத்தைத் துடைக்க எண்ணிய யோகியர் ஆனிரை மேய்ப்பவனாகிய மூலனின் உடம்பில் புகுந்து ஆனிரைகளை ஓட்டி வருகின்றார். தன் கணவன் காலம் தாழ்த்திவருவதாக எண்ணிய ஆனிரை மேய்ப்பவனின் மனைவி அவன் பக்கம் சென்றதும் யோகியர் ஒதுங்குகின்றார். இவ்விடத்தில் அப்பெண் மக்களுடன் அருஞ்சுற்றம் இல்லாதவள் எனச் சுட்டப்பெறுகின்றாள்.[59] உன் கையில் சேர்ப்பிக்கப்பெறும் இப்பெண் உனக்கே அடைக்கலம் என்று திருமணக் காலத்தில் பண்டு தொட்டே வழங்கிவரும் சொல்லைப் புதுப்பிக்கும் வாயிலாக எழுந்த என் நடுக்கம் காரணமாக ஒரு விண்ணப்பம் செய்கின்றேன் என்று மாணிக்கவாசகர் பாடுகின்றார்.[60] இவற்றால் திருமணத்திற்குப் பின்னர் ஒரு பெண் தன் கணவனையே சார்பாகக் கொண்டு வாழ்ந்தமை வெளிப்படுகின்றது.

## 9. 2. 3. கணவனால் கைவிடப்பெறும் நிலை

திருநீலநக்கநாயனாரின் மனைவி இறைவனின் திருவுருவில் சிலம்பி விழுந்தமையைக் கண்ணுற்று, அன்பின் மிகுதியினால் ஆற்றமாட்டாது தன் வாயினால் ஊதி அதை அப்புறப்படுத்துகின்றார். இச்செயலை அருகில் நின்று பார்த்துக்கொண்டிருந்த திருநீலநக்கர் தன் மனைவி வாயினால் ஊதியமையால் இறைவனின் திருவுருவில் எச்சில் படிந்துவிட்டமையுடன் பூசனைக்காக வைக்கப்பெற்றிருந்த பொருள்களும் தூய்மை இழந்துவிட்டன என எண்ணிக் கடிக்கின்றார். இத்துடன் அமையாது உன்னை இனி யான்துறந்தனன் எனக் கூறித் தன் மனைவியை விட்டுவிட்டுத் தான் மட்டும் இல்லம் சென்றடைகின்றார்.[61] இந்நிகழ்ச்சி சமய நோக்கில் பார்க்கும்போது திருநீலநக்க நாயனாரின் இறையன்பைப் புலப்படுத்துகின்றதெனினும், சமுதாய நோக்கில் பார்க்கும்போது அன்பர்கள் செய்த பிழைகளை எல்லாம் பொறுத்து ஆட்கொள்பவன் எனப் போற்றப்பெறும் இறைவன் மீது தன்னையே தெய்வமாக மதித்துப் போற்றும் தன் மனைவி இறைவன்பால் கொண்ட அன்பின் காரணமாக, சிலம்பியை அகற்றவேண்டும் என்ற உயர்ந்த உள்ளமுடன் ஊதியமைக்காகக் காலமெல்லாம் காக்கவேண்டிய கணவன் கணப்பொழுதில் தம் மனைவியைத் துறந்துவிட்ட

செயல் சமுதாயத்தில் பெண்கள் அடைந்திருந்த தாழ்நிலையின் வெளிப்பாடே எனக் கூறலாம். அக்காலச் சமுதாயத்தில் பெண்கள் தன் கணவனின் பிறன்மனை நயக்கும் இழிசெயல் காரணமாகவும் கணவனால் கைவிடப்பெற்ற நிலைக்குள்ளாயிருந்தனர் என்பதைத் திருமங்கையாழ்வார் பிறன்மனை நயந்து, வம்புலாங்கூந்தல் மனையைத் துறக்கும் செயலைக் கண்டிக்குமாற்றாலும்[62] உணரமுடிகின்றது.

## 9. 2. 4. கைம்மை, சதி போன்றனவற்றிற்கு ஆளாதல்

கணவனை இழந்த பெண்கள் தலைமயிரை மழித்தல், *மங்கலப்பொருட்களை இழத்தல், அணிகலன்களை நீக்குதல், குறிப்பிட்ட உணவு* வகைகளை மட்டும் உண்ணுதல் போன்ற நிலைகளில் கைம்மை நோன்பு நோற்று வாழ்ந்த துன்ப நிலையைச் சங்க இலக்கியத்திலேயே காண்கின்றோம். கணவனை இழந்த பெண்கள் கைம்மை வாழ்க்கை வாழ்ந்துள்ளமையைப் பக்தி இலக்கியமும் வெளிப்படுத்துகின்றது. திருநாவுக்கரசரின் தமக்கையார் திலகவதியார் தனக்கு மணம் முடிப்பதற்காகப் பெற்றோர்களால் உறுதி செய்யப்பெற்ற கலிப்பகையார் போரில் வீரமரணம் அடைந்துவிட்டார் என்ற செய்தியைக் கேள்வியுற்றதும் திருமணம் ஆகாவிடினும் அவரே என கணவர் எனக் கொண்டு உயிர்விடத் துணிகின்றார். இச்செயலைக் கண்ட உறவினர்களும் பெரியோர்களும் நாவுக்கரசரின் நிலையை எடுத்துக் கூறி, அவர்பொருட்டாவது வாழவேண்டும் எனத் திலகவதியாரிடம் வலியுறுத்தி வேண்டுகின்றனர். அவர்களுடைய கருத்திற்கிசைந்த திலகவதியார் கணவனை இழந்த பெண்கள் மேற்கொள்ளுதற்கேற்பப் பொன், மணி, உடையநாண், பூண் போன்றவற்றை ஒழித்து மனையிலிருந்து தவம் செய்யும் கைம்மை வாழ்க்கை நடத்துகின்றார்.[63] திருநாவுக்கரசர் பெருமானும் இறைவனைக் கைம்மையைத் தவிர்த்து மங்கலம் அளித்த கருணையே எனப் புகழ்ந்து ஆண்டவன், அடியார் வாழ்க்கையிலும்கூட உலகியல் வாழ்க்கையில் நிலவிய கைம்மை வாழ்க்கையை எதிரொலித்துப் பாடுகின்றார்.

இதனைப் போன்று கணவன் இறந்ததும் உயிர்விடும் வழக்கமும் *சிலரிடையேயாவது காணப்பெற்றமையைச் சங்க* இலக்கியத்திலேயே காண்கின்றோம். கணவன் இறந்ததும் மனைவியும் உயிர்விடுவதைச் சதி எனக் குறித்தனர். சதி என்ற சொல்லிற்கு விதவைகள் தாமாகவே தற்கொலை *செய்துகொள்ளுதல் (self-immolatation)* என்ற விளக்கம் அளிக்கப்பெறுகின்றது. கணவனுடன் உயிர் நீப்பவரை மாசாத்தி என்றும், அவர்பொருட்டு நடப்படும் நினைவுக்கல்லை மாசாத்திக்கல் என்றும் வழங்குவர். வடவர் இதனை அகமனம் என்பர். திருநாவுக்கரசரின் தாயார் மாதினியார் தன் கணவன் புகழனார் இறந்ததும் தானும் உயிர்விட்டு விடுகின்றார். இச்செயல் கற்புநெறி வழுவாமல் கணவனாருடன் சென்றார் எனக் குறிக்கப்பெறுகின்றது.[64] இதனால் கணவன் இறந்ததும் கைம்மை வாழ்வு வாழ்தலைப் போல் உடன் உயிர் விடுதலையும் கற்புநெறியாகச் சமுதாயம் கருதியமை தெளிவாகின்றது. நம்மாழ்வார் தலைவனைப் பிரிந்த தலைவி பிரிவுத்துயரைத் தாங்கமாட்டாத நிலையில் புலம்புவதாக

அமைத்துப் பாடிய பாடலில் பாம்பணையான் வாரானேல் என் ஆவி காப்பார் இனி யார் என்றும், காகுத்தன் வாரானேல் வாழும் வகை அறியேன் என்றும் புலம்புவதாகக் காட்டுகின்றார்.[65] இதுவும் கணவனைப் பிரிந்த பெண்கள் தனித்து வாழும் வாழ்க்கையை விரும்பாமல் உயிர்விடத் துணிந்த நிலையையே காட்டுவதாகத் தோன்றகின்றது.

பெண்கள் கணவன் இறந்ததும் தாமும் உயிர்விடத் துணிந்தமைக்குரிய காரணங்களாக அடுத்த பிறப்பில் அவனையே கணவனாக அடையலாம் என்ற நம்பிக்கையையும், கணவனுடன் உயிர்விட்டால் மேலுலகம் கிட்டும் என்ற நம்பிக்கையையும் கூறுவர். ஆனால் உலகியல் நிலையில் நின்று பார்க்கும்போது கணவனின்றி வாழமுடியாது என்ற காதல் உள்ளம் மட்டுமன்றிக் கணவனை இழந்த பெண்கள் மேற்கொண்ட கைம்மை வாழ்க்கையை வெறுத்த நிலையில் இவ்வாழ்க்கை வாழ்வதைவிட இறத்தலே மேலானது எனத் துணிந்த உளவியல் காரணமே ஏற்புடையதாக உள்ளது. சோழப்பேரரசர்கள் காலத் தமிழகத்தில் கணவனுடன் பெண்கள் உயிர்விடும் வழக்கம் இருந்தமைக்குக் கல்வெட்டுச் சான்றுகள் கிடைக்கின்றன.[66] சுந்தரச் சோழன் இறந்ததும் அவன மனைவியும் முதலாம் இராசராசசோழனின் தாயுமான வானவன்மாதேவி உடன்கட்டையேறியமையைத் திருவாலங்காட்டுச் செப்பேடு செப்புகின்றது.[67] கங்கைகொண்டசோழமன்னனின் மனைவியும் உடன்கட்டை ஏறியமையை வட ஆர்க்காடு மாவட்டத்திலுள்ள பிரம்மதேசம் என்ற ஊரிலுள்ள கல்வெட்டு பகர்கின்றது.[68] கணவனை இழந்த பெண்கள் பரிசுத்தமாய்க் கைம்மை நோன்பு மேற்கொண்டு வாழ இயலாதென்றால் தகனபீடம் ஏறுதலே மேல் என்று வடமொழியிலுள்ள தருமநூல்களும் பகர்கின்றன. இவற்றால் கணவனை இழந்த பெண்கள் கைம்மை நோன்பு நோற்றல், உடன்உயிர் விடுதல் போன்ற சமூக இன்னல்களுக்கு ஆளாயினமை புலனாகின்றது. ஆனால் இவ்வாறு வாழும்படி வலியுறுத்தப்பெற்றனர் என்பதற்குச் சான்றுகள் காணப்பெறவில்லை. எவ்வாறாயினும் இவை பெண்ணினம் அடைந்த அல்லல்களே எனக் கொள்ளலாம்

### 9. 2. 5. கணவனைத் தேர்ந்தெடுக்கும் உரிமையின்மை

கணவனைத் தேர்ந்தெடுப்பதில் பெண்ணின் தந்தை அல்லது பெற்றோர்களே முழு உரிமைபெற்றிருந்தனர். பெற்றோர்களின் விருப்பத்திற்கெதிராகத் தாம் விரும்பிய ஆடவனைக் கணவனாகத் தேர்ந்தெடுக்கும் உரிமையைப் பெண்கள் பெரும்பாலும் பெற்றிருக்கவில்லை என எண்ண இடமுள்ளது. வணிகன் ஒருவனை விரும்பிய பெண்ணொருத்தி அவனுடன் தன் வீட்டை விட்டுப் புறப்பட்டு வந்துவிடுகின்றாள். வரும் வழியில் அவன் விடமேறி இறந்துவிடுகின்றான். அவள் புலம்பி அழுது நிற்கும் நிலையில் திருஞானசம்பந்தர் பெருமான் திருமருகலுக்கு எழுந்தருளுகின்றார். அவரிடம் அப்பெண் வந்துநின்று அழுது புலம்பித் தன்னுடன் வந்த அவ்வணிகனை உயிர்ப்பித்துத் தந்தருளுமாறு வேண்டுமிடத்துத் தன் வரலாற்றையும் எடுத்துரைக்கின்றாள். தாமன் என்பவனுக்குத் தான் மகள் என்றும், தன் தந்தைக்கு ஏழு பெண்கள் உள்ளனர் என்றும், தன்னுடன் வந்த அவ்வணிகனிடம்

தன் தந்தை தன் முதற்பெண்ணைத் திருமணம் செய்துகொடுப்பதாக வாக்களித்துவிட்டு இறுதியில் எதிலான் ஒருவனுக்கு உளம்பெருகத் தனம் பெற்று மணம் செய்து கொடுத்துவிட்டான் என்றும், தன்னை ஒழியப் பிற பெண்கள் அனைவரையும் இவ்வாறே தனம் பெற்று மணம் செய்து கொடுத்துவிட்டான் என்றும், தனக்கும் இந்நிலை ஏற்பட்டுவிடக்கூடாதே என எண்ணி அவனுடன் வீட்டைவிட்டுப் புறப்பட்டு வந்துவிட்டேன் என்றும் கூறுகின்றாள்.[69] சிவநேசர் தன் மகள் பூம்பாவையின் உயிரை மீட்டுத் தருபவர் யாவராயினும் அவருக்கு என் மகளை மணம்செய்து கொடுப்பேன் என அறிவிக்கின்றார்.[70] இந்நிகழ்ச்சிகள் பெண்கள் தம் விருப்பப்படி மணமகனைத் தேர்ந்தெடுக்கும் உரிமையற்ற நிலையில் காணப்பட்டனர் என்பதுடன் அவர்களுடைய உள்ளத்தை அறியாமலேயே பெற்றோர்களால் மணமகனைத் தேர்ந்தெடுத்து முடிவுசெய்யும் நிலையில் வாழ்ந்துள்ளனர் என்பதையும் காட்டுகின்றன. மேலும், மணப்பெண்ணுக்குப் பொருளைப் பெற்றுக்கொண்டு திருமணம் செய்து வைக்கும் வழக்கமும் தெரியவருகின்றது. வட ஆர்க்காடு மாவட்டத்திலுள்ள படைவீட்டைத் தலைநகராகக் கொண்டு சோழமன்னருக்கு அடங்கித் தொண்டைநாட்டின் ஒருபகுதியைச் சம்புவராயர் என்ற சிற்றரசர் ஆண்டுவந்தார். அப்பகுதியுள் தமிழர், கன்னடர், தெலுங்கர் எனப் பல பிரிவினர் வாழ்ந்துவந்தனர். இவர்களுக்கிடையே ஒரு காலத்தில் மணப்பெண்ணுக்காகப் பொருள் பெற்றுக்கொண்டு திருமணம் செய்து கொடுக்கும் வழக்கம் காணப்பெற்றது. பொருள் கொடுத்துத் திருமணம் செய்து கொள்ள இயலாத வறுமைநிலை அடைந்தவர்கள் அல்லல் உற்றனர். இந்நிலையைக் கண்டு இம்முறை மாற்றியமைக்கப்பெற்றமையைக் கல்வெட்டுச் செய்திகள் உணர்த்துகின்றன.[71] மேலும் இவ்வழக்கத்தால் முறையற்ற மணங்கள் பல நிகழவும் வாய்ப்பு ஏற்பட்டது.

பெற்றோர்களின் விருப்பத்திற்கெதிராகத் தாம் விரும்பிய ஆடவனைக் கணவனாகத் தேர்ந்தெடுத்த பெண்கள் பழிக்கப்பெற்றனர் எனக் கருதுவதற்குரிய குறிப்புக்களும் கிடைக்கின்றன. நாச்சியார் திருமொழியில் காணப்பெறும் தந்தையும், தாயும், உற்றாரும் நிற்கத் தனிவழி போயினாள் என்ற சொல் வந்தபின் அதனால் வரும் பழியைக் காப்பது அரிது எனவரும் கருத்தைச்[72] சான்றாகக் கூறலாம். கண்ணன் ஆனிரை மேய்க்கச்செல்லுவதைக் கண்ட பெண்ணின் கூற்றாகத் திருமாலிருஞ்சோலையில் எழுந்தருளியுள்ள எங்கள் மாலுக்கன்றிப் பிறர் ஒருவருக்கு என்னைப் பேசல் ஒட்டேன் என்றும், கொற்றவனுக்கு இவள்தான் என்று என்னை இவனுக்கு மணம் செய்து கொடுக்காதிருந்தால் கோழம்பமே என்றும் வருவனவற்றை[73] நோக்கும்போது இவ்வரிகள் பெண்களின் மன உணர்ச்சிகளையும், தாம் விரும்பியவனைத் திருமணம் செய்யும் உரிமையற்ற நிலையின் விளைவாகிய மனக் கொதிப்பையும் வெளிப்படுத்துகின்றன என்பது புலனாகின்றது.

மணமகனிடமிருந்து பொருள் பெற்றுப் பெணணைத் திருமணம் செய்து கொடுப்பதைப் போன்று மணமகனுக்கும் பொருள் கொடுத்தும் திருமணம் செய்துகொடுக்கும் வழக்கமும் காணப்பெற்றது. காரைக்காலம்மையாரின் திருமணத்தின் போது மகட்கொடையின் மகிழ்சிறக்கும் வரம்பில் தனம் கொடுக்கின்றனர்.[74] இந்நிலையைப் பெரியாழ்வாரும் அகத்தலத்துள்ள மாடழியக்

கண்ணாலங்கள் செய்து இவளை வைத்துக்கொண்டு என்ன வாணிபம் என வினவுவதன் மூலம் வெளிப்படுத்துகின்றார் எனலாம்.[75] இவ்வாறு மணப்பெண்ணுக்குக் கணவனாக அமையும் ஆடவனுக்குப் பொருள் கொடுக்கும் நிலையே பெண்ணுரிமை சிறக்கவில்லை என்பதைக் காட்டுவதாகக் கருதலாம். வயிராபுர் ஒருவர் தன் மனைவி மகட்கொடையாகப் பல்வேறு பொருட்களுடன் அடிமைகளையும் கொண்டுவந்தமையைக் கல்வெட்டுச் செய்தி காட்டுகின்றது.[76] இதனால் பெண்கள் பொருள் மட்டுமன்றி அடிமைகளையும், ஏனைய பிறவற்றையும் மகட்கொடையாகக் கொண்டு வந்தமை புலனாகின்றது.

## 9. 2. 6. கணவன் தவறைத் தட்டிக்கேட்கும் உரிமையின்மை

திருநீலகண்டநாயனார் பரத்தையிடம் அணுகிவந்ததைக் கண்ட அவர் மனைவி மானத்தால் வந்த மன வருத்தத்தை ஆற்றமாட்டாதவளாகி ஊடல் கொள்கின்றாள். எனினும், மனை வாழ்க்கையில் ஆற்றவேண்டுவனவாகிய அனைத்துக் கடமைகளையும் விதிப்படி செய்து முடித்து, மெய்யுறு புணர்ச்சிக்கு மட்டும் இசையாதிருக்கின்றாள்.[77] இவள் திருநீலகண்டர் தனக்கு மட்டுமே உரியவராக இருக்கவேண்டிய நிலையில் பரத்தையை அணுகி வந்தமை தவறு என்பதையும், ஆடவர் கற்புக்கு இழுக்கு என்பதையும் அவர் மனைவி நனகு உணர்கின்றாள். அதனால் ஏற்பட்ட மான உணர்ச்சியில் குன்றிப்போகின்றாள். மிக்க மனவருத்தம் கொள்கின்றாள். கணவனுக்குத் தொண்டு செய்வதே கற்புடைய பெண்ணின் கடமை எனச் சமுதாயம் விதித்த அறிவுரையை மனங்கொண்டு இல்லறக் கடன்களை நிறைவேற்றுகின்றாள். இவ்வாறு கணவன் செய்தது தவறு என எண்ணி உள்ளம் வருந்திய நிலையிலும், அத்தவற்றைத் தட்டிக் கேட்கும் உரிமை இல்லாமையால் தன்னால் இயன்ற அளவுக்கு மெய்யுறு புணர்ச்சியை மட்டுமே தடை செய்கின்றாள். இந்நிகழ்ச்சியும் பெண்களின் உள்ள நிலையை வெளிப்படுத்துவதாகக் கொள்ளலாம்.

## 9. 2. 7. ஆடவரின் உரிமைப் பொருளாய்க் கருதப்பெறல்

அடியார் உருவில் வந்த இறைவன் இயற்பகை நாயனாரின் மனைவியைத் தானமாகக் கேட்டபோது அவர் இது எனக்கு முன்பு உளதே என்று மனமகிழ்ச்சியுடன் மனைவியைத் தானமாகக் கொடுக்க இசைகின்றார். அமர்நீதி நாயனார் இறைவன் கொடுத்த கோவண ஆடையை மீண்டும் அதே நிலையில் திருப்பிக் கொடுக்காத காரணத்திற்காக இறைவன் கூறியதற்கேற்ப அக்கோவண ஆடையை ஒரு தட்டிலிட்டு, அதற்கு இணையாகத்தன் மனைவியையும் குழந்தையையும் மற்றொரு தட்டில் அமரச் செய்து தானும் உடன் அமர்கின்றார்.[78] கலியநாயனார் இறைத்தொண்டு புரியத் தன் கையில் பொருளில்லாத நிலையில் வீட்டிலுள்ள அனைத்துப் பொருட்களையும், தம் பிற உடைமைகளையும் விற்கின்றார். பின்னரும் வறுமை நீங்காத நிலையில் செப்பருஞ்சீர் மனையாளை விற்க முயல்கின்றார். மனமகிழ்ச்சியுடன் மனையாளைக் கொண்டு வளநகர் சென்றும் தனம் அளிப்பவர் எவரும் இல்லாதது கண்டு தளர்வெய்துகின்றார்.[79] முற்கூறிய நிகழ்ச்சிகள் அடியார்களின் எல்லையற்ற இறைப்பற்றைக் காட்டுகின்றன

எனக்கொள்ளினும், பெண்கள் தம் கணவனால் தானமாகக் கொடுக்கப்பெறுதல், விற்கப்பெறுதல் போன்ற இழிநிலைகளுக்குள்ளாகிக் கணவனின் உடைமைப்பொருள்களில் ஒன்றாகக் கருதப்பெற்றிருந்தனர் என்பதையும் காட்டத் தவறவில்லை எனக் கூறலாம்.

இயற்பகையாரிடம் இறைவன் மனைவியைத் தானமாகக் கேட்டதும் இது எனக்கு முன்பு உளதே என அஃறிணையில் கூறுதல் வீட்டிலுள்ள பிற தட்டுமுட்டுச் சாமான்களுக்கும் மனைவிக்கும் எவ்வித வேறுபாடும் கருதாத அவருடைய மன நிலையையே காட்டுகின்றது என்பதை உணரலாம்.[80] மேலும், அவர் தன் மனைவியிடம் சென்று உன்னை முதியவர்க்குக் கொடுத்துவிட்டேன் என்று கூறியதும், அதனைக் கேட்ட அவர் மனைவி முதலில் மனம் கலங்குகின்றாள. இது பெண்ணினத்தின் மனப்போக்கைக் காட்டுகின்றது. தன்னைக் காக்க வேண்டிய தன் கணவனே தானமாகக் கொடுத்துவிட்டானே என்ற சிந்தனையால் விளைந்த கலக்கம் இது. பின்பு கணவன் சொற்படி நடத்தலே மனைவியின் கடன் என்ற சமுதாய நியதியை உணர்ந்து தெளிகின்றாள்.[81] இவ்வாறு மனம் தெளிவடைந்ததும் நீர் உரைத்த ஒன்றை நான் செய்யும் அதனை அல்லால் உரிமை வேறு உளதோ என்கின்றாள். இதனால் பெண்கள் கணவன் கூற்றை ஏற்று நடத்தலைத் தவிர வேறு தன் விருப்பப்படி செயலாற்றும் உரிமையற்ற நிலையில் வாழ்ந்துள்ளமை புலனாகின்றது. கணவனின் உரிமைப் பொருளாகச் சமுதாயம் பெண்ணைக் கருதியநிலையில் விரும்பினும் விரும்பாவிடினும் செய்துதான் ஆகவேண்டும் என்று பெண்டிர்குலம் நினைக்கும் நினைப்பின் எதிரொலியாக இயற்பகை நாயனாரின் கூற்று அமைந்துள்ளது எனக் கொள்ளலாம். இத்துடன் அமையாது இனி யான் செய்வது யாது என இயற்பகையார் அடியவரிடம் வினவுகின்றார். அதற்கு அடியார் நான் இவளைத் தனியாகக் கொண்டு செல்லும்போது சுற்றத்தவர்களும், பதியவர்களும் தடுக்காதபடி துணையாக வருமாறு வேண்டுகின்றார்.

சமுதாயத்தில் கணவன் தன் மனைவியைப் பிற ஆடவருக்குத் தானமாகக் கொடுத்தல் இழிவான, கண்டிக்கத்தக்க செயலாகையால் சுற்றத்தவர்களும், பதிபவர்களும் தடுத்தல் இயற்கையே என எண்ணியே அடியார் இவ்வாறு வேண்டினார் எனக் கொள்ளலாம். அவர் வேண்டியவாறே இயற்பகையாரும் அடியாருக்குத் துணையாக நின்று காத்துச் செல்கின்றார். இதைக்கண்ட சுற்றத்தினர் இதுபோன்ற செயலை யாரும் செய்யத் துணியமாட்டாராகையால் இவனைப் பித்தம்கொண்டுவிட்டதெனக் கடிந்துரைக்கின்றனர்.[82] திருநாவுக்கரசரின் தமக்கையார் திலகவதியார் தனக்கு மணம் பேசியவர் இறந்த செய்தியைக் கேள்வியுற்றதும் நான் அவர்க்கே உரியது எனக் கூறுவதாலும் பெண்கள் கணவனின் உரிமைப்பொருளாகக் கருதப்பெற்றிருந்த நிலை வெளிப்படுகின்றது. இந்த இழிநிலையினைக் கண்ணுற்றே திருமூலர் வாழ்க்கையில் துணையாக நின்று செயலாற்றும் கற்புடைய மனைவியை வீட்டையும் குடும்பத்தையும் காக்கும் கருவிப்பொருள் என ஆடவர் எண்ணி அவர்களை இழிவாக நடத்தும் செயலை வன்மையாகக் கண்டிக்கின்றார்[83] எனக் கூறலாம்.

## 9. 2. 8. பெண்ணினத்தின் இழிநிலை

தலைவனைப் பிரிந்த தலைவி புலம்புவதாக அமையும் பாடல் ஒன்றில் பெண் பிறந்தார் எய்தும் பெருந்துயர் காணேன் என்று ஒண்சுடரோன் வாராதொழிந்தான் என வருந்துவதாகத் தற்குறிப்பேற்றம்பட வருணிக்கப்பெறுகின்றது.[84] இவண் பெண் பிறப்பு துன்பப்பிறப்பு என்ற எண்ணம் வெளிப்படுத்தப்படுகிறது. பெண்ணினத்துள் பரத்தையர் என்ற பிரிவைச் சமுதாயம் படைத்ததைப் பெண்ணினத்தின் இழிநிலையைக் காட்டுவதாகக் கொள்ளலாம். செல்வவளமிக்க ஆடவர்கள் தம் உடல் உணர்ச்சிகளைப் போக்கிக்கொள்ளும் வடிகால்களாக இப்பரத்தையர் மதிக்கப்பெற்றனர். மேலும் இப்பரத்தையரின் உளநிலைகளும், செயல்களும் பல்வேறு நிலைகளில் இகழ்ந்துரைக்கப்பெறுகின்றன. காளையர்களைத் தங்கள்பால் ஈர்த்து, ஏய்த்து உண்பவர்கள் என்றும்,[85] இழிந்தவர்களாயினும் உயர்ந்தவர்களாயினும் வேற்றுமை பாராட்டாது எண்ணெய் ஆட்டுவோர் தாம் பெற்ற எள்ளிற்கேற்ப எண்ணெய் கொடுப்பது போலத்தாம் பெறும் பொருளுக்கேற்ப உடனுறையும் இன்பத்தை விலையாகக் கொடுத்து இரக்கம் சிறிதும் இல்லாதவர்களாய் விளங்குபவர்கள் என்றும்,[86] தந்தை யாரெனத் தெரியாது, நாட்டுக்கும் வீட்டுக்கும் பயன்படாதவராய் வாழ்பவர்கள் என்றும் [87] இழித்துரைக்கப்பெறுகின்றனர். இவை பெண்ணினத்தின் இழிவே எனலாம்.

திருமூலர் பத்தினிப்பெண்களைச் சித்தம் கலங்குமாறு தீமைகள் செய்த கொடியவர்கள் பொருளும் உயிரும் ஓராண்டிற்குள் நீங்கக் கொடிய நரகத்தில் வீழ்ந்து வருந்துவர் என இடித்துரைக்கின்றமையால்[88] சமுதாயத்தில் பெண்கள் ஆடவர்களால் - கணவனால் - கொடுமைப்படுத்தப் பெறும் நிலைக்குள்ளாயிருந்தனர் என எண்ணத் தோன்றுகின்றது. பெண்கள் சிறு தவறுகள் செய்யினும் கணவனால் கடுமையாகத் தண்டிக்கப்பெற்றனர். கலிகம்பர் தன் மனைவி இறையடியார் முன்னர் வருவதற்கு நாணம் கொண்டு நீர்கொண்டு வரவில்லை என எண்ணி வடிவாளை எடுத்துக் கையை வெட்டி விடுகின்றார். பிற ஆடவர் யாவராயினும் அவர்களுடைய முன்னர் வருவதற்கு நாணம் கொள்ளுதல் பெண்ணினத்தின் இயற்கைப் பண்பாகும். இதனைக் கூட எண்ணிப்பாராது தன் மனைவி என்று சிந்திக்காது கைகளை வெட்டிவிடுகின்றார். நாட்டில் பெரும் பஞ்சம் வந்து வாட்டியபோது இறைவன் கோயிலுக்கு அமுதுபடி செய்வதற்காக வைத்திருந்த நெல்லை உறவினர்கள் உண்டுவிட்டமையை அறிந்து கோட்புலி நாயனார் தந்தை, தாய் உடன்பிறந்தார், சுற்றம், தாரம் அனைவரையும் கொன்றுவிடுகின்றார்.[90] கழற்சிங்கன் என்ற மன்னனின் மனைவி திருக்கோயிலினுள்ளே தாமத்திற்காக வைக்கப்பெற்றிருந்த மலர்களில் ஒன்று மண்டபத்தின் அருகில் வீழ்ந்து கிடக்க, அதை எடுத்து முகர்ந்தமைக்காகச் செருத்துணையார் அப்பெண்ணின் மூக்கை அரிந்துவிடுகின்றார்.[91] இதை அறிந்த மன்னன் செருத்துணையாரிடம் நீர் கொடுத்தது ஏற்ற தண்டனையே எனக் கூறியதுடன் அமையாது தானும் தன் மனைவியின் கைகளை வெட்டிவிடுகின்றான்.[92] மன்னன் மனைவி என்றுகூட எண்ணிப்பார்க்காது மூக்கை அரிந்த செயலும், அதனைக் கணவனே பாராட்டிய செயலும்

பெண்ணினத்தின் இழிநிலையையே காட்டுகின்றன. சமுதாயத்தில் இத்தகைய நிலைகளுக்கு ஆளாயின பெண்கள் காக்கப்படவேண்டும் என்ற பேருள்ளத்துடன் திருமூலர் நாடாளும் மன்னனைப் பார்த்துப் பெண்களைக் காக்காவிடில் மீளா நரகம் கிட்டும் என எச்சரிக்கின்றார்.[93]

குலசேகரர் இறைவன் தன்னை ஆட்கொள்ளவில்லையென்றாலும் எப்போதும் தான் இறைவனின் திருவடிகளின் பெருமைகளையே கூறிக்கொண்டிருப்பதாகக் காட்டும் இடத்தில் கண்டார் இகழ்வனவே செய்தாலும் கொண்டானை அல்லால் அறியாக் குலமகளைப்போல எனத் தன் நிலைக்கு உவமை கூறுகின்றார்.[94] இவ்வுவமை பெண்கள் தம் கணவனால் பிறர் முன்னிலையில் இகழும்படியான நிலைக்கு உள்ளாகி வாழ்ந்துள்ளனர் என்பதையும், இவ்விழிநிலையையம் பொறுமையுடன் ஏற்றுக்கொண்டு கற்புநெறி வழுவாமல் வாழ்ந்துள்ளனர் என்பதையும் காட்டுவதாகத் தோன்றுகிறது.

முற்கூறியவாறு பெண்கள் சமுதாயத்தில் மிக உயர்நிலையில் வைத்துப் போற்றப்பெறினும் சிற்சில நிலைகளில் தாழ்நிலை அடைந்திருந்தனர் எனக் கொள்ளலாம்.

## 9. 3. பெண்ணின வீழ்ச்சிக்குரிய காரணங்கள்

### 9. 3. 1. மருத நில வளர்ச்சி

இனக்குழுச் சமுதாய அமைப்பில் சாதிவேறுபாடுகளோ வகுப்பு வேறுபாடுகளோ காணப்பெறாமையைப் போன்றே ஆண், பெண் பால் வேறுபாடுகளும் காணப்பெறவில்லை. வரலாற்று முறையில் நோக்கும்போது இனக்குழுச் சமுதாய அமைப்பு சிதைவுற்று நாகரிகச் சமுதாய அமைப்பு மலர்ந்த காலக்கட்டத்தில்தான் ஆண், பெண் ஆகிய இரு பாலார்களிடையே காணப்பெற்ற மதிப்பில் (status) வேறுபாடுகள் தோன்ற ஆரம்பித்துவிட்டதாகக் கருதப்பெறுகின்றது. இந்நாகரிகச் சமுதாய அமைப்பின் வளர்ப்புப் பண்ணையாக மருதநிலப் பகுதியைக் கூறுவர். இப்பகுதியின் நீர்வளமிகுதியால் உழுதொழில் சிறந்து உற்பத்திப்பொருள் உபரியாகக் கிடைக்கப்பெற்றமையால் உணவுக்காக அலைந்து திரியும் நிலை ஏற்படவில்லை.[95] எனவே, மருதநிலப் பகுதிகளில் பொருளாதார நிலையில் மேம்பட்ட ஆடவர்கள் ஆதிக்கம் மிகுந்தவர்களாகவும் பெண்களை விட உயர்வானவர்களாகவும் கருதப்பெறும் நிலை உருவாகிவிட்டது. இப்பகுதியில் ஆடவர்களுக்கு இணையான உரிமைகள் பெண்களுக்குக் கொடுக்கப்படவில்லை எனக் கருதுவர். ஏனைய நிலப்பரப்புக்களில் ஆடவரும், பெண்டிரும் பெரும்பான்மையும் சமமாகவே மதிக்கப்பெற்றிருந்தனர்.

### 9. 3. 2. தாய்வழி உரிமை அகற்றப்பெற்றமை

இனக்குழுச் சமுதாய அமைப்பில் தாய்வழி உரிமையே காணப்பெற்றது. ஆடவருக்கும் பெண்டிருக்குமிடையே உழைப்புப் பிரிவினை (Division of labour)

இருந்தது. எனவே இருபாலரும் அக்காலப் பொருளாதார நடவடிக்கைகளில் இணையான அங்கம் வகித்துள்ளனர். காலப்போக்கில் கால்நடை மந்தைகளும், செல்வமும் பெருகப்பெருகக் குடும்ப வாழ்க்கையிலும் மாறுதல்கள் நிகழத் தொடங்கின. வாழ்க்கைக்குரிய பொருளை ஈட்டுதல் ஆடவர் கடமை ஆனது. உற்பத்தித் துறைகளில் ஆடவர் பங்கு மேலோங்கியது. அதனால் கிடைக்கும் உற்பத்திப் பொருட்கள் ஆடவர் உடைமைகளாயின. வீட்டு வேலைகளைச் செய்வதிலும், குழந்தைகளை வளர்ப்பதிலும் பெண்கள் பங்குபெற்றனர். பெண்கள் தலைமையை இழக்கத் தொடங்கினர். சமுதாயத்தில் தாய்வழி உரிமை அகற்றப்பெற்றது.[96] சமூக உற்பத்தியிலிருந்து பெண்கள் விலக்கப்பெற்றனர். வீட்டாட்சியை ஆடவர்கள் கைப்பற்ற இதுவரையிலும் ஆதிக்கம் செலுத்திய பெண்கள் ஆடவர்களை விடத் தாழ்வாக மதிக்கப்பெற்றனர்.

## 9. 3. 3. சமயக் கொள்கைகளின் தாக்கம்

இறைவனை அடைவதற்கும், இறைப்பற்றை மனத்தில் வளர்ப்பதற்கும் உலகபபற்றை அறவே நீக்கவேண்டும். உலகப்பற்றுள் முதன்முதலில் மனிதனின் அறிவை இழக்கச்செய்யும் காம இன்பம் நுகர்தலாகிய செயல் வெறுக்கப்படவேண்டும். இக்கருத்தை மக்கள் மனத்தில் வலியுறுத்தவும், ஆடவர்கள் பெண்ணாசையைத் துறத்தற்கும் பெண்களை வெறுக்கத்தக்கவர்களாகக் காட்டினர். இதனால் இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை, அழகு நிலையாமை என்பனவற்றை விளக்குவதற்குப் பெண்களின் இளமை, யாக்கை, அழகு என்பனவே எடுத்துரைக்கப்பெற்றன. சமண, பௌத்த சமயங்கள் பெண்ணின வெறுப்பைப் பெரிதும் வலியுறுத்தின. பெண்கள் வீடுபேற்றுக்குத் தடையானவர்கள் என்று இழித்துரைக்கப்பெற்றனர். இதுவும் பெண்களின் தாழ்நிலைக்குக் காரணமானது எனலாம்.

## 9. 4. பக்தி இலக்கியத்துள் ஆண் – பெண் சமத்துவச் சிந்தனைகள்

பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் பெண்கள் பல நிலைகளில் உயர் சமூக மதிப்பைப் பெற்றிருந்தபோதிலும், சிற்சில நிலைகளில் தாழ்வடைந்திருந்தனர் எனப்தை அறிகின்றோம். பெண்களின் சமுதாயத் தாழ்நிலைகளைக் கண்ட பக்தி இலக்கியச் சான்றோர்கள் பெண்களுக்குச் சம உரிமை அளிக்கப்பெறவேண்டும் என்ற உயர்ந்த உளப்பாங்குடன் ஆண் - பெண் சமத்துவச் சிந்தனைகளைப் பக்தி இலக்கியத்துள் வெளிப்படுத்துமாற்றைக் காணமுடிகின்றது.

ஆடவருக்கும் பெண்டிருக்குமிடையேயுள்ள ஏற்றத்தாழ்வு நிலைகள் நீங்கிச் சரிநிகர்ச்சமமாக வாழ்க்கை நடத்தும் நிலை உருவானால் தான் சமுதாயமும், சமுதாயப் பண்பாடும் உயர்வடையும். மார்க்சியச் சிந்தனையாளர்கள் ஆண், பெண் பால் ஏற்றத்தாழ்வுகள் வகுப்புச் சுரண்டலின் கூறு என்றும், சமூகப் புரட்சி ஏற்படுவது வரையிலும் இவ்வேற்றத்தாழ்வுகளை அகற்றுதல் கடினம் என்றும் கருதுகின்றனர். ஆனால் பக்தி இலக்கியச் சான்றோர்கள் இறைவனிடம் அன்பு

செலுத்துதல் என்ற அமைதிப் புரட்சியை உருவாக்கி ஆடவர், பெண்டிர் என்ற இருபாலர்களுக்குமிடையேயுள்ள ஏற்றத்தாழ்வுகளைக் களைந்து, இறைவனின் திருமுன்னர் அனைவரும் சமம் என்ற சிந்தனையை மக்கள் மனத்தில் உருவாக்கினர். இதனால்தான் சமண, பௌத்தக் கொள்கைகளினால் வெறுத்து ஒதுக்கப்பெற்ற நிலையில் காணப்பெற்ற பெண்ணினத்தின் ஆதரவு பக்தி இலக்கியத்திற்குப் பெருமளவு கிடைத்தது. பக்தி இலக்கியம் பெண்களை இழிவுபடுத்தும் செயல்கள் செய்தல் கூடாது; பெண்களிடம் அன்பு செலுத்தவேண்டும், பரத்தையர் ஒழுக்கம் வெறுக்கத்தக்கது, பெண்கள் காக்கப்படவேண்டும், பெண்களையும் சமமாக மதிக்கவேண்டும், ஆடவர்களும் கற்புடன் வாழவேண்டும் என்பனபோன்ற சமுதாய மதிப்புக்களைப் பல நிலைகளில் வலியுறுத்தி அறிவுரைகள் கூறுவதன் மூலம் பெண்களின் சமுதாய, அரசியல், பொருளாதார, சமயத் தாழ்நிலைகள் நீங்கி அவர்கள் உயர்நிலையுடன் வாழ வழியமைத்துக் கொடுக்கின்றது. இறைவனாகிய சிவபெருமான் உமையம்மையைத் தன் ஒருபாகத்தில் கொண்டவனாகவும், திருமால் திருமகளைத் தன் மார்பில் கொண்டவனாகவும் காட்டப்பெறுதலும் ஆண், பெண் சமத்துவத்தையும் பெண்ணின உயர்வையும் வலியுறுத்துவதற்காகவே எனக் கொள்ளலாம். அடியார்கள் இறையன்புடன் வாழ்ந்து மேல்நிலை அடையும்போது அவர் மனைவியும் இறையருள் பெற்று உய்தியடையும் பேறுபெற்றமையைக் கூறுதலும், ஆண், பெண் சமத்துவ நிலையை வலியுறுத்துதற்கே எனக் கூறலாம்.

இவ்வாறு பக்தி இலக்கியம் அக்காலச் சமுதாயத்தில் வாழ்ந்த பெண்களின் நிலையைக் காட்டுவதுடன் ஆண், பெண் சமத்துவத்திற்கும் வழிவகுக்கின்றமையை அறியலாம்.

### 9. 5. முடிபுகள்

1. ஒரு சமுதாயத்தின் மேன்மையையும், பண்பாட்டின் உயர்வையும் அச்சமுதாயம் பெண்களுக்குக் கொடுத்திருக்கும் உயர்வை அடிப்படையாகக் கொண்டு தீர்மானிக்கலாம்.

2. பக்தி இலக்கியத்துள் பெண் பிறப்பு உயர்வானதாகப் போற்றப்பெறுகின்றது.

3. சமுதாயத்தில் பெண்கள் தாம் விரும்பிய சமய நெறியை மேற்கொள்வதற்குரிய உரிமைகள் பெற்றிருந்தனர்.

4. கோயில்களுக்குச் சென்று இறைவனை வழிபடுதல், வேள்விகளில் பங்குகொள்ளுதல் போன்ற சமய உரிமைகளைப் பெற்றிருந்தனர்.

5. பெரியோர்களை வரவேற்றல், திருவிழாக்கள், திருமணங்கள் போன்ற பொது நிகழ்ச்சிகளில் கலந்துகொள்ளும் உரிமைகள் பெற்றிருந்தனர்.

6. தாங்கள் விரும்பியவண்ணம் வெளியே செல்லுதல், ஆறு, குளம், கடல், போன்றனவற்றில் நீராடுதல், விளையாடுதல் போன்றனவற்றிற்குப் பெண்களுக்கு எவ்விதத் தடைகளும் காணப்பெறவில்லை.

7. தந்தையின் உடைமைகளிலும், கணவனின் உடைமைகளிலும் பெண்களுக்கு உரிமை காணப்பெற்றது.

8. கலைகளைக் கற்கும் உரிமை பெற்றிருந்தனர்.

9. பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் பெண்கள் முற்கூறிய உரிமைகளைக் கொண்டிருந்தபோதிலும் சிற்சில நிலைகளில் தாழ்வடைந்திருந்தனர் என எண்ணவும் தோன்றுகின்றது.

10. பெண்களின் கற்புக்கு அதிக அளவு அழுத்தம் கொடுத்து வலியுறுத்திய சமுதாயம் ஆடவர்களின் கற்புக்கு அழுத்தம் கொடுக்காமை ஆண், பெண் சமத்துவமின்மையைக் காட்டுவதாகக் கொள்ளலாம்.

11. பெண்கள் திருமணத்திற்கு முன்பு தம் தந்தையின் வழி நிற்கும் நிலையிலும் திருமணத்திற்குப் பின்பு கணவனின் வழி நிற்கும் நிலையிலும் வாழ்ந்துள்ளமையை அறிய முடிகின்றது.

12. பெண்கள் தம் கணவனால் கைவிடப்பெறும் நிலைக்குள்ளாயிருந்தனர் என எண்ணத் தோன்றுகின்றது.

13. கணவனை இழந்த பெண்களில் சிலர் கைம்மை, சதி போன்ற சமூக இன்னல்களுக்கு உள்ளாயிருந்தனர்.

14. பெண்கள் தாம் விரும்பிய ஆடவனைக் கணவனாகத் தேர்ந்தெடுக்கும் உரிமையற்ற நிலையில் காணப்பெற்றனர் எனக் கருதலாம்.

15. பெற்றோர்களின் விருப்பத்திற்கெதிராகக் கணவனைத் தேர்ந்தெடுக்கும் பெண்கள் பழிக்கப்பெற்றனர் எனக் கருதுவதற்குரிய குறிப்புக்கள் உள்ளன.

16. பொருளைப் பெற்றுக்கொண்டு பெண்ணை மணம் செய்துகொடுக்கும் நிலை உள்ளமையை அறியலாம்.

17. பொருள் கொடுத்துப் பெண்ணை மணம் செய்து கொடுக்கும் நிலை பெண்ணுரிமை சிறக்காமையையே காட்டுவதாகத் தோன்றுகின்றது.

18. கணவன் தவறு செய்யும்போது அதைத் தட்டிக் கேட்கும் உரிமை பெண்களுக்குக் காணப்படவில்லை.

19. பெண்கள் ஆடவர்களின் உரிமைப்பொருளாகக் கருதப்பெற்றிருந்தனர் என எண்ணுதற்கு இடமுள்ளது.

20. பெண்கள் துன்பப் பிறவிகள் எனக் கருதப்பெற்றனர்.

21. பரத்தையர்கள் பெண்ணினத்திற்கு ஏற்பட்ட களங்கம எனக் கூறலாம்.

22. பெண்கள் ஆடவர்களால் கொடுமைப்படுத்தப்பெறும் இழிநிலைக்கு உள்ளாயிருந்தனர்.

23. பெண்கள் செய்த சிறு தவறுகளுக்குப் பெருந்தண்டனைகள் அளிக்கப்பெற்றன.

24. பிற ஆடவரால் மனைவி தண்டிக்கப்பெறும்போது கணவன் பொறுமையுடன பார்த்திருந்த இழிநிலையை உணரமுடிகின்றது.

25. பிறர் முன்னிலையில் பெண்கள் கணவனால் இகழப்பெற்றனர் என எண்ண முடிகின்றது.

26. இறை அன்பு, அடியார் அன்பு என்ற நிலைகளில் பெண்கள் முற்கூறிய நிலைகளுக்கு ஆளாயினர் எனக் கொண்டாலும், இவை பெண்ணினத்தின் சமுதாயத் தாழ்நிலைகளையே காட்டுகின்றன எனலாம்

27. பெண்ணினத்தின் வீழ்ச்சிக்குரிய காரணங்களாக இனக்குழு அமைப்பின் சிதைவு, மருத நிலவளர்ச்சி, தாய்வழி உரிமை அகற்றப்பெற்றமை, சமண, பௌத்தக் கொள்கைகளின் தாக்கம் போன்றனவற்றைக் கூறுவர்.

28. பெண்கள் சமுதாயத்தில் அடைந்திருந்த தாழ்நிலைகளைக் கண்ணுற்ற பக்தி இலக்கியச் சான்றோர்கள் இறை அன்பு என்ற கருவியைப் பயன்படுத்தி ஆண், பெண் சமத்துவ நிலையை அடைய அமைதிப் புரட்சியை மேற்கொண்டுள்ளமையைப் பக்தி இலக்கியம் காட்டுகின்றது.

29. இறைவன் முன்னர் அனைவரும் சமம் என்றும், பெண்களை இழிவுபடுத்தலும், கொடுமைப்படுத்தலும் கூடாது என்றும், ஆண்களும் கற்புடன் வாழவேண்டும் என்றும் பல அறிவுரைகளைக் கூறி ஆண், பெண் சமத்துவ நிலைக்குப் பக்தி இலக்கியச் சான்றோர்கள் வழிவகுக்கும் நிலையை உணரலாம்.

30. இறைவனை உமையொருபாகனாகவும், திருவமர் மார்பனாகவும் காட்டி ஆண், பெண் சமத்துவத்தை வலியுறுத்துகின்றனர்.

## மேற்கோள்சான்றுகள்

1. R. N. Sharma, **Indian Society,** P.83

2. எஸ். வையாபுரிப்பிள்ளை, ''புறநானூறும் தமிழரும்'' புறநானூற்றுச் சிந்தனைகள், ப. 53

3. குங்கிலியக்கலயர் :21:1

4. நமிநந்தியடிகள் :23:4

5. திருநாவுக். 17:4

6. திருஞான.1160:2 - 3

7. மங்கையர்க்கரசியார் :1, திருஞான. 603:1 - 2

8. 3:3:1:9:5:1

9. திருஞான. 1040

10. மூர்த்தி:4:2

11. திருக்குறிப்பு.30:2 - 3

12. கழற்றிவார். 72:2

13. திருநாவுக். 317

14. நம்மாழ். திருவிருததம் :84:1, திருமஙகை.பெரிய. 5:4:2:3

15. 2:2:69:3:8:3

16. திருமங்கை.பெரிய. 2:3:2:3 - 4

17. 1:2:15:9:3 - 4

18. 1:2:42:1:3 - 4

19. 2:1:9:2:4:1 - 2

20. 2:1:25:2:7:3

21. 3:1:39:6 - 4

22. 4:1:27: திருவிருத்தம். 18

23. 5:2:49: திருக்குறுந்தொகை. 8:1 - 2

24. திருநீலநக்கர் :8:3 - 4

25. திருஞான. 10

26. திருஞான. 1202:1 - 2

27. திருஞான, 56, 292, 957, 991, திருநாவுக். 260

28. தடுத்தாட். 186:4

29. கழற்றறிவார். 70:4

30. 4: திருவாரூர்த் திருவாதிரைத் திருப்பதிகம் :1

31. திருஞான. 1231

32. எறிபத்தர். 3:3 - 4

33. திருமங்கை.பெரிய. 6:7:1:3

34. 2:1:14:48:1:3

35. 3:1:14:56:2:4

36. 3:2:29:2:6:4

37. திருஞான. 1049

38. C. Minakshi, **Administrative and Social life under the Pallavas,** P. 186

39. K. A. N. Sastri, **The Cholas, Vol. II, part I,** P. 368

40. Ins. 538 of 1918, A.R.E. for 1919 part II, PP. 97-98
தி. வை. சதாசிவப்பண்டாரத்தார், பிற்காலச் சோழர் வரலாறு, பக். 572 - 573

62. திருமங்கை. பெரிய. 1:6:4:1 - 2

63. திருநாவுக். 32:3 - 4

64. திருநாவுக். 28

65. நம்மாழ். திருவாய். 5:4:1:3 - 4, 5:4:3:3 - 4

66. 376 1903 174, 188 1911 141 1890. மா. இராசமாணிக்கம், பெரியபுராண ஆராய்ச்சி. ப. 243.

67. S. I. I. Vol. VII, No. 863, S. I. I. Vol. III, No. 205

68. Ins 260 of 1915 தி. வை. சதாசிவப்பண்டாரத்தார். மு. கூ. நூ. ப. 566

69. திருஞான.480

70 திருஞான. 1063

71. S. I. I Vol. I, No. 56 மா. இராசமாணிக்கம். கல்வெட்டுக்களில் அரசியல் சமயம், சமுதாயம். ப. 97 - 98

72. நாச்சியார் திருமொழி. 12:9

73. பெரியாழ். திருமொழி.3:4:5:3 - 4

74 காரைக்கால். 13:1

75. பெரியாழ். திருமொழி. 3:7:9

76. K. A. N. Sastri, op. cit., P 366

77 திருநீலகண்டர். 5

78. அமர்நீதி. 10

79. கலிய. 12 - 13

80. அ. ச. ஞானசம்பந்தன், பெரியபுராணம், ஓர்ஆய்வு. ப. 300

81. இயற்பகையார். 13

82. இயற்பகையார். 13

83. திருமந்திரம். 245

84. நம்மாழ். திருவாய். 5:4:4:1 - 2

85. 5:2:44: திருக்குறுந்தொகை. 1:1 - 2

86. 11:28:7:11 - 20

87. திருமந்திரம். 2833

88. திருமந்திரம். 515

89. கலிகம்பர். 8

90. கோட்புலி. 9

91. கழற்சிங்கர். 5 - 6

92. கழற்சிங்கர். 9 - 10

93. திருமந்திரம். 100

94. குலசேகரர். 5 - ம் திருமொழி 2

95. சாமி, சிதம்பரனார், பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும். ப. 117

96. Angels, **Origin of Family, Property and Govt.** etc P. 96

97 Paul B Hurton, Chester L Hurt, **Sociology,** P. 136

# இயல் - 10

## சமய நிலை

சமுதாயத்தில் காணப்பெறும் பல்வேறு நிறுவனங்களில் ஒன்றாகச் சமயத்தையும் சமூகவியலாளர்கள் சுட்டுகின்றமையால், பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தின் சமயநிலையைப் பற்றிக் காணுதல் தகும். பண்டைத் தமிழர்களின் சமய உணர்வு, சங்கம் மருவிய காலத் தமிழகத்தின் சூழல், சமண, பௌத்த சமயங்களின் வளர்ச்சி, பக்தி இயக்கத்தின் தோற்றம், சமண, பௌத்த, சைவ, வைணவ சமயங்கள் தத்தம் செல்வாக்கை மக்கள் மத்தியில் பெருக்கிக் கொள்வதற்காக மேற்கொண்ட பூசல்கள், சமண பௌத்த சமயங்களின் வீழ்ச்சி, சைவ, வைணவ சமயங்களின் செல்வாக்கு என்பனவற்றை அறியும் வகையில் இவ்வியல் அமைகின்றது.

### 10. 1. பண்டைத் தமிழர்களின் சமய உணர்வு

#### 10. 1. 1. தொல்காப்பியம் காட்டும் சமய நிலை

தமிழ்மொழியின் தொன்மைக்குச் சான்றாக விளங்கும் தொல்காப்பியம் இலக்கியத்திற்கு இலக்கணம் கூறும் நூலாக மட்டும் அமையாது அம்மொழியைப் பேசும் மக்களின் வாழ்க்கைக்கும் இலக்கணம் கூறும் நூலாகவும் அமைதல் சுட்டத்தக்கது ஆகும். இப்படித்தான் வாழவேண்டும் என்ற உணர்வு ஒரு சமுதாயத்தில் எப்போதுதோன்றுகிறதோ அக்காலக் கட்டத்தையே சமயநெறியின் தொடக்கநிலையாகக் கருதுவர். எனவே, தொல்காப்பியர் காலத்திலும், அவர் காலத்திற்கு முன்னும்கூட மக்கள் மனத்தில் சமய உணர்வு காணப்பெற்றிருந்தது எனத் துணியலாம். தொல்காப்பியர் இறைவனைக் குறிக்கக் கடவுள், தெய்வம் என்ற சொற்களைக் கையாண்டுள்ளார்.[1] திணை விளக்கம் கூறப்புகுந்த தொல்காப்பியர் ஒவ்வொரு திணைக்கும் உரிய முதல், கரு, உரிப்பொருள்களைத் தருகின்றார். இவற்றுள் கருப்பொருளில் ஒவ்வொரு நிலத்திற்கும் உரிய கடவுளைக் குறிப்பிடுகின்றார். இன்பம், துன்பம் என்று உழல்கின்ற மக்களின் மனத்தில் அறநெறி சிறக்கமுடியாதென்பதை உணர்ந்த தொல்காப்பியர் வாழ்க்கை சிறக்க மக்களின் சூழ்நிலைகள், பழக்கவழக்கங்கள் முதலியனவற்றிற்கேற்பக் கடவுளர்களைப் படைத்துக் காட்டியுள்ளார் எனக் கருதுவர்.[2] கொடிநிலை, கந்தளி, வள்ளி என்ற வழிபாட்டுமுறைகள் பண்டைத் தமிழர்களின் மெய்ப்பொருட் சிந்தனைகளையும், பண்டே உருவான பரம்பொருளின் தன்மைகளையும், அதன் ஆழ்ந்த தத்துவங்களையும் வெளிப்படுத்துவனவாகக் கொள்ளலாம்.[3] தொல்காப்பியம் மூலம் அக்காலத் தமிழ் மக்கள் நிலத்தெய்வங்களையும் வழிபட்டு

வாழ்ந்துள்ளனர் என்பது புலனாகின்றது. குடும்பத்தில் செயற்கரும் செயல்கள் பல செய்து, புகழ்நாட்டி மறைந்தவர்களை அக்குடும்பத்தின் தெய்வங்களாகக் கருதிய நிலையும் வெளிப்படுகின்றது. வெறியாடல் என்ற பழமையான வழிபாட்டு முறையும் சமுதாயத்தில் காணப்பெற்றது.[4] வழிபடுதெய்வங்கள் பக்கத் துணையாய் நின்று காக்கும். அவனவன் செய்த நல்வினை, தீவினைகளின் விளைவாக நிகழும் இன்பதுன்பங்களை இவன் இன்னக் காலத்து இதனைப பெறுக என வரையறுக்கும் தெய்வம் ஒன்று உண்டு. ஊழ் அதற்குரியவனைத் தானாகச் சென்று அடையாது, அதனைக் கூட்டும் தெய்வம் ஒன்று உண்டு: அதுவே பால்வரை தெய்வம் என்பன போன்ற அக்கால மக்களின் சமய நம்பிக்கைகளையும் தொல்காப்பியம் மூலம் அறிகின்றோம்.

## 10. 1. 2. சங்க இலக்கியம் காட்டும் சமயநிலை

பொதுவாக இன்றையச் சமயத்தின் பொருளையோ, அடிப்படையையோ வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் வாழ்ந்த மக்களிடம் காணமுடியாது என்றும், அக்கால மக்களிடம் தோன்றிய எண்ணங்களே இன்று சமயம் என்று பேருரு கொள்ள அடிப்படைகளாயின என்றும் கூறப்பெறும் கருத்துக்கள்[5] இவண் எண்ணுதற்குரியன ஆகும். சங்கத் தமிழ் மக்களின் வாழ்க்கையானது வீரம், போர்கள், கொடை, காதல் போன்ற நிலைகளில் மட்டும் அமையாது சமய உணர்வுடன் விளங்கிய போக்கையும் உணர முடிகின்றது. அக்கால மக்களின் வாழ்க்கையுடன் சமயம் பின்னிப் பிணைந்து நின்ற பிணைப்பையும் சங்க இலக்கியம் தெளிவாகவே காட்டுகின்றது. சமய உணர்வு மக்களின் வாழ்க்கை முழுவதும் படர்ந்து காணப்பெற்றது. சங்க இலக்கியத் தொகுப்பினுள் பரிபாடலில் திருமாலைப் பற்றிய ஆறு பாடல்களும், முருகனைப் பற்றிய எட்டுப்பாடல்களும், திருமுருகாற்றுப்படையும் முழுக்க முழுக்க இறைவனுடன் தொடர்புடைய சமயச் சிந்தனைகளையே வெளிப்படுத்துகின்றன. ஏனைய நூல்கள் கடவுளர்களைப் பற்றிப் பேசுகின்றன என கூறமுடியாவிடனும் இறை அனுபவங்களைப் பற்றிய சிற்சில குறிப்புக்களையேனும் தருகின்றன என்பது தெளிவாகிறது. சங்க இலக்கிய வருணனைகளினுள்ளும், உவமைகளினுள்ளும், இன்னப் பிறவிடங்களிலும் சமயம் தொடர்பான செய்திகளைச் சங்கப் புலவர்கள் சுட்டிச்செல்கின்றனர். சங்க காலத்தில் இறைவனைப் பொருளாகக் கொண்டு பாடப்பெற்ற திருமுருகாற்றுப்படை, பரிபாடல் முதலிய பனுவல்களைத் தவிர ஏனைய தொகை நூல்களில் பெரும்பாலும் உவமைகளாகத்தான் தெய்வங்கள் இயம்பப்பெற்றுள்ளன என்ற கருத்து[6] இவண் எண்ணுதற்குரியது ஆகும்.

சங்க இலக்கியத்துள் கடவுளைக் குறிக்கும் சொற்களாக இறைவன்,[7] கடவுள்,[8] படைத்தோன் [10] என்பன ஆளப்பெறுகின்றன. இக்கடவுளர்கள் அருந்தெறல்கடவுள், இரும்புகழ்த்தெய்வம், நிலையயர்கடவுள் என அடைகள் கொடுத்துச் சிறப்பிக்கப்பெறுகின்றனர்.[11] ஆலமரம், கடப்பமரம், கள்ளிமரம், மாமரம், முதுமரம், வேங்கைமரம், ஆறு, ஆற்றிடைக்குறை, காடு, குளம், சந்தி, தூண், நீர்த்துறை, வீடு போன்ற இடங்கள் கடவுள் உறையும் இடங்களாகக் கருதப்பெற்றிருந்தன. ஒவ்வொரு பொருளிலும் ஒவ்வோர் ஆவி குடியிருக்கும்

என்று நம்புகின்ற நம்பிக்கையே ஆன்மீகம் என்றும் எண்ணுவர்.[13] சங்குற்பொழுதில் தெய்வங்கள் நிலவுலகில் நிலவும் என்று நம்பினர்.[14] அரண்மனைகளை நிறுவும்போது தெய்வங்களைக் குறைவறப்பார்த்து நிறுவியுள்ளனர்.[15] இளஞ்சேரலிரும்பொறை மந்திரமுறையால் தெய்வத்தை வணங்கியவன் எனச் சிறப்பிக்கப்பெறுகின்றான்.[16] மனை வாழ்க்கையில் ஈடுபட்ட மக்கள் இல்லுறை தெய்வங்களை வழிபட்டனர். இல்லுறை தெய்வம் என்பது குடும்பத் தெய்வமாகவோ, தனிப்பட்ட தெய்வமாகவோ கருதி இல்லில் வைத்து வழிபடும் தெய்வம் என விளக்கம் கூறுவர்.[17]

சங்க இலக்கியத்துள் சிவபெருமான் ஆலமர் கடவுள்,[18] ஆலமர்செல்வன்,[19] காஅய்கடவுள்,[20] முக்கட்செல்வன்,[21] முக்கணான்[22] என்று குறிக்கப்பெறுகின்றான். கொன்றை மலர் மாலை அணிந்தவனாகவும்,[23] ஐந்து தலைகளை உடையவனாகவும்,[24] மூன்று கண்களை உடையவனாகவும்.[25] நீலமணி மிடற்றோனாகவும்,[26] நீலமணிபோன்ற நிறம் உடையவனாகவும்,[27] சிவந்த நிறம் உடையவனாகவும்,[28] விரிசடையையுடையவனாகவும்,[29] சடையில் கங்கையைத் தரித்தவனாகவும்,[30] மலைமகள் கணவனாகவும்,[31] உமையொரு பாகத்தவனாகவும்,[32] பிறைத்திங்களை அணிந்தவனாகவும்,[33] வருணிக்கப்பெறுகின்றான். சிவபெருமானின் ஆனேற்றுக்கொடி,[34] ஆனேறு ஊர்தி[35] மழுப்படை,[36] கணிச்சிப்படை,[37] சூலம்,[38] ஆதிரை நாள்[39] முதலியனவும் குறிப்பிடப்பெறுகின்றன. சிவபெருமானின் அடியவர்களுக்கு அருளும் அருட்செயல்களும், தீயனவற்றை அழிக்கும் ஆற்றல்களும் காட்டப்பெறுகின்றன.[40] இவ்வாறு சிவபெருமானைக் குறித்து வரும் செய்திகள் புராண காலத்திற்கு முற்பட்ட வேதகாலத்தில் வெளிப்பட்ட செய்திகளாக இருக்கலாம் எனக் கருதுகின்றனர்.[41]

சங்க இலக்கியத்தில் திருமால் கோவலன்,[42] நெடியோன்,[43] நெடுவேள்,[44] நேமியோன்,[45] மாயவன்,[46] மாயோன்,[47] மால்[48] என்ற பெயர்களால் அழைக்கப்பெறுகின்றான். அவனுடைய காயாம்பூ, முகில், கருமை, வெஞ்சுடர் ஆகிய நிறங்களும்[49] தாமரை மலர் போன்ற கண்களும்[50] துளப மாலையும்[51] சங்கும்[52] சக்கரப்படையும்[53] கருடனாகிய ஊர்தியும்[54] கருடக்கொடியும்[55] திருமகளை மார்பில் கொண்டுள்ளமையும்[56] வருணிக்கப்பெறுகின்றன. திருமால் திருவோணத் திருநாளானாகவும்,[57] பிரம்மனைப் படைத்தவனாகவும்[58] பத்து அவதாரங்கள் எடுத்தவனாகவும்[59] போற்றப்பெறுகின்றார்.

முருகன் செவ்வேள்,[60] சேஎய்,[61] நெடியோன்,[62] நெடுவேள்,[63] முருகன்,[64] முருகு,[65] வேள்[66] என்ற பெயர்களால் குறிக்கப்பெறுகின்றான். சிவபெருமானுக்கும் உமையம்மைக்கும் புதல்வனாகவும்,[67] கொற்றவைச் சிறுவனாகவும்,[68] காடுகிழாள் குழவியாகவும்[69] காட்டப்பெறுகின்றான். ஆறுமுகங்களையும், பன்னிரு கைகளையும் கொண்டவனாகவும்,[70] சிவபெருமானின் நெற்றிக் கண்ணினின்றும் சரவணப்பொய்கையில்

தோன்றியவனாகவும்[71] வருணிக்கப்பெறுகின்றான். மலைச்சாரல்களும், ஏறும் மரங்களும், கடப்பமரங்களும் முருகன் விரும்பி உறையும் இடங்களாக அமைகின்றன.[72] முருகனைப் பற்றிய குறிப்புக்களைக் காணும்போது சங்க இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் தமிழ்ப்பண்பாட்டுடன் ஆரியப்பண்பாடு கலந்துவிட்ட போக்கை அறியமுடிகின்றது. ஆரியர்கள் தமிழகத்திற்கு வருகைபுரிந்ததன் விளைவாக வடவர் பழக்கவழக்கங்களும், சமயச் சிந்தனைகளும் தமிழகத்தில் சங்க இலக்கிய காலத்திலேயே வேரூன்றத் தொடங்கிவிட்டன எனக் கருதுவர்.[73] அவ்வாறு கலந்த ஆரியர்கள் பழக்கவழக்கங்கள் தெற்கில் நன்கு வரவேற்கப்பெற்றமையுடன் ஏற்றுக்கொள்ளவும் பெற்றன.[74] இதனால் சங்காலப் பண்பாட்டில் இனக்குழு அமைப்பின் பண்பாடும், ஆரியப்பண்பாடும், தமிழக மக்களுக்கே உரித்தான தனிப்பண்பாடும் இணைந்த தன்மையைக் காணமுடிகின்றது.[75]

சங்க காலச் சமுதாயத்தில் சமயத்துறையில் ஆரியப் பண்பாடு கலந்தமைக்குச் சான்றாகத் திருமுருகாற்றுப்படையில் இடம்பெறும் குறிப்புக்களைக் காட்டுவர். நினைவுக்கெட்டாக் காலம் முதலாகவே முருகன் தமிழர்களின் வாழ்வோடும், மூச்சோடும் ஒன்றிக் காணப்பட்டான் எனக் கருதுவர்.[76] பண்டைத் தமிழர் முருகனை மலை நிலத்துத் தெய்வமாகவே வழிபட்டுவந்தனர். ஆனால் திருமுருகாற்றுப்படையின் இறுதிப்பகுதியில் முருகன் ஆரியக்கடவுளான சுப்பிரமணியனுடன் இணைத்துக் காட்டப்பெறுகின்றான். ஆரியர்களின் கற்பனையில் எழுந்த கார்த்திகேயனின் உருவம் தமிழர்களின் மலைநிலத்துக் கடவுளாக முருகன் மீது ஏற்றிக் கூறப்பெறுகின்றது. திருச்சீரலைவாய்ப்பகுதியில் முருகன் ஆறு முகங்களையும், பன்னிரு கைகளையும் கொண்டவனாக வருணிக்கப்பெறுகின்றான். அந்தணர் வேள்விக்குரியவனாகவும், வள்ளியின் கணவனாகவும், ஆலமர் கடவுளின் மகனாகவும், வானோர் தானைத் தலைவனாகவும், மயிற்கொடியோனாகவும் காட்டப்பெறுகின்றான். இவை ஆரியப்பண்பாட்டுக் கலப்பின் விளைவுகளே என எண்ணத் தோன்றுகின்றது. இதனால் திருமுருகாற்றுப்படையை ஒருவகையான பண்பாட்டு இணைப்பு முயற்சியின் விளைவு எனக் கருதுவர்.[77] வேளாண்மைக் காலத்தில் தோன்றிய சுப்பிரமணியனை மிகப்பழம்பெரும் தமிழ்த் தெய்வமாகிய முருகனுடன் இணைத்தும், வடதிசையில் தோன்றிய வேதத்தின் வழிபாட்டாகத்தையும் வேலன் வெறியாட்டையும் இணைத்தும், முருகனை அவ்வேள்விகளின் பாதுகாவலன் என்றும் கூறுதல் பண்பாட்டு இணைப்பு முயற்சியே எனலாம்.

சங்க இலக்கியத்தில் தீக்கடவுள் ஞாயிறாகிய உத்தேன், இந்திரன், கொற்றவை, சாத்தான், செய்யோன், நான்முகன், பலராமன் முதலிய கடவுளர்களும் சுட்டப்பெறுகின்றனர். அக்கால மக்கள் தாம் பல பரசக்திகளுக்கு நடுவில் பிறந்து இயங்குவதாக நம்பினர். வாழ்க்கையில் நிகழும் ஒவ்வொரு செயலுக்கும் அணங்கு,சூர், தெய்வம் போன்றவை காரணங்களாக அமைகின்றன எனக் கருதினர். இவற்றுள் நன்மை விளைவிக்கும் சக்தியைத் தெய்வம் என்றும் துன்பம் விளைவிக்கும் சக்தியை அணங்கு, சூர் என்றும் கருதினர். வாழ்வாற்றுக்கு

முற்பட்ட காலத்தில் மந்திரமும், ஆவியுலக நம்பிக்கையும் சமயமாகக் கருதப்பெற்ற நிலையை மானிடவியல் அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். இவற்றுள் நடுகல் வழிபாட்டை ஆன்மா வழிபாடு (animism) எனக் கருதுவர். சங்க காலத்தில் நடுகல்லை நீராட்டி, மணப்புகையூட்டி, நெய் விளக்கேற்றி, மலரையும் நெல்லையும் கலந்து தூவித் தெய்வமாக வழிபட்டுள்ளமையை அறிகின்றோம். மேலும், ஆட்டுக்கடாவைப் பலியிட்டுக் கள்ளைச் சிறுகலத்தில் ஊற்றி வைத்து வழிபடுதலும், நாட்காலையில் பலியிடுதலும் காணப்பெற்றன.[78]

இறைவனைப் பல்வேறு நிலைகளில் வழிபட்ட சங்க கால மக்கள் இறைவனுக்குக் கோவில்கள் எழுப்பியும் சிறப்புகள் செய்துள்ளனர். இக்கோவில்கள் அம்பலம்,[79] இறைப்பொதுவில்,[80] கோட்டம்,[81] நகர்,[82] பொதியில்,[83] மன்றம்[84] எனச்சுட்டப்பெறுகின்றன. மன்னர்கள் பல ஊர்களில் கோவில்கள் எழுப்பியுள்ளனர் என்பதைத் திருமாவளவன் கோவிலொடு குடி நிறுவியவன் என்ற பட்டினப்பாலைக் குறிப்பினால்[85] அறியலாம். கோவில்கள் சுட்ட செங்கல்களாலான குறுக்குச் சுவர்களையும், மரத்தாலான குறுக்குவிட்டங்களையும் கொண்டிருந்தன. கோவில்களின் மேல்மாடங்களிலும் தூண்களிலும் கடவுட்படிமங்கள் தீட்டப்பெற்றிருந்தன.[86] கோவில்களின் உள்ளே யானைகள் நுழைந்து செல்லுமளவுக்கு உயரமான வாயில்கள் காணப்பெற்றன.[87] மக்கள் கோவில்களைச் சாணத்தால் மெழுகித் தூய்மைசெய்து வழிபட்டனர்.[88] இறைவனுக்குத் திருவிழாக்கள் எடுத்தும் மக்கள் தம் சமய உணர்வினை வெளிப்படுத்தியுள்ளனர். திருவிழாவினைக் குறிக்கும் சொற்களாக விழவு, சாறு என்பன காணப்பெறுகின்றன.[89] பரிபாடல் ''தெய்வ விழா'' எனச்சுட்டுகின்றது.[90] திருமால் சிறப்புமிக்க திருவிழாக்களை உடையவன் என்று போற்றப்பெறுகின்றான்.[91] சிவபெருமானுக்கு மதுரையில் ஏழு நாட்கள் திருவிழாவும், ஏழாம் நாள் நீராட்டு விழாவும் நடைபெற்றன.[92] திருப்பரங்குன்றத்து அங்காடி வருணனையுள் திருவிழவின் ஆரவார ஒலியும் இடம்பெறுகின்றது.[93] காஞ்சிமாநகரத்திலும் கடற்கரைத் துறைகளிலும் இறைவனுக்கு விழாக்கள் நிகழ்ந்துள்ளன.[94] மக்கள் கூட்டமாகக் கலந்து நின்று இவ்விழாக்களைச் சிறப்புற நடத்தியுள்ளனர்.[95]

உலகைப் படைத்தும், காத்தும் அருள்பவன் இறைவன்;[96] இறைவனை மனத்துள் எண்ணி வேண்டினால் வேண்டியனவற்றை அருள்வான்;[97] இறைவழிபாடுகள் இயற்றினால் மறுமையுலகம் உரிமையாகக் கிட்டும்;[98] இறைவன் கண்முன் காட்சி தருவான்;[99] விளைச்சலில் முதற்பகுதியை இறைவனுக்குப் படைத்தால் நல்ல பலன் கிட்டும்,[100] எச்செயலையும் இறைவனை எண்ணிச்செயல்படத் தொடங்கவேண்டும்;[101] இறைவன் மீது பொய்ச்சூளுறுதல் கூடாது;[102] தவம் உடையவர்களுக்குத் தெய்வம் அருளும்;[103] புனித நீராடினால் பாவங்கள் அகலும்,[104] யாக்கை நிலையற்றது,[105] முற்பிறப்பு வினைகளின் பயன்கள் இப்பிறப்பில் நம்மை வந்து அடையும்[106] முதலான சமய நம்பிக்கைகளும் சங்க கால மக்களிடையே காணப்பெற்றன. இயற்கையிறந்த சக்திகளை வழிபடுவதாலும் அச்சக்திகளிடம் வேண்டுவதாலும் அவற்றிக்குப் பலியிடுவதாலும் தாம் வேண்டியவற்றை அடையமுடியும் என்ற நம்பிக்கையில் தொன்மைக்காலச் சமுதாயம் நிலவியது எனலாம்.[107]

மக்கள் தாம் மேற்கொண்ட முயற்சிக்குப் பலன்கிட்டும் பொருட்டும், அச்சம் காரணமாக விளையும் இடையூறுகளை அகற்றும்பொருட்டும் தெய்வங்களின் துணையை நாடுதல் இயல்பு. இதனால் மக்கள் பல வழிபாடுகளை மேற்கொண்டொழுகினர். இவ்வழிபாடுகள் மக்களின் சூழல்கள், பழக்கவழக்கங்கள், மனநிலை ஆகியனவற்றிற்கேற்ப அமைந்து காணப்பெறும். சங்க இலக்கியத்துள் மக்கள் அவிப்பொருள், புகைப்பொருள், உணவுப்பொருள் போன்றனவற்றை அளித்தும், இசைக்கருவிகளை முழக்கியும், விளக்கிட்டும், இறைவனின் அடிகளில் வீழ்ந்து வணங்கியும், இறைவன் வீற்றிருக்கும் திசையை நோக்கித் தொழுதும் இறைவனை வழிபட்டுள்ளமை காட்டப்பெறுகின்றது.[108] சங்க கால மக்களிடையே இனக்குழு வழிபாட்டு முறையின் எச்சக் கூறுகளையும் காண முடிகின்றது. மழைவேண்டிச் செய்த சடங்குகள், வேட்டையில் வெற்றி பெறுவதற்காக மேற்கொண்ட சடங்குகள், இயற்கைப் பொருட்களை வழிபடுதல் போனறனவற்றைச் சான்றுகளாகக் கூறலாம். இவை தவிர வேதம் ஓதுதல், வேதச் சடங்குகள் செய்தல், வேள்விகள் செய்தல் போன்ற வைதீக முறைகளிலமைந்த சடங்குகள் காணப்பெற்றமையையும் சங்க நூல்கள் புலப்படுத்துகின்றன. சங்க காலச் சமுதாயத்தில் பௌத்த சமயப் பள்ளிகளும்[109] சமண சமயப் பள்ளிகளும்[110] காணப்பெற்றமைக்குக் குறிப்புக்களும் கிடைக்கின்றன.

முற்கூறியனவற்றால் சங்க காலச் சமுதாயத்தில் சமய உணர்வு ஆழமாக வேரூன்றிக் காணப்பெற்றது என்பதும், மக்கள் தாம் விரும்பிய தெய்வங்களுக்குக் கோவில்கள் எழும்பியும், வழிபாடுகள் செய்தும் வணங்கினர் என்பதும் புலனாகின்றன. அக்காலச் சமுதாயத்தில் இனக்குழுச் சமயத்தின் எச்சக் கூறுகளும், வைதீக சமயமும், சைவ சமயமும், வைணவ சமயமும், சமண சமயமும், பௌத்த சமயமும் நிலவியிருந்தன என்பதையும் அறிகின்றோம். எனினும், இச்சமயங்களில் சமண, பௌத்த சமயங்கள் பற்றிய குறிப்புக்கள் அருகியே காணப்பெறுகின்றமை சுட்டுதற்குரியது ஆகும். சமுதாயத்தில் பல்வேறு சமயங்கள் காணப்பெற்றபோதிலும், மக்கள் பல்வேறு சமயங்களைப் பின்பற்றிய போதிலும் சமயக் காழ்ப்புணர்ச்சி சிறிதும் காணப்பெறவில்லை என்பது எண்ணுதற்குரியது ஆகும்.

## 10. 2. சங்கம் மருவிய காலத் தமிழகச் சூழல்

சங்க காலத் தமிழகத்தைச் சேர, சோழ, பாண்டிய மன்னர்களும், குறுநில மன்னர்களும் ஆண்டுவந்தனர். சங்க காலத்திற்குப் பின்பு தமிழ் மன்னர்களின் ஆட்சி வலிமை குன்றத் தொடங்கியது. தமிழரல்லாத பிற மன்னர்களும் தமிழகத்தை ஆட்சி செய்யும் நிலை உருவானது. பிற இனத்தவர் தமிழ் மண்ணில் படையெடுத்து வருவதற்குரிய சூழல்களும் சங்கம் மருவிய காலத் தமிழகத்தில் நிலவின.

சங்கப் புறப்பாடல்கள் தமிழ் மன்னர்கள் தமக்குள் நிகழ்த்திய போர்களையே பெரும்பான்மையும் மொழிகின்றன. இவ்வாறு போர் புரிவதைச்

சங்க கால மன்னர்கள் பெருமையாகவும் வலிமையின் அடையாளமாகவும், விரத்தின் அறிகுறியாகவும் கருதினர். போர்க்களம் புகுந்து பகைவர்களுடன் போரிட்டு விழுப்புண்படாதவர்களை அவர்கள் இறந்தபின்னர் வாளால் வடுப்படுத்தியே அடக்கம் செய்தனர். இவ்வாறு தமிழக மன்னர்கள் மேற்கொண்ட போர்களால் தமிழகத்தின் அரசியல், பொருளாதாரத் துறைகள் வலிமை இழந்தன. இச்சூழலும் அந்நியர் தமிழகத்தில் படையெடுத்து வருவதற்கு ஏதுவாக அமைந்தது எனக்கூறலாம்.

கோக்கோதைமார்பன், கணைக்காலிரும்பொறை, சோழன்செங்கணான், தலையாலங்கானத்துச்செருவென்றநெடுஞ்செழியன் போன்ற மன்னர்கள் கடைச்சங்க காலத்தில் தமிழகத்தை ஆண்டுவந்ததாக அறிகின்றோம். இவர்களுக்குப் பின்னர் இவர்களுடைய மைந்தர்களும், உறவினர்களும் தமிழகத்தை ஆண்டுவந்தனர். இக்காலக்கட்டத்திலேயே களப்பிரர்கள் தமிழகத்தைக் கைப்பற்றினர் என வரலாற்றறிஞர்கள் கருதுகின்றனர்.[111] கானப்பேரெயில் கடந்த உக்கிரப்பெருவழுதியின் ஆட்சிக்காலத்திற்குப் பின்னால் சங்கத் தமிழரின் சுதந்திரமான அரசியல் வாழ்வு தற்காலிகமாக முற்றுப்பெற்றது என்ற கருத்தும் நிலவுகின்றது.[112]

களப்பிரர்கள் தமிழகம் வந்து, தமிழ் மன்னர்களை வென்று தம் கீழ் அடக்கிவைத்திருந்தனர். களப்பிரர்கள் சேர, சோழ, பாண்டிய மன்னர்களை வென்று சிறைப்படுத்தியபோது மூவேந்தர்களால் பாடப்பெற்றவை எனக் கருதப்பெறும் யாப்பருங்கல விருத்தியுரை மேற்கோட்செய்யுட்கள் இக்கருத்துக்குச் சான்றுகளாக அமைகின்றன.[114] இவ்வாறு தமிழகம் வந்த களப்பிரர்கள் கி.பி. ஆறாம் நூற்றாண்டின் இறுதியில் சிம்மவிஷ்ணுபல்லவனும், பாண்டியன்கடுங்கோனும் தம்மை எதிர்த்துப்போரிட்டு வெற்றிபெறுவதுரையிலும் காவிரிப் படுகையில் அரசிருக்கையை வைத்துத் தமிழகத்தின் மத்தியிலிருந்து ஆண்டுவந்தனர்.[115]

களப்பிரர்கள் தமிழகம் வந்தபோது பல்லவர்களும் இக்குவாகு மன்னர்களும் ஏற்படுத்திய இடையூறுகளினால் தென்திசை நோக்கி விரைய ஆரம்பித்தனர். பல்லவர்கள் காஞ்சியில் களப்பிரமன்னர்களை வெல்லவே அவர்கள் சோழ மண்டலம் சென்று சோழர்களுடன் போரிட்டு வெற்றிபெற்றனர். இதனால் சோழமன்னர்கள் பிற பகுதிகளுக்குச் சென்று அங்குள்ள பேரரசர்களின் கீழ்ச் சிற்றரசர்களாக வாழ்ந்து வந்தனர். கி.பி. ஆறாம் நூற்றாண்டின் இறுதிவரையிலும் தமிழகத்தின் வடபகுதி முற்காலப் பல்லவர்களாலும், நடுப்பகுதி களப்பிரர்களாலும், தெற்குப் பகுதி பாண்டியர்களாலும் ஆளப்பட்டு வந்தமையை அறிகின்றோம்.

கி.பி. ஆறாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பாண்டியன் கடுங்கோன் களப்பிரரை வென்று பாண்டியப் பேரரசை நிலைநிறுத்தினான். தளவாய்புரச் செப்பேடுகளும், வேள்விக்குடிச் செப்பேடுகளும் இவ்வரலாற்றைச் செப்புகின்றன. பாண்டியன்கடுங்கோன் களப்பிரர்களிடமிருந்து நாட்டைக் கைப்பற்றிய அதே நேரத்தில் சிம்மவிஷ்ணுபல்லவன் சோழநாட்டைக் கைப்பற்றியமையையும்

பள்ளர்கோயில் செப்பேடுகளும், வேலூர்ப் பாளையச் செப்பேடுகளும் பகர்கின்றன.[116] கி.பி.ஆறாம் நூற்றாண்டின் இறுதியில் காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு தமிழகத்தின் வடபகுதியில் பல்லவர்களும், மதுரையைத் தலைநகராகக்கொண்டு பாண்டியர்களும் ஆண்டுவந்தனர். இவ்வாறு சங்கம் மருவிய காலத் தமிழகத்தைக் களப்பிரர், பல்லவர் ஆகிய பிற இனத்தவர்களும் ஆண்டுவந்துள்ளமையை வரலாறு மூலம் அறிகின்றோம். இக்காலச் சூழலில் தமிழகம் மனித மைய ஈர்ப்புச் சூழலிலிருந்து சமய மைய ஈர்ப்புச் சூழலுக்கு மாறிக்கொண்டிருந்தமை இவண் சுட்டுதற்குரியது ஆகும். சங்க காலச் சமுதாயத்தில் சிறுபான்மையளவிலேயே காணப்பெற்ற சமண, பௌத்த சமயங்கள் சங்கம் மருவிய காலப்பகுதியில் செல்வாக்குடன் திகழலாயின.

## 10. 3. சமண, பௌத்த சமயங்களின் வளர்ச்சி

சமண சமயம் பத்திரபாகு முனிவரது காலத்திலேயே தமிழகம் வந்துவிட்டதெனக் கருதப்பெறுகின்றது. இவர் சந்திரகுப்தனுடைய அரசவையில் **(கி.மு. 322 - 298)** மதக்குருவாக வீற்றிருந்தவர் ஆவார். மகத நாட்டில் பன்னீர் ஆண்டுகள் பஞ்சம் வரப்போவதை அறிந்த பத்திரபாகு முனிவர் தன்னுடன் பன்னீராயிரம் சமணசமய முனிவர்களை அழைத்துக்கொண்டு தென்திசை நோக்கி வந்து மைசூரில் இக்காலத்தில் வெள்ளக்குளம் என அழைக்கப்பெறும் சிரவணபெள்கொள என்ற இடத்தில் தங்கினார். தன் சீடர்களில் ஒருவராகிய விசாகமுனிவரைத் தமிழகத்திற்கு அனுப்பிச் சோழ, பாண்டிய நாடுகளில் சமண சமயத்தைப் பரப்பச் செய்தார். இந்நிகழ்ச்சி பிரகத்கதா, இராஜாவளி போன்ற நூல்களிலும் இடம் பெறுகின்றது.[117] மதுரைப் பினாமிக் கல்வெட்டெழுத்துக்களும் கி.மு.மூன்றாம் நூற்றாண்டில் சமணரால் வெட்டுவிக்கப்பெற்றவை என அரசு தொல்பொருட்துறை ஆய்வாளர்கள் கருதுகின்றனர். மேலும், கிறித்து பிறப்பதற்கு முன்னரே சமணமும், பௌத்தமும் தமிழகத்திற்கு வந்துவிட்டன என்பதற்கான சான்றுகளும் உள்ளன.[118] இவற்றால் கி.மு. மூன்றாம் நூற்றாண்டிலேயே சமண சமயம் தமிழகத்திற்கு வந்துவிட்டது எனக் கொள்ளலாம.

கி.மு. 640 - இல் இந்தியாவிற்கு வந்த சீனப் பயணியான யுவான்சுவாங் காஞ்சிமாநகரில் அசோக மன்னனால் கட்டப்பெற்ற பௌத்த ஸ்தூபியும், சோழ நாட்டில் பௌத்த விகாரையும் காணப்பெற்றமையைத் தன் பயணக்குறிப்பில் சுட்டுகின்றார். மேலும், மதுரைக்கு அருகில் அசோகனின் தம்பியாகிய மகேந்திரனால் கட்டப்பெற்ற பௌத்த விகாரை இருந்துள்ளமையையும், அதன் கிழக்கே அசோகரால் கட்டப்பெற்ற ஸ்தூபி இருந்துள்ளமையையும், இவை சிதைவுற்றுக்காணப்பெற்றமையையும் குறிப்பிடுகின்றார். பிரம்ம தேசத்துப் பௌத்த பிக்குவின் வரலாறு காஞ்சிமாநகரின் பக்கத்திலுள்ள பரதிட்டை என்ற இடத்தில் அசோக மன்னன் கட்டிய விகாரையில் தம்மபாலர் என்ற பௌத்த பிக்கு வசித்துள்ளமையைக் காட்டுகின்றது.[119] பாண்டிய நாட்டில், மதுரை மாவட்டத்திலுள்ள சில குகைக்கோயில்களில் பௌத்த பிக்குகள் படுத்துறங்குவதற்குப் பாறைகளில் செதுக்கப்பெற்ற படுக்கைகளும், அவற்றின்

கீழ எழுத்துக்களும் உள்ளன என்றும், இவ்வெழுத்துக்கள் கி.மு. மூன்றாம் நூற்றாண்டைச் சார்ந்தவை என்றும் ஆய்வாளர்கள் கருதுகின்றனர். இவற்றால் கி.மு. மூன்றாம் நூற்றாண்டிலே பௌத்த சமயமும் தமிழகம் வந்துள்ளது எனக் கருதமுடிகின்றது.

சங்கம் மருவிய காலத்தில் இச்சமயங்கள் செல்வாக்குடன் திகழலாயின. இச்சமயக் கருத்துக்களை ஏற்றுக்கொள்ளுதற்குரிய சூழல்களும் தமிழகத்தில் காணப்பெற்றமையும் குறிப்பிடுதற்குரியது ஆகும். இனக்குழுச் சமுதாய அமைப்பின் வாழ்க்கைமுறை சிதைவுற்ற பின்னர். அம்முறையில் காணப்பெற்ற கூட்டு வாழ்க்கை முறைக்குப் பதிலாகத் தங்களை இணைத்துக்கொள்ளுதற்கு ஏற்றதொரு புதிய பிடிப்பினை மக்கள் எதிர்நோக்கியிருந்தனர். இச்சூழலில் சமண, பௌத்த சமயக் கருத்துக்கள் மக்கள் எண்ணிய வாழ்க்கைமுறைக்கு வழிகாட்டுவனவாகப் அமைந்திருந்தன. இதனாலும் சமண, பௌத்த சமயங்கள் செல்வாக்கைப் பெறலாயின.120 போர்களாலும், மது, மங்கை, ஊனுண்ணல் போன்றனவற்றாலும் உள்ளம் சலிப்படைந்திருந்த மக்கள் சமண, பௌத்த சமயங்கள் வலியுறுத்திய அமைதி, ஒற்றுமை, ஒழுக்கம், பெண் இன்ப வெறுப்பு, ஊன் உண்ணாமை, மது அருந்தாமை போன்ற நெறிகளை மனமுவந்து ஏற்றுக்கொண்டனர். போர்களாலுண்டான அச்ச உணர்வினாலும், வாழ்க்கைத் துன்பங்களின் விளைவான நம்பிக்கையின்மையினாலும் உழன்றுகொண்டிருந்த மக்கள் எதையாவது பற்றிக்கொள்ள விரும்பினர். இலௌகீக வாழ்க்கையில் வெறுப்பு ஏற்படும்போதுதான் மக்களுக்கு மறுமை பற்றிய எண்ணம் ஏற்படும் என்பர். சமண, பௌத்த சமயங்கள் மறுமை இன்பம் தரும் என்ற கொள்கையை வலியுறுத்தியமையால் மக்கள் விரும்பி ஏற்றுக்கொண்டனர்.

சமணர்கள் கல்வி அளித்தல், உணவு, அளித்தல், அடைக்கலம் அளித்தல், மருத்துவ உதவி அளித்தல் போன்றவற்றைத் தலைசிறந்த அறங்களாகக் கருதினர். சமணர்களின் அடைக்கலம் அளிக்கும் இடங்கள் ''அஞ்சினான் புகலிடங்கள்'' என அழைக்கப்பெற்றன. எக்குலத்தைச் சார்ந்தவராயினும் அவர்களிடையே வேறுபாடுகளைக் கருதாது சமண சமயத்தில் அனைவரையும் இணைத்துக் கொண்டனர். பறையன் மகனெனினும் காட்சியுடையான் இறைவன் என உணரறபாற்று என அருங்கலச் செப்பு அறைகின்றது. கி.பி.470. இல் வச்சிர நந்தி என்னும் சமணர் மதுரையில் திராவிடச் சங்கத்தை நிறுவிச் சமண சமயக் கொள்கைகளைப் பரப்பினர். சமணர்கள் தமிழ்மொழியைக் கற்றுணர்ந்தவர்களாக விளங்கினர். இதனால் தமிழக மக்களின் உள்ளத்தைக் கவர்ந்தனர். சமண சமயத்திற்குப் பொருளாதார நிலையில் நாடாளும் மன்னர்களின் அரவணைப்பும் கிடைத்தது. இவற்றால் சமண சமயம் பெருவளர்ச்சி அடைந்தது எனலாம்

சமண சமயத்தின் வளர்ச்சி நிலையைச் சிலப்பதிகாரம் தெளிவாகக் காட்டுகின்றது. சமண சமயக் கடவுள் முக்குடையின்கீழ் உறைபவனாகவும், அசோகின் கீழ் எழுந்தருளியுள்ளவனாகவும், ஆதியில் தோற்றம் உடையவனாகவும், காமம், வெகுளி, மயக்கம் ஆகியனவற்றைக் கெடுத்தவனாகவும், ஐம்புலன்களை வென்றவனாகவும், காட்டப்பெறுகின்றான்.[123] சமண சமயக் கடவுள் அருகன்,

அறிவோன், அறிவு வரம்பு இகந்தோன், செறிவன், சினேந்திரன், சித்தன், பகவன், தருமமுதல்வன், தலைவன், தருமன், பொருளன், புனிதன், புராணன், புலவன், தேவன், சிவகதி நாயகன், பரமன், குணவதன், தத்துவன், சாதுவன், சாரணன், சித்தன், பரியவன், செம்மல், திகழ்ஒளி இறைவன், குறையில் புகழோன், குணப்பொருள், கோமான், ஈசன், அருகன், அருள்முனி, பண்ணவன், எண்குணன், பரத்தில் பரம்பொருள், விண்ணவன் என்றெல்லாம் புகழப்பெறுகின்றான்.[123] சிலப்பதிகாரத்தில் வரும் சாரணர், கவுந்தியடிகள் படைப்பு சமண சமய நெறிகளைப் பரப்புவதற்காகவே படைக்கப்பட்டுள்ளது என்றும், பிறப்பினின்றும் விடுபட்ட ஆன்மாவை அருகன் எனக்கொண்டு வணங்குதல் சமணர்களின் நெறி என்றும், அருகதேவன் வழிபாடு, பஞ்சபரமேட்டிகள் வழிபாடு ஆகியவனவற்றிற்காகத் தனித்தனி அமைந்த கோவில்களைப் புறநிலைக் கோட்டம், நிக்கந்தக்கோட்டம், அருகதானம் என்ற குறியீடுகளால் சிலப்பதிகாரம் குறிக்கின்றது என்றும் விளக்கிச் சிலம்பின் சமணசமயச் சார்பைக் காட்டுவர்.[124] சிலம்பில் சமண சமயப் பள்ளிகளும்,[125] இச்சமணப்பள்ளிகளில் அபிடேகவிழாவும், தேர்த்திருவிழாவும் நடைபெற்றமையும்[126] சுட்டப்பெறுகின்றன. கவுந்தியடிகளின் கூற்றாகச் சமண சமயத் துறவிகள் பின்பற்ற வேண்டிய மகாவிரதங்கள் கூறப்பெறுகின்றன.[127] கவுந்தியடிகள் ஐவகை அருகருக்கு வணக்கம் செலுத்துதலும், மயிலிறகினாலாகிய துடப்பத்தைப் பயன்படுத்துதலும், அவர் திகம்பரச் சமண சமயத் துறவி எனக் கருதுவதற்குரிய தெளிவான சான்றுகளாகும்.[128] சிலம்பில் பெருமகன் திருமொழி, ஞானத் திருமொழி, மெய்ப்பாட்டியற்கை, பரமாகமம் முதலிய சமண சமய நூல்கள் குறிக்கப்பெறுகின்றன.[129] ஊன் உண்ணாமை, பொய்கூறாமை, அழுக்காறு கொள்ளாமை, காணாஉயிர்க்கும் கையற்று ஏங்கல், ஊழ்வினை, நிலையாமை, பெண் இன்ப வெறுப்பு முதலான சமண சமயச் சிந்தனைகள் அறிவுறுத்தப்பெறுகின்றன.[130] சாரணர், கவுந்தியடிகள் ஆகியோரது வாய்மொழியாக வரும் பாசுரப்பகுதிகள் சமணரின் பக்தி நெறிக்கு ஆதாரமாய் அமைகின்றன.[131] இவ்வாறு இளங்கோவடிகள் படைத்த இன்றமிழ்க் காப்பியமாகிய சிலப்பதிகாரம் சைவம், வைணவம், பௌத்தம் போன்ற சமயங்கள் பற்றிய குறிப்புக்களைத் தந்தபோதிலும், சமுதாயத்தில் சமண சமயம் பெரு வளர்ச்சிபுற்றிருந்த நிலையையே பெரிதும் காட்டுவதாக அமைதல் குறிப்பிடத் தக்கதாகும்.

சமண சமயத்தைப் போன்று பௌத்த சமயமும் மக்கள் மத்தியில் செல்வாக்குடன் விளங்கியது. பௌத்தரின் சமயக் கொள்கைகள், மருத்துவத்தொண்டு, கல்வித்தொண்டு, காணார், கேளார், கால்முடப்பட்டோர் முதலியோர்க்கு உதவுதல், அறச்சாலைகள் அமைத்தல், சாதிவேறுபாடுகள் கருதாது அனைவரையும் சமமாக மதித்தல் போன்றனவற்றால் மக்களிடையே நன்மதிப்பைப் பெற்றிருந்தது. கட்டுப்பாடுகளையும், ஒழுக்க நெறிகளையும் அடிப்படையாகக் கொண்டிருந்த பௌத்தம் பெற்றிருந்த செல்வாக்கை இலக்கியங்களும் காட்டுகின்றன.

எச்சமயத்தவரும் தத்தம் சமயக்கொள்கைகள் பொதிந்துகிடக்கின்றன எனக் கூறப்பெறும் பெருமையுடைய திருக்குறளில் பௌத்த சமயக் கருத்துக்களும்

இடம்பெறுமாற்றைக் காணலாம். திருவள்ளுவர் கடவுள் வாழ்த்தில் நற்றாள், மாணடி, அடி, தாள் எனத் திருவடியைச் சுட்டுதலைப் பாதபீடிகை வணக்கத்தைச் சுட்டுகின்றார் எனலாம் என்றும், கள்ளுண்ணாமை, கொல்லாமை, சூதாடாமை, காமம் கொள்ளாமை, பொய்யாமை, கள்ளாமை போன்றவை பௌத்த சமயத்தின் நெறிநின்று வள்ளுவர் கற்பித்த புது அறங்களாகும் என்றும் திருக்குறளில் காணப்பெறும் பௌத்த சமயச் செல்வாக்கைக் காட்டுவர்.[132] சிலம்பிலும் புத்தபெருமான் போதி மரத்தின் அடியில் எழுந்தருளியமை பற்றியும் பௌத்த சமயப் பெண்துறவிகளைப் பற்றியும் குறிப்புக்கள் காணக் கிடைக்கின்றன.[133]

மணிமேகலை பௌத்தசமய வளர்ச்சியைக் காட்டும் சிறந்த நூலாகத் திகழ்கின்றது. மணிமேகலையில் பௌத்த சமயக் கடவுள் பகவன், ஆதி முதல்வன், மூர்த்தி என்றெல்லாம் சுட்டப்பெறுகின்றான். பௌத்தத் துறவிகள் அன்பு, அறிவு, தலைமை, இறைப்பற்று, உலக நூலறவு, தவம், தொண்டு போன்றனவற்றில் நிறைந்தவர்களாகக் காட்டப்பெறுகின்றனர். பௌத்த சமயக் கோட்பாடுகள், ஒழுக்கம், துறவியின் சிறப்புக்கள் முதலியனவும் விளக்கப்பெறுகின்றன. புத்த பீடிகையின் பெருமைகள் எடுத்துரைக்கப்பெறுகின்றன.[134] காஞ்சியில் புத்தரின் கோயில் இருந்துள்ளமை சுட்டப்பெறுகின்றது. கருத்தளவைகள், அவற்றின் உறுப்புக்கள், இயல்புகள், ஏதுக்கள், எடுத்துக்காட்டுகள், மேற்கோட்போலி, ஏதுப்போலி, எடுத்துக்காட்டுப்போலி, தன்ம சொரூபம், திட்டாந்திரப்போலி என்பனவும் விளக்கப்பெறுகின்றன.[135] பிறந்ததோர் அடையும் பேதைமை இயல்பு வாயில்கள், அவற்றின் இயல்புகள், நுகர்வு, வேட்கை, பற்று, பிறப்பு, வினைப்பயன், பன்னிருநிதானம், துன்பத்திலிருந்து மீளும் முறை, நால்வகைக் கண்டம், சந்திகள், மூன்றுவகைப் பிறப்பு, காலம், குற்றம், வினைப்பயன், வீட்டியல்பு, நால்வகை வாய்மை, கந்தங்கள், ஆறுவகை வழக்கு, தொகை, நால்வகை நுட்பம் முதலியனவும் எடுத்துரைக்கப்பெறுகின்றன.[137] பற்றால் வருவது துன்பம், பற்றற்றோர் உறுவது பேரின்பம், துன்பம், துன்பம் துடைத்தல், துன்ப வருவாய், துன்பம் துடைக்கும் நெறிகள்[139] காமம், கொலை, கள், பொய், களவு என்னும் ஐவகைச் சீலங்கள்,[140] செய்வினை சிந்தையின்றெனின் யாவதும் எய்தாது[141] முதலியனவும் விளக்கப்பெறுகின்றன.

இவற்றால் சங்க காலச் சமுதாயத்திலிருந்து சங்கம் மருவிய காலத் தமிழ்ச் சமுதாயத்தில் சமயம் என்ற நிறுவனம் வளர்ச்சியுற்ற போக்கையும், சங்க காலத்திற்குப் பின்பு, சைவ, வைணவ சமயங்களைப் போன்று, சமண, பௌத்த சமயங்களும் செல்வாக்கைப் பெற்ற நிலையையும் அறியமுடிகின்றது.

## 10. 4. பக்தி இலக்கியம் காட்டும் சமயநிலை

சைவ, வைணவ, வைதீக, சமண, பௌத்த சமயங்களின் வளர்ச்சி நிலையையும், இனக்குழுச் சமயத்தின் எச்சக் கூறுகளையும், பிற சமயங்களின் நிலையையும் பக்தி இலக்கியம் தெளிவாக உணர்த்துகின்றது. இச்சமயங்கள்

தத்தம் செல்வாக்கை மக்கள் மத்தியில் வளர்த்துக் கொள்வதற்காகப் போட்டியிட்ட நிலையையும், சைவ, வைணவ சமயங்கள் ஒன்றிணைந்துநின்று பக்தி இயக்கத்தை உருவாக்கிச் சமுதாய மக்களின் பேராதரவைப் பெற்றிருந்தமையையும், ஏனைய சமயங்களின் செல்வாக்கு குன்றியமையையும் பக்தி இலக்கியத்தின் வழிநின்று காண்போம்.

## 10. 4. 1. சமயங்களின் வளர்ச்சி நிலை

பன்னிரு திருமுறைகளும், நாலாயிரத்திவ்விய பிரபந்தமும், சைவ, வைணவ சமயங்களின் வளர்ச்சி நிலைக்குச் சான்றுகளாக அமைவதுடன், சமுதாயத்தில் பிற சமயங்களின் வளர்ச்சிநிலையையும் காட்டுவனவாய் அமைகின்றன.

## 10. 4. 1. 1. சமண சமயம்

பக்தி இலக்கியக் காலத்தில் சமண சமயம் செல்வாக்குடன் திகழ்ந்தது. அப்பர்பெருமான் முதலில் தம்மைச் சமண சமயத்திலேயே ஈடுபடுத்தினார்.[143] பாடலிபுத்திரத்திலுள்ள சமணப் பள்ளியில் தங்கியிருந்து சமண சமயத் தொண்டாற்றினார்.[144] தருமசேனன் என்ற சிறப்புப்பெயரைத் தாங்கிருந்தார்.[145] சமண சமயம் பெற்றிருந்த செல்வாக்கின் காரணமாக அதன் அறநெறிச் சிந்தனைகள் தமிழ்ச் சமுதாயத்தில் ஆழமாக வேரூன்றிவிட்டது. பக்தி இயக்கத்தின் விளைவாக மக்கள் சைவ, வைணவ சயமங்களைச் சார்ந்த பின்னரும்கூடச் சமண சமயத்தின் பொதுவான அறங்களைக் கைவிட்டுவிடவில்லை. எனவேதான், பக்தி இலக்கியத்துள் தயாமூலதன்மம், கொல்லாமை போன்ற அறங்கள் பெருமளவில் வலியுறுத்தப்பெறுகின்றன எனலாம். இவ்வறங்கள் அனைத்துச் சமயங்களுக்கும் பொதுவானவையே என்றாலும் சமண சமயத்தால் அதிகமாக வலியுறுத்தப்பெறுபவை என்பது இவண் சுட்டுதற்குரியது ஆகும். சமண சமயச் துறவிகளில் பெண்களும் காணப்பெற்றனர். இவர்கள் கந்தியார் என அழைக்கப்பெற்றனர்.[146] பாண்டியநாட்டிலுள்ள ஒப்பற்ற பதிகள் எனலாம் பாழிகளும், சமணர் மேவும் பள்ளிகளுமாகிச் சமணர்கள் எங்கும் நிறைந்திருந்தனர் என்ற குறிப்பைச் சம்பந்தர் வரலாறு கூறும் பகுதி மூலம் அறிகின்றோம்.[147] இக்குறிப்பு சமண சமயத்தின் வளர்ச்சிநிலையைக் காட்டுகின்றது எனலாம், திருஞானசம்பந்தரும் திருமறைக்காட்டிற்கு வந்தபோது பாண்டியநாட்டில் சமண சமயநெறி தழைத்தோங்கி நிற்பதை அறிந்து மனம் வருந்திச் சைவ சமய நெறியை நிலைநாட்ட மதுரைக்குச் செல்கின்றார். சமுதாயத்தில் சமண சமயத்தவர்களின் பொய்கள் மிகுதியாக்கப்பெற்றுப் பிற வழக்கங்கள் அருகி அடியார்களின் திருநீற்றின் விளக்கம் போற்றப்பெற்றிராமையைக் கண்ணுற்ற சிவபாதவிருதயர் மனம் வருந்துகின்றார்.[148] பாண்டிய நாட்டில் தீவினைப் படுகுழியாகிய சமண சமயம் மிகுந்து நிற்பதுடன் மன்னனும் அதனை நன்னெறியெனக் கருதிப் போற்றியமை குறிப்பிடப்பெறுகின்றது.[149] பல்லவ மன்னாகிய மகேந்திரவர்மன் சமண

சமயத்திற்கு ஆதரவு அளித்ததுடன் சைவர்களுக்குப் பல கொடுமைகளும் செய்துள்ளான். பல்லவபேரரசர்களின் நிர்வாக இயந்திரம் சமணர்களின் வேண்டுகோளுக்கிணங்கச் சைவர்களுக்கு எதிராக இயக்கிவிடப்பெற்றமையை அப்பர்பெருமானின் வரலாறு உணர்த்துகின்றது. அப்பர்பெருமான் சமண சமயத்தைத் துறந்து சைவ சமயத்தில் புகுந்ததைக் கண்டு பொறாமையுற்ற சமணர்கள் மன்னனிடம் அவர் நம் தெய்வ நிந்தனை செய்தார் எனப் பழி கூற, மன்னனாகிய மகேந்திரவர்ம பல்லவன் ஏவலரிடம் அத்தீயவனைப் பொருள் பெற்றுக்கொண்டு விட்டுவிடாதாபடி இவண் அழைத்துவருக என ஆணையிடுகின்றான்.[151] பாண்டிய மன்னனும் மூர்த்திநாயனாருக்குக் கொடுமைகள் செய்து சமண் திறத்தில் சிந்தை தாழ்ந்துநிற்கின்றான்.[152] சமணனாகிய இரண்டாம்நந்திவர்மனின் ஆர்க்காடு நகருக்கு அருகிலுள்ள பஞ்சபாண்டவர் மலைக்குகை சமணர்களுக்காக அமைக்கப்பெற்றது என்பதை வரலாறு காட்டுகின்றது.[153] நாடாளும் மன்னர்கள் சமணப்பள்ளிகளுக்கு இறையிலியாகவும், மானியமாகவும், நிலங்களையும் பொன்னையும் வாரி வழங்கியுள்ளனர் என்பதைப் பிற்காலக் கல்வெட்டுக்களும் சுட்டுகின்றன.[154] சமண சமயம் சமுதாயத்தில் பெற்றிருந்த செல்வாக்கைக் கண்டு சமணரல்லாத மன்னர்களும்கூடச் சமணப் பள்ளிகளுக்குத் தானங்கள் வழங்கினர்.[155] இவற்றால் சமண சமயத்தின் செல்வாக்கும், மன்னர்களும் மக்களும் அளித்த ஆதரவும் புலனாகின்றன.

## 10. 4. 1. 2. பௌத்த சமயம்

போதிமங்கையில் சாக்கியர்கள் பெருமளவுக்கு வாழ்ந்துள்ளனர் எனக கருதுவதற்குரிய குறிப்புக்கள் சம்பந்தர் வாழ்க்கை வரலாறு கூறும் பகுதியுள் கிடைக்கின்றன.[156] சாக்கிய நாயனார் முதன்முதலில் சாக்கிய சமயத்தைச் சார்ந்தொழுகிப் பின்னரே சைவ சமயம் வந்துள்ளார்.[157] சாக்கியர்களின் பொய்கள் மிகுந்து, சமுதாயத்தில் மறை வழக்கங்கள் அருகி விடுதலைக் கண்ணுற்ற சிவபாதவிருதயர் மனம் குமுறுகின்றார்.[158] இவற்றால் பௌத்த சமயத்தின் வளர்ச்சிநிலையும் புலனாகின்றது.

## 10. 4. 1. 3. வைதீக சமயம்

வைதீக அந்தணர்களைப் பற்றிய குறிப்புக்களையும் அவர்களுடைய வழக்கங்கள், தொழில்கள், சடங்குகள் பற்றிய செய்திகளையும் பக்தி இலக்கியம் பெருமளவில் தருகின்றமையையால் சமுதாயத்தில் வைதீக சமயம் பெற்றிருந்த செல்வாக்கும் புலப்படுகின்றது.

## 10. 4. 1. 4. இனக்குழுச் சமயத்தின் கூறுகள்

இனக்குழுச் சமுதாயமாகிய தொன்மைச் சமுதாய அமைப்பில் வாழ்ந்த மக்களிடையே காணப்பெற்றனவாகக் கருதப்பெறும் சமய நெறியின் எச்சக்கூறுகள் சில பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்திலும் இடம்பெற்றிருந்தன என

எண்ணுதற்குரிய வாய்ப்புக்கள் உள்ளன. சான்றாகக் கண்ணப்பநாயனாரின் வரலாற்றைக் காண்போம். கண்ணப்பர் வரலாறு மூலம் அவருடைய தந்தையாகிய நாகனாரிடம் காணப்பெற்ற இனக்குழு வழிபாட்டு முறையின் கூறுகளும், கண்ணப்பரிடம் காணப்பெற்ற இனக்குழு வழிபாட்டு முறையிலிருந்து விடுபட்டு வைதீகநெறி வழிபாட்டு முறையின் தொடக்க நிலையை எய்தும் கூறுகளும் இணைகின்ற போக்கை உணர்கின்றோம். நாகனார் குழந்தை வரம் வேண்டி வேலனையும் கொற்றவையையும் வழிபடுகின்றார். தன் மகன் திண்ணன் கன்னி வேட்டையாடப் புறப்படும் முன்பு தேவராட்டியை அழைத்து அவன் வெற்றிபெறும்பொருட்டுக் காடு பலியூட்டுமாறு வேண்டுகின்றார். அவர் வேண்டுகோளுக்கு இணங்கித் தேவராட்டியும் காடுபலியூட்டித் தந்தையினும் பெரிய நன்மையைப் பெறுக என வாழ்த்தியும், வழிபாடுகள் பல செய்தும் திண்ணனைக் கன்னிவேட்டைக்கு அனுப்புகின்றாள். இதைப்போன்றே அக்காலச் சமுதாயத்தில் வாழ்ந்த மக்களில் சிலர் வேல், மரம் போன்றனவற்றை வழிபாடுகள் மூலமாகவும், சடங்குகள் மூலமாகவும் தெய்வமாகக் கருதி வணங்கிய நிலையையும் காண்கின்றோம். ஆழ்வார்களும் சமுதாயத்தில் நிலவிய இனக்குழு வழிபாட்டு முறையை வெளிப்படுத்துகின்றனர். தலைவி திருமாலிடம் கொண்டுள்ள காதல் நோய்க்கு ஏற்ற பரிகாரம் கேட்கும்பொருட்டுப் பழைய இனக்குழுப் பூசாரி மகளான கட்டுவிச்சியைத் தலைவியின் தாய் அழைத்துக் குறிகேட்கும் நிகழ்ச்சியும் இடம்பெறுகின்றது. சிறு தெய்வங்களுக்குப் பலியிட்டு வணங்கும் முறையும் சுட்டப்பெறுகின்றது.[160] இவை பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் தொன்மைச் சமுதாயத்தில் காணப்பெற்ற இனக்குழுச் சமுதாய முறையின் எச்சக்கூறுகள் சில இடம்பெற்றமையைப் புலப்படுத்துகின்றன.

### 10. 4. 1. 5. நாத்திகக் கொள்கையினர்

வைதீகம், சைவம், வைணவம், சமணம், பௌத்தம் போன்ற பல்வேறு சமய நெறிகளைப் பின்பற்றியவர்கள் வாழ்ந்த பக்தி இலக்கியச் சமுதாயத்தில் இறைவன் இல்லை என்ற கொள்கை உடைய நாத்திகத்தாரும் காணப்பெற்றனர் என எண்ணுதற்குரிய குறிப்புக்களும் உள்ளன. திருநாவுக்கரசுநாயனார் உலகியல் நடையை மெய்யென்று கருதி நாத்திகம் பேசாதே என்று அறிவுரை கூறுவதையும்[161] மாணிக்கவாசகப்பெருமான் கடவுள் இல்லை என்பார் கூடி நாத்திகம் பேசி நாத்தழும்பேறினர் எனக் குறிப்பிடுவதையும்[162] சான்றுகளாகக் கொள்ளலாம். மேலும், பக்தி இலக்கியத்துள் இறைவனை வணங்காதவர்கள் ஆதர்கள் என்றும், பொய்யர்கள் என்றும், மதியிலார் என்றும், மூடர்கள் என்றும், தீவினையாளர்கள் என்றும் இகழ்ந்துரைக்கப்பெறுகின்றமையும் சுட்டுதற்குரியது ஆகும்.

### 10. 4. 2. சமயப்பூசல்கள்

சமுதாயத்தில் இடம்பெற்ற சமயங்கள் - குறிப்பாகச் சைவ, வைணவ, சமண, பௌத்த சமயங்கள் - தங்கள் செல்வாக்கைப் பெருக்கிக்

கொள்ளுவதற்காகப் போராடிய வரலாற்றுண்மையையும் பக்தி இலக்கியம் வெளிப்படையாக உணர்த்துகின்றது. இச்சமயப் பூசல்களில் சைவமும் வைணவமும் ஒன்றுபட்டு நின்று சமண, பௌத்த சமயங்களை எதிர்த்தன. சமுதாயத்தில் காணப்பெற்ற சமயங்கள் தத்தம் கொள்கைகளே உயர்வானவை என மக்கள் மத்தியில் நிலை நாட்டுவதற்காகப் பட்டி மண்டபங்கள் அமைத்து வாதிட்டமையையும் அறியலாம்.[163]

## 10. 4. 2. 1. சைவ, சமண சமயப் பூசல்கள்

திருஞானசம்பந்தர் மதுரைக்குச் செல்லவேண்டும் என்ற தம் உள்ளக் கருத்தைப் புலப்படுத்தியதும் உடனிருந்த அப்பர் பெருமான் சம்பந்தரிடம் மதுரை மாநகரில் சமணர்கள் செய்யும் வஞ்சனைச் செயல்களுக்கு எல்லை இல்லாமையால் அவண் செல்ல வேண்டாம் என எடுத்துரைக்கின்றார்.[164] எனினும், சம்பந்தர் தன் எண்ணத்தைக் கைவிடாது, மதுரை சென்று ஒரு மடத்தில் தங்கியிருக்கின்றார். அதை அறிந்த சமணர்கள் அவர் தங்கியிருந்த மடத்தைத் தீயிடுகின்றனர்.[165]

சமண சமயத்தைச் சார்ந்தொழுகிய தருமசேனரின் சூலை நோயைச் சிவபெருமான் தீர்த்தருளியதும் அவர் சிவபெருமானின் திருவருட்செயலை எண்ணி வியந்து போற்றிச் சைவ சமயத்திற்கு வருகின்றார். இதைக் கண்டு வெறுப்புற்ற சமணர்கள் கூறிய புற உரைகளைக் கேட்ட மன்னன் நாவுக்கரசரை நீற்றறையில் அடைக்கச் செய்தும்,[166] நச்சு கலந்த பாற்சோற்றை கொடுக்கச்செய்தும்,[167] மதம் கொண்ட யானையை ஏவி இடறச் செய்தும்,[168] கல்லைக் கட்டிக் கடலில் மூழ்கச் செய்தும்[169] பல்வேறு இன்னல்களை விளைவிக்கின்றான்.

திருப்பழையாற்றில் சமணர்கள் சிவபெருமான் எழுந்தருளியுள்ள கோவிலை மறைத்துவைக்கின்றனர்.[170] தண்டியடிகள் குளம் தோண்டியபோது சமணர்கள் அவர் செயலுக்கு ஊறு விளைவிக்கின்றனர்.[171] நமிநந்தியடிகள் இறைவன் கோவிலில் விளக்கெரிப்பதற்கு வேண்டிய எண்ணெய் இல்லாது கோவிலின் அருகிலுள்ள வீட்டில் சென்று, அது சமணருடைய வீடு என அறியாது எண்ணெய் கேட்டபோது சமணர்கள் தண்ணீரை ஊற்றி விளக்கெரிக்குமாறு ஏளனம் செய்கின்றனர்.[173] இந்நிகழ்ச்சிகள் சமணர்கள் சைவ சமயத்தின்பால் கொண்டிருந்த காழ்ப்புணர்ச்சியின் காரணமாகச் சைவ சமய அடியார்களுக்குச் செய்த இன்னல்களைக் காட்டுவனவாய் அமைகின்றன எனலாம்.

பக்தி இலக்கியத்துள் சமணர்கள் இகழும் உருவினர்,[174] பருத்த உடம்பினை உடையவர்கள்,[175] முடை நாற்றம் உடையவர்கள்,[176] மாசு மெய்யர்,[177] மொட்டர்,[178] கொசுக்கள் நீங்காத கண்களை உடையவர்கள்,[179] ஊத்தை வாயினையுடையவர்கள்,[180] பாசிபடிந்த பற்களை உடையவர்கள்,[181] உறியைத் தூக்குபவர்கள்,[182] பீலியைக் கையில் கொண்டவர்கள்,[183] ஊனிகந்து உண்பவர்கள்[184] அரையில் ஆடை இல்லாதவர்கள்,[187] பனை ஓலையாலான

படுக்கையை உடையவர்கள்,[188] பின்னிய, தொங்கிய சடையினை உடையவர்கள்,[189] கையிலிடு சோறு உண்பவர்கள்,[188] நின்றுண்பவர்கள்[189] என அவர்களுடைய உடம்பின் அமைப்பு, தோற்றம், உறுப்புக்களின் தன்மைகள், அவர்கள் கைக்கொண்ட பொருட்கள், உணவு உண்ணும் முறை என்பன சுட்டப்பெறுகின்றன. அடையாதன செய்பவர்,[190] அருந்தும்போது உரையாடுபவர்,[191] அறம் தெரியாதவர்.[192] அறிவில் சிந்தையர்,[193] அவம் ஒன்றும் நெறியினர்,[194] ஆதர்கள்,[195] இகழ்ந்துரைப்பவர்கள்,[196] உண்மை கண்டும் திருந்தாதவர்கள்,[197] உண்மையில்லாதவர்கள்,[198] உணராத வேடம் உடையவர்கள்,[199] உயிருடன் நடந்து திரியும் தொழில் ஒன்றுடையவர்,[200] உரங்கெடுக்கும் இருள் அமணர்.[201] கடையர்,[202] கலகம் செய்பவர்,[203] கவணர்,[204] கள்ளர்,[205] கீழோர்,[206] குண்டர்,[207] குணம் இலாதன கூறுபவர்,[208] குற்றம் கூறுபவர்,[209] குறியாதவர்,[210] கூசாது உரைப்பவர்.[211] கையர்[212] (கீழ்மக்கள்), கொடியர்,[213] கொல்லாமை புரிபவர்,[219] கொல்லாமை மேற்கொண்டொழுகுபவர்.[215] கொலையும் பொய்யும் இலேம் எனக் கொடுந்தொழில் புரிபவர்[216] கொடிபவர்,[217] கொடும் இழிதொழில் புரிபவர்,[218] சாத்திரப் பேய்கள்[219]. சனம திருத்தும் சிறு பெரியார்,[220] செதுமதியார்,[221] சோடைகள்,[222] (அன்பில்லாதவர்) தவமே என்று அவம் செய்பவர்,[223] தாழும் சமணர்,[224] தீய கருமம் செய்பவர்,[225] துர்ச்சனர்,[226] நன்மை கொள்ளும் நற்பண்பு இல்லாதவர்,[227] நற்சார்பில்லாதவர்,[228] நன்மை கொள்ளும் நற்பண்பு இல்லாதவர்,[229] நன்றியுணராதவர்,[230] நீசர்,[231] நீதியுணராதவர்[232] நேசமிலாதவர்.[233] பழியுடையவர்,[234] பலமில்லாதவர்,[235] படுபழியுடையவர்.[236] பாதகமிக்கவர்,[237] பாவகாரிகள்,[238] பாவிகள்,[239] பிட்டர்,[240] பிராந்தர்.[241] புலையாளர்[242] புன்சமணர்,[243] புன்மையே புரிபவர்.[244] பேதம் செய்பவர்,[245] பேயர்,[246] பொய்யை மெய்யெனக் கொள்பவர்,[247] பொருந்தாதனவற்றைக் கூறுபவர்,[248] பொல்லாதவர்,[249] பொறியில்லாதவர்[250] பொறுமையற்றவர்[251] மதியில்லாதவர்,[252] மருளும் மனத்தவர்,[253] மனை துறந்தவர்,[254] மாசர்,[255] மிண்டர்,[256] மூக்கினால் முரன்று ஓதுபவர்,[257] மூடர்,[258] மூர்க்கர்,[259] மோட்டு அமணர்.[260] மோடுடைய சமணர்.[261] வஞ்சகர்,[262] வன்கணர்,[263] வன்சமணர்,[264] வீறிலாக்குண்டர்.[265] எனச் சைவ இலக்கியத்துள் சமண சமயத்தவர்களின் செயல்களும், பொய்வேடமும், மனத்தூய்மையின்மையும், குற்றம் கூறும் குணமும பழித்துரைக்கப்பெறுகின்றன.

சமண சமயத்தவர்கள் கூறும் உரைகள் உண்மை இல்லாத, வஞ்சனை நிறைந்த வெற்றுரைகளாகும்.[266] எனவே, சமணர் உரைகளைக் கேட்டு அயர்த்துவிடாதீர்கள் என்றும், சமணர் சொற்களைக் கேட்டுத் தேர்ந்துவிடாதீர்கள் என்றும், சமணர்களின் குற்றம் கூறும் சொற்களை உணராதீர்கள் என்றும் சமணர் சொற்களை மெய்யென்று நம்பாதீர்கள் என்றும் பக்தி இலக்கியத்துள் அறிவுரைகள் கூறப்பெறுகின்றன.[267] திருநாவுக்கரசரின் தமக்கையார் திலகவதியார் தன் உடன்பிறந்தவர் சூலை நோயால் வாடித் துன்பப்படுகிறார் எனக் கூறியதைக் கேட்டபிறகும்கூடப் பாழும் சமண் பள்ளியை நண்ணேன் என்று உறுதியுடன் கூறுதல் அவருடைய சமண சமய வெறுப்புணர்ச்சியையே காட்டுகின்றது எனலாம். சைவ சமயத்திற்குத் திரும்பிய நாவுக்கரசர் தான் இதுநாள்வரையிலும் சிவபெருமானை எண்ணி வழிபடாது சமண

சமயத்திலிருந்தமைக்காக மனம் வருந்தித் தன்னைப் பொறியிலியேன் எனக் கடிவதுடன்,[269] சமண சமயத்திலிருந்து விடுபட்டுச் சைவ சமயத்தைச் சார்ந்தமையைக் கள்வருக்கு அகப்படாது உய்ந்தேன் என மன நிறைவுடனும்[270] கூறுகின்றார்.

### 10. 4. 2. 2. சைவ, பௌத்த சமயப் பூசல்கள்

பௌத்தர்கள் அழுக்கேறிய உடம்பினை உடையவர்,[271] உண்மை கூறாதவர்,[272] உணராத வேடம் உடையவர்,[273] உலக உண்மைகளை உணராதவர்கள்,[274] கயவர்,[275] குற்றமுடைய நெறியினை உடையவர்,[276] குறியறியாதவர்,[277] சிவபெருமானை உணரமுடியாதவர்,[278] நன்றியுணராதவர்கள்,[279] நிறை ஒன்றில்லாதவர்,[280] பாவிகள்,[281] புல்லறிவாளர்,[282] புலையானவர்,[283] புறங்கூறுவோர்,[284] பேதையர்,[285] பொக்கர்,[286] போர்வை உடையவர்,[287] மண்டைப் போதியர்,[288] மதியற்றவர்[289] என அவர்களின் தோற்றம், இயல்புகள், பண்புகள், முதலியன இழித்துரைக்கப்பெறுகின்றன. புத்தர் முதலான புல்லறிவின் பல சமயம் தடுமாற்றம் உடையது,[290] எனவே, அவர்களுடைய கூற்றுக்கள் பொய்மையானவை,[291] இதனால், அவர் கூற்றுக்களைப் பொருளாகக் கொள்ளுதல் கூடாது,[292] சாக்கியர் அலர் தூற்றுவராகையால் அவற்றைக் கேட்கக் கூடாது,[293] கண்டதே கருதும் அவர் உரைகளை எண்ணாதீர்கள்[294] என அறிவுரைகள் கூறப்பெறுகின்றன. சம்பந்தர் சோழநாட்டில் சமண, பௌத்த சமயங்கள் குற்றமுடையன என உலகறியக் கூறுகின்றார்.[295] சம்பந்தர் போதிமங்கைக்கு வந்ததும் சாக்கியர்கள் தம் சமயக் கல்வியில் மேம்பட்ட புத்தநந்தி சினம்கொண்டு எம்மை வாதில் வென்றபின்னரே நீங்கள் சின்னம் முதலான கருவிகளை முழுக்கலாம் எனக் கூறி வாதுக்கு அழைக்கின்றார். அவ்வாறே சம்பந்தருக்கும் புத்தநந்திக்கும் சமயவாதங்கள் நிகழ்கின்றன. இறுதியில் புத்தநந்தி வாதத்தில் தோல்வியுற அவர் தலை உருள்கின்றது. இதனைக் கண்டு அஞ்சி ஓடிய புத்தர்கள் சாரிபுத்தனைத் தலைவனாகக் கொண்டு மீண்டும் சம்பந்தருடன் வாதிடுகின்றனர். அவர்களையும் சம்பந்தர் வாதில் வெல்லுகின்றார்.[296] அப்பர்பெருமானும் புத்தர்களுடன் வாதிட்டுச் சைவ சமயக் கொள்கைகளை நிலைநாட்டுகின்றார்.[297] ஈழ நாட்டிலிருந்து வந்த புத்தர்கள் சிலர் தில்லை மூவாயிரவரை ஏழு நாட்களில் வெல்வதாகக் கூறி வாதுக்கழைத்ததாக ஒரு வரலாறும் உள்ளது.[298] இவற்றால் சைவ, பௌத்த சமயங்களுடைக்கிடையே காணப்பெற்ற பூசல் புலனாகின்றது.

### 10. 4. 2. 3. சைவ, பிற சமயப் பூசல்கள்

சமுதாயத்தில் காணப்பெற்ற பிறசமயங்களுக்கும், சைவசமயங்களுக்கும் இடையே காணப்பெற்ற பூசல்களையும் பக்தி இலக்கியம் வெளிப்படுத்துகின்றது. அப்பர் பெருமான் பிற சமயத்தவர்களைப் பேயர் எனப் பழித்துரைக்கின்றார்.[299] பிற சமயங்களைச் சார்ந்தவர்கள் பரமன் அருளுக்குப் பாத்திரராகாது அல்லல் உறுவர் என மாணிக்கவாசகர் எச்சரிக்கின்றார்.[300] மேலும், சமயவாதிகள் தத்தம் சமயங்களே சிறந்தவை என வீண்பெருமைகள் பேசுவதாகவும் அவர்

கூறுகின்றார்.[301] மாணிக்கவாசகர் பிறர் ஏது செய்யினும், மயங்கி ஏது கூறினும் தேவன் மகாதேவன் என்றும்,[302] அத்தேவு, இத்தேவு எனப் பொய்த்தேவு பேசிப்புலம்பித் திரிவதில் பயன் இல்லை என்றும்,[303] இத்தகைய பொய்ச் சமயங்கள் வீணான மனக் குழப்பங்களையே உண்டுபண்ணும் என்றும்[304] அறிவுரைகள் கூறுகின்றார். திருமூலர் புறச்சமயத்தவரின் பொய் வேடங்களைக் கண்டு மெய் என எண்ணி மயங்கி நிற்பவர்கள் பிறப்பில் வீழ்ந்து அழிவர் என்கின்றார்.[305] சிவகதியே உண்மையானதன்றிப் பிற அனைத்தும் அவகதிகளே என அறுதியிட்டுக் கூறுகின்றார்.[306] தவநெறி பேணாது அவநெறி பேணுவோர் வீணர்கள் என்றும், இவர் பிறர் வெறுத்து ஒதுக்கும்வண்ணம் குரல் எழுப்பும் கழுதைக்குச் சமம் என்றும் இகழ்ந்துரைக்கின்றார்.[307] சிவபெருமானை நினையாது பிற சமய நெறியில் செல்பவர் தாம் செய்வது இன்னதென அறியாது இவ்வுலகில் ஏங்கியிருந்து அழுவர் என்கின்றார்.[308] திருமாளிகைத்தேவர் பிறசமயக் கணக்கர்களைக் கண்ணால் காண்பதைக்கூடக் கடிகின்றார்.[309] வேணாட்டடிகள் பிற சமயத்தவர்கள் பொருளாராய்ச்சியில்லாதவர்கள் எனப் பழிக்கின்றார்.[310] இவ்வாறு சைவ சமயம் பிற சமயத்தவர்கள் உண்மை நிலையை அம்பலப்படுத்தி மக்கள் மனத்தை ஈர்க்க முயன்றுள்ளமையைப் பக்தி இலக்கியம் காட்டுகின்றது.

## 10. 4. 2. 4. வைணவம் – சமண, பௌத்த சமயப் பூசல்கள்

பக்தி இயக்கத்தின் இரு கண்களில் ஒன்றாகக் கருதப்பெறும் வைணவ சமயமும் சைவ சமயத்தைப் போன்றே, சமண, பௌத்த சமயங்களைச் சாடுகின்றமையையும் ஆழ்வார்களின் பாடல்களால் அறியமுடிகின்றது. வைணவ இலக்கியத்துள் சமணர்கள் அறியார்,[311] கஞ்சி குடிப்பவர்,[312] கள் மண்டி உண்பவர்,[313] சிறு நோன்பியர்,[314] தூய்மையில்லாதவர்,[315] தெரிவில் திரிவோர்[316] புந்தியில் சமணர்,[317] புலையறம் உடையவர்,[318] பீலி கொள்பவர்,[319] பொய் நூலை மெய் நூல் என்று கொள்பவர்,[320] மட்டையர்,[321] மண்டியிட்டுண்பவர்,[322] மாசுடம்பினர்,[323] முண்டர்,[324] வல்லமணர்[325] என்றும், பௌத்தர்கள் அயர்த்தார்,[326] கள்ளநூல் ஓதுபவர்,[327] நோன்பு உடையவர்,[328] பிண்டியுடையவர்,[329] புலையறம் உடையவர்,[330] போதியுடையவர்,[381] முண்டர்,[332] விதியில் சாக்கியர்,[333] என்றும் இகழ்ந்துரைக்கப்பெறுகின்றனர். மக்களிடம் சமண, பௌத்த சமயக் கொள்கைகளைக் கூறுவோரை இறை எனக் கருதிப் பணியாதீர்கள் என்றும், அவர் வாய்மொழிகளை மதிக்காதீர்கள் என்றும், அவர்கள் தமக்கு ஒத்தனவற்றைப் பேசுவர் என்றும், அவர்கள் ஓதும் நூல் கள்ளநூல் என்றும் திருமங்கையாழ்வார் அறிவுரைகள் கூறுகின்றார்.[334] தொண்டரப்பொடியார்வார் சமணர்களும் சாக்கியர்களும் பொறுத்தற்கரியனவற்றைப் பேசினால் அவர்கள் தலையை அறுப்பதே கருமம் என வன்மைக்குரல் எழுப்புகின்றார்.[335] திருமழிசையாழ்வார் திருமாலின் பெயரைத் தவிரப் பிற பெயர்களைப் பேசக் கேட்டவர்கள் ஆசைப்பட்டாழ்வர் என்கின்றார்.[336] இவை வைணவ சமயத்துக்கும், சமண, பௌத்த சமயங்களுக்கும் இடையே உள்ள காழ்ப்புணர்ச்சியைக் காட்டுவனவாகக் கொள்ளலாம்.

## 10. 4. 3. வைதீக, சமண, பௌத்த சமயங்களின் செல்வாக்கு குன்றுதல்

சைவ, வைணவ சமயங்களுக்கும் சமண, பௌத்த சமயங்களுக்கும் இடையே நிகழ்ந்த பூசல்களில் சமண, பௌத்த சமயங்கள் தம் செல்வாக்கை இழக்க ஆரம்பித்தன. இவற்றுடன் வைதீக சமயமும் மக்களின் மதிப்பை இழக்க ஆரம்பித்தது.

வைதீக சமயம் அந்தணர்களது நலத்தையே அடிப்படையாகக் கொண்டிருந்தது. வேதங்கள், சாத்திரங்கள் ஆகியனவற்றின் அடிப்படையிலான சடங்கு நெறிகள் நிறைந்த, கங்கைச் சமவெளியில் தோன்றிய புராதன வேதச் சமயத்தின் பண்புகள் மேலோங்கிய ஒரு மேல் தட்டுவர்க்கச் சமயமாக வைதீக சமயம் சமுதாயத்தில் விளங்கியது. வைதீக சமயத்தைப் போற்றியவர்களும் எண்ணிக்கையில் குறைந்த அளவே காணப்பெற்றனர். வைதீக அந்தணர்கள் பிறர் வேதங்களைக் கற்பதைக் தடைசெய்தல், தானம் பெறுதல் என்ற ஒன்றில் மட்டுமே கண்ணும்கருத்துமாய் வாழ்தல், வேள்விகள் செய்வதையே நோக்கமாகக் கொண்டிருத்தல், பிறப்பு, தொழில் போன்றனவற்றின் அடிப்படையில் உருவான சாதி வேறுபாடுகளைப் போற்றிப் பிறரைத் தங்களிடமிருந்து வேறுபடுத்தித் தாழ்ந்தவர்கள் என்றும், தீண்டத்தகாதவர்கள் என்றும் ஒதுக்கிவைத்தல், கொலை வேள்விகள் புரிதல், அறிவு நிலையால் மட்டும் உணரும் கொள்கைகளைக் கொண்டிருத்தல் போன்ற காரணங்களால் சமயப் போராட்டத்தில் வைதீக சமயம் முதன்முதலில் வீழ்ச்சியடையத் தொடங்கிற்று எனக் கொள்ளலாம். நாடாளும் மன்னர்களின் அரவணைப்பும் வைதீக சமயத்திற்குக் குறைய ஆரம்பித்தது. வேள்விக்குடிப்பட்டயம் வைதீக சமயம் ஒடுக்கப்பட்டுப் பிரம்மதேயங்கள் அழிக்கப்பெற்றமையைக் காட்டுகின்றது எனக் கூறுவர்.[337] களப்பிரர்கள் அந்தணர்களுக்கு அளிக்கப்பெற்ற முறைகேடான நிலங்களையும் தானங்களையும் இறக்கியுள்ளனர். பாண்டியன் முதுகுடுமிப்பெருவழுதி கொற்கைக் கிழான் தற்காற்றான் என்ற மன்னன் அந்தணனுக்குக் கொடுத்த வேள்விக்குடி என்ற ஊரைக் களப்பிரர்கள் பிடுங்கிக் கொண்டமையையும் வேள்விக்குடிச் செப்பேடு கூறுகின்றது.[338] பக்தி இலக்கியத்துள் வைதீக அந்தணர்களைப் பற்றிய செய்திகள் இடம் பெறுகின்றன. எனினும், சமுதாயத்தில் உயர் வகுப்பினர் பின்பற்றும் சமயமாகவே வைதீக சமயம் திகழ்ந்தமையால் சமயப் போராட்டத்தில் ஈடுகொடுக்க முடியாமல் போயிற்று எனலாம்.

தமிழகத்தில் செல்வாக்குடன் திகழ்ந்த சமண சமயத்தின் நிலையாமை பற்றிய எண்ணமானது மக்கள் மனத்தில் உருவாக்கிய சஞ்சல உணர்வும், அச்சமும், கடும் துறவறத்தை மேற்கொள்ள இயலாமையும் அதன் செல்வாக்கு குன்றுதற்குரிய காரணங்களாய் அமைந்தன. மன்னர்கள் சமணப்பள்ளிகளுக்குப் பெருமளவு நிலங்களையும், பொருளையும் தானமாக அளித்தமையால் சமண சமயத் துறவிகள் பொருளதார நிலையில் மேம்பட்டவர்களாக காணப்பெற்றனர். இதனால் அவர்கள் தம் முற்போக்குச் சிந்தனையை இழக்க ஆரம்பிக்கவே தமிழ் மக்களின் நன்மதிப்பையும் இழக்கத் தொடங்கினர். மேலும், சமண சமயம் பெண்களை வீடு பேற்றிற்குத் தகுதியற்றவர்களாகக் கூறி ஒதுக்கி வைத்தது.

பெண்கள் இப்பிறப்பில் வீடுபேற்றை அடையமுடியாது எனவும், அடுத்த பிறப்பில் ஆணாகப் பிறந்து, பின்னரே வீடுபேற்றை அடைய முடியும் எனவும் அறிவுறுத்தியது. பெண்கள் ஆடவர் வீடு பேற்றை அடையத் தடையாக அமைகின்றனர் என்ற கருத்து பரப்பப்பெற்றது. ஆடவர்கள் பெண்களிடத்து வெறுப்புற்றுத் துறவை மேற்கொள்ளுவதற்காகப் பெண்கள் இழித்துரைக்கப்பெற்றனர். காதல் வாழ்க்கையிலும், இல்லற வாழ்க்கையிலும் பெற்ற மகிழ்ச்சியும், பாதுகாப்பும் சமண சமயத்தின் கொள்கைகளால் பறிபோவதைக் கண்ட மக்கள் சமண சமயத்தை வெறுத்தனர். மனைவி, மக்கள், உற்றார், உறவினர் மீதுள்ள பற்றினைத் துறந்து ஐம்புலன்களை அடக்கித் தவம்புரிந்து இருவினைக் கெடுத்து வீட்டுலகை மேற்கொள்ள வேண்டும் என்ற சமணர்களின் வீடு பேற்று நெறியினை மக்கள் பின்பற்றத் தயக்கம் கொண்டனர். சமண சமயத்துக்குக் கிடைத்துவந்த மன்னர்களின் ஆதரவு குறைய ஆரம்பித்தது. இவற்றால் சமண சமயத்தின் செல்வாக்கு குன்றியது.

பௌத்த சமயத்தில் தோன்றிய ஈனயானம், மகாயானம், சிராவகயானம், மந்திரயானம் முதலான பிரிவுகளும், இப்பிரிவுகளுக்கிடையே காணப்பெற்ற வழக்கங்களும், பௌத்த சமயத்தின் வீழ்ச்சிக்கு அடிப்படைகள் ஆயின. கி.பி.757-இல் ஆச்சாரிய அகளங்கள் என்ற சமணசமயத் துறவி காஞ்சியிலுள்ள பௌத்தக் கோவிலுக்குச் சென்று நிகழ்த்திய சமய வாதத்தில் பௌத்தத் துறவிகள் தோல்வியுற்று இலங்கை சென்றுவிட்டனர் என்ற மரபு வழிச் செய்தியும் உள்ளது. மன்னர்களும், பொது மக்களும் கொடுத்த கொடைகளால் பௌத்தத் துறவிகள் தங்கள் கடமைகளை மறந்து இன்பம் துய்க்கத் தொடங்கிவிட்டனர். பௌத்த சமயத்தில் கற்றறிந்த பெருமக்கள் ஏற்றுப் போற்றும் அளவுக்கு எவ்வளவோ நற்கூறுகள் காணப்பெற்றபோதிலும் பௌத்தத் துறவிகள் காலத்தின் கோலத்தால் சீலத்தையெல்லாம் காற்றிலே பறக்கவிட்டு, உண்டு, உடுத்து, உறங்கும் வேடதாரிகளாகவும், சீர்கேடர்களாகவும் மாறிவிட்ட காரணத்தினால் சம்பந்தரின் கடுங்கணைக்கு இலக்காகி, இரையாகிவிட்டனர் எனக் கருதுவர். முற்கூறிய காரணங்களினால் பௌத்தச் சமயமும் வீழ்ச்சியடையத் தொடங்கிற்று எனலாம்.

## 10. 4. 4. சைவ, வைணவ சமயங்களின் வளர்ச்சிநிலை

சமண, பௌத்த சமயங்களின் கடுமையான கட்டுப்பாடுகளினாலும், அச்சமயங்களைப் பின்பற்றி ஒழுகியவர்களிடையே காணப்பெற்ற சில குறைபாடுகளாலும் வெறுப்புற்றிருந்த மக்கள் மத்தியில் நாயன்மார்களும், ஆழ்வார்களும் தோன்றிச் சமண, பௌத்த சமய வாதிகளுடன் வாதிட்டும் சைவ, வைணவ சமயக் கருத்துக்களை எடுத்துமொழிந்து பெரும் செல்வாக்குப் பெற்றுள்ளமையையும் பக்தி இலக்கியம் மூலம் அறிகின்றோம். சமுதாயத்தில் சைவ, வைணவ சயமங்கள் பெற்ற நன்மதிப்பிற்கும், பேராதரவிற்கும் உரிய காரணங்களாகப் பின்வருவனவற்றைக் கூறலாம்.

## 10. 4. 4. 1. கொள்கைகள்

சமண, பௌத்த சமயங்களின் கொள்கைகளால் வெறும் அறவழிகளை மட்டுமே வாழ்க்கை நெறியாகக் கருதித்தடுமாறிக்கொண்டிருந்த தமிழக மக்களின் மத்தியில் நாயன்மார்களும் ஆழ்வார்களும் தோன்றி இல்லற நெறியில் வழுவாது, மாசின்றி வாழ்ந்துகொண்டே இறைவனை உள்ளன்புடனும், ஒன்றிய உணர்வுடனும் வழிபட்டு உயர்நிலையை அடையலாம் என்ற எண்ணத்தைப் பரப்பிக் கடவுள் வழிபாட்டை எளிமைப்படுத்தினர். இதனால் மக்களின் உள்ளத்தில் நம்பிக்கை ஒளி சுடர்விட்டது. உலகம் நிலையற்றது என்ற நிலையாமைச் சிந்தனையில் சஞ்சலம்கொண்டிருந்த சமுதாய மக்களுக்கு உலகம் இன்பம் நிறைந்தது என்றும், உலகில் நல்லவண்ணம் வாழலாம் என்றும், ஆண்களும் பெண்களும் கூடி இன்ப வாழ்வு வாழ்ந்தும் உலகியல் இன்பங்களை நுகர்ந்துகொண்டும் இறைவனிடம் அன்பு செலுத்தி, ஆரவாரம் இன்றி வழிபாடுகள் இயற்றி உயர் நிலையை அடையலாம் என்றும் கூறிய அறிவுரைகளால் சஞ்சலம் கொண்டிருந்த மக்கள் ஆறுதலும், புத்துணர்வும் அடைந்தனர். மக்கள் அனைவரும் அண்டுதற்கு அஞ்சி ஒதுங்கிக்கொண்டிருந்த ஈமப்புறங்காட்டை உலகை இயக்கியருளும் இறைவன் திருநடனமிடும் நடன அரங்கமாகக் காரைக்கால்அம்மையார் காட்டி மகிழவே மக்கள் வாழ்க்கையில் ஒரு பிடிப்பு ஏற்பட்டது. இத்தகைய சிந்தனைகளால் சைவ, வைணவ சமயங்கள் மக்களின் பெரு மதிப்பைப் பெற்றன.

## 10. 4. 4. 2. மன்னர்களின் ஆதரவு

எந்த ஓர் இயக்கமும் நாடாளும் மன்னர்களின் ஆதரவின்றிப் பெருமளவு வளர்ச்சியும், வெற்றியும் பெற இயலாது எனலாம். இக்கருத்திற்கிணங்கவே பக்தி இயக்கமும் மன்னர்களின் ஆதரவைப் பெற்று வளர்ச்சியடைந்தமையை அறியலாம். சைவ, வைணவ சமயங்களின் கொள்கைகளால் கவரப் பெற்ற மன்னர்கள் சமய மாற்றம் அடைந்தனர். சைவ சமயத்தின் கொள்கைகளையும் எளிய நடைமுறைகளையும், அச்சமயம் மக்களிடையே பெற்றிருந்த மதிப்பையும் கண்ணுற்ற பல்லவ மன்னன் சமண சமயத்தைவிட்டுச் சைவ சமயத்தைச் சார்ந்ததுடன், பாடலிபுத்திரத்திலுள்ள சமணப் பள்ளிகளையும், சமண்பாழிகளையும் இடித்துத் திருவதிகை நகரில் சிவபெருமானுக்குக் குணபரவீச்சுரம் என்ற கோவிலைக் கட்டியமையையும் திருநாவுக்கரசர்பெருமான் வரலாறு மூலம் அறிகின்றோம்.340 திருச்சிராப்பள்ளியிலுள்ள கல்வெட்டொன்று இக்காரணம்பற்றியே இவனைக் குணபரன் எனச் சுட்டுகின்றது எனலாம்.341 கந்தசிஷ்யன் என்ற பல்லவ மன்னன் திருக்கழுங்குன்றத்திலுள்ள சிவபெருமான் கோவிலுக்கு நிலங்களை அளித்துள்ளமையையும் கல்வெட்டு காட்டுகின்றது.342 நந்திவர்மன் என்ற மன்னன் தன் முன்னோரா சமண சமயத்தவர்க்கு அளித்த நிலங்களை மீட்டு மறையோர்களுக்குக் கொடுத்துள்ளான். முதலாம் பரமேசுவரவர்மனின் கல்வெட்டொன்று அம்மன்னனின் சிறந்த சிவபக்திக்குச் சான்றாக அமைவதைக் காட்டுவர். மேலும், இம்மன்னன் கூரத்தில் சிவபெருமானுக்குக் கோவில் ஒன்றும் கட்டியுள்ளான். இராசசிம்மபல்லவ மன்னனின் சிவப்பற்றைக் கைலாசநாதர் கோயில் கல்வெட்டிலும் காணமுடிவதாகக் கூறுவர். இம்மன்னன்

சிவபெருமானிடத்துக் கொண்டிருந்த இறைப்பற்றின் காரணமாக இடவு பாலஞ்சன் என்ற சிறப்புப் பெயரைப் பெற்றிருந்தான். இரண்டாம் பரமேசுவரன் திருவதிகைச் சிவன்கோவிலைக் கற்றளியாக்கினான்.

முற்கூறிய வரலாற்று, கல்வெட்டுச் செய்திகளைப் போன்று பக்தி இலக்கியமும் மன்னர்கள் சைவ சமயத்திற்கு அளித்த ஆதரவை வெளிப்படுத்துகின்றது. மெய்ப்பொருள் நாயனார் சிவபெருமான் எழுந்தருளியுள்ள கோவில்கள் எங்கணும் தவறாது வழிபாடுகள் நடைபெற வழிவகைகள் செய்துள்ளார்.[343] கோச்செங்கட் சோழன் சிவபெருமானுக்குப் பல கோவில்கள் எழுப்பியுள்ளான்.[344] காடவர்கோன் சிவபெருமானுக்குக் கற்றளி அமைத்து, அதற்குப் பெரும் செல்வங்களையும் வகுத்துள்ளான்.[345] அநபாயச்சோழமன்னன் தில்லைத் திருவெல்லையினைப் பொன்மயமாக்கியுள்ளான்.[346] இடங்கழியார் இடையின்றிக் கோவில் வழிபாடுகள் நடைபெறுவதற்காக வழிவகைகள் செய்து கொடுத்துள்ளார்.[347] புகழ்ச்சோழர் பிறைவளர்செஞ்சடையார் பேணும் சிவாலயங்கள் அனைத்திலும் நிறை பூசனைகள் செய்துள்ளார்.[348]

சைவசமயத்திற்கு ஆதரவு அளித்தமையைப் போன்றே வைணவ சமயத்திற்கும் மன்னர்கள் பேராதரவு கொடுத்துள்ளனர். நந்திபுரவிண்ணகரம் நந்திவர்மன் பணி செய்த இடம் என்றும்,349 திருச்சித்திரக்கூடம் பொன்னும் மணியும் முத்தும்கொண்டு படைமன்னன் பல்லவர்கோன் பணிந்த இடம் என்றும்[350] வருணிக்கப்பெறுமாற்றைச் சான்றுகளாகக் கொள்ளலாம். பரமேச்சுர விண்ணகரத்தில் பல்லவ மன்னன் பல திருப்பணிகள் செய்துள்ளமையையும்,[351] சோச்செங்கட்சோழன் இறைவனுக்கு எழில்மாடம் அமைத்துள்ளமையையும்[352] அறியமுடிகின்றது.

நாடாளு மன்னர்களும் சைவ, வைணவ சயமங்களுக்கு ஆதரவு அளித்தமையைக் கண்ணுற்ற மக்களும் தங்களால் இயன்ற அளவுக்கு இச்சமயங்களை ஆதரித்தனர். பாண்டியமன்னன் வெப்புநோய் நீங்கப்பெற்றுச் சைவ சமயத்திற்கு வந்ததும் மதுரையிலுள்ள மக்களும், மதுரைப் புறத்திலுள்ள மக்களும் சமணப் பள்ளிகளையும், சமண் பாழ்களையும் தகர்த்து எங்கும் சிவச் சின்னங்களை விளக்கம்பெறச் செய்கின்றனர்.[353] சண்டேசுவரரின் மகனாகிய விசாரசன்மன் கோவில், இடைக்கோபுரம், சுற்றாலயம் ஆகியனவற்றை அமைத்துள்ளான்[354] இவ்வாறு மன்னர்களும் மக்களும் அளித்த ஆதரவினாலும பக்தி இயக்கம் வேகமாக வளர்ச்சியுற்றது.

## 10. 4. 4. 3. நாயன்மார், ஆழ்வார்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகள்

திருநாவுக்கரசர் தன் தமக்கையாராகிய திலகவதியார் சைவ சமய நெறியில் உறுதியுடன் நின்று வாழ்ந்து வரும்போது அவர் தருமசேனர் என்ற சிறப்புப் பெயருடன் சமண சமயத்தில் அசைக்கமுடியாத நம்பிக்கையுடன் அச்சமயத்தைப் பெரிதும் போற்றிப் பரப்பினார். அவ்வமயம் அவருக்கு ஆற்றொணாத சூலை நோய் வந்துற்றது.[355] சமண சமயத் துறவோர் பலரும்

பெரிதும் முயன்றும் அவர் நோயைக் குணப்படுத்த முடியாது போகவே, அவர் தம் தமக்கையார் திலகவதியாரை அடைந்து தன் நோயைத் தீர்த்தருளவேண்டுகின்றார். திலகவதியாரும் எல்லாம் வல்ல சிவபெருமானின் திருவருளை நினைந்து வேண்டித் திருநீற்றை நாவுக்கரசருக்கு அணிவித்ததும் அவர் சூலை நோயானது நீங்குகின்றது. இதனால் மனம் மகிழ்ச்சியுற்ற நாவுக்கரசர் சிவபெருமானின் பெருமையைக் கண்டு வியப்புற்று, சைவ சமயத்தைச் சார்கின்றார். இவண், சமண சமயத்தில் ஒழுகிய தருமசேனராகிய நாவுக்கரசருக்கு வந்துற்ற சூலை நோயைச் சமண சமயத் துறவோர்களாலேயே தீர்க்க முடியாமல் போனமையும் சைவராகிய திலகவதியார் அந்நோயை நீக்க இயன்றமையும் சைவ சமய வரலாற்றில் திருப்புமையமாக அமைந்துள்ளமை சுட்டுதற்கு உரியதாகும். இவ்வாறு நாவுக்கரசர் சைவ சமய மாற்றம் அடைந்தமையைக் கண்ணுற்ற சமணர்கள் நாடாளும் மன்னனின்துணையுடன் அவரை நீற்றறையில் அடைத்து வைத்தும், கல்லைக் கட்டிக் கடலில் மூழ்கச் செய்தும், மதம் கொண்ட யானையை ஏவி இடறச்செய்தும் இவ்வாறு பல துன்பங்களைக் கொடுத்தும் அவரை அழிக்க முயல்கின்றனர். சிவபெருமானின் திருவருளினால் அப்பர்பெருமான் இவ்வின்னல்களினின்றும் தப்பிப் பிழைக்கின்றார். பக்தி இலக்கியம் அப்பர்பெருமானைச் சமணர்களின் மறச்செயல்களைக் கடந்தவர் எனக் குறிப்பிடுகின்றது. இவ்வாறு அப்பர் பெருமானுக்குச் சமணர்கள் செய்த துன்பங்கள் ஒவ்வொன்றும் அவருடைய சமய வாழ்வின் ஒவ்வொரு வளர்ச்சிப் படிகளாகிப் பின்னர் மன்னர்களும், மக்களும் தலைவணங்கிப் போற்றத்தக்க அருளாளராக ஆக்கிவிட்டது எனலாம். அப்பரின் ஆன்மீக வளர்ச்சியின் காரணமாகச் சமணர்கள் கேலிக்குரிய கீழோராகி விடுகின்றனர். அப்பர்பெருமானின் உள்ளத்தில் ஊடுருவிப் பாய்ந்த இச்சைவநெறியானது தமிழகத்தின் வடக்குப் பகுதியில் வாழ்ந்த மக்களிடம் சமணம் என்ற சமயம் இனி நமக்குத் தேவையில்லை என்ற உள்ள உணர்வை ஊட்டிவிட்டது. சமணர்கள் திருப்பழையாற்றில் பொய்விமானம் செய்தமையைக் கண்ணுற்ற அப்பர்பெருமான் உண்ணாமையாகிய நோன்பினை மேற்கொண்டதும் இறைவனே மன்னன் கனவில் தோன்றி அதனை அகற்றுவிக்கின்றார்.[357] சைவ சமய வரலாற்றில் திருஞானசம்பந்தரின் வாழ்க்கை நிகழ்ச்சிகளும் குறிப்பிடற்குரியன ஆகும். பாண்டிய நாட்டில் சமண சமயம் செல்வாக்குப் பெற்றுத் திகழ்ந்தது. பாண்டியமாதேவியும் குலச்சிறையாரும் வேண்டிக் கொண்டதற்கிணங்கச் சம்பந்தர்பெருமான் பாண்டிய நாட்டிற்குச் சென்று சைவ சமயக் கருத்துக்களை மக்களிடம் பரப்புகின்றார்.[358] அப்போது சமணர்கள் காழ்ப்புணர்ச்சியின் காரணமாக அவர் தங்கியிருந்த மடத்திற்குத் தீயிடுகின்றனர். இதனைக் கண்ணுற்ற சம்பந்தர் இறைவனை நினைந்து பையவே சென்று பாண்டியர்க்காகவே எனப் பணிக்கின்றார். இதனால் பாண்டிய மன்னன் வெப்புநோயால் அல்லலுறுகின்றான். சமணத் துறவோர் தம் தவவலிமையைப் பயன்படுத்திப் பாண்டிய மன்னனின் வெப்புநோயைத் தணிக்கப் பலவாறு முயன்றும் முடியாது போகவே, இறுதியில் சம்பந்தர் சிவபெருமானைப் போற்றி வேண்டி மன்னனின் வெப்புநோயை நீக்குகின்றார். இதனைக் கண்ட மன்னன் மனம் திருந்திச் சமண சமயத்தை விட்டு நீங்கிச் சைவசமயத்தைச் சார்கின்றான்.[360] இது தவிரவும், சம்பந்தர்பெருமான் சமண சமயத்தவர்களுடன் அனல் வாதமும், புனல் வாதமும் செய்து, அவர்களை வென்று சைவ சமயத்தை

நிலைநாட்டிய நிகழ்ச்சிகளும் உள்ளன.[361] சமண சமயத்தைவரை வாதில் வென்று கழுவேற்றுகின்றார்.[362] சமண சமயத்தவர் மட்டுமன்றிப் பௌத்த சமயத்தவர்களுடனும் வாதம் செய்து வெற்றிபெறகின்றார்.[363] இவ்வாறு சம்பந்தர் பெருமானின் வாழ்க்கை நிகழ்ச்சிகளும் சைவ சமய வளர்ச்சிக்குப் பெரிதும் உதவியமையைக் கூறலாம்.

மணிவாசகப் பெருமான் ஈழ நாட்டிலிருந்து வந்த பௌத்த சமயத் துறவோர்களுடன் வாதிட்டுப் பௌத்த சமயக் கொள்கைகளை அளவை நூல் முறையால் மறுத்துச் சைவ சமயமே மெய்ச்சமயம் என நிலைநாட்டியமையைக் குறிப்பிடும் மரபு வழிச் செய்தி ஒன்றும் நிலவுகின்றது.[364] இவர்களைத் தவிர, சாக்கிய நாயனார் சாக்கிய சமயத்திலிருந்து சைவ சமயத்திற்கு வந்ததும்[365] திருப்பனந்தாள் இறைவனை யானையைக் கட்டி நேர்நிற்கச் செய்தும் இயலாது போகவே குங்கிலியக்கலயநாயனார் தன் கழுத்தில் கயிற்றைக் கட்டி இறைவனைத் தன் அன்பால் நேர்நிற்கச் செய்ததும்366 மக்களிடையே சைவ சமயம் மென்மேலும் நன்மதிப்பைப் பெற்று வளர்வத்தற்குரிய வாய்ப்புக்களாய் அமைந்திருந்தன எனலாம்.

இறைவனை வணங்குதலும், இறையடியாரை வணங்குதலும் ஒன்றே என்ற உயர்ந்த சிந்தனையை அடியார்கள் மக்கள் மனத்தில் வளர்த்ததுடன், தம் வாழ்க்கையில் அவ்வாறு வாழ்ந்தும் காட்டியுள்ளனர். சிவனடியார்கள் தம்மிடம் கேட்டபோது தம் மனைவியென்றும், ஒரே மகனென்றும் எண்ணாது உள்ளம் உருகியும், மகிழ்ந்தும் கொடுத்துள்ளனர். இந்நிகழ்ச்சிகள் அடியார்களை மனம் மகிழ்வடையச் செய்தல் என்ற ஒன்றினையே நோக்கமாகக் கொண்டு வாழ்ந்தமையைக் காட்டுகின்றன. இவர்கள் இறை அடியார்களை வணங்கி மகிழ்வதிலும், அவர்களை வரவேற்பதிலுமே தங்கள் வாழ்க்கையைக் கழித்துள்ளனர். இறை அடியார்களின் பெயர்களில் பல அறச் செயல்களைச் செய்துள்ளனர். இறைவனுக்குக் கோயில்கள் கட்டுதல், இறைவன் பூசைக்குரிய பொருட்களை மனம் உவந்து கொடுத்தல், விழாக்கள் நடத்தி மகிழ்தல் போன்றனவற்றில் தம்மை முழுமையாக ஈடுபடுத்தினர். இச்செயல்கள் அனைத்தும் மக்களின் உள்ளத்தில் நீங்காத இடத்தைப் பெற்று அவர்களைத் தம் பக்கம் இழுத்தமையாலும் சைவ சமயம் செழித்து வளர்ந்துள்ளது எனலாம்.

### 10. 4. 4. 4. சமத்துவச் சிந்தனைகள்

பக்தி இலக்கியச் சான்றோர்கள் மக்கள் மனத்தில் இறைப் பற்றை ஊட்ட முயன்றமையுடன் சமுதாய, பொருளாதார ஏற்றத்தாழ்வுகளால் மக்களிடையே காணப்பெற்ற வேறுபாடுகளை அகற்றிச் சமநிலையான சமுதாயத்தை (equalitarian society) உருவாக்கப் பெருமளவு பாடுபட்டுள்ளமையையும் நாம் அறிகின்றோம். நாயன்மார்களும், ஆழ்வார்களும் இறைவன் எழுந்தருளியுள்ள திருத்தலங்கள் தோறும் புனிதப்பயணத்தை மேற்கொண்டு மக்களை இறையன்பில் மூழ்கச் செய்யும் திருப்பணிகளில் ஈடுபட்டனர். அப்போது தாம் எடுத்துக் கொண்ட இச்செயலுக்குச் சமுதாயத்தில்

ஆழமாக வேரூன்றிக் காணப்படும் சமுதாய, பொருளாதார அடிப்படையில் அமைந்த ஏற்றத்தாழ்வுகள் தடைகளாக அமைகின்றமையை உணர்ந்தனர். சாதி வேறுபாடு பாராட்டும் எண்ணத்தினாலும் பொருளாதார ஏற்றத்தாழ்வு நிலையினாலும் சமுதாயத்தில் பலர் இயலாமை நிறைந்த வாழ்க்கை வாழ்கின்றமையைக் கண்ணுற்றனர். இதனால் பக்தி இயக்கம் வேகமாக வளர்வதற்கும் அனைத்துப் பிரிவு மக்களின் நன் மதிப்பைப் பெறுவதற்கும் அது உயர்சாதியினருக்கும், உயர் வகுப்பினருக்கும் மட்டுமே உரிய இயக்கமாக அமைந்துவிடுதல் கூடாது என்பதில் மிகவும் கண்ணும் கருத்துமாய் இருந்தனர். எனவே, நாயன்மார்களும், ஆழ்வார்களும் சமுதாயத்தில் காணப்பெறும் சாதிவேறுபாடுகளும், வகுப்புப் பிரிவுகளும் இறைவனிடத்து அன்பு செலுத்துவதற்கும், இறைவனை வழிபட்டு உயர் நிலையை அடைவதற்கும் தடைகள் அல்ல என்ற புரட்சிச் சிந்தனையைப் பரப்பினர். எச்சாதியைச் சார்ந்தவர்களாயினும், இறைவனை உள்ளன்புடன் வழிபடுவோர் யாவரும் உயர்நிலையை அடைய முடியும் என எடுத்து மொழிந்தனர். இறைவனின் படைப்பில் உயர்சாதி, தாழ்ந்த சாதி, புறச்சாதி, உயர் வகுப்பு, தாழ்ந்த வகுப்பு, ஆண்டான், அடிமை என்ற வேறுபாடுகள் கிடையா. இவை அனைத்தும் சமுதாயத்தில் வாழ்கின்ற மக்களுள் சிலரால் மட்டும் உருவாக்கப் பெற்றவையே. இறைவன் முன்னர் அனைவரும் சமம் ஆனவர்களே போன்ற சமத்துவச் சிந்தனைகளை நாயன்மார்களும், ஆழ்வார்களும் தம் தாரக மந்திரங்களாகக் கொண்டு சமுதாயத்தின் அடித்தளத்தில் வாழ்ந்த மக்களின் பேராதரவையும் பெற்றனர். இதனால், சமுதாயத்தில் வாழ்ந்த அனைத்துப் பிரிவு மக்களிடையேயும் தம் கொள்கைகளைப் பரப்புவதற்கும், அவர்கள் பக்தி இயக்கச் சிந்தனைகளை ஏற்பதற்கும் பெரும் வாய்ப்பு உருவாகிப் பக்தி இயக்கம் வேகமாகப் பரவியது.

### 10. 4. 4. 5. தமிழ்ப்பற்று

சமண சமயத்தவர்கள் தம் சமயத்தைத் தமிழக மக்களிடையே பரப்புவதற்குத் தமிழ்ப் பணியை ஒரு கருவியாகக் கொண்டமையைப் போன்று பக்தி இயக்கச் சான்றோர்களும் தமிழ்ப்பற்றுடன் திகழ்ந்ததுடன் அமையாது மக்களிடம் தமிழ்பற்றை ஊட்டும் பணியிலும் தலைசிறந்து காணப்பெற்றனர். சைவ, வைணவ பக்தி நெறியானது புராதன வேதங்களின் அடிப்படையிலான நெறிமுறைகளின் இறுக்கமான பிடியிலிருந்து தன்னை நெகிழ்த்துக்கொண்டு வருவதிலும், தமிழ் மொழியுடனும் தமிழ் மக்களுடனும் தமக்கு நெருக்கம் அதிகம் என நிறுவுவதிலும் பெருமுனைப்பு காட்டியது.367 வேதங்களைத் தன் பாற்கொண்ட வடமொழி மட்டுமே இறை அன்பை வெளிப்படுத்த ஏற்ற மொழி என்று பக்தி இயக்கம் வலியுறுத்தவில்லை. மாறாகப் பக்தி இயக்கம் தாய்மொழியாகிய தமிழ்மொழியின் மூலமாக இறையுணர்வை வெளிப்படுத்தமுடியும் என உறுதியாக நின்று நிலைநாட்டியமையால் சமுதாயத்தில் மக்களின் உள்ளத்தில் மகிழ்ச்சியும், நம்பிக்கையும் காணப்பெற்றன. பக்தி இலக்கியத்தில் தமிழ் மொழியின் இனிமையும், எளிமையும், பெருமையும் இறைவனின் இயல்புகளுடன் தொடர்புறுத்தப்பெற்று, அம்மொழியை ஒரு தெய்வமொழியாகக் காட்டும் போக்கை நாம் உணர்கின்றோம். சான்றாகத் திருஞானசம்பந்தரின் பதிகங்களில் பயன் கூறும் பகுதியுள்

நற்றமிழ்ஞானசம்பந்தன், தமிழ்ஞானசம்பந்தன் எனத் தமிழுடன் தம்மை இணைத்துக் கூறும் நிலையைக் காட்டலாம். பாண்டிய நாட்டில், தமிழ்மொழியை வளர்த்த சமண சமயத்தை எதிர்த்துப் பேராடிப் பக்தி இயக்கத்தைப் பரப்ப வேண்டிய கட்டாய நிலையில் தமிழ்மொழியைப் போற்றும் அரும்பணியை மேற்கொண்டு தமிழ் மக்களின் உள்ளங்களைக் கவர்ந்தனர் எனலாம்.

## 10. 4. 4. 6. பெண்டிர் ஆதரவு

சமண, பௌத்த சமயத்தவர்கள் கடும் துறவை வலியுறுத்த வேண்டியும், ஆடவர் உள்ளத்தில் பெண்ணாசையை நீக்க வேண்டியும் பெண்களை இழித்துக் கூறியமையால் இச்சமயங்கள் பெண்களின் வெறுப்பைத் தேடிக்கொண்டன. ஆனால், பக்தி இயக்கம் பெண்களுக்கும் ஏற்ற இடம் கொடுத்து, அவர்களும் சமுதாயத்தில் ஆடவர்களுக்குச் சமம் ஆனவர்களே என வலியுறுத்தவும் செய்தது. இதனால், பெண்களின் பேராதரவு பக்தி இயக்கத்திற்குக் கிட்டியது. சைவப் பக்தி இயக்கத்துள் திலகவதியார், காரைக்கால் அம்மையார், மங்கையர்க்கரசியார் போன்றவர்களும், வைணவப் பக்தி இயக்கத்தில் ஆண்டாளும் பெண்ணினத்தின் சார்பாக நின்று பெண்ணின முன்னேற்றத்திற்கு வழிகாட்டியாய் அமைந்தனர். பெண்களுக்குச் சமய உரிமைகள், சமுதாய உரிமைகள், பொருளாதார உரிமைகள் முதலியன உண்டு என அறிவுறுத்தினர். பெண்கள் ஆடவர்களுக்கு இணையாக மதிக்கப்பெறவேண்டும் என வலியுறுததினர். ஆண், பெண் சமத்துவச் சிந்தனைகளைப் பக்தி இலக்கியம் மூலம் வெளிப்படுத்தினர். இதனால் பெண்களும் ஆடவர்களுக்கு இணையாகச் சமயப் பணிகளில் ஈடுபடும் வாய்ப்பைப் பெற்றனர். சமுதாயத்தில் ஒடுக்கப்பெற்றிருந்த பெண்ணினம் முழு முனைப்புடன் பக்தி இயக்கத்தில் ஈடுபட்டமையாலும் அது விரைந்த வளர்ச்சியைப் பெற்றது.

## 10. 4. 4. 7. புராணக்கதைகளைப் பயன்படுத்துதல்

பக்தி இயக்கம் சமூக மதிப்புக்களை வலியுறுத்திச் சமுதாயம் சீரிய முறையில் செயல்பட முனைந்த முனைப்பிற்குத் துணையாகப் புராணக் கதைகளைப் பயன்படுத்தியது. சமணரின் ஒழுக்க அறிவும், ஒழுக்க உயர்வும் பக்தி இயக்கம் பயன்படுத்திய புராணக் கதைகளால் தலைதூக்காமல் அமுங்கிவிட்டன எனக் கூறுவர்.[368] பக்தி இயக்கம் புராணக் கதைகளை மக்களுக்கு விளக்கிக் கூறி, ஆணவம் கொள்ளாமை, தன்னலம் மறுப்பு, தீவினைகள் செய்யாமை முதலான சமூக மதிப்புகளை ஊட்டி மக்களைக் கவர்ந்தது. கல்வி அறிவற்ற சாதாரண மக்களும் கூட இச்சமூக மதிப்புகளை உணர்ந்து கொள்ளப் புராணக் கதைகள் பெரிதும் உதவின.

## 10. 4. 4. 5. வட்டார உணர்வு

பக்தி இலக்கியச் சான்றோர்கள் இறைவன் எழுந்தருளியுள்ள திருத்தலங்கள்தோறும் சென்று அவண் உறைந்துள்ள இறைவன் பெருமைகளைப் போற்றிப் புகழ்ந்ததுடன், அவ்விடங்களைக் கேட்போரும், கற்போரும் மகிழும்

வண்ணம் வருணித்தும் சென்றனர். தம் ஊரினை அல்லது தம் வட்டாரத்தைப் பிறர் புகழ்ந்து கூறும்போது அதனைக்கேட்டு மனம் மகிழ்தல் என்பது மக்களின் பொதுவான உள்ள நிலை ஆகும். இவ்வுளவியல் உண்மையை மனத்துட்கொண்ட பக்தி இயக்கச் சான்றோர்கள் ஒவ்வோர் இடங்களையும் புகழ்ந்து பாடி அவண் வாழ்கின்ற மக்களிடையே வட்டாரப்பற்றை மிகுவித்து அவர்களின் பேராதரவைப் பெற்றனர். இவ்வாறு பக்தி இயக்கம் பெருவளர்ச்சியுற்றது எனலாம்.

## 10. 4. 5. சைவ, வைணவ சமயப் பூசல்கள்

சமண, பௌத்த சமயங்களை எதிர்த்துப் போராட வேண்டிய சூழலில் பக்தி இயக்கத்தின் இரு கண்களெனத் திகழ்ந்த சைவ, வைணவ சமயங்கள் ஒன்றுபட்டு நின்றன. பக்தி இயக்கம் மக்களின் மனத்தில் நன்மதிப்பைப் பெற்று வளர்ச்சியுற்றதும் சமுதாயத்தில் தத்தம் நிலையை மேன்மேலும் உயர்த்தவேண்டித் தங்களுக்குள் பூசலிட்டுக்கொண்ட நிலையையும் பக்தி இலக்கியம் புலப்படுத்துகின்றது. சைவ இலக்கியத்துள் சிவபெருமான் மூவர் தலைவனாகவும் மூவரில் முதல்வனாகவும், திருமாலின் தலைவனாகவும், மாற்கு வரதனாகவும், திருமாலால் காண முடியாதவனாகவும், திருமாலின் சிந்தைக்கு எட்டாதவனாகவும் காட்டப்பெறுகின்றான். இதைப்போன்று வைணவ இலக்கியத்துள் திருமால் மூவரில் முதல்வனாகவும் சிவபெருமானின் நாயகனாவும் காட்டப்பெறுவதுடன், சிவபெருமான் பிறவி மருந்து அறியாதவனாகவும், சுடு நீற்றைப் பூசியவனாகவும், தலையோட்டைக் கொண்டவனாகவும், இறந்தவர் என்பைப்பூண்டவனாகவும் குறிப்பிடப்பெறுகின்றான். இவை சைவ, வைணவ சமயங்கள் தத்தம் செல்வாக்கைப் பெருக்கிக் கொள்ள முயன்ற முயற்சியின் விளைவான பூசல்களை வெளிப்படுத்துவனவாகத் தோன்றுகின்றது.

## 10. 5. முடிபுகள்

1. தொல்காப்பியர் காலத் தமிழர்களிடையே சமய உணர்வு அரும்பி நின்ற நிலையை உணர முடிகின்றது.

2. சங்க இலக்கியம் அக்கால மக்களுடைய வாழ்க்கையில் சமயம் பின்னிப் பிணைந்து நின்றமையைக் காட்டுகின்றது.

3. சங்க இலக்கியத்துள் சைவ, வைணவ சமயத் தொடர்பான செய்திகள் மிகுதியாகவும், சமண, பௌத்த சமயத் தொடர்பான செய்திகள் அருகியும் காணப்பெறுகின்றன.

4. சங்கம் மருவிய காலப்பகுதியில் களப்பிரர்களும், பல்லவர்களும் தமிழகத்தை ஆண்டுவந்தனர். அவர்கள் ஏற்கனவே சமுதாயத்தில் அருகிய நிலையில் காணப்பெற்ற சமண, பௌத்த சமயங்களுக்கு ஆதரவு அளித்தனர்.

5. சங்கம் மருவிய காலத் தமிழகத்தில் சமண, பௌத்த சமயங்கள் வளர்ச்சியடைந்தமையைச் சிலம்பும், மேகலையும் தெளிவாகக் காட்டுகின்றன.

6. பக்தி இலக்கியம் அக்காலச் சமுதாயத்தில் சைவ, வைணவ சமயங்கள் அடைந்திருந்த பெருவளர்ச்சி நிலையைத் தெளிவாகக் காட்டுகின்றது.

7. அக்காலச் சமுதாயத்தில் சைவ, வைணவ சமயங்கள் மட்டுமன்றிச் சமண, பௌத்த, வைதீக சமயங்களும், இனக்குழுச் சமுதாய அமைப்புச் சமயத்தின் எச்சக்கூறுகளும் காணப்பெற்றமையை அறியலாம்.

8. கடவுள் இல்லை என்ற கொள்கையினைக் கொண்ட நாத்திகச் சமயத்தவர்களும் சமுதாயத்தில் இடம்பெற்றிருந்தனர் என எண்ணுதற்குரிய குறிப்புக்களைக் காண்கின்றோம்.

9. சமுதாயத்தில் சைவ, வைணவ சமயங்களைப் போன்று சமண, பௌத்த சமயங்களும் செல்வாக்கு பெற்றிருந்தன. மன்னர் ஆதரவும் இச்சமயங்களுக்குக் கிட்டியது.

10. இச்சூழலில் சமண, பௌத்த சமயங்களின் செல்வாக்கைக் குறைப்பதற்கும், சைவ, வைணவ சமயங்களின் செல்வாக்கைப் பெருக்குவதற்கும் நாயன்மார்களும், ஆழ்வார்களும் தோன்றிப் பக்தி இயக்கத்தை உருவாக்கினர்.

11. சமுதாயத்தில் தத்தம் செல்வாக்கைப் பெருக்கவும் மக்களின் நன்மதிப்பைப் பெறவும் சைவ, வைணவ சமயங்கள் ஒன்றிணைந்துநின்று சமண, பௌத்த சமயங்களுடன் போராடிய பூசல்களைப் பக்தி இலக்கியம் வெளிப்படையாகக் காட்டுகின்றது.

12. இச்சமயப் போராட்டத்தில் சமண, பௌத்த சமயங்களின் செல்வாக்கு குன்றவே, சைவ, வைணவ சமயங்கள் தழைத்தோங்கின.

13. சமுதாயத்தில் வைதீக அந்தணர்கள் செலுத்திய மேல் ஆதிக்கத்தின் காரணமாக வைதீக சமயமும், சமயத்துறவிகளின் செயல்கள், கடுமையான கட்டுப்பாடுகள், பெண் வெறுப்பு போன்ற காரணங்களால் சமண, பௌத்த சமயங்களும் மக்களின் ஆதரவை இழந்தன எனக் கொள்ளலாம்.

14. சைவ, வைணவ சமயங்கள் இறைவனிடம் அன்பு செலுத்துதல் என்ற நோக்கத்தையே ஆழமாக வெளிப்படுத்தின. இல்லறத்தார்க்கும் வீடுபேறு உண்டு என மொழிந்தன.

15. சைவ, வைணவ சமயங்களின் உள்நோக்கங்களைக் கண்டு சமயம் மாறிய மன்னர்களின் பேராதரவும் பக்தி இயக்கத்திற்குக் கிட்டியது.

16. நாயன்மார்களுக்கும், ஆழ்வார்களுக்கும் சமய வாழ்க்கையில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் ஒவ்வொன்றும் பக்தி இயக்கத்தின் வளர்ச்சிப்படிகளாகவும், திருப்புமையமாகவும் அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது ஆகும்.'

17. பக்தி இயக்கம் சமுதாயத்தில் சாதிமுறையின் அடிப்படையிலும் பொருளாதார நிலையின் அடிப்படையிலும் காணப்பெற்ற ஏற்றத்தாழ்வுகளைக் கடிந்து சமநிலையான சமுதாயம் அமைய முயன்றமையால் அவ்வியக்கம் சமுதாயத்தில் வாழ்ந்த அடித்தட்டு மக்களின் முழுமையான ஆதரவையும் பெற்றது.

18. பக்தி இயக்கம் தமிழ்ப் பற்றை மக்களிடம் ஊட்டியதுடன் தமிழ்மொழிக்கு ஏற்றமும் அளித்தமையால் மக்களின் நன்மதிப்பைப் பெற்றது.

19. புராணக் கதைகளை மக்களிடையே எடுத்துக்கூறிச் சமுதாய மதிப்புக்களைச் சாதாரண மக்களும் உணர்ந்து கொள்ளச் செய்தமையால் சமண, பௌத்த சமயங்களின் ஒழுக்க நெறிகள் அமுக்கப்பெற்றுவிட்டன எனக் கருதுவர்.

20. மக்களிடையே வட்டாரப் பற்றை ஊட்டுதல் என்ற உளவியல் பாங்கை உணர்ந்துகொண்டு பக்தி இயக்கம் இறைவன் எழுந்தருளியுள்ள இடங்களின் சிறப்பை வருணிப்பதன் மூலம் அவ்வட்டார மக்களின் ஆதரவைப் பெற்றது.

21. இவ்வாறு சமண, பௌத்த சமயங்களின் செல்வாக்கு குன்றிச் சைவ, வைணவ சமயங்கள் செல்வாக்குப் பெற்ற வேளையில் சைவ, வைணவ சமயங்களுக்கிடையே தம் செல்வாக்கை மேலும் வளர்த்துக்கொள்ள வேண்டி நிகழ்ந்த பூசல்களையும் பக்தி இலக்கியம் வெளிப்படுத்துமாற்றை உணர்கின்றோம்.

முற்கூறியவாறு பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் நிலவிய சமய நிலையை அறியமுடிகின்றது.

## மேற்கோள் சான்றுகள்

1. தொல். கிளவி. 4, அகத். 20, புறத். 23, மெய்ப். 24

2. அ. தண்டபாணி தேசிகர், ''தொல்காப்பியம் கூறும் சமயநிலை'', தொல்காப்பியச் சிந்தனைகள், ப. 252

3. தொல். புறத். 27., இராமசாமிப்பிள்ளை, ''தொல்காப்பியத்தில் கடவுள்'' தொல்காப்பியச் சிந்தனைகள், ப. 248

4. தொல். பொருள். 63

5. கா. சுப்பிரமணியன், ''சங்காலச் சமுதாய வாழ்க்கையில் மந்திரம், சமயம், ஆகியவற்றின் பங்கு'', தமிழ் ஆராய்ச்சியின் புதிய எல்லைகள், ப. 45

6. சோ. ந. கந்தசாமி, தமிழும் தத்துவமும், ப. 340

7. பரி. 17:49

8. அகம். 13:1 - 4, 14 - 15, 125:14, 15:6:15, 230, 282. 307:12, 348:8, 372:1- 3, ஐங்:32, 259, குறிஞ்சி.208, குறுந். 105:1 - 2, நற். 82:2, 189:4, 216:6 344:4 பதிற். கடவுள்.12, பதிற். 30:34, 41:6, பதி. 15:37 மதுரை 651, மலை. 82 - 83, 250, 538

9. அகம். 166:7 - 9, கலித். 38:26 - 29, 124:18, 132:21 - 22 குறுந். 19:4 - 5, 293:3 - 4, பதிற்.82:24,9 - பதிகம் 10, மலை.82 - 83, 250, 381

10. நற். 240:1, புறம். 194:5

11. அகம். 125:15, 372:1 - 3, ஐங்கு. 182:3, 257:1 - 2 கலித். 103:75 - 79

12. அகம்.158:7 - 9, ஐங். 259:1 - 4, கலித்.101:13 - 14, 106 26 - 29, திருமு.22-225, நற்.82:1 - 2, 201.1 - 6, 216:6, 344:4 - 5, நெடுநல், 42 - 43, 344:4 - 5, நெடுநல், 42 - 43, பரி.4:47 - 70, புறம். 52:12 - 260:45 பொருநர். 52, மலை. 82- 83, மதுரை. 164, 577 - 5

13. வாசுகி பெரியார்தாசன், உலக மதங்கள், தத்துவப் பார்வை, பக். 10 11

14. மதுரை 651

15. நெடுநல். 77

16. பதிற்.பதிகம் :10

17. தேவநேயன், தமிழர் மதம். ப.36

18. புறம். 198:9

19. சிறு. 96

20. பரி. 5:13

21. அகம். 18:16, புறம் :6:17 - 18

22. கலித். 2:4, திருமு.154

23. கலித்.142, 28:150:1 - 3, பதிற், கடவுள். 1 - 2

24. பரி. 1:43

25. கலித். 104:11 - 12, பரி.5:30 புறம். 55:1 - 5

26. கலித். 142:27, பதிற். கடவுள். 9 - 10, பரி. 8:127, 9:7 புறம்.55:4, 56:2, 91:5, மலை.83

27. கலித். 105:17

28. அகம். 104:11 - 12, 360:6, பதிற். கடவுள்.1 புறம். 56:2

29. பதிற். கடவுள். 4 - 5, புறம்.166:1

30. கலித். 38:12, பரி:5,6, 9:6

31. பரி. 5:28

32. திருமு. 152, பதிற், கடவுள். 7 - 8

33 கலித். 25:26, 103, 15, பதிற், கடவுள். 8 - 9, புறம். 1 - 9 55:5, 91:5-6

34. கலித். 21:3, திருமு. 151:52

35. பரி.8:2

36. பரி. 5:34, புறம்.56:2, மதுரை.458

37. கலித். 2:6, 103:105:17

38 பதிற். கடவுள்.10:11

39. கலித். 150:20, பரி.8:26

40. அகம்.18:16. கலித். 2:1, 38:1 - 2, 150:1 - 3, திருமு. 154, பதிற்.கடவுள்.3-12, பரி. :1:44 5:20 - 26, புறம். 55:1 - 5, 166:1, மதுரை.53 - 454

41. அ. ச. ஞானசம்பந்தன், பெரிய புராணம் ஓர் ஆய்வு. ப.63

42. பரி. 8:83

43. பதிற். 15:36, 19:22, பெரும். 402

44. பரி :3:37

45. கலித். 104:9 - 10, 105:71 - 72, 119:3, 127:1 - 4

46. கலித்.134:1 - 2, 145 - 65, நற். 32:1, பரி. 3:1, பரி.திரட்டு. 7:1, புறம்.57:2 மதுரை 591

47. புறம். 57:2

48. கலித். 52:5, 107:32 - 33, 123:4, பதிற். 3:35, 13:6 பெரும். 487, முல்லை.2

49. அகம். 360:6, கலித். 104:38, 119:3, பரி. 1:59, 2:52. 2:56, 3:3, 3:67, 3:73, 4:67, பெரும்.402

50. பதிற். 4:58

51. பதிற். 3:60, 15:54, 31:8

52. பரி. 1:57, 2:36 - 40, 2:87, 13:8 - 9, 15:59. முல்லை. 2

53. கலித். 104:9 - 10, 105:72, பரி. 1:52, 1:58:2:19:9 2:50, 3:88, 4:9, 15:9, புறம்.58 14 - 16, முல்லை.2

54. பரி. 3:16

55. பரி. 1:11, 1:52, 2:60, 3:16 - 18, 4:36 - 1, 8:2, 13:4, 13:38 - 39, 15:56, திருமு. 15:1 புறம் 56:6

56. கலித். 104:9 - 10, பரி. 1 - 3, 1:8, 2:31 - 3:90, முல்லை.2

57. மதுரை. 590 - 591

58. கலித். 140:8, பரி. 1 - 28, 3:11 - 14, பெரும். 404

59. பரி. 2:1 - 19, 3:24, 4:10 - 21, 4:22 - 24, 13:34 - 36

60. அகம். 267:17, குறிஞ்சி. 1:3, குறுந். 51, பரி.5:13

61. திருமு. 271

62. அகம். 149:16

63. அகம். 22:6, 98:27, 328:5, குறிஞ்சி. 174 - 175 குறுந். 111 - 1 - 2, திருமு. 45 -46, 211 - 213, 273. நற். 173:9, 288:10, பட். 145, பரி 19:84, புறம். 51:19, பெரும். 75

64. அகம். 59:10 - 11, 98:9 - 4, 158:16, ஐங். 308:4 பரி. 18:1 - 4, புறம். 16:12, 23:14, 299:6, பொருந. 131.

65. அகம். 22:7 - 11, 28:6 - 7, 178:4, 232, 11, 246:6 272:13 - 15, 273:13, குறுந். 261:1, 263 1 - 6, நற். 34:11, 47:8 - 11, 82:4 255:1 - 288:5- 10, பதிற். 26:12, புறம். 56:14 295:5, மதுரை. 181, 609, திருமு.59 - 61

66. பதிற். 11:6, பரி. 8:61, 9:36, 18:25, பெரும்.75

67. பரி. 5:13, 8:127

68. திருமு.258

69. திருமு. 259

70. பரி. 5:11, 14, 21, 21:68 - 70, திருமு. 64, 91 - 118

71. பரி. 5:12, 5:30 - 49, 9:1 - 7, 9:14 - 15

72. அகம். 1: 3, ஐங். 308, 3 - 4, பரி.8: 126, பெரும். 75

73. கே. கே. பிள்ளை, தமிழக வரலாறு, மக்களும் பண்பாடும், ப. 65

74. K. A. Nilakanda Sastri, **Cultural Contacts between Aryas and Dravidians**, P.60

75. N. Subramanian, **Sangam Polity**, P.296

76. S. N. Kandaswamy, "The Philosophical Aspects of Paripatal", **Philosophical Heritage of the Tamils**, P. 138

78. அகம். 289, புறம். 232, 261, 263, 264, 265, 306 314, 329, 335

79. அகம். 157, பரி. 18:28

80. அகம். 167

81. கலித். 49:9

82. அகம். 99 : 9 : பரி : 8 : 126, பரி. திரட்டு. 1: 59.

83. அகம். 287:5, 307: 11- 12, புறம். 52: 12- 13

84. குறுந். 87:1 - 2

85. பட்டினப். 286

86. அகம். 167:15 - 16, 307, 369

87. அகம். 167:1 - 16

88. அகம். 307:11

89. பரி. 8: 96, மதுரை. 366

90. பரி. 17:32

91. பதிற். 15:37 - 38

92. மதுரை. 361 - 362

93. மதுரை.263 - 264 பரி. 8: 99 அகம் 149: 14 - 15

94. அகம். 240: 8. 9, பெரும். 141

96. ஐங். 62

97. பரி. 8:103 - 115

98. திருமு. 66, பரி. 13:12 - 13

99. கலித். 121:21 - 24

100. குறுந். 105:1 - 2

101. நற். 19:2 - 3

102. அகம். 269:21, 320:4, நற். 186:6, பரி. 6:94 - 96 8:62 - 69

103. பதிற். 74:26

104. கலித். 59:13. நற். 22:6 பட். 89 - 90, பரி. 11:91, புறம். 239 மதுரை. 600 - 603

105. குறுந். 2:3, 198:8, புறம். 24, 27, 29, 134, 165, 194 252

106. புறம். 176, 192, 214, 236, 367

107. கா. சுப்பிரமணியம், சங்ககாலச் சமுதாயம், ப. 76

108. அகம். 232:11 - 19, 273, 13 - 15, 287:5 - 7, 348:8, ஐங். 259:1- 4, கலித்.40:11 -12 108:56 - 59 109:19, நற். 344:4 - 5 குறுந். 43 - 44, பட். 174, பதிற். 6, பரி.1:62 -65 8:97- 101, 13:61- 64, புறம். 52 - 13, பெரும். 104:10, மதுரை 55 - 56, 604 - 610, மலை. 610 - 614

109. மதுரை. 465 - 467

110. மதுரை. 475 - 487

111. மயிலை சீனி வேங்கடசாமி, களப்பிரர் ஆட்சியில் தமிழகம். ப. 410

112. ந. சுப்பிரமணியன், தமிழக வரலாறு, கி.பி. 1565 வரை. ப. 70

113. மயிலை சீனி வேங்கடசாமி. மு. கூ. நூல். ப. 20 - 21

114. வேள்விக்குடிச் செப்பேடுகள். வரிகள் 34 - 40

115. வி. டி. செல்வம், தமிழகவரலாறு ப. 101

116. ஏ. சுவாமிநாதன். மு. கூ. நூல். ப. 120

117. மயிலை சீனி வேங்கடசாமி, சமணமும் தமிழும், பக். 34 - 35

118. Madras Ephi. Rep. 1907. PP. 60 - 61, 1901. PP. 77-78

119. மயிலை சீனி வேங்கடசாமி, பௌத்தமும், தமிழும், ப. 24, 25, 37

120. நா. வானமாலை, தமிழர் பண்பாடும் தத்துவமும், ப. 216

121. ஆ. வேலுப்பிள்ளை, தமிழர் சமய வரலாறு, ப.52

122. சிலம்பு. 10176 - 192

123. சிலம்பு. 10:176 - 192

123. சிலம்பு. 10:176 - 185

124. சோ, ந, கந்தசாமி. மு. கூ. நூல். ப. 42

125. சிலம்பு 3:86 - 9, 5:4. 5, 179:10:44, 11:5

126. சிலம்பு. 10:22

127. சிலம்பு. 14:35 - 33 14:39 - 45

128. சோ. ந. கந்தசாமி. மு. கூ. நூல். ப. 112

129. சிலம்பு 10:47, 10:194 - 195, 11:152 - 155

130. சிலம்பு. 10:171 - 175, 10:190 - 191, 14:25 - 45

131. சிலம்பு 10:176 - 189, 10:192 - 213, சோ. ந. கந்தசாமி, மு. கூ. நூல். ப.86

132. சோ. நா. கந்தசாமி. மு.கூ. நூல். ப. 17, 25 - 31

133. சிலம்பு. 10:13, 15:103, 10:11, 10:12, 10:13 5:179, 27:103 - 108

134. மணி. 2:12 - 13, 8:49 - 53

135. மணி.21:210 - 211, 28:174 - 176

136. மணி. 29:46 - 472

137. மணி. 30:49 - 364

138. மணி. 2:64 - 69

139. மணி. 22.169:171 - 23:128 - 129

140. மணி. 3:70 - 73

141. மணி. 4:113 - 120, 6:105 - 125

142. 5:16, 5:75, 6:150 - 153, 6:158-159, 7:18 - 22 10:40-41, 17:23, 18:21, 20:3 - 4 20:23, 30:127, 21:4, 21:63 - 71, 28:94:28:138

143. 4:1:2:7, திருநேரிசை. 1 - 6 பாடல்கள், திருநாவுக். 37:4

144. திருநாவுக். 38:1

145. திருநாவுக். 39:4

146. திருஞான. 624:1

147. திருஞான. 601

148. திருஞான. 18

149. திருஞான. 560:1

150. நின்றசீர். 1:1

151. திருநாவுக். 84,90

152. மூர்த்தி. 13 - 15

153. மா. இராசமாணிக்கம், கல்வெட்டுக்களில் சமயம், சமுதாயம், அரசியல், ப.60

154. A. R. E. 38 of 1929. நா. வானமாமலை, பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும், 106

155. மயிலை சீனி வேங்கடசாமி, சமணமும் தமிழும். ப. 51

156. திருஞான. 905

157. சாக்கிய. 3

158. திருஞான, 18

159. 4:1:3: திருச்சிற்றம்பலம்:5:3, 4:1:23: திருவிருத்தம். 7:2 - 3 2:52: சிகாமரம் 3:2 - 3, 4:2:66 திருநேரிசை. 5:1, 5:6:1: திருத்தாண்டகம். 7:3, திருவா. 7:17 19 3:79 - 82, 4:79, திருமந்திரம்:1504 15:2

160. பெரியாழ்.திருமொழி. 2:5:7

161. 5:1:32: திருக்குறுந்தொகை. 6:1

162. திருவா. 4:47

163. திருவா. 5:49:3

164. திருஞான. 616:1

165. திருஞான. 697 - 700

166. திருநாவுக். 96

167. திருநாவுக். 103

168. திருநாவுக். 109

169. 4: நமச்சிவாய. 8

170. திருநாவுக். 294

171. திருநாவுக். 294

172. தண்டியடிகள். 5 - 10

173. நமிநந்தி. 10

174. 1:20:10:1 - 2

175. 1:10:1 - 2

176. 2:5:17: திருக்குறுந்தொகை. 4:1 - 2, 4:2:49: திருவிருத்தம். 102:4

177. 4:1:27: திருநேரிசை. 4:11

178. 2:5:17: திருக்குறுந்தொகை. 4:1 - 2, 4:2:49: திருவிருத்தம் 4:1 4:2:52: திருவிருத்தம். 8:1 - 2, 5:2:17, திருக்குறுந்தொகை, 1:1, 6:2:4:47: திருத்தாண்டகம். 7:2

179. 1:324:2

180. 2:1:9:1:10:1, 6:12:4, திருத்தாண்டகம், 3:1 - 2, 1:29: திருத்தாண்டகம்.4:1, 6:5:3: ஏழைத்திருத்தாண்டகம் 8:1, 6:6: திருத்தாண்டகம். 8:1

181. 4:1:27: திருநேரிசை. 4:1

182. 4:2:52: ஏழைத்திருத்தாண்டகம். 8:1, 5:2:17: திருக்குறுந்தொகை 2:1-2, 6:1:29: திருத்தாண்டகம். 4:1 6:5:3, ஏழைத்திருத்தாண்டகம். 8:1

183. 4:1:27: திருநேரிசை, 2:1 - 2, 5:5:8: திருக்குறுந்தொகை. 9:1 - 2

184. 6:1:29. திருத்தாண்டகம். 4:1

185. 4:2:52: திருவிருத்தம். 9:1

186. 2:1:14:11:10:1

187. 1:10:1 - 2, 2:5:17: திருக்குறுந். 3:1 - 2, 3:1:14:5:10:1 4:6:4: திருநேரிசை. 9:1 - 2 5:30: திருக்குறுந்தொகை. 4:1 - 2

188. 1:10:1 - 2

189. 1:8:10:1 - 2

190. 1:1:14:9:10:1 - 2

191. 4:2:52: திருவிருத்தம். 5:1

192. 6:6: திருத்தாண்டகம். 8:1

193. 1:19:10:2 - 3, 6:2:6: திருத்தாண்டகம்:8:1

194. திருநாவுக். 47:2

195. 1:1:14:9:10:1 - 2, 1:30:10:1 - 3, 3:1:5:1:1:10:1

196. 3:2:39:1 - 2

197. 1:25:10:1 - 2 4:5:6: திருவிருத்தம். 10:1

198. 1:25:10:1 - 2

199. 2:1:11:2:10:3 - 4

200. திருநாவுக். 87:2

210. 6:1:29: திருத்தாண்டகம். 3:1 - 2

202. 2:5:17: திருக்குறுந்தொகை:41:1, திருநாவுக். 109:1

203. மூர்த்தி. 45:2

204. 3:1:38:10:1

205. 2:5:17:திருக்குறுந்தொகை 5:1 - 2, 6:1:9: திருத்தாண்டகம். 9:1 - 2

206. 4:2:52: திருவிருத்தம். 4:1

207. 2:5:17:திருக்குறுந்தொகை. 3:1 - 2, 4:1:27: திருநேரிசை. 1:1 1:1, 4:2:49: திருவிருத்தம். 4:1 6:2:6: திருத்தாண்டகம். 9:3

208. 1:10:1 - 2, 5:1:20:திருக்குறுந்தொகை. 9, 5:2:17:திருக்குறுந்தொகை.3:1-2 5:5:8: திருக்குறுந்தொகை. 9:1 - 2

209. 1:28:10:1 - 2, 4:2:52: திருவிருத்தம். 10:1

210. 5:1:33:6:1 - 2

211. 1:83:14:2, 5:1:20: திருக்குறுந்தொகை.9

212. 1:16:10:1 - 2

213. 3:3:1:5:4:3

214. திருநாவுக். 37:4

215. திருநாவுக். 89:4

216. திருநாவுக். 43 - 44

217. திருநாவுக். 115:1

218. 1:20:10:1 - 2

219. 4:2:52: திருவிருத்தம். 16:7:1

220. 6:1:29:திருத்தாண்டகம். 6:1

221. 6:1:29:திருத்தாண்டகம்.6:1

222. 2:1:28:10:2

223. 6:5:3: ஏழைத்திருத்தாண்டகம். 11:1 - 2

224. மூர்த்தி. 15:3

225. 2:2:38:10:3

226. 4:2:52: பழமொழி. 5 - 1

227. திருநாவுக். 64:3

228. திருநாவுக். 52:4

229. திருஞான. 79:2 - 3

230. 2:1:14:42:10:1

231. 2:1:14:11:10:1, 4:2:52: பழமொழி. 8:1, 5:1:20 திருக்குறுந்தொகை.9

232. 1:16:10:1 - 2

233. 5:1:20: திருக்குறுந்தொகை. 9

234. 3:1:6:1:10:1

235. 4:1:27:திருநேரிசை. 4:1

236. 4:2:49:திருவிருத்தம். 4:1

237. திருநாவுக். 102:4

238. 5:2:60: திருவிருத்தம். 9:2

239. 4:2:49: திருவிருத்தம்.4:1

240. 2:5:17: திருக்குறுந்தொகை. 7:1 - 2, திருமாவிகைத்தேவர். 3:2, 3 - 4

241. 1:27:10:1 - 2

242. 3:1:14:8:10:1 - 2

243. திருநாவுக்.61:1

244. திருநாவுக். 79:4, மூர்த்தி. 18:1

245. 5:2:18: திருக்குறுந்தொகை. 8:2

246. 4:9:மறுமாற்றுத்திருத்தாண்டகம். 7:4

247. 6:1:19:திருத்தாண்டகம். 4:1

248. 1:30:10:1 - 2

249. 6:1:29:திருத்தாண்டகம். 4:1

250. 1:1:14:1:10:1 - 2

251. திருநாவுக். 73:1

252. *4:1:27: திருநேரிசை. 2:1 - 2*

253. 1:1:42:1:10:1

254. 6:2:49: திருத்தாண்டகம். 10:1 - 2

255. 5:1:20: திருக்குறுந்தொகை.9

256. 2:1:14:49:10:2, *5:1:33:6:1 - 2*

257. 5:2:17: திருக்குறுந்தொகை. 2:1 - 2

258. 2:1:4:10:1 - 2, 4:2:52: திருவிருத்தம். 6:1 - 2

259. 6:1:29: திருத்தாண்டகம். 3:1 - 2

260. *3:2:18:10:1*

261. 7:1:1:1:9:3

262. மூர்த்தி 14:1

263. 4:2:52:திருவிருத்தம். 4:1

264. 4:2:49: திருவிருத்தம்: 6:3, 6:2:49: திருத்தாண்டகம். 6:10:1 - 2

265. 5:2:11: திருக்குறுந்தொகை. 10:1 - 2

266. 1:2:24:10:1 - 2, 4:6:4: திருநேரிசை. 9:1 - 2

267. 1:9:10:2-3, 1:26:10:1 - 2, 1:28:10:1 - 2, 1:10:1 - 2 6:2:49 திருத்தாண்டகம்.10:1- 2,

268. திருநாவுக். 58:1

269. 6:1:29: திருத்தாண்டகம். 6:1

270. 6:1:29: திருத்தாண்டகம். 9:1 - 2

271. 1:9:10:1

272. 1:24:10:1 - 2

273. 2:1:11:2:10:3 - 4

274. திருநாவுக். 40:2

275. 3:2:45:10:1.

276. 1:24:10:1 - 4

277. 4:2:28: திருநேரிசை. 9:1 - 2

278. 1:12:10:1

279. 2:1:14:42::10

280. 2:1:14:13:10:1

281. 3:2:39:10:1 - 2

282. திருவா. 15:6

283. 3:14:8:10:1 - 2

284. 1:1:14:1:10:1, 1:14:10:3 - 4

285. 2:1:11:1:10

286. திருமாளிகை, திருவிசைப்பா. 3:8:3 - 4

287. 3:2:39:10:1-2

288. 1:16:10:1 - 2

289. 1:15:10:1 - 2

290. திருவா. 15:6:1 - 2

291. திருமாளிகை திருவிசைப்பா. 1:8:4

292. 1:15:10:1 - 2

293. 2:1:9:2:10:2 - 3, 3:2:39:10:1 - 2

294. 4:2:28: திருநேரிசை. 9:1 - 2

295. திருஞான. 443.

296. திருஞான. 905 - 910

297. திருநாவுக். 40:2 - 3

298. க. வெள்ளைவாரணனார், திருமுறைவரலாறு. 2, பக். 32 - 33.

299. 4:9: மறுமாற்றுத்திருத்தாண்டகம். 7:4

300. திருவா. 3:79: - 82

301. திருவா. 4:52- 53

302. திருவா. 5:10:9

303. திருவா. 10:5

304. திருவா. 11:17:1 - 2

305. திருமந்திரம், 1503

306. திருமந்திரம் 1511

307. திருமந்திரம். 1513

308. திருமந்திரம். 1526

309. திருமாளிகை திருவிசைப்பா. 3:2:3 - 4

310. வேணாட்டடிகள். திருவிசைப்பா. 1:4:1

311. திருமங்கை.நான்முகன். 6:1 - 2

312. திருமங்கை. பெரிய: 7:9:2:1 - 2

313. திருமங்கை. பெரிய. 2:1:6:1 - 2

314. திருமங்கை.பெரிய. 7:9:2:1 - 2

315. திருமங்கை. பெரிய. 5:6:8:1 - 2

316. திருமங்கை. பெரிய. 9:8:9:1 - 2

317. திருமங்கை. பெரிய. 9:8:9:1 - 2

318. தொண்டரடி. திருமாலை 7:1 - 2

319. திருமங்கை. பெரிய. 2:6:5:1 - 2

320. திருமங்கை. பெரிய. 2:5:2:1 - 2

321. திருமங்கை. பெரிய. 2:1:6:1

322. திருமங்கை. பெரிய. 2:6:1:1

323. திருமங்கை. பெரிய. 7:1:5:1

324. தொண்டரடி. திருமாலை. 7:4·5:1

325. திருமங்கை. பெரிய. 7:4:1:5:1

326. திருமழிசை. நான்முகன். 6:1 - 2

327. திருமங்கை. பெரிய. 9:7:9:1 - 2

328. திருமங்கை. பெரிய. 2:1:5:1 - 2

329. திருமங்கை. பெரிய. 2:1:5:1 - 2

330. தொண்டரடி. திருமாலை

331. திருமங்கை பெரிய. 2:1:5:1 - 2

332. தொண்டரடி. திருமாலை. 6:1

333. தொண்டரடி. திருமாலை. 8:1

334. திருமங்கை. பெரிய. 2:6:5:1 - 2, 7:9:2:1 - 2, 97:9:1 - 2 9:8:9:1 - 2

335. தொண்டரடி. திருமாலை :8

336. திருமழிசை. நான்முகன். 14:2 - 4

337. k.k. பிள்ளை, தமிழக வரலாறு, மக்களும் பண்பாடும்

338. மயிலை சீனி. வேங்கடசாமி, களப்பிரர் ஆட்சியில் தமிழகம், ப. 31 வேள்விக்குடிச் செப்பேடு, வரிகள். 31- 40

339. சோ. ந. கந்தசாமி, மு. கூ. நூல், ப. 62- 63

340. திருநாவுக். 145- 146

341. ஏ. சுவாமிநாதன், தமிழகவ்ரலாறும் பண்பாடும், ப. 131

342. 167 ப்தீ 1984, மா. இராசமாணிக்கம், பெரியபுராணம் ஓர் ஆய்வு - ப. 96

343. மெய்ப்பொருள். 3:1- 2

44. கோச்செங்கட். 12, 13, 3:2:23:2:4

45. பூசலார். 9:1 - 3

46. சண்டேசுவரர் : 8

347. இடங்கழியார். 5

348. புகழ்ச்சோழர். 10:1- 2

349. திருமங்கை. பெரிய. 5:10:7:4

350. திருமங்கை. பெரிய. 3:2:3:3- 4

351. திருமங்கை. பெரிய. 2:9:1:3- 4

352. திருமங்கை. பெரிய. 6:6:5- 4

353. திருஞான. 871

354. திருநாவுக். 18. சண்டேசுவரர் 32:3- 4

355. திருநாவுக். 18

356. திருஞான. 586:4

357. திருநாவுக். 289

358. திருஞான. 289

359. *3:7:1:5:1- 10*

360. திருஞான. 772

361. திருஞான. 786, 846

362. திருஞான. 853 - 856

363. திருஞான. 909

364. க. வெள்ளைவாரணனார், திருமுறை வரலாறு. 2. ப. 32 - 33

365. சாக்கிய. 4

366. குங்கிலிய. 23- 28

367. நா. வானமாமலை, பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும். ப. 31- 32

368. ஆ. வேலுப்பிள்ளை, தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், ப.108.

# இயல் - 11

## ஆய்வின் முடிபுரை

''பக்தி இலக்கியத்தில் சமுதாயப் பார்வை'' என்ற தலைப்பில் மேற்கொண்ட ஆய்வின் முடிபுகளையும், குறிப்பிடத்தக்க செய்திகளையும் தொகுத்துக்கூறும் வகையில் இவ்வியல் அமைகிறது.

1. சமுதாயத்தில் காணப்பெறும் பல்வேறு நிறுவனங்களுள் ஒன்றாகத் திகழும் சமயம் சமுதாயத்தினை ஒருங்கிணைக்கும் கருவியாகத் திகழ்தல், சமூகத்தில் வாழ்கின்ற உறுப்பினர்களிடையே ஒட்டும் தன்மையை வலியுறுத்துதல், சமூக நியதிகளையும், சமூக மதிப்புக்களையும் மக்கள் பின்பற்றுமாறு தூண்டுதல், சமூகக் கட்டுப்பாட்டுச் சக்தியாகச் திகழ்தல், மக்களுக்கு உணர்ச்சிபூர்வமான விடுதலை அளித்தல், சமூக மாற்றங்களுக்குத் துணை நிற்றல், சமூக அமைதியைக் காத்தல், பண்பாட்டுப் பொதுமைகளை வெளிப்படுத்தல், பொருளாதார உறவுகளைத் தீர்மானித்தல், சமூக அமைப்பைத் தீர்மானித்தல் போன்ற ஆக்கபூர்வமான பல சமுதாயச் செயல்பாடுகளைக் கொண்டு விளங்குமாற்றைச் சமூகவியலாளர்கள் விளக்குகின்றனர். இதனால் சமுதாயத்திற்கும் சமயத்திற்கும் இடையே நெருக்கமான உறவு உள்ளமை புலனாகின்றது.

2. சமயம் என்ற நிறுவனம் சமூக மாற்றங்களைத் தடைசெய்தல், சமுதாய, பொருளதார ஏற்றத்தாழ்வுகளுக்கு நியாயம் கற்பித்தல் போன்ற சமுதாயத்திற்கு ஊறு விளைவிக்கும் சில செயல்பாடுகளைக் கொண்டுள்ளமையையும் சமூகவியலாளர்களுள் சிலர் சுட்டுவர்.

3. ஆனால், சமயம் எப்போதும் சமுதாயத்திற்கு ஊறு விளைவிக்கும் செயல்பாடுகளை மட்டும் கொண்டிருக்கவில்லை என்றும், அது பெரும்பாலும் சமுதாயத்தின் உயர்வுக்கான நற் செயல்பாடுகளையே கொண்டுள்ளது என்றும் துணியலாம்.

4. சமுதாயத் தரப்பிரிவுகள் தோன்றுதற்குரிய காரணிகளுள் ஒன்றாகச் சாதிமுறை என்ற நிறுவனம் திகழ்கின்றது.

5. இச்சாதிமுறை என்ற நிறுவனம் உலகச் சமுதாயங்கள் அனைத்திலும் வெவ்வேறு வடிவங்களில் காணப்பெறுகின்றது என்றும், அது இந்தியச் சமுதாயத்திற்குரிய தனித்தன்மை என்றும் சமூகவியலாளர்களிடையே இருவேறு

கருத்துகள் உள்ளன. சாதிமுறையானது இந்தியாவில் நீண்ட காலமாகத் தொடர்ந்து காணப்பெறுகின்றமையையும் தனித்தன்மைகளைக் கொண்டுள்ளமையையும் சமூகவியலாளர்களில் சிலர் விளக்குவர்.

6. பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் சாதிமுறை என்ற சமுதாய நிறுவனம் தோன்றுவதற்குரிய காரணிகளாகச் சமூகவியலறிஞர்கள் குறிப்பிடுவனவற்றுள் பிறப்பு, தொழில்கள், கொல்லாமை என்ற அறநெறியின் தாக்கம், முற்பிறப்பு விலை என்ற நம்பிக்கை, பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் என்பனவும், சாதிமுறையின் தன்மைகளுள் அகமண முறை, தொழில்களைத் தீர்மானித்தல், உணவுத்தடை, உறுப்பினர்மீது கட்டுப்பாடுகள் விதித்தல் என்பனவும் இடம்பெற்றிருந்தன எனக் கருதுவதற்குரிய குறிப்புக்களைப் பக்தி இலக்கியம் தருகின்றது.

7. பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் பல்வேறு சாதிகளும், சாதிப்பிரிவுகளும், உட்பிரிவுகளும் இடம்பெற்றிருந்தன எனக் கருதமுடிகின்றது. இச்சாதிப் பிரிவுகளைச் சார்ந்தவர்களுள் குறிப்பிட்ட சிலர் சமுதாயத்தரப்பிரிவில் உயர்நிலையிலும், வேறுசில பிரிவினர் தாழ்நிலையிலும் வாழ்ந்துள்ளனர். வைதீக அந்தணர்கள் சமுதாய, பொருளாதார, சமய, அரசியல், நிலைகளில் உயர்வையும் புலையர், கண்டாளர், குக்கர், பாணர் போன்றோர் தாழ்நிலையையும் அடைந்திருந்தனர். தாழ்நிலையினர் இயலாமை நிலைகளும் சமூக அந்தஸ்த்தும் பக்தி இலக்கியத்தில் வெளிப்படுத்தப்பெறுகின்றன.

8. இவ்வாறு சமுதாயத்தில் சாதிமுறையின் அடிப்படையில் நிலவிய ஏற்றத்தாழ்வுகளையும், தாழ்நிலை அடைந்தவர்களின் இயலாமை நிலைகளையும் கண்ணுற்ற பக்தி இலக்கியச் சான்றோர்கள் சமுதாயத்தில் நிலவிய சாதிவேறுபாடுகளை அகற்றி, இறையன்பு என்ற குளிர் மர நிழலின்கீழ் மக்கள் அனைவரையும் ஒன்றுபட்டு நிற்கச் செய்து, சமநிலையான சமுதாயம் அமையப் பாடுபட்டமையைப் பக்தி இலக்கியம் உணர்த்துகின்றது. மக்களுக்கு இறைவனின் பெருமைகளையும், திருவருட்செயல்களையும் எடுத்துக் கூறியும், அறிவுரைகள் இயம்பியும், தம் வாழ்க்கையில் நடந்துகாட்டியும் நாயன்மார்களும், ஆழ்வார்களும் அமைதியானமுறையில் சாதி வேறுபாடற்ற சமுதாயத்தைப் படைக்க முயன்ற முனைப்பைக் காண்கின்றோம்.

9. பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் சாதிமுறை காணப்பெற்றபோதிலும் இறைவனிடத்து அன்பு செலுத்தல், இறையடியார்களைப் போற்றுதல் என்ற நோக்கங்களில் அது நெகிழும் தன்மை உடையதாகவே விளங்கியது.

10. சமுதாயத்தில் சாதி வேறுபாடுகளின் அடிப்படையிலான ஏற்றத்தாழ்வுகளை அகற்ற முனைந்த பக்தி இலக்கியச் சான்றோர்கள் இறைவனிடம் உண்மை அன்பு செலுத்துவோர் உயர்ந்தவர் என்றும், அன்பு செலுத்தாதவர் தாழ்ந்தவர் என்றும் புதுமைப்பாகுபாட்டைப் படைத்துக் காட்டுகின்றனர்.

11. சமயம் சாதிமுறை என்ற நிறுவனம் சமுதாயத்தில் தோற்றம் கொள்ளுதற்குரிய காரணிகளுள் ஒன்று என்று சமூகவியலாளர்களால் கருதப்பெறும் நிலையில் பக்தி இலக்கியம் சாதி வேறுபாடுகளை அகற்றிச் சமுதாய உறுப்பினர்களை ஒன்றிணைக்கத் துணைநிற்கின்றமை எண்ணிப் போற்றுவதற்குரியது ஆகும்.

12. இக்காலத்தில் சாதி வேறுபாடுகளை அகற்றுதற்குச் சமூக நலச் சிந்தனையாளர்கள் மேற்கொள்ளும் செயல்களையும் விஞ்சிய நிலையில் அக்காலத்திலேயே பக்தி இலக்கியச் சான்றோர்கள் ஈடுபட்டமை சுட்டுதற்குரியதாகும்.

13. சமுதாயத்தில் தரப்பிரிவுகளை உருவாக்கும் காரணிகளுள் ஒன்றாகச் சமூக வகுப்பு திகழ்கின்றமையையும், சமூக வகுப்பை உருவாக்குவதில் பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் பெரும்பங்காற்றுகின்றமையையும் சமூகவியலாளர்கள் அனைவரும் ஏற்றுக்கொள்கின்றனர்.

14. வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் காணப்பெற்ற இனக்குழுச் சமுதாய அமைப்பின் சிதைவில் எழுந்த நாகரிகச் சமுதாய அமைப்பின் தோற்றத்திலேயே வகுப்புப் பிரிவுகளும் தோற்றம்பெற்றுவிட்டன என்ற சிந்தனை உலகச் சமுதாயங்கள் அனைத்துக்கும் பொருந்துவதாய் உள்ளது. பிற சமுதாயங்களைப் போன்றே பண்டைத் தமிழ்ச் சமுதாயத்திலும் முதன்முதலில் இனக்குழுச் சமுதாய அமைப்பு இடம்பெற்றிருந்தது என்பதற்கும், பின்னர் அச்சமுதாய அமைப்பு சிதைவுற்று நாகரிகச் சமுதாய அமைப்பு மலர்ந்துள்ளது என்பதற்கும் சங்க இலக்கியத்திலேயே சான்றுகள் கிடைக்கின்றன.

15. நாகரிகச் சமுதாய அமைப்பின் தோற்றத்தினாலும், தமிழகத்தின் சமனற்ற நிலப்பரப்பின் விளைவான சமனற்ற பகிர்வினாலும், பஞ்சம் போன்ற இயற்கையின் சீற்றத்தினாலும் நிலவிய பொருளாதார ஏற்றத்தாழ்வுகளைப் பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்திலும் காணமுடிகின்றது. இப்பொருளாதார ஏற்றத்தாழ்வின் காரணமாகப் பொருளாதார நிலையில் மேம்பட்டிருந்த உயர்வகுப்பினரும், நலிவுற்றிருந்த தாழ்ந்த வகுப்பினரும் சமுதாயத்தில் வாழ்ந்துள்ளனர்.

16. மன்னர்களிடமும், மக்களிடமும் பொன்னையும் பொருளையும், நிலங்களையும் தானமாகப் பெற்ற வைதீக அந்தணர்களும், வணிக வளத்தில் மேம்பட்ட பெருங்குடி வணிகர்களும், பொருளதார நிலையில் உயர்வடைந்திருந்த செல்வர்களும், விவசாய நிலங்களை உடைமையாகக் கொண்டிருந்த வேளாளர்களும் உயர் சமூக வகுப்பினராக மதிக்கப்பெற்றிருந்தனர். இவர்கள் சமுதாயத்தில் இன்பம் மிக்க, பொழுதுபோக்குகள் நிறைந்த, ஆடம்பரம் மிகுந்த வாழ்க்கை வாழ்ந்துள்ளமை புலப்படுகின்றது.

17. பொருளாதார நிலையில் வீழ்ச்சியடைந்திருந்தவர்கள் தாழ்ந்தவகுப்பினராகக் கருதப்பெற்றமையுடன், இவர்கள் வறுமை நிலை, இயலாமை

நிலை, இழிநிலை, வட்டிக்குக் கடன்வாங்கும் நிலை, உடைமைகளை ஒற்றிவைக்கும் நிலை, கூலிக்காக உழைக்கும் நிலை போன்றனவற்றிற்கு ஆளாயினமையும் விளங்குகின்றது.

18. நிலமற்ற விவசாயிகள் நிலவுரிமையுடையவர்களால் சுரண்டப்பெறும் நிலையிலும், வளமற்ற, எளிய, அல்லல் நிறைந்த வாழ்க்கை நிலையிலும் வாழ்ந்துள்ளமையை உணர்கின்றோம்.

19. பொருளாதார ஏற்றத்தாழ்வுகளுக்குச் சமனற்ற நிலப்பரப்பு, சமனற்ற வளர்ச்சி வாய்ப்பு, சமனற்ற பகிர்வு, பஞ்சம் என்பன காரணங்களாகும் என்று உணர்வதற்குப் பதிலாக ஊழ்வினை அல்லது விதி என்பதைக் காரணமாகக் கருதியிருந்தமையையும் பக்தி இலக்கியம் மூலம் அறியலாம்.

20. சமுதாயத்தில் நிலவிய இப்பொருளாதார ஏற்றத்தாழ்வு நிலைகளையும், அவற்றின் கொடிய விளைவுகளையும் கண்ணுற்ற நாயன்மார்களும், ஆழ்வார்களும் பொருளாதார ஏற்றத்தாழ்வு நிலைகளை அகற்றிச் சமநிலையான சமுதாயம் அமைவதற்காக அரும்பாடுபட்டுள்ளனர். பொருள் நிலையாமை, யாக்கை நிலையாமை ஆகியவற்றை எடுத்து மொழிந்து பொருளின் மீது மக்கள் கொண்டுள்ள பற்றினை அறுப்பதற்கு வழி செய்தும், கொடை கொடுக்காமையால் வரும் தீமைகளையும், கொடை கொடுப்பதால் விளையும் நன்மைகளையும் கூறிக் கொடை கொடுக்கத் தூண்டியும், பிறரிடம் சென்று இரக்காது உழைத்து வாழுங்கள் என உழைப்பின் முக்கியத்துவத்தை அறிவுறுத்தியும், இறையன்பை வலியுறுத்தியும், பிறருக்கு உதவும் பண்பைத் தம் வாழ்க்கையில் நடந்துகாட்டி விளக்கியும் பொருளாதார ஏற்றத்தாழ்வுகளை அகற்ற முயன்றுள்ளனர்.

21. இன்றையச் சமூக நலச் சிந்தனையார்களும், பொருளாதார அறிஞர்களும் பொருளதார ஏற்றத்தாழ்வற்ற சமுதாயம் அமைவதற்காகக் கூறும் கருத்துக்களை நாயன்மார்களும், ஆழ்வார்களும் பக்தி இலக்கியம் மூலம் வெளிப்படுத்தியமை இவண் சுட்டுதற்குரியது ஆகும்.

22. அடிமைநிலை என்பது உலகச் சமுதாயங்கள் அனைத்திலும் காணப்பெற்றதொரு பொதுவான தன்மை என்பதையும், அடிமை நிலைக்குரிய சில சூழல்களும், அடிமை நிலையின் தன்மைகளும் சமுதாயத்திற்குச் சமுதாயம் மாறுபட்டுக் காணப்பெறும் என்பதையும் உலகச் சமுதாயங்களின் வரலாறுகளால் அறிகின்றோம்.

23. பக்தி இலக்கியம் சுட்டும் இறை அடிமை நிலையைச் சமய நோக்கில் காணும்போது அது உலகியல் துன்பங்களாகிய கட்டுக்களில் சிக்குண்டு அல்லலுறும் மக்கள் இறைவனிடம் தம்மை முழுமையாகவும், கேள்விமுறையின்றியும் ஒப்படைத்து விடுதலை பெறத்துடிக்கின்றமையைக் காட்டுவதாகக் கொள்ளலாம்.

24. இவ்விறை அடிமை நிலையைச் சமுதாய நோக்கில் அணுகும்போது இது மனிதனுக்கு மனிதன் அடிமையாகும் அடிமை நிலையையும் பிரதிபலிப்பதாகவும் தோன்றுகின்றது.

25. ஒரு மொழியில் காணப்பெறும் சொற்கள் அம்மொழியைப் பேசும் மக்களின் பண்பாட்டையும் புலப்படுத்துகின்றன என்ற மொழியியலாளர் கருத்துக்கிணங்கப் பக்தி இலக்கியத்துள் இடம்பெறும் அடிமை, அடிமைநிலை என்பனவற்றினைச் சுட்டும் சொற்கள் அக்காலச் சமுதாயத்தில் இடம்பெற்ற அடிமை நிலையைக் சுட்டுகின்றன என்றும் கொள்ளலாம்.

26. பிற சமுதாயங்களில் அடிமைநிலை தோன்றுதற்குரிய சூழல்களாகக் காணப்பெற்றனவற்றுள் பக்தி இலக்கியம் நிலவுரிமை, வறுமை, பஞ்சம், கடன்படல், அடிமைகளாகப் பிறரை விற்றல், வாங்குதல், ஒற்றிவைத்தல், சாதிமுறை போன்றவை இடம் பெற்றமையைக் காட்டுகின்றது என எண்ணமுடிகின்றது.

27. பக்தி இலக்கியத்துள் பிற சமுதாயங்களை ஒத்த நிலையில் எழுதி அடிமை கொள்ளல், பொறியொற்றி அடிமைகொள்ளல், வழிவழியாக அடிமைகொள்ளல் என அடிமைகொள்ளும் நிலையின் மூன்று வகைகள் குறிப்பிடப்பெறுகின்றன.

28. பக்தி இலக்கியக் காலச் சமுதாயத்தில் கோயில் அடிமைகளே அதிகம் காணப்பெற்றனர் எனக் கூறலாம். தனியார் அடிமைகளும், அரண்மனை அடிமைகளும்கூட வாழ்ந்துள்ளமையை அறிய முடிகின்றது.

29. பிற சமுதாயங்களில் வாழ்ந்த அடிமைகளின் வாழ்க்கை நிலையைவிடப் பக்தி இலக்கியக்காலச் சமுதாயத்தில் வாழ்ந்த கோயில் அடிமைகளின் வாழ்க்கை நிலை பலவகைகளில் மேம்பட்டே காணப்பெற்றது என்பது சுட்டுதற்குரியது ஆகும்.

30. சமுதாயத்தில் உயர் சாதியினர் அல்லது உயர் வகுப்பினரின் கீழ் தாழ்ந்த சாதியினர் அல்லது தாழ்ந்த வகுப்பினருள் சிலராவது கட்டுண்டு, தொண்டு செய்து அடிமைகள் நிலையில் வாழ்ந்தமையைக் கண்ணுற்றே நாயன்மார்களும், ஆழ்வார்களும் இவ்வடிமைநிலையிலிருந்து விடுபட்டு இறைவனுக்குத் தொண்டு செய்து வாழும் இறையடிமை நிலையை ஏற்றுக்கொள்ளுமாறு மக்களை அறிவுறுத்துகின்றனர் எனலாம்.

31. பக்தி இலக்கியம் மனிதினுக்கு மனிதன் அடிமையாகும் நிலையிலிருந்து இறைவனுக்கு அடிமையாகும் உயர்நிலைக்கு மக்களை அழைத்துச் செல்கின்றது.

32. பண்பாடு என்பது சமூக மரபுரிமை என்றும், மக்கள் பண்பாட்டை ஒரு தலைமுறையினரிடமிருந்து மற்றொரு தலைமுறையினருக்குக் கடத்துகின்றனர் என்றும், பண்பாடு என்ற வட்டத்திற்குள்ளாகவே சமயமும் இலக்கியமும் இயங்குகின்றன என்றும் கருதலாம்.

33. சமுதாயத்தின் உறுப்பினர் என்ற முறையில் மக்களால் பின்பற்றப்பெறும் அனைத்தும் பண்பாடுகளே எனலாம். இவ்வகையில் சமுதாயத்தில் காணப்பெறும் வழக்கங்கள், நம்பிக்கைகள், சடங்குகள், மதிப்புக்கள், ஒழுக்கங்கள், தொழில் நுட்பங்கள், கலைகள், கருவிகள் அனைத்தும் பண்பாட்டின் கூறுகளாக அமைகின்றன.

34. மனித இனத்தின் பரிணாம வளர்ச்சியுடன் இணைந்த நிலையில் பண்பாடும் வளர்ச்சியுற்று வருகின்றமை சமூகவியல், மானிடவியல் அறிஞர்களால் விளக்கப்பெறுகின்றது.

35. குழந்தைகள் இளமைப்பருவம் முதலாகவே சரியான வழியில் நடப்பதற்குத் துணை நிற்றல், பிறரிடம் தொடர்புகொள்ளவாய்ப்பளித்தல், சிக்கல்களுக்கு விடை அளித்தல் முதலிய சமுதாயச் செயல்பாடுகளைப் பண்பாடு கொண்டுள்ளது. இப்பண்பாடு மனித நடவடிக்கைகளின் உற்பத்தியாகவும் - அதாவது மனிதனின் அறிவாலும் அனுபவத்தாலும் உருவாக்கப்பெறுவதாகவும்- மனிதத் தேவைகளை நிறைவேற்றுவதாகவும் காணப்பெறுகின்றது.

36. சமூகவியலாளர்கள் பண்பாட்டை உருவப் பண்பாடு - அருவப் பண்பாடு என்றும், பண்பாட்டுக் கலவை - பண்பாட்டு இனம் என்றும், பண்பாட்டுப் பொதுமை - துணைப்பண்பாடு என்றும் பாகுபடுத்துவர்.

37. சமயமும் ஒரு சமுதாய நிறுவனமே என்றவகையில் பக்தி இலக்கியத்துள் அக்காலச் சமுதாயத்தில் இடம்பெற்ற பொதுவான வழக்கங்கள், சமய, அரசியல் துறைகளில் மேற்கொள்ளப்பெற்ற வழக்கங்கள், நம்பிக்கைகள், சடங்குகள், கலைகள், ஏனைய உருவப்பண்பாட்டுக் கூறுகள் என்பன வெளிப்படுத்தப் பெறுமாற்றை அறியலாம்.

38. பண்பாட்டின் கூறுகளுள் ஒன்றாகச் சமூகமதிப்புக்கள் அமைகின்றன. சமுதாயத்தில் மக்கள் வாழ்வாங்கு வாழ்வதற்கு மேற்கொள்ளத் தக்கவை எவையெவை, மேற்கொள்ளத்தகாதவை எவையெவை என்று அறிவுறுத்தப்பெறும் கருத்துக்களை மதிப்புக்கள் என்று கூறலாம்.

39. சமுதாயம் சிறப்புறச் செயல்படவும், சமூக ஒழுங்குகள் காக்கப்படவும் இச்சமூக மதிப்புக்கள் பெரிதும் துணைநிற்கின்றன. சமயத்தின் சமூகச் செயல்பாடுகளுள் ஒன்றாக அது சமூக மதிப்புக்களைக் காப்பதில் தீவிரக் கவனம் செலுத்துமாற்றைக் காட்டுவர்.

40. பக்தி இலக்கியம் மக்கள் சமூக, அரசியல், சமயத் துறைகளில பின்பற்ற வேண்டிய மதிப்புக்களை அறிவுறுத்தி இறைப்பற்றை ஊட்டும் இலக்கியமாக மட்டும் அமையாது மக்கள் உலகில் வாழ்வாங்கு வாழ வழிவகுக்கும் ஒப்பற்ற இலக்கியமாகவும் திகழ்கின்றது.

41. குடும்பம் என்ற சமுதாய நிறுவனத்தின் அமைப்பானது அனைத்துச் சமுதாயங்களிலும் ஒன்றுபோல் காணப்பெறாவிடினும், அதன் பொதுவான சில பண்புகள் எல்லாச் சமுதாயங்களிலும் இடம் பெறுகின்றன எனச் சமூகவியலாளர்கள் குறிப்பிடுகின்றனர்.

42. குடும்ப உறுப்பினர்களின் எண்ணிக்கையின் அடிப்படையில் பக்தி இலக்கியம் காட்டும் குடும்ப அமைப்பைப் பார்க்கும்போது அக்காலச் சமுதாயத்தில் தொடக்கக் காலத்தில் இடம்பெற்ற பரந்துபட்ட குடும்ப அமைப்பின் தன்மைகளையும், பிற்காலத்தில் இடம்பெற்ற சிறு குடும்ப அமைப்பின் தன்மைகளையும் அறியமுடிகின்றது. எனவே, குடும்பம் என்ற நிறுவனம் பரந்துபட்ட குடும்ப அமைப்பிலிருந்து சிறு குடும்ப அமைப்புக்கு மாறிக்கொண்டிருந்த நிலை புலனாகின்றது. அதிகாரத்தின் அடிப்படையில் ஆண் ஆதிக்கக் குடும்பமாகவே திகழ்ந்துள்ளமை அறியத்தக்கது ஆகும். திருமண முறையின் அடிப்படையில் பெரும்பான்மையும் ஒருதாரமணக் குடும்பமும், சிறுபான்மை பலதார மணக் குடும்பமும் இடம்பெற்றுள்ளன. மணமுறையின் அடிப்படையில் அகமண முறைக் குடும்பமே காணப்பெற்றதெனினும், புறமணமுறைக் குடும்பமும் இடம்பெற்றிருந்தது என்பதற்குரிய குறிப்புக்களும் உள்ளன.

43. குடும்ப நிறுவனத்தின் இன்றியமையாத பண்பாகிய இல்லற வாழ்க்கை சிறப்பிக்கப்பெறுகின்றது. இல்லற வாழ்க்கை வாழ்வதற்கு வழிவகுக்கும் திருமணமும், இல்லற வாழ்க்கையைச் சிறப்புடன்நடத்தும் கணவன் மனைவி ஆகியோரின் பெருமைகளும் பக்தி இலக்கியத்துள் போற்றப்பெறுகின்றன.

44. சமூகவியலாளர்கள் குடும்பத்தின் செயல்பாடுகளாகக் கூறுவனற்றுள் குழந்தைகளைப் பெறுதல், வளர்த்தல், பால் நடவடிக்கைகளை ஒழுங்குபடுத்தல், கல்வி அளித்தல், குடும்ப உறுப்பினர்களின் தேவைகளை நிறைவேற்றுதல், குழந்தைகளைச் சமூகமயமாக்குதல், பொருளாதார நடவடிக்கைகளை மேற்கொள்ளுதல் என்பன பக்தி இலக்கியம் சுட்டும் குடும்பத்திலும் காணப்பெறுகின்றது. இவ்வாறு பக்தி இலக்கியம் குடும்பம் பற்றிய செய்திகளைத் தருவதுடன் நல்ல குடும்பம் அமைவதற்குரிய வழிகளையும் கூறுகின்றது.

45. பக்தி இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் பெரும்பான்மையும் பெண்கள் உயர்சமூக அந்தஸ்த்தைப் பெற்றிருந்தனர் எனக் கூறலாம். பெண் பிறப்பு உயர்வானதாகப் போற்றப்பெற்றது. அவர்கள் தாம் விரும்பிய சமயநெறியை மேற்கொள்ளுதற்குரிய உரிமை பெற்றவர்களாகவும், பொது, சமய நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளும் வாய்ப்பைப் பெற்றவர்களாகவும் சொத்துரிமை உடையவர்களாகவும், கல்வியும், பிற கலைகளும் கற்கும் உரிமை பெற்றவர்களாகவும் வாழ்ந்துள்ளமை வெளிப்படுத்துப்பெறுகின்றது.

46. எனினும், பெண்களில் சிலர் சில சூழல்களில் சமத்துவமற்ற நிலையினராகவும், கணவனையும் தந்தையையும் சார்ந்துவாழும் நிலையினாகவும்,

தாம் விரும்பிய கணவனைத் தேர்ந்தெடுக்கும் உரிமை இல்லாதவர்களாகவும், கணவன் செய்த தவறுகளைத் தட்டிக்கேட்கும் உரிமை இல்லாதவர்களாகவும், ஆடவர்களின் உரிமைப்பொருளாகக் கருதப்பெற்ற நிலையினரகவும் வாழ்ந்துள்ளனர் எனக் கருதுவதற்குரிய குறிப்புக்கள் கிடைக்கின்றன.

47. இறைவனிடத்தும், இறையடியாரிடத்தும் கொண்டுள்ள அன்பின் காரணமாக முற்கூறிய நிலைகளில் பெண்கள் ஆடவர்களால் நடத்தப்பெற்றனர் எனக் கூறினாலும் இவை பெண்ணினத்தின் சமுதாயத் தாழ்நிலையையே காட்டுகின்றன எனலாம்.

48. பக்தி இலக்கியத்துள் ஆண், பெண் சமத்துவமின்மையும், பெண்களின் தாழ்நிலையும் அகன்று, பெண்கள் சமுதாய மேல்நிலையை அடைவதற்காக நாயன்மார்களும், ஆழ்வார்களும் அறிவுரைகள் கூறியும், இறையன்பு என்ற கருவியைப் பயன்படுத்தியும் அமைதிப் புரட்சி மேற்கொண்டமை சுட்டப்பெறுகின்றது.

49. தொல்காப்பியர் காலத்திலும், சங்க காலத்திலும் வாழ்ந்த மக்களிடையே சமய உணர்வு அரும்பி வாழ்க்கையில் பின்னிப்பிணைந்து நின்றமையை அறியலாம். சங்க இலக்கியம் சைவ, வைணவ சமயம்தொடர்பானச் செய்திகளை மிகுதியாகத் தருவதுடன் சமண, பௌத்த சமயம் தொடர்பான குறிப்புக்களையும் தருகின்றது.

50. சங்கம் மருவிய காலத் தமிழகத்தைத் தமிழர் அல்லாத களப்பிரர்களும், பல்லவர்களும் ஆண்டுவந்தனர். அவர்கள் சமண, பௌத்த சமயங்களுக்கு ஆதரவு அளித்தனர். சங்கம் மருவிய காலத்தில் சமண, பௌத்த சமயங்கள் பெற்றிருந்த செல்வாக்கைச் சிலம்பும், மணிமேகலையும் வெளிப்படுத்துகின்றன.

51. பக்தி இலக்கியம் மூலம் அக்காலச் சமுதாயத்தில் வைதீக, சைவ, வைணவ, சமண, பௌத்த சமயங்களும், இனக்குழுச் சமுதாய அமைப்பில் இடம்பெற்ற சமயத்தின் எச்சக் கூறுகளும் காணப்பெற்றமையை உணரலாம்.

52. இதைப்போன்று கடவுள் இல்லை என்ற எண்ணமுடைய நாத்திகக் கொள்கையினரும் காணப்பெற்றனர் எனக் கருதுவதற்குரிய குறிப்புக்கள் உள்ளன.

53. முற்கூறிய சமயங்கள் தத்தம் செல்வாக்கைச் சமுதாயத்தில் உயர்த்திக் கொள்வதற்கும், மக்களின் பேராதரவைப் பெறுவதற்கும் பூசலிட்டநேரத்தில் நாயன்மார்களும், ஆழ்வார்களும் தோன்றிப் பக்தி இலக்கியத்தை உருவாக்கிச் சைவ, வைணவ சமய வளர்ச்சிக்கு அரும்பணியாற்றினர்.

54. இச்சமயப் போராட்டத்தில் வைதிக அந்தணரின் ஆதிக்கத்தின் காரணமாக வைதீக சமயமும், சமயத் துறவிகளின் செயல்கள், கடுமையான கட்டுப்பாடுகள், பெண்வெறுப்பு முதலான காரணங்களால் சமண, பௌத்த சமயங்களும் மக்களின் நன்மதிப்பை இழக்கத் தொடங்கின.

55. சைவ, வைணவ சமயங்களின் நோக்கங்களைக் கண்டு மன்னர்களும் ஆதரவளித்தனர். மேலும், நாயன்மார்கள், ஆழ்வார்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகள். சமுதாய, பொருளதாரச் சமத்துவச் சிந்தனைகள். தமிழ்ப்பற்று, சமுதாய மதிப்புக்களை வலியுறுத்தியமை, வட்டாரப் பற்றை மிகுவித்தமை. பெண்களைப் போற்றியமை, எளிய வழிபாட்டு முறை போன்ற காரணங்களாலும் சைவ. வைணவ சமயங்கள் பெரும் செல்வாக்குப் பெற்றன.

56. சைவ, வைணவ சமயங்கள் வளர்ச்சியுற்ற நிலையில் தத்தம் செல்வாக்கைப் பெருக்கிக்கொள்ளும் வகையில் தங்களுக்குள் பூசலிட்டமையையும் பக்தி இலக்கியம் சுட்டுவதாகத் தோன்றகின்றது.

இவ்வாறு பக்தி இலக்கியம் இறைவன் பெருமைகளையும் சமயக் கொள்கைகளையும், அடியார்களின் போற்றற்கரிய சிறப்புக்களையும், இறை அன்பின் இன்றியமையாமையையும் விளக்குகின்ற சமய இலக்கியம் என்ற அளவோடு மட்டும் நின்றுவிடாது, சமுதாய ஒற்றுமையையும் சமுதாய ஒழுங்கையும், சமுதாயத்தின் உயர் நோக்கங்களையும் சிதைக்கும்வண்ணம் சமுதாயத்தில் காணப்பெற்ற சாதிமுறையின் அடிப்படையிலும், பொருளதார நிலையின் அடிப்படையிலும் உருவாகிய ஏற்றத்தாழ்வுகளையும், ஆண்டான் அடிமை நிலையையும் அகற்றிச் சமத்துவச் சமுதாயம் அமையப் பெரிதும் பாடுபட்ட முற்போக்குச் சிந்தனைகள் நிறைந்த இலக்கியமாகவும் விளங்குதல் எண்ணிப் போற்றுதற்குரியது ஆகும். மேலும், பக்தி இலக்கியமானது சமுதாய அமைப்பைப் பிரதிபலிக்கும் வகையிலும் சமுதாயப் பண்பாட்டையும், மதிப்பையும் வெளிப்படுத்தும் நிலையிலும் தமிழகத்தின் பெருமைகளை உலகறியச் செய்யும் பேரிலக்கியமாகவும் திகழ்கின்றது. எனவே, இவ்வாய்வு பக்தி இலக்கியம் தோன்றிய காலத் தமிழகத்தின் சமுதாய, பொருளாதார, பண்பாட்டு, சமய வரலாறுகளைத் தெளிவுறுத்துதல் புலனாகும்.

இவ்வாய்வானது, சைவ, வைணவ சமயம் சார்ந்த பிற இலக்கியங்கள், சமண, பௌத்த சமயம் சார்ந்த இலக்கியங்கள் ஆகியவற்றையும் சமுதாய நோக்கில் அணுகத் துணைசெய்யும். தமிழகப் பக்தி இயக்கத்தை முன்னோடியாகக் கொண்டு இந்தியாவின் பிற பகுதிகளில் தோன்றிய பக்தி இலக்கியம் குறித்து விரிவான ஆய்வினை மேற்கொள்ளவும் இவ்வாய்வு தூண்டுதலாக அமையும்.

# நூற்பட்டியல்

## 1. முதன்மை ஆதார நூல்கள்


இராமசாமிப்புலவர், சு. அ. (உ.ஆ) — பதினோராந்திருமுறை, திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, 1971.

இராமநாதபிள்ளை, ப, (உ.ஆ) — பட்டினத்துப் பிள்ளையார் திருப்பாடல்கள் திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் லிமிடெட், சென்னை, 1972.

இராமநாதபிள்ளை, ப. (வி.உ.ஆ) — திருமந்திரம், முதற்பாகம், திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் லிமிடெட், சென்னை.

இராமநாதபிள்ளை, ப., (வி.உ.ஆ) — திருமந்திரம், இரண்டாம் பாகம், திருநெல்வேலித் தென்னந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, 1980.

கோபாலாசாரியார் காரப்பங்காரு,(ப.ஆ) — நாலாயிரதிவ்வியப்பிரபந்தம், இரத்தின நாயகர் அண்ட் ஸன்ஸ், சென்னை, 1977.

சித்பவானந்தர் ஸ்ரீமத்சுவாமி,(உ.ஆ) — திருவாசகம், தபோவனம் பிரசுராலயம், திருச்சி, 1968.

சுப்பிரமணியபிள்ளை, கே., (ப. ஆ) திருஞான சம்பந்த சுவாமிகள் தேவாரம், ஸ்ரீ காசிமடம் பன்னிரு திருமுறைப் பதிப்பு நிதி வெளியீடு, திருப்பனந்தாள். 1980.

திருநாவுக்கரசு முதலியார், தேவார அடங்கல்முறை, பண்ணடைவு, இரங்காச்சாரி முதலியார் அண்டு சன்ஸ், சென்னை, 1928.

மாணிக்கவாசகம்பிள்ளை, வே.,(உ.ஆ) திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, 1971.

ஜகந்நாதன், கி.வ., (கு.உ.ஆ) சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம், ஏழாம் திருமுறை, தலமுறை, திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம் பன்னிருதிருமுறைப் பதிப்பு நிதி வெளியீடு, 1978.

------------------------ சேக்கிழார் பெருமான் அருளிய பெரியபுராணம் என வழங்கும் திருத்தொண்டர்புராணம், திருக்கயிலாயப்பரம்பரைத் திருவாவடுதுறை ஆதினம், திருவாவடுதுறை, 1988.

## 2. துணை ஆதார நூல்கள்

### அ. தமிழ்

ஆனைமுத்து, வே., தமிழ் நாட்டில் பண்பாட்டுப் புரட்சி, பெரியார் நூல் வெளியீட்டகம், சென்னை, 1980.

இராகவையங்கார், மு., ஆழ்வார்கள் காலநிலை, மாணிக்கவாசகர் நூலகம், சிதம்பரம், 1981.

| | |
|---|---|
| இராசமாணிக்கம், மா., | தமிழக வரலாறும் தமிழர் பண்பாடும், தனலெட்சுமி பதிப்பகம், மதுரை, 1974. |
| இராசமாணிக்கம், மா., | தமிழர் நாகரிகமும் பண்பாடும், பாரி நிலையம், சென்னை, 1975. |
| இராசமாணிக்கம், மா., | கல்வெட்டுக்களில் அரசியல், சமயம், சமுதாயம், சேகர் பதிப்பகம், சென்னை, 1977. |
| இராசமாணிக்கம்பிள்ளை, மா., | பல்லவர் காலம், திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, 1977. |
| இராமகிருஷ்ணன், எஸ்., | இந்தியப் பண்பாடும் தமிழரும், மீனாட்சி புத்தகநிலையம், மதுரை, 1982. |
| இலக்குவன். சி., | இலக்கியம்கூறும் தமிழர் வாழ்க்கை, வள்ளுவர் பதிப்பகம், புதுக்கோட்டை, 1962. |
| கந்தசாமி ஆ., | மாணிக்கவாசகரின் திருவெம்பாவை. திருப்பள்ளியெழுச்சி - ஓர் ஆய்வு, எழில் முருகன் பதிப்பகம், சென்னை, 1984. |
| கந்தசாமி, சோ. ந., | தமிழும் தத்துவமும், மாணிக்கவாசகர் நூலகம், சிதம்பரம், 1976. |
| கிரிப்பிரகாஷ், டி. எஸ்., ஆனந்தகுமார், பா., | தெலுங்கு இலக்கிய வரலாறு, பார்த்திபன் பதிப்பகம், மதுரை, 1980. |
| குன்றக்குடி அடிகள், | நமது நிலையில் சமயம் சமுதாயம், சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, 1975. |

குன்றக்குடி அடிகளார் — சமய இலக்கியங்கள், இந்தியா புக் ஹவுஸ், சென்னை, 1981.

கோமதி நாயகம், பி., — தென்னிந்திய வரலாறு, ஸ்ரீநாராணம்மாள் பதிப்பகம், மதுரை, 1984.

கைலாசபதி, க., — ஒப்பியல் இலக்கியம், பாட்டாளிகள் வெளியீடு, சென்னை, 1978.

கைலாசபதி, க., — பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும், மக்கள் வெளியீடு, சென்னை, 1978.

கைலாசபதி, க., — சமூகவியலும் இலக்கியமும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, 1979.

சதாசிவப்பண்டாரத்தார், தி. வை., — பிற்காலச் சோழர் வரலாறு, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர், 1974.

சதாசிவப்பண்டாரத்தார், தி.வை., — பாண்டியர் வரலாறு, திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, 1964.

சிதம்பரம், சாமி., — பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, 1964.

சிவசுப்பிரமணியன், ஆ., — அடிமை முறையும் தமிழகமும், நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, 1984.

சிவத்தம்பி, கா., தமிழிலக்கியத்தில் மதமும் மானுடமும், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1982.

சிவத்தம்பி, கா., இலக்கியமும் கருத்துநிலையும், தமிழ்ப் புத்தக நிலையம், சென்னை, 1982.

சிவத்தம்பி, கார்த்திகேசு., இலக்கணமும் சமூக உறவுகளும், நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, 1982.

சிவானந்தம். பா., மதமும் மனித வாழ்வும், நியூ செஞ்சுரி புக்ஹவுஸ், பிரைவேட் லிமிடெட், சென்னை, 1982.

சுப்பிரமணிய பிள்ளை, கா., தமிழர் சமயம், திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் பிரைவேட் லிமிடெட் சென்னை, 1977.

சுப்பிரமணியன். கா., சங்காலச் சமுதாயம், (ஆய்வுக் கட்டுரைகள்), நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, 1982.

சுப்பிரமணியன். ந., இந்திய வரலாறு, (13 ஆம் நூற்றாண்டுவரை, நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, 1982.

சுப்பிரமணியன், ந., இந்தியவரலாறு (- 1565 வரை), என்னெஸ் பப்ளிகேஷன்ஸ், மதுரை, 1982.

செங்கோவன், (மொ.பெ.ஆ) இந்தியாவில் சாதிகள், கார்முகில் பதிப்பகம் சென், மதுரை. ----.

ஞானசம்பந்தன், அ. ச., பெரியபுராணம் ஓர் ஆய்வு, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர். 1987.

தங்கையா நாடார். வ., (உ.ஆ) தென்னிந்தியத் தமிழ்ச் சாசனங்கள், திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, 1967.

பரமேஸ்வரன். பி. ஆர்., (மொ.பெ.ஆ) இந்திய வரலாறு - ஒரு மார்ச்சியக் கண்ணோட்டம், சென்னை புக்ஸ், சென்னை, 1986.

பிள்ளை, கே. கே., தென்னிந்திய வரலாறு, இரண்டாம் பகுதி, பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, 1966.

பிள்ளை, கே.கே., தமிழக வரலாறு, மக்களும் பண்பாடும், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1972.

மதிவாணன், இரா., சாதிகளின் பொய்த் தோற்றம், தமிழ்நாடு பதிப்பகம், சென்னை, 1979.

மறைமலையடிகள் தமிழர் மதம், திருமுருகன் அச்சுக்கூடம், பல்லாவரம், ....

மாரியப்பன், அ., தமிழக வரலாறு, ஒரு சமுதாய, பொருளாதாரக் கண்ணோட்டம், காவ்யா வெளியீடு, பெங்களூர். 1984.

முத்துரங்கச் செட்டியார், (மொ. பெ. ஆ) மனு தர்ம சாஸ்திரம், ஸ்ரீ பாரதி அச்சுக்கூடம், சென்னை, 1924.

ரகுநாதன், சமுதாய இலக்கியம், மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, 1980.

வானமாமலை, நா., தமிழர் பண்பாடும் தத்துவமும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, 1978.

வேங்கடசாமி, மயிலை. சீனி., பௌத்தமும் தமிழும், திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பத்திபுக் கழகம் லிமிடெட், சென்னை, 1972.

வேங்கடசாமி, மயிலை, சீனி., களப்பிரர் ஆட்சியில் தமிழகம், மக்கள் வெளியீடு, சென்னை, 1976.

வேங்கடசாமி, மயிலை, சீனி., சமணமும் தமிழும், திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட், சென்னை, 1980.

வேலுப்பிள்ளை, ஆ., தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், பாரி புத்தகப்பண்ணை, சென்னை, 1969.

வேலுப்பிள்ளை, ஆ., தமிழர் சமய வரலாறு, பாரி புத்தகப் பண்ணை, சென்னை, 1980.

ஸ்ரீபால் ஜீவபந்து, டி. எஸ். தமிழகத்தில் ஜைனம், ஸ்வஸ்தி ஸ்ரீலஷ்மி சேனாபட்டாராகபட்டாசாரிய வர்ய மகா சுவாமிகள் ஜைனமடம், கோல்டிபர், 1975.

## 2. ஆ. ஆங்கிலம்

Aiyengar, K., **Some Contribution of South Inida to Indian Culture,** Gosmo Publications, New Delhi, 1981.

Andre Beteille, **Caste, Class and Power,** University of Califorrnia, London, 1971.

Andre Beteille,' **Inequality Among Men,** Basil Blackwell. Oxford, 1977.

Balasubramanian, C., **The Status of Women in TamilNadu During the Sangam Age,** University of Madras, Madras, 1976.

Bancroft, **Slave Trade in Old South,** Ungar, New York, 1954.

Basham, A. L., **The Wonder That was India,** Rupa & Co., New Delhi, 1954.

Battamore, **Sociology, A Guide to problems And Literature,** Blackie & Son Publications Pvt. Ltd., Bombay, 1971.

Burton Stein, **Peasant State and Society in Medieval South India,** Oxford University Press, New Delhi, 1980.

Chanana Dev Raj. **Slavery in Ancient India as Depected in Pali and Sanskrit Texts,** Collet, London, 1961.

Chopra, P. N., Ravindran, Subramanian, N., **History of south India, Vol. I.,** T. K., S. Chand & Company Ltd., New Delhi, 1979.

Choudri, K. N., Dewey, C. T., (Edits) **Economy and Society,** Oxford University Press, London, 1979.

Damile, Y. B., **Caste, Religion And Politics In India,** Oxford & I. B. H. Publishing Co., New Delhi, 1982.

Daniel Lambert (Edit), **World History, Civilization from its Begining,** Lamp Light Publishing, Delhi, -----.

David C. King, Marvin R. Koller., **Foundation of Sociology,** Rini, Hart Press, Sanfrancisco, 1975.

David Dresseler William M. Wills. Jr. **Sociology, The Study of Human Interaction,** Alfred Aknopf, New York, 1976.

David L. Sills (Edit) International Encyclopedia of the Social Sciences, Vol. 14., The Macmillan Company & The Free Press, 1968.

Deb. P. C., **Rural Sociology - An Introduction,** Kalyani Publishers, New Delhi, 1981.

D' souza Victor, S., **Inequality And its Perpetuations,** Manohar Publications, New Delhi, 1981.

EGon Ernest Bergel., **Social Stratification,** Mc GrawHill Book Company, New Yark, 1962

Freemen, M. James **Untouchable - An Indian Life History,** Geroge Allen & Unwin, London, 1979.

Ganguli, B. N., Guppta, D. B., **Levels of Living in India,** S;-Chand & Company Ltd, New Delhi, 1976.

George Ritzer, Kenneth C. W. Kammeyer Norman R. Yetman **Sociology- Experiencing A Changing Society,** Allyn and Bacon Inc., Boston, 1979.

Ghurye, G. S., **Caste and Race in India,** Popular Prakashan. Bombay, 1979.

Gough, Karthlean, **Rural Sociology in South East India,** Cambridge University Press, London, 1981.

Hanumanthan, K. R., **Untouchability, A Historical Study uto 1500 A. D., (with special Reference to Tamil Nadu),** Koodal Publisheres, Madurai, 1979.

Harilal Maheswari **History of Rajasthan Literature,** Sahitya Akademy, New Delhi, 1980.

Henry Heras, S. J. **Studies in Pallava History,** P. G. Paul & Co Publishers, Madras, 1933.

John P. Mencher **Agriculture and social structure of Tamilnadu,** Allied Publishers private Limited, New Delhi, 1978.

Jon. M. Shepered, **Sociology.** West Publishing Company New York, 1981.

Kamble, N. D., **Bounded Labour In India,** Uppal Publishing House, New Delhi, 1982.

Ketkar **History of Caste in India- Social conditions in India According to Manu,** Gasmo Publications, New Delhi 1979.

Krishnaswamy. A., **Topics in South Indian History, From, Early Time Upto 1565 A. D.,** Sivakami Printers, Annamalai Nagar, 1978.

Krishnaswamy Iiyengar, **Beginnings of South Indian History,** The Modern Printing works, Madras, 1918.

Kumar Dharma **Land and Caste in South India,** Cambridge University Press, London, 1965.

Mahalingom, T. V., **South Indian Polity,** University of Madras, Madras, 1955.

Melvin L. De Fleur, William V. D. Antonio, Lois D. De Fleur **Sociology-Human Society,** Scott Foresman and Company England, 1973.

Mercer Warderer **The Study of society,** Wardsworth Publishing Company Inc., California, 1970.

Michael Banton (Edit)., **An Anthropological Approaches to the Study of Religion,** Tavistock Publications, London, 1969.

Michael Grauf (Edit) **The Birth of Civilization,** Thames and Hudson, London, —

Michael Moffat **An Untouchable Community in South India,** Princeton University Press, New Jersey, 1979.

Minakshi, C., — **Administration and Social Life Under the Pallavas,** University of Madras, Madras, 1977.

Nambi Arooran., — **Glimpses of Tamil Culture-Based on Periyapuranam,** Koodal Publishers, Madurai, 1977.

Nayar, P. K. B., — **Sociology in India,** B. R., Publishing Corporation, Delhi, —

Nilakanta Sastri, K. A., — **The Cholas, Vol. II., part. I.,** University of Madras Madras, 1937.

Nilakanta Sastri, K. A., — **The Cultural History of the Tamils,** Firma K. L., Makhopadyay, Calcutta, 1964.

Nilakanta Sastri, K. A., — **The Cultural Contacts Between Aryans and Dravidians,** Monaktals, Bombay, 1976.

Nilakanta Sastri, K. A.,' — **A History of South India,** Oxford Univesrity Press, London, 1976

Paul B. Horton, Chester L. Hunt — **Sociology,** Mc. Grow Hill, Kogakusha Ltd., Tokyo, 1980.

Pillay, K.K., — **A Social History of the Tamils, Vol. I.,** University of Madras, Madras, 1975.

Pocock, D. F. (Trans) — **Eassays i n Caste System,** Cambridge University Press, London, 1971.

Raghavan, V., — **The Indian Heritage,** The Indian Institiue of World Culture, Bangalore, 1980.

Rajalakshmi, R., **Tamil Polity, (A.D.600- A. D. 1300)** ENNES' publications, Madurai, 1983.

Rajendra Nath Sharma **Brahmins Through The Ages,** Ajantha Publications, Delhi, 1977.

Rajendra Pandey **The Caste System in Idnia, Myth and Reality,** Criterion Publications, New Delhi, 1986.

Rajendra Snigh Vanta **The Depressed Classes in India,** GitanJali Prakashan, New Delhi, 1977.

Ramachandra Rao, K. R., **Social Institutions Among The Hindus,** Rao and Raghavan, Mysore, 1969.

Ramnath Sharma, **Indian Society,** Media Promoters and Publishers Pvt. Ltd. Bombay, 1981.

Ronalad W. Smith, Frederick W. Preston, Press, **Sociology-An Introduction, St.Martin,** New Yodk, 1976.

Sachidanand Sinha, **Caste System-Myths, Reality, Challange,** Intellectual Publishing House, New Delhi, 1971.

Sasaki, G. H., **Social and Humanistic Life in India,** Shakti Malik Abhini Publications, New Delhi, 1971.

Serge Danisoff, Ralph Wabrman **An Introduction to Sociology,** Macmillan Publishing Co., Inc. New York 1975.

Sharma. R. S., **Sudras in Ancient India,** Motilal Banarsidass, Delhi, 1980.

Singaravelu. S., **Social Life of the Tamils,** The Classical University of Malaya, Kulalumpur, 1966.

Sircar, D. C. (Edit) **Social Life in Ancient India,** University of Calcutta, Calcutta, 1971.

Sir George Mac Munn, **The Indian Social System,** Discovery Publishing House, Delhi, 1984.

Srinivas, M. N., **Caste in Modern India and Other Essays,** Media Promoters & Publishers Pvt. Ltd , New Delhi, 1981.

Stephen Fucks **At the Bottom of the Indian Society,** Munishiram Manoharlal Publishers, Pvt. Ltd., New Delhi, 1981.

Subramanian, N., **The Hindu Tripod And Other Essays,** Koodal Publishers, Madurai, 1976.

Subramanian, N., **Sangam Polity,** ENNES Publications Madurai, 1980.

Subramanian, T. V., (Edit) **Thirty Pallava Copper Plates,** The Tamil History Academay, Madras, 1967.

Varadachari, K. E., **Alvars of South India,** Bhaatiya VidyaBhavan, Bombay, 1966.

Venniyoor, E M. J **History of Malayalam Literature,** Sahitya Academay, New Delhi, 1977.

Verma K. K., **Changing Roll of Caste Associations,** National Publishing House, New Delhi 1979.

# 3. கட்டுரைகள்

## 3. அ. தமிழ்


இராசமாணிக்கம், எம்., "கல்வெட்டுக்களும் அரசியல் வரலாறும்" **Journal of the Annamalai University Vol. XXII, part. A. Humanities,** Ammamalai University, AmmamalaiNagar 1960, P.P. 33-60

இராமசாமிப்பிள்ளை, ஆ., "தொல்காப்பியத்தில் கடவுள்" தொல்காப்பியச் சிந்தனைகள், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலைநகர், 1978, பக். 244. 250.

ஞானாகுலேந்திரன் "தேவாரகாலத்து ஆடல் மகளிர்" தமிழ்க்கலை. தமிழ்.3, கலை. 1,2, தமிழ்ப்பல்கலைக்கழகம் தஞ்சாவூர், மாச்சு- சூன். 1985, பக். 10- 16

தண்டபாணிதேசிகர் "தொல்காப்பியர் கூறும் சமயநிலை" தொல்காப்பியச் சிந்தனைகள், அண்ணமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலைநகர், 1960, பக். 251- 58

பத்மாவதி, ஆ., 'வடகாடு கோயிலூார் கல்வெட்டுக்கள்' தமிழ் ஆராய்ச்சியின் புதிய எல்லைகள், நியூ செஞ்சுரி பப்ளிஷிங் ஹவுஸ், சென்னை, 1978, பக். 90- 99.

பழனிச்சாமி, எஸ்., "கல்வெட்டில் வண்ணார்" தமிழ்நாட்டு வரலாற்றுக் கருத்தரங்கு, வரலாற்றுப் பேரவை, சென்னை, 1979, பக். 24- 27

பாண்டுரங்கன், ஆ., "ஆழ்வார் காலப் பாண்டிநாட்டுச் சமுதாயம், ஆராய்ச்சி, மலர், 4, இதழ், 2 ஜூன் 1974, பக். 163- 170

பூங்குன்றன், இரா., "வரலாற்றில் பறையர்", தமிழ்நாட்டு வரலாற்றுக் கருத்தரங்கு, வரலாற்றுப் பேரவை, சென்னை, 1979. பக். 9- 11

மார்க்சிய காந்தி, நா., "தமிழகத்தில் அடிமைகள்" தமிழ்நாட்டு வரலாற்றுக் கருத்தரங்கு, வரலாற்றுப்பேரவை, சென்னை, 1979, பக். 217- 225

மீனாட்சிசுந்தரம், உ., "கண்ணப்பரும் கடவுளும்" ஆராய்ச்சி, மலர். 2. இதழ். 4, டிசம். 1971. பக். 426- 434

ராசுகுமார், மே. து., "பிற்காலச் சோழர் காலத்தில் கோயில் பொருளாதாரமும், அரசின் மேலாதிக்கமும்" தமிழ் ஆராய்ச்சியின் புதிய எல்லைகள், நியூ செஞ்சுரி பப்ளிஷிங் ஹவுஸ், சென்னை, 1978. பக். 120- 150

வசந்த கல்யாணி, ஆர்., "வெள்ளமும் பஞ்சமும்", தமிழ்நாட்டு வரலாற்றுக் கருத்தரங்கு, வரலாற்றுப் பேரவை, சென்னை, 1979. பக். 180- 188

வானமாமலை, நா., "பரிபாடலில் முருக வணக்கம்" ஆராய்ச்சி மலர். 3. இதழ், 2. சூன். 1971, பக். 245 - 254

வானமாமலை, நா., "கலைகளின் தோற்றம்" ஆராய்ச்சி மலர் 3, இதழ், 2. சூன். 1971. பக். 293 - 2

வெள்ளைவாரணன். க., "சங்க இலக்கியத்தில் சமய நோக்கு", சங்க இலக்கியக் கட்டுரைகள், கருத்தரங்கு, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1984, பக். 156

## 3. ஆ. ஆங்கிலம்

Andre Beteille, "The Social System of a Tamil Village", **Culture and Society,** Thomson Press (India) Limited, Delhi, 1975, PP. 115-130

Gopalan, S., "Some Thoughts on Sociology of Religion", **Journal of the Madras University, Section, A., Humanities, Vol. L.I.No.1,** Madras, 1979, PP. 29-36

Gupta, C. S., "Chandala Rock Inscriptions" **Studies in Indian Ephigraphy, Vol. II.** The Ephigraphical Society of India, Mysore, 1976, PP. 116- 119

Hanumanthan, K.R., "Was the untouchability in the Early Society", **Indian History Congress, 38th Session,** Ukkal University, Bhubaneswar, 1977, PP 90-99

Hanumanthan, K. R., "Origin of the Untouchablity of South India", **Proceedings of the Thirty-Ninth Session, Vol. I., Indian History Congress,** Centre of Advanced Study in History, Aligarh, 1978, PP. 159-167

Hanumanthan, K R., "Evolution of Caste System in Tamil Nadu" **Proceedings of the Fifth International Conference Seminar of Tamil Studies, Vol. I.** International Association of Tamil Research, Madras, Jan 1981, PP. 6:73 6:88

Jayapragasan, S., "Aspects of Caste System in Tamil Nadu During the Imperial Chola Times", **Indian History Congress, 41st Session,** University of Bombay, Bombay 1980, PP. 195-202

Kandaswamy, S.N., The Philosophical Aspects of "Paripatal", **Philosophical Heritage of the Tamils,** International Institute of Tamil Research, Madras, 1983, PP. 117-140

Kuppuswamy, T V., "Matrix of the Social Structure of the Early Tamils", **Proceedings the Thirty Ninth Session, Vol. I., Indian History Congress,** Centre of Advanced study in History, Aligarh, 1978, PP. 180-207

Max Weber "Class, Status and Party" **Essays in Sociology,** Oxford University Press, New York, 1946, PP. 180-195

Mc. Cune, B. Evelyn, "The Role of Temple in the social and Economic Life of India", **Bulletin of the Institute of Traditional Cultures, Madras, part.I,** University of Madras, Madras, 1960, PP. 5-19

Radhakrishna Choudhry "Ownership of Land in Ancient India", **Indian History Congress, 27th Session, 1967,** PP. 118-119

Rai, J., "Social Molbility in Ancit India", **Social Life in Ancient India,** University of Calcutta, Culcutta, 1971, PP. 3-12

Runciman, W. G., "Class, Status and power", **Social Stratification,** Camnridge University Press, London, 1968, PP. 25-61

Sharma, B. N., "Varna Vyavastha and Caste System in the Seventh Century A. D", **Social Life in Ancient India,** University of Calcutta, Culcutta, 1975, PP. 76-87

Surira Jaiswall "Some Recent Theories of the Origin of the Untouchability, A Historiographical Assessment" **Proceedings of the Thirty-Ninth Session, Vol. I. Indian History Congress,** Centre of Advanced Study in History, Aligarh, 1978, PP 218-229

Swaminathan, A., "Adimaikal (Slaves) in the Chola Temples and Mathas", **Bulletin of the Institute of Traditional Cultures,** University of Madras. Madras, June. 1978 PP. 33-38

Veluthat Kesavan "The Socio-Political Background of Kulasekara Alwar's of Bhakti', **Indian History Congress, 38th Session,** Utkal University, Bhubaneswar. 1977. PP 137-144

Venkatasubramanian T. K., "Social Roots of Tamilian Religious Ideology". **Proceedings of the Thirty-Ninth Session, Vol. I. Indian History Congress,** Centre of Advanced Study in History. Aligarh. 1978 PP 180-188

